சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# 3 அகநானூறு

நித்திலக் கோவை

மூலமும் உரையும்

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்





சாரதா பதிப்பகம்

சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# அகநானூறு

## நித்திலக் கோவை

மூலமும் உரையும்

3

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

சென்னை - 600 014.

☎ 044-2811 4402 / 044 - 2844 3791 / 97907 06548

நூல் கிடைக்குமிடம் :

| கௌரா புத்தக மையம் | கௌரா புத்தக மையம் |
|---|---|
| செயிண்ட் ஜான் சர்ச் வணிக வளாகம் | 4, வெங்கட்ரங்கம் பிள்ளை தெரு, |
| 10, ராக்கின்ஸ் சாலை, திருச்சிராப்பள்ளி-1 | திருவல்லிக்கேணி, சென்னை - 5. |
| ☎ : 99520 34876 / 0431 2419584 | ☎ : 97907 06548 / 94449 10346 |

விலை : ரூ. **80.00**

* முதற் பதிப்பு : ஜூன் 2010
* பதிப்பாசிரியர் : **எஸ். கௌமாரீஸ்வரி** M.A., M.L.I.S.,
* நூலின் பெயர் : அகநானூறு - நித்திலக் கோவை மூலமும் உரையும்
* பக்கங்கள் : 10 + 262 = 272
* ஒளி அச்சு : ஜெய் ஜீனா
* வெளியீடு : சாரதா பதிப்பகம்
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.
* அச்சிட்டோர் : கிளாசிக் பிரிண்டர்ஸ், செ - 2

CODE : **921**

**கௌரா ஏஜென்ஸீஸ்**

10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

☎ : 044-2844 3791 / 97907 06548 / 97907 06549

www.gowrabookfair.com. E-mail : gowra_09@yahoo.in / gowra09@gmail.com

# பதிப்புரை

*எட்டுத்தொகை நூல்களுள் அகநூலாக அமையும் பெருமை உடையது அகநானூறு. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளில் நானூறு பாக்களைக் கொண்டிருக்கிறது. நூலைத் தொகுத்தவர் உப்பூரிக்கிழார் மகனார் உருத்திரசன்மனார். தொகுப்பித்தவர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. அகநானூறு களிற்றியானை நிரை (பாடல்கள் 1- 120) மணிமிடை பவளம் (பாடல்கள் 121 - 300) நித்திலக் கோவை (பாடல்கள் 301 - 400) என்னும் முப்பிரிவுகளாக அமைந்துள்ளன.* **வில்லவதரையன்** *பாடலும் இதனை உணர்த்தும்.*

ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்
நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய
இன்பப் பகுதி இன்பொருட் பாடல்
நானூ றெடுத்து நூனவிற் புலவர்
களித்த மும்மதக் களிற்றியா னைநிரை
மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்
மேவிய நித்திலக் கோவை என்றாங்கு
அத்தகு பண்பின் முத்திற மாக
முன்னினர்த் தொடுத்த நன்னெடுந் தொகை.

*301 முதல் 400 வரை உள்ள பாடல்கள் முத்துகளை வரிசையாகக் கோத்து வைத்ததைப் போன்று அழகுடையன.* **நித்திலக் கோவைக்கு** *புலியூர்க் கேசிகன் எளிமையான உரை வழங்கியுள்ளார். உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடைபெறவிருக்கும் இவ்வேளையில் தமிழரின் அகவாழ்வு நெறிகளைக் கூறும் அகநானூறு இலக்கியத்தைக் கற்று இன்புறுவோம்.*

**பதிப்பகத்தார்**

## உள்ளே...

# அகநானூறு - நித்திலக் கோவை

அகத்தினின்று எழுகின்ற இன்பியல் வாழ்வின் ஆர்வத் துடிதுடிப்புக்களையும், அளவற்ற எண்ணச் சூழல்களையும் அணிபெறக் காட்டுவனவே தமிழரின் அக நூல்கள். அவற்றுள், கடைச்சங்க காலத்துத் தொகுக்கப்பெற்றது அகநானூறு. 'நெடுந்தொகை' எனவும் அது பெயர் பெறும். அதனுள், மூன்றாம் பகுதி இந்நூலாகிய நித்திலக் கோவை.

அகநானூற்றை அழகுற முதற்கண் ஆய்ந்து பதிப்பித்த சான்றோர் கம்பர் விலாசம் இராஜகோபால அய்யங்கார் அவர் களாவர்; பரிசோதித்தோர் மகாவித்துவான் ரா. ராகவய்யங்கார் அவர்களாவர். அடுத்து, உரையொன்றனை நூல் முழுமைக்குமே வகுத்த பெரியார் கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளையவர்கள். அது நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார வர்கள் துணையுடன் வெளிவந்தது. சைவசித்தாந்த மகா சமாசத்தார் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் துணை யுடன் சங்க இலக்கியங்கள் அனைத் தையுமே புலவர் வரிசை யிலே வெளியிட்டனர். அண்மையில் மர்ரே கம்பெனியார் அகநானூற்று மூலத்தை மட்டும் நன்கு ஆராய்ந்து வெளியிட்டனர். இவர்களனைவரும் செய்த பெரும் பணியினாலேயே அகநானூற்றை அறிந்தறிந்து அனுபவிக்கும் பெருவாய்ப்புத் தமிழ் அன்பர்களுக்கு நெடுகிலும் வாய்த்தது.

எனினும், பலரும் எளிதில் கற்று இன்புற வேண்டுமானால் எளிய உரை ஒன்றும் இன்றியமையாதது எனக் கருதி, அந்தத் தேவையை நிறைவுசெய்ய முயல்வதே. இந்நூலின் நோக்கமாகும். பல்லாயிரவரும் பயனடையவேண்டும் என்ற காரணம்பற்றி, மக்கள் பதிப்பு வரிசையிலே இதனை வெளியிட்டனர்.

நூலினை அனுபவிக்க உதவும் வகையிலே, பாடினோர் வரலாறுகளும், பாடப்பட்டோர் வரலாறுகளும் பின் னிணைப்புக்களாக மிளிர்வது இந்நூலின் தனித்த சிறப்பாகும். தெளிவான உரையும், மற்றும் தேவையான குறிப்புக்களும், விளக்கங்களும் ஆங்காங்கே தரப்பட்டிருக்கின்றன. அவை செய்யுளைக் கற்பவர்க்குப் பெரிதும் உதவுவன.

பொதுவாக, எந்த நூலுக்குமே அதற்குரிய உரையின் துணைமட்டும் அந்த நூலின் முழு இனிமையினையும் வளமையினையும் அனுபவிக்கப் போதுமானதாகாது. ஒவ்வொரு பாடலையும் உள்ளத்துள்ளே எண்ணி எண்ணி அவற்றின் அமைவுடன் ஒன்றிக்கலந்து அனுபவிப்பதே உண்மையாக அவற்றை அறிந்து உணர்ந்து அனுபவிப்பதாகும். அப்படித் தமிழ் அன்பர்கள் அநுபவித்து மகிழ்வதற்கு இந்நூல் ஓரளவுக்கு உதவியாயிருக்கும் என்று நம்புகின்றேன்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப்பண்பு

**புலியூர்க் கேசிகன்.**

# நூல் வரலாறு
## பாயிரம்

நிலை பெற்ற அறநெறியினைப் பேணி வந்தவர்கள்; எப்புறத்தும் வெற்றியுடன் சிறப்புற்ற ஆட்சிச் சக்கரத்தினை நடாத்தியவர்கள்; யாதும் பழுது அற்ற சீரிய கொள்கையினை உடையவர்கள் வழுதியராகிய பாண்டியர்கள். அவர்களுடைய அவைக்கண்ணே அறிவு குடிகொண்டிருக்கும் செறிவுடைய மனத்தவரும், வானளாவிய நற்புகழ் உடையவருமாகிய சான்றோர்கள் குழுமியிருந்து, அருமையுடைய முத் தமிழினையும் ஆய்ந்து வந்தனர். அந்தக் காலத்தே.

ஆராய்ந்து 'சாலச் சிறந்தவையெனத் தெரிந்த சிறப்பினையுடைய இனிய தமிழ்ப் பாடல்களுள், நெடியவாகி அடிகள் அதிகமாக விளங்கிய இன்பப் பகுதியினைச் சார்ந்த இனிய பொருள் அமைந்த பாடல்கள் நானூற்றை எடுத்து, நூல்களை ஆராய்ந்து சொல்லும் புலவர் பெருமக்கள் தொகுத்தனர்.

மும்மதங்களால் களித்தலையுடைய களிற்றியானை நிரை, மணியோடும் சேர்த்துக் கோர்த்த அழகுஒளிரும் மணிமிடை பவளம், சிறப்பான நித்திலக் கோவை என்றவிதமாக, அத்தகைய பண்பினோடு முத்திறம் உடையவனாகத் தொடுத்தற்கு நினைந்து தொகுத்தது நல்ல நெடுந்தொகையாகும்.

அந் நெடுந்தொகைக்குக் கருத்து எனப் பண்பினையுடைய சான்றோர் முற்காலத்தே சொன்னவைகளை நாம் ஆராய்வோமானால், அருமையுடையவாகிய பொருளுடைமையினைக் கருத்தாகக் கொண்டு, எவ்விதக் கோணுதலும் இல்லாமல், பாட்டமைதியோடு பொருந்துமாறு, செய்யுள் தகைமையிற் சிறந்த அகவல் நடையினால் கருத்து இனிதாக இயற்றியோன், பரிகள் பூட்டிய தேரினையுடைய வளவர்கள் காத்துப் பேணும் வளமையான சோழ நாட்டினுள்ளேயும், நாடு எனச் சிறப்பித்துக் கூறப்படும் மிக்க பெருமையுடைய சிறப்பினையும், என்றும் வளங் கெடுதலில்லாத உயர்வினையும் உடைய இடையளநாட்டுத்,

*தீதற்ற கொள்கையினர் வாழுகின்ற பழமையான ஊர்கள் பலவற்றுள்ளும் சிறந்த ஊர் என்ற புகழுடன் விளங்கிய, சீர்மை கெழுமிய மணக்குடி என்னும் ஊரினனான, செம்மை நிரம்பிய தேவன் என்பவனாவன். அவன், தொன்மையாகவே சிறப்புடைய நன்மையாளர் மலிந்த குடியினனு மாவன்.*

**நின்ற நீதி வென்ற நேமிப்**
**பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்**
**அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து**
**வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ**
**அருந்தமிழ் மூன்றுந் தெரிந்த காலை**

**ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்**
**நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய**
**இன்பப் பகுதி யின்பொருட் பாடல்**
**நானூ றெடுத்து நூல்நவில் புலவர்**
**களித்த மும்மதக் களிற்றியா னைநிரை**

**மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்**
**மேவிய நித்திலக் கோவை என்றாங்கு**
**அத்தகு பண்பின் முத்திற மாக**
**முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்குக்**
**கருத்தெனப் பண்பினோர் உரைத்தவை நாடின்**

**அவ்வகைக்கு அவைதாஞ் செவ்விய அன்றி**
**அரியவை யாகிய பொருண்மை நோக்கிக்**
**கோட்ட மின்றிப் பாட்டொடு பொருந்தத்**
**தகவொடு சிறந்த அகவல் நடையால்**
**கருத்தினிது இயற்றி யோனே-பரித்தேர்**

**வளவர் காக்கும் வளநாட் டுள்ளும்**
**நாடெனச் சிறந்த பீடுகெழு சிறப்பிற்**
**கெடலருஞ் செல்வத்து இடையள நாட்டுத்**
**தீதில் கொள்கை மூதூ ருள்ளும்**
**ஊரெனச் சிறந்த சீர்கெழு மணக்குடிச்**

**செம்மை சான்ற தேவன்**
**தொன்மை சான்ற நன்மை யோனே!**

*இத் தொகைக்குக் கருத்து அகவலாற் பாடினான், இடையள நாட்டு மணக்குடியான், பால்வண்ண தேவனான* ***வில்லவதரையன்.***

*இத்தொகைப்பாட்டிற்கு அடியளவு சிறுமை பதின் மூன்று; பெருமை முப்பத்தொன்று. தொகுப்பித்தான் பாண்டியன்* ***உக்கிரப் பெருவழுதி****. தொகுத்தான் மதுரை* ***உப்பூரிகுடிகிழான்*** *மகனாவான்* ***உருத்திர சன்மன்*** *என்பான்.*

*"வண்டு படத் ததைந்த" என்பது முதலாக, "நெடுவேள் மார்பின்" என்பதீறாகக் கிடந்த நூற்றிருபது பாட்டும் "களிற்றி யானை நிரை" இப்பெயர் காரணப்பெயர்; செய்யுட் காரணமோ பொருட்காரணமோ எனிற் பொருட் காரணம் என உணர்க.*

*"நாணகையுடைய நெஞ்சே" என்பது முதலாக, 'நாள் வலை" என்பதீறாகக் கிடந்த நூற்றெண்பது பாட்டும் "மணி மிடை பவளம்" இப்பெயர் உவமையாற் பெற்ற பெயர்; செய்யுளும் பொருளுந் தம்முள் ஒவ்வாமையால்.*

*"வறனுறு" என்பது முதலாக "நகை நன்று" என்பதீறாகக் கிடந்த பாட்டு நூறும் "நித்திலக் கோவை"; இவை செய்யுளும் பொருளும் ஒக்குமாகலின்.*

**வியமெல்லாம் வெண்டேர் இயக்கங் கயமலர்ந்த**
**தாமரையா றாகத் தகைபெறீஇக் காமர்**
**நறுமுல்லை நான்காக நாட்டி நெறிமாண்ட**
**எட்டும் இரண்டுங் குறிஞ்சியாக் குட்டத்து**
**இவர்திரை பத்தா இயற்பட யாத்தான்**
**தொகையின் நெடியதனைத் தோலாச் செவியான்**
**வகையின் நெடியதனை வைப்பு.** 1

**ஒன்றுமூன் றைந்தே ழொன் பான்பாலை; யோதாது**
**நின்றவற்றி னான்கு நெறிமுல்லை;-அன்றியே**
**யாறா மருதம்; அணி நெய்த லையிரண்டு**
**கூறாதவை குறிஞ்சிக் கூற்று.** 2

**பாலை வியமெல்லாம் பத்தாய்; பனிநெய்த**
**னாலு நனிமுல்லை நாடுங்கான் - மேலையோர்**
**தேறு மிரண்டெட் டிவைகுறிஞ்சி செந்தமிழின்**
**ஆறு மருதம் அகம்.** 3



# அகநானூறு - நித்திலக் கோவை

## 301. மன்றமும் மகளிர் நிலையும்

**பாடியவர் :** *அதியன் விண்ணத்தனார்.* **திணை :** *பாலை.* **துறை :** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்தும் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைவன் தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு சென்றிருந்த காலம். அவனை நினைந்து நினைந்து அவள் ஏக்கங் கொண்டிருக்கிறாள். அதனால் ஏற்பட்ட அவளுடைய மெலிவைக் கண்டு, உள்ளம் வாடினாள் அவளுடைய தோழி. 'அந்த நினைவைச் சற்று மறந்திருப்போம்' என்று ஆறுதல் கூறவும் முற்பட்டாள். அந்தத் தோழிக்குத், தலைவி தன்னுடைய மனநிலையினை விளக்கிக் கூறுவதாக அமைந்தது இச்செய்யுள்.)*

**'வறன் உறு செய்யின் வாடுபு வருந்திப்**
**படர்மிகப் பிரிந்தோர் உள்ளுபு நினைதல்**
**சிறுநனி ஆன்றிகம் என்றி - தோழி -**
**நலிகுநர் ஒழித்த கூலிச் சில்பதம்**
**ஒடிவை இன்றி ஓம்பாது உண்டு**

**நீர்வாழ் முதலை ஆவித் தன்ன**
**ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடத்து**
**ஊர்இஃது என்னாஅர் ஊறில் வாழ்க்கை**
**சுரமுதல் வருத்தம் மரமுதல் வீட்டிப்**
**பாடுஇன் தெண்கிணை கறங்கக் காண்வரக்**

**குவிஇணர் எருக்கின் ததர்பூங் கண்ணி**
**ஆடூஉச் சென்னித் தகைப்ப மகடூஉ**
**முளரித் தீயின் முழங்கு அழல் விளக்கத்துக்**
**களரி யாவிரைக் கிளர்பூங் கோதை**
**வண்ண மார்பின் வனமுலைத் துயல்வரச்**

**செறிநடைப் பிடியோடு களிறுபுணர்ந் தென்னக்**
**குறுநெடுந் தூம்பொடு முழவுப்புணர்ந் திசைப்பக்**
**கார்வான் முழக்கின் நீர்மிசைத் தெவுட்டும்**
**தேரை ஒலியின் மாணச் சீர் அமைத்துச்**
**சில்லரி கறங்கும் சிறுபல் லியத்தொடு**

**பல்லூர் பெயர்வனர் ஆடி ஒல்லெனத்**
**தலைப்புணர்த்து அசைத்த பல்தொகைக் கலப்பையர்**

**இரும்பேர் ஒக்கல் கோடியர் இறந்த**
**புன்றலை மன்றங் காணின் வழிநாள்**
**அழுங்கன் மூதூர்க்கு இன்னா தாகும்;**

**அதுவே மருவினம் மாலை யதனால்**
**காதலர் செய்த காதல்**
**நீடின்று மறத்தல் கூடுமோ, மற்றே?**

*தோழி! 'வறட்சி அடைந்த வயலைப்போல வாட்டமுற்று வருந்தித், துன்பம் மேன்மேலும் மிகுமாறு, பிரிந்து சென்றவரையே உளங்கொண்டு நினைதலை, மிகச் சிறிதாவது கைவிட்டிருப்போம்' என்கின்றனை.*

*கொடுப்பவர், கொடுத்துப் போகச் செய்த கூலியாகிய சிறிதளவு உணவுப் பொருளையும் பேணிக்காவாது, இடையற வின்றி உண்டு தீர்த்தவராக, மீளவும் பொருளினை விரும்பி வேற்றூர் நோக்கிச் செல்பவர்கள் கூத்தர்கள்.*

*நீரில் வாழ்வதான முதலை வாய் பிளந்தாற்போலத் தோற்றும், ஆரைக்கால்கள் வேயப்பெற்றதும், ஒலிக்கும் இடனுடையதுமான சக்கரங்களையுடைய வண்டிகளிலே அவர்கள் செல்வார்கள். 'எம் ஊர் இது' என்று யாதொரு ஊரையும் குறித்துச் சொல்வதன்றி, எல்லா ஊரையுமே தமதாகக் கொண்டு வாழும், துயரமற்ற வாழ்க்கையினர் அவர்கள்.*

*அவர்கள், சுரநெறியின் தொடக்கத்தே தம் வழிநடை வருத்தத்தை மரத்தடிகளில் தங்கிப் போக்கிக் கொள்வார்கள். இனிதாக ஒலித்தலையுடைய தெளிவான கிணைப்பறை ஒலிக்க அவர்கள் மகிழ்வோடு செல்வார்கள். குவிந்த கொத்துக்களை யுடைய எருக்கம் பூக்களினாலே நெருக்கமாகத் தொடுத்துக் கட்டிய கண்ணிகள் ஆடவர்களின் தலையுச்சிகளிலே காட்சிக்கு இனிதாக விளங்கிக் கொண்டிருக்கும். ஒலியுடனே எழுகின்ற காட்டுத்தீயின் சுடர் ஒளியினைப்போல விளக்கமுற்றுத் தோன்றும். காட்டாவிரையின் பூக்களாலே தொடுத்த கோதைகள் மகளிரது அழகிய மார்பிடத்துப் பருத்த முலைகளின் மேலே கிடந்து, அசைந்து ஆடிக் கொண்டிருக்கும்.*

*செறிந்த நடையுடைய பிடியானையுடனே களிற்றியானை கூடிச் செல்வதுபோல, பெண்களும் ஆண்களுமாக அவர்கள் இணைந்து சேர்ந்து செல்வார்கள். அப்போது -*

*சிறிதும் பெரிதுமான துளைக்கருவிகளின் இசையுடனே கூடிக்கலந்து முழவுகளின் ஒலியும் இசைத்து எழுந்து கொண்டிருக்கும்; கார்வானத்து இடிமுழக்கினையொப்ப*

நீரிடத்தேயிருந்து ஒலிசெய்கின்ற தேரைகளின் ஒலியைப்போலத் தாளம் அமைந்ததாகச் சில்லரிகள் சதா ஒலித்துக் கொண்டும் இருக்கும். இப்படிச் சிறிதான பல வாச்சிய ஒலிகளுடனே வழிநடந்து, பற்பல ஊர்களையும் நாடிச் செல்பவர்கள், அவர்கள்.

அவர்கள், ஓரூரிலே சென்று கூத்தாடிவிட்டு, மறுநாள் காலையிலே, தலையிலே சேர்த்துக்கட்டிய பல தொகையினவான வாச்சியங்களுடைய பையினராக, வேற்றூரை நாடிப் போகவும் புறப்பட்டுவிடுவார்கள். மிகப் பெரிய சுற்றத்தினையுடைய கூத்தரின் தன்மை இதுவாகும்.

அவர்கள் கூத்தாடிவிட்டுச் சென்றபின், பொலிவிழந்து கிடக்கும் மன்றத்தினைப் பிற்றைநாளிற் காணின், முந்நாளிலே ஆரவாரம் கொண்டதாக அவ்விடத்தே விளங்கிய மூதூர் மக்கட்குப் பெரிதும் துயரம் தருவதாகவே இருக்கும்.

அத்தகைய நிலையினையே, இம்மாலைக் காலத்தில் யாமும் அடைந்திருக்கின்றோம். அதனால், நம் காதலர் நம்முடன் கூடியிருந்த காலத்துச் செய்த காதற்செயலினை எல்லாம், நெடிதும் நினைத்து நினைத்துத் துயருறுதலன்றி, நம்மால் அவரை மறந்திருத்தலும் இயலுமோ?

**சொற்பொருள்** : 1. வறன் - வறட்சி; வளமிழந்து வாடிக் கிடக்கின்ற அவலநிலை. செய்யின் - விளை நிலத்தின்; செய்தியின் எனவும் பாடம். 2. படர் - துன்பம்; அது மென்மேலும் காதலரைப் பற்றிப் படர்ந்து பெருகுதலாற் 'படர்' என்றனர். உள்ளுபு நினைதல் - எண்ணி எண்ணி நினைந்திருத்தல்; இடையறாது அதே நினைவாயிருத்தலும் ஆம். 3. ஆன்றிகம் - அமைந் திருப்போம். 4. நல்குநர் - கொடுப்போர்; ஊர் மன்றிலே கூத்தியற்றியவருக்குக் கூலி கொடுத்து விடுவதற்கு உரிய பொறுப்பினர். சில்பதம் - சிறிதளவாக இருக்கும் உணவுப் பொருட்கள். 5. ஓடிவை - இடையறவு. 6. ஆவித்தன்ன - வாய்ப் பிளந்தாற் போன்ற, 7. ஆரை - ஆரைக் கால்கள்; குடத்தையும் சக்கரத்து வளைவுகளையும் இணைக்கும் இணைப்புக்கள். 11. ததர் - நெருக்கமான, 13. முளரித்தீ - காட்டுத்தீ. 14. களரியாவிரை - காட்டாவிரை. 15. வனமுலை - பருத்த முலை. துயல்வர - அசைந்தாட. 18. தெவிட்டல் - ஒலித்தல். 19. சீர் - தாளம். 24. புன்தலை - பொலிவிழந்த, 26. மருவினம் - அடைந்தனம்.

**விளக்கம்** : தலைவனைப் பிரிந்து வாடியிருக்கும் தலைவியின் நிலைமைக்கு, முன்னர் வளமுடனிருந்து கோடையால் வறட்சியுற்றுப் பொலிவிழந்து கிடக்கும்

விளைவயலின் நிலையினைக் காட்டினர். பயன் பெறுவதற்கு உரிய வயலிடம் வறட்சியால் பயனற்றுக் கிடப்பது போலப் பொலிவுடன் இன்புறுதற்கான தலைவி, தலைவனது பிரிவினால் அதனை இழந்து இருக்கின்றனள் என்று அவளது அவலநிலையினைக் குறித்தனர். மிகச் சிறிதுபொழுதும் மறந்திருத்தல் இயலாத நிலையினள் என்பதனைச் 'சிறுநனி' என்ற சொற்களால் உணர்த்தினர்.

நல்குநர் - கொடுப்போர்; ஊர்களிலே நடக்கும் ஊர்ப் பொது நிகழ்ச்சிகளான கூத்து முதலியவற்றிற்கு உரிய கூலியைக் கொடுத்தனுப்பும் பொறுப்பு நிலையினர்.

ஆரையினைத் 'தொத்தளிப்பாய்' எனக் கொண்டும் பொருள் உரைப்பார்கள். ஆயின், ஆரைக்கால்கள் என்று இந்நாளினும் வழங்கும் வழக்கு யாம் குறித்தவாறே இருத்தலை அறிக. கூத்தரின் கவலையற்ற வாழ்க்கை நிலையினை நன்கு எடுத்துக் காட்டுபவர், 'நாடோடி வாழ்வினரெனினும் நலிதலற்ற நல்வாழ்வினர்' எனக் காட்டுகின்றார். 'எமது' எனச் சொல்லுதற்கு ஓர் ஊரும் அற்றவர்தாம்; எனினும் ஊறற்ற வாழ்வினர் என்பதன் செறிவை உணர்க. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பரந்த பொதுவியல் உள்ளப்போக்கு உடையர் அவர் எனலாம்.

புன்றலை மன்றம். பிரிந்திருக்கும் காதலிக்கு நல்லதொரு உவமானமாகியது. "என்னைப் பொலிவுறச் செய்து என்னைக் கூடியிருக்கும் அவருடனே அமைந்த எம் வாழ்வைக் கண்டு பலரும் இன்புறச் செய்யும் கூத்தர் அவர். அன்று அவருடன் கூடியிருந்தபோது நீயும் என்னைக் கண்டு மகிழ்ந்தனையாகப் பாராட்டினாய், இன்று அவர் செல்லக், கூத்தர் கூத்தாடிப் போன பிற்றை நாளிலே விளங்கும் மன்றத்தின் பொலிவிழந்த நிலையிலே நானும் ஆகியிருக்கின்றேன். அது மூதூர்க்கு இன்னாதாயிருப்பதுபோல நீயும் என் நிலைக்குத் துன்புறு கின்றாய்." என்று, தன் அவல நிலையினைத் தலைவி விளக்கு கின்றாள் தன்னால் அவனை மறக்க முடியாது என்பவள், மறத்தல் கூடுமோ?' என்றனள், தூம்பு - துளைக் கருவிகள், சில்லரி - சிலவாகிய அரித்தெழும் ஓசையினையுடைய வாச்சியம்.

## 302. அறன் இல்லாத தாய்!

**பாடியவர் :** மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார். **திணை :** குறிஞ்சி. **துறை :** பகலிலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

*(தலைவனும் தலைவியும் களவு ஒழுக்கத்திலே தம்முட் கலந்து கூடித் திளைத்துவந்த காலம். ஒருநாள் பகல்வேளையிலே, குறித்த இடத்திற் சென்று, தலைவியும் தோழியும் தலைவனுக்காகக் காத்திருக்கின்றனர். அவன் வந்து பக்கலில் ஒதுங்கி நிற்பதை அறிந்த தோழி, அவன் உள்ளத்தை விரைவிலே தலைவியை மணந்து கொள்வதிற் செலுத்துதற்கு விரும்பியவளாகத் , தலைவிக்குச் சொல்வாளைப்போன்று, அவனும் கேட்டு உணருமாறு சொல்லுகின்ற முறையில் அமைந்தது இச் செய்யுள்.)*

**சிலம்பிற் போகிய செம்முக வாழை**
**அலங்கல் அம்தோடு அசைவளி யுறுதொறும்**
**பள்ளி யானைப் பரூஉப்புறம் தைவரும்**
**நல்வரை நாடனொடு அருவி ஆடியும்**
**பல்லிதழ் நீலம் படுசுனைக் குற்றும்**

**நறுவீ வேங்கை இனவண் டார்க்கும்**
**வெறிகமழ் சோலைநயந்துவிளை யாடலும்**
**அரிய போலும் - காதல்அம் தோழி! -**
**இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத**
**கரும்பெனக் கவினிய பெருங்குரல் ஏனல்**

**கிளிபட விளைந்தமை யறிந்தும் 'செல்க' என**
**நம்மவண் விடுநள் போலாள் கைம்மிகச்**
**சில்சுணங் கணிந்த செறிந்துவீங் கிளமுலை**
**மெல்லியல் ஒலிவரும் கதுப்பொடு**
**பல்கால் நோக்கும் - அறனில் யாயே.**

*அன்பிற்குரியே தோழியே!*

*மலையிலே நீண்டு வளர்ந்திருக்கும் செவ்வாழையினது அசைந்துகொண்டிருக்கின்ற இலைகள், அசைக்கும் காற்று மோதும் பொழுதெல்லாம், தன் அடி நிழலிலே துயில் கொண்டிருக்கும் யானையின் பெரிய முதுகினைத் தடவி விட்டுக்கொண்டிருக்கும், நன்மை பொருந்திய மலைநாட்டிற்கு உரியவன், நம் தலைவன்!*

*அவனுடனே அருவியாடியும், சுனையிடத்தே பொருந்திப் பலவாகிய இதழ்களையுடைய நீலப்பூக்களைப் பறித்தும், வண்டுகள் கூட்டமாக மொய்த்து ஆரவாரிக்கும்படியாக மணங் கமழும் நறிய பூக்களையுடைய வேங்கைமரச் சோலையிடத்தே விருப்பமுடனே கூடி விளையாடியும், இன்புற்றனவெல்லாம், இனி நமக்கு அரிதாகிவிடுவன வாகும் போலும்!*

பெரிய கற்களையுடைய மலைச்சாரலிடத்தே, நம் தமையன்மார் உழுது விளைத்திருக்கும் இடத்திலே, கரும்பினைப் போலத் திரண்டு வளர்ந்து அழகுற்றுப், பெரிதான கதிர்களையும் உடையதான தினைப்பயிரிடத்தே கிளிகள் வந்து படியும். அந்த அளவிற்குத் தினைப்பயிர் விளைந்துள்ளமை யினை அறிந்தும், 'செல்க' என ஏவி, நம்மை அவ்விடத்திற்குப் போகச் செய்பவளாகவும் நம் அன்னையானவள் தோன்ற வில்லை. அவ்வாறு அறவுணர்ச்சி சற்றும் இல்லாதவளாயினாள் அவள்.

சிலவாகிய தேமற்புள்ளிகளை அழகுடையவனவாக அணிந்து விளங்குவதும், நெருக்கமுற்றுப் புடைத்து விளங்குவது மான நம் இளைய முலைகளை, மென்மைத் தன்மையுடனே தழைத்திருக்கும் நம் கூந்தலுடனேயும், பன்முறை குறிப்பாகக் கூர்ந்து நோக்குபவளும் அவள் ஆயினளே!

**சொற்பொருள்** : 1. செம்முக வாழை - செவ்வாழை. 2. அலங்கல் - அசையும். 3. பரூஉப்புறம் - பருத்திருக்கும் மேற்புறம், முதுகு 5. குற்றும் - கொய்தும். 10. கவினிய - அழகுற்றுத் தோன்றிய. 14. ஒலிவரல் - தழைத்தல். கதுப்பு - கூந்தல். 15. அறனில் யாய் - அறனில்லாத தாய்; கன்னியர், தாம் கொண்டு காதலித்த இளைஞருடனே களவிற்கூடி இன்புறுவது அறத்தொடுபட்டதே என்று கருதுகின்ற தன்மை இல்லாத தாய்.

**விளக்கம்** :'பல்கால் நோக்கும்' என்றது ஐயுற்றனளாதலின், அவ்வாறு குறிப்பிட்டு நோக்கியவளாயினள் என்க. களவு உறவினால் கூந்தல் கலைந்தும் முலைகள் புளகித்தும் மாறுபாட்டையும் இயல்பின; இதனைப் பற்றியே தாய் அவற்றைக் குறித்து நோக்கினள் என்றனளாம்.

'செவ்வாழையின் இலைகள் காற்றசைக்குந் தோறும் தூங்கும் யானையின் முதுகைத் தடவும்' என்றது, அவன் மலை யிடத்தே விளங்கினங்கள்கூடத் தாம்நினையாத இன்பத்தைப் பெறுகின்றன என்பதாம். ஆகவே, 'அவன் நினைத்த இன்ப மாகிய, தலைவியை மணந்து கூடுதலை உறுதியாகப் பெறுபவனாவான்' என்பதைக் குறிப்பினாலே உணர்த்தியது மாம். 'நறுவீ வேங்கை இனவண்டார்க்கும் வெறிகமழ் சோலை' என்றது, வேங்கையின் மலர்ச்சியே மணங்கொள்ளும் காலமாத லினால் அதுவும் தோன்றி வந்ததைக் குறித்ததாம். தினை விளைந்தும், அன்னை கிளிகடிய அனுப்புகிறவளாகத் தோன்றவில்லை என்பது, இனித் தலைவி இற்செறிக்கப்படுவாள் என்பதை உணர்த்தியதாம். இதனால், தோழி, தலைவன்

தலைமகளை விரைந்து வேட்டுவந்து, மணந்து, உடன்கொண்டு சென்று இல்லறம் நடத்தலை விரும்புகின்றாள் என்பதனைத் தலைவன் உணர்பவனாகிறான் என்பது தெளிவாகும்.

## 303. சேர்வேன் அவரிடம் !

**பாடியவர்** : *ஔவையார்.* **திணை** : *பாலை.* **துறை** : *தலைமகன் பிரிவின்கண் வேட்கை மீதூர்ந்த தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு** : *பசும்பூண் பொறையனின் கொல்லிமலையிலே வீழ்கின்ற அருவி; பாரியின் பறம்பிலே கதிர் கொணர்ந்து பசிதீர்த்த குருவியினத்துப் பெருஞ் செயல்.*

*(தலைவியைப் பிரிந்து தலைமகன் வேற்றூர் சென்றிருந்த காலம். வருவதாக அவன் குறித்துச் சொல்லிச் சென்ற தவணை நாளும் கடந்துவிட்டது. அவளுடைய ஏக்கம் நாளுக்கு நாள் வளர்ந்து பெருகுகிறது. உடல் மெலிவும் அதிகமாகின்றது. அந்த நிலையிலே, 'தானும் அவன் சென்ற வழியூடே சென்று அவனை அடையப் போவதாகத்' தன் நெஞ்சிற்குச் சொல்லி அவலம் கொண்டு புலம்புவதாக அமைந்த செய்யுள்.)*

**இடைபிறர் அறிதல் அஞ்சி மறைகரந்து**
**பேஎய் கண்ட கனவிற் பன்மாண்**
**நுண்ணிதின் இயைந்த காமம் வென்வேல்**
**மறமிகு தானைப் பசும்பூண் பொறையன்**
**கார்புகன் றெடுத்த சூர்புகல் நனந்தலை**

**மாஇருங் கொல்லி யுச்சித் தாஅய்த்**
**ததைந்துசெல் அருவியின் அலாஎழப் பிரிந்தோர்**
**புலங்கந் தாக இரவலர் செலினே**
**வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும்**
**உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்**

**நிரைபறைக் குரீஇயினம் காலைப் போகி**
**முடங்குபுறச் செந்நெல் தரீஇயர் ஓராங்கு**
**இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்**
**படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு**
**வருவாஎன்று உணர்ந்த மடங்கெழு நெஞ்சம்!**

**ஐயந் தெளியரோ நீயே பலவுடன்**
**வறன்மரம் பொருந்திய சிள்வீ டுமணர்**
**கணநிரை மணியின் ஆர்க்கும் சுரனிறந்து**
**அழிநீர் மீன்பெயர்ந் தாங்கவர்**
**வழிநடைச் சேறல் வலித்திசின் யானே.**

நெஞ்சமே!

இடைப்பட்டாரான பிறர் அறிந்து கொள்வாரோ என அஞ்சினேம்; மறைவான செய்திகளை எல்லாம் எமக்குள்ளேயே ஒளித்துக் கொண்டோம். பேய் கண்ட கனவினைப் போலப், பல்வகைப்பட்ட மாண்புகளுடனே நுட்பமாகப் பொருந்திய காமம் இதுவாகும்.

வெற்றிவேலினையும் மிகுந்த மறத் தன்மையினையும் கொண்ட தானையினை உடையவன் பசும்பூட் பொறையன் ஆவான். மேகங்கள் ஆரவாரித்து எழுந்து, அச்சத்தை அறி விக்கும் அகன்ற இடத்தையுடைய, மிகப்பெரிய கொல்லிமலை அவனுக்கு உரியது. அதனுச்சியினின்றும் வீழ்ந்து மிக்குப் பெருகிச் செல்லுகின்ற அருவிநீர் ஒலியினைப்போல், ஊரிலே அலரொலி எழுமாறு பிரிந்தவர் நம் காதலர்.

அறிவு ஒன்றையே பற்றுக்கோடாகக் கொண்டு இரவன் மாக்கள் சென்றனராயின், குன்றொத்த களிறுகளுடனே, நல்ல ஆபரணங்களையும் அவர்கட்குக் கொடுத்துவிடும், மிகுதியாகப் பேசப்பட்ட வளவிய புகழினை உடையவன், பாரி வள்ளல். அவனுடைய பறம்பு மலையிடத்தே, வரிசையிட்டுப் பறத்தலையுடைய குருவியினம், வளைந்த புறத்தையுடைய செந்நெற் கதிர்களைக் கொண்டுதரும் பொருட்டாகவும், ஒவ்வோர் அமயத்துத் தாமே இரைதேடும் தன்மையினவாகியும் செல்வனவாகி, காலையிலே வெளியேறிப் போய்ப் பொழுது சாயும் மாலை வேளையிலே மீண்டும் திரும்பி வரும்.

அவரை நினைந்து துயரங்கொள்ளுகின்ற மாலைக் காலத்திலே, அவை மீண்டு வருவதுபோலவே அவரும் வருவார் என்று உணர்ந்த என் மடமை நிரம்பிய நெஞ்சமே! இனியேனும் நீ நின் சந்தேகத்தைப் பல்லாற்றானும் தெளிந்து கொள்வாயாக.

வற்றலாகிப் பட்டுப்போன மரங்கள் பலவற்றைப் பொருந்தியிருக்கும் 'சிள்வீடு' என்னும் மரவண்டுகள், உப்பு வாணிகருடைய வண்டிமாடுகளின் கூட்டத்து மணியோசை யைப்போல ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கும் பாலைவழியைக் கடந்து, அழிகுளத்து நீரினின்றும் மீன்கள் நீருள்ள இடத்தை நாடியவாய் வெளியேறிச் சென்றாற்போல, அவ்விடத்தே அவர் வழிநடந்த இடத்தூடாக நாமும் அவரை நோக்கி நடந்து, அவரைச் சென்றடைவதற்கு நீயும் துணிவு கொள்வாயாக.

**சொற்பொருள்** : 1. இடை - இடையிலே நிகழ்ந்தன வென்றேனும், இடைப்பட்டார் பலர் என்றேனும் கொள்க. 'மறை - மறைத்தலான காமத்துயரம். 2. பேஎய் கண்ட கனவு - பேய்

கண்ட கனவு என்றேனும், பேயைக் கண்ட கனவு என்றேனும் உரைக்க. கொடுந்தன்மையுடைய பேய் காணும் கனவும், மிக்க கொடுமைத் தன்மையுடையதாக இருக்கும்; அதுபோல நுட்பமாகப் பொருந்திய காமத்தின் கொடுமையும் இருத்தலாயிற்று. காமத்தால் இவள் இறந்தே போவாள்; அவ்வுடல் நமக்கு நல்ல உணவு என்று அதனை உண்பதுபோலப் 'பேய் காணும் கனவு' என்று கொள்வதாயின் உரைக்க. நனவிலே உறக்கமின்றிப் படும் துயரம் போதாதென, அயர்ந்து உறங்க முயன்ற காலத்தும் பேயைக் கனவிற் கண்டு மீளவும் உறக்கமின்றி நடுங்கியிருக்கும் நிலைபோலத் துன்பஞ் சூழ்ந்த காமநிலை என்று, 'பேயைக் கண்ட கனவில்' எனக் கொள்ளும்போது உரைத்துக் கொள்ளுக. 4. பசும் பூண் பொறையன் - பசிய பூண்களை உடையோனாகிய பொறையன். 5. புகன்று - முழங்கி. 7. ததைந்து - மிக்குப் பெருகி. 12. முடங்குபுறம் - வளைந்த மேற்புறம். 13. கொட்பின் - குறிக்கோளை உடையன. 17. வறன்மரம் - வற்றி உலர்ந்த மரம். இது பாலையின் கொடிய வெப்பத்தைக் காட்டுமாறு கூறியது. 19. 'அழிநீர் மீன் பெயர்தல்' - அழிகுளத்து மீன்கள் புதிய நீர்வரத்தினைக் கண்டால், அதன்வழி மேலேறிச் செல்லல்.

அழிகுளத்து மீன் அவளாகவும், புதுவெள்ளம் அவனாகவும், வெள்ளத்தைச் சாருகின்ற பாய்கால் சுரனாகவும் கொள்க. அவன் பிரிவினால் எழுந்த அலர் கொல்லிமலையிலே அருவிநீர் ஆரவாரித்து விழும் ஒலிமிகுதிக்குச் சமமாயிருந்தது என்கின்றனள். பறம்பினின்றும் குருவியினம் காலை போய் மாலை வருவதுபோலத், தன் காதலனும் காலைச் சென்றவன் மாலையே வருவான் என, அவன் பிரிந்தஞான்று தான் எதிர்பார்த்த பேதைமை தோன்ற, 'மடங்கெழு நெஞ்சம்' என்றனள். அத்தகைய நெஞ்சமே! இன்றுவரை அவர் வராத கொடுமையினை நீ பொறுப்பது என்னை? வருவார் என்று நீ கொள்ளும் ஐயத்தைத் தெளிவாயாக' என்கின்றாளுமாம்.

## 304. நொந்து கொள்வாளோ?

**பாடியவர் :** இடைக்காடனார். **திணை :** பாலை. **துறை :** பாசறைக்கண், தலைமகன். தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(அரசனுக்காகச் செய்யும் போர்ப்பணியினை மேற் கொண்டவனாகச் சென்று, பாசறையிலே தங்கியிருக்கிறான் ஒரு தலைவன். அத் தலைவனின் மனம் இப்படி இரவுப் போதில், தன் காதலுக்குரியாளை நினைந்து வேதனைப்படுகிறது. 'திரும்புவ தாகத் தான் குறித்து வந்த காலத்தும் குறித்த வாக்குத் தவறாமல்

*தன்னால் திரும்ப முடியவில்லையே என நினைந்து, அவன் வருந்துகின்றான்.')*

**இருவிசும்பு இவர்ந்த கருவி மாமழை**
**நீர்செறி நுங்கின் கண்சிதர்ந் தவைபோல்**
**சூர்ப்பனி பன்ன தண்வரல் ஆலயொடு**
**பரூஉப்பெயல் அழிதுளி தலைஇ வான்ந வின்று**
**குரூஉத்துளி பொழிந்த பெரும்புலா வைகறை**

**செய்துவிட் டன்ன செந்நில மருங்கிற்**
**செறித்துநிறுத் தன்ன தெள்ளறல் பருகிச்**
**சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை**
**வலந்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு**
**அலங்குசினைக் குருந்தின் அல்குநிழல் வதியச்**

**சுரும்பிமிர்பு ஊதப் பிடவுத்தளை அவிழ**
**அரும்பொறி மஞ்ஞை ஆல வரிமணல்**
**மணிமிடை பவளம்போல அணிமிகக்**
**காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவும்**
**ஈயல் மூதாய் ஈர்ம்புறம் லரிப்பப்**

**புலனணி கொண்ட காரெதிர் காலை**
**'ஏந்துகோட்டு யானை வேந்தன பாசறை**
**வினையொடு வேறுபுலத்து அல்கி நன்றும்**
**அறவர் அல்லர்நம் அருளர் தோரென**
**நந்நோய் தன்வயின் அறியாள்**

**எந்நொந்து புலக்குங்கொல் மாஅ யோளே?**
**நெஞ்சமே!**

பெரிதான வானத்திலே கார்மேகங்கள் தொகுதியாக எழுந்தன. நீர்செறிந்த நுங்கின் கண்கள் சிதறிக் கிடப்பதைப் போலத், தெய்வ நடுக்கத்தைப் போன்று உடலை நடுங்கச் செய்யும் குளிராக வருதலையுடைய, பனிக்கட்டியுடன் கூடியதான பருத்த பெயலாகிய மழையினையும் அம்மேகங்கள் பெய்யத் தொடங்கின. வானம் முழக்கமிட்டு, நிறம் வாய்ந்த மழைத்துளிகளைப் பொழிந்த இம் மழைக் காலத்திலே, பெரிதும் இருள்புலர்ந்ததாகிய வைகறை வேளையிலே -

செய்துவிட்டதுபோலத் தோன்றும் செம்மண்நிலப் பரப்பிலே, தேக்கித் தடுத்துவைத்தாற்போன்று விளங்கும் அறல்பட்ட தெளிவான நீரினைக் குடித்துவிட்டு, தன் சிறிய குட்டியை அணைத்தவாறே, துள்ளு நடையினையுடைய இளைய பெண்மானானது, வலந்திரிந்த கொம்புகளையுடைய

தலைமையான தன் ஆண்மானினோடும் கூடியதாகி, அசையும் கிளைகளையுடைய குருந்தமரத்தின் புள்ளிபட்ட நீழலிலே மகிழ்ச்சியோடு தங்கியிருக்கும்.

ஆரவாரத்துடன் வண்டினம் ஊதுதலினாலே, பிடவத்தின் முகைகள், தம் பிணிப்பவிழ்ந்தனவாக மலரும். அரிய புள்ளிகளையுடைய மயில்கள்,தோகைகளை விரித்து ஆடி நிற்கும். வரிப்பட்ட மணலிடத்தே, நீலமணியோடு வைத்திழைத்த செம்பவளத்தினைப்போல், அழகுமிக்க காயாவின் வாடிய பூக்களும், தம்பலப் பூச்சிகளும், பலவாக ஒன்றுபட்டுக் கிடந்து, ஈரம்பட்ட அச் செம்மண்நிலத்தினை அழகுசெய்தனவாகக் கிடக்கும்.

காடெல்லாம் இப்படியாகப் புத்தழகினைக் கொண்ட இம்மழைப் பருவம் வந்துறுகின்ற காலத்திலே -

ஏந்திய கொம்புகளைக் கொண்ட போர் யானைகளை யுடைய வேந்தனின் பாசறையிடத்தே ஆற்றுவதற்குக் குறித்த தொழிலினாலே, வேற்று நாட்டிடத்தே சென்று தங்கி யிருப்பவராகி, நமக்கு அருள் செய்யாதவராயினர் நம் காதலர். 'அவர் சற்றும் அறவுணர்வு உடையவரே அல்லர்.' என்று, நம்மை நினைந்து மனம் நொந்து, நாம் அவளைக் கருதிக் கொண்ட பிரிவு நோயின் தன்மையினையும் அறியாதவளாகி, அவள் தான் நம்மை வெறுத்தலையும் செய்வாளோ?

**சொற்பொருள்** : 1. கருவி மாமழை - தொகுதிப்பட்ட கார்மேகங்கள். 3. சூர் - கண்டாரை அச்சமுறச் செய்யும் தெய்வம்; சூர்ப்பனிப்பு - அங்ஙனம் அஞ்சியவரின் மேனி நடுங்குதல் போன்றதான நடுக்கம். ஆலி - பனிக்கட்டி. 8. தெறிதடை - துள்ளுநடை. 9. இரலை - ஆண்மான். 10. குருந்து - ஒருவகை மரம். 14. செம்மல் - வாடியுலர்ந்த மலர். 15. ஈயல் மூதாய் - தம்பலப்பூச்சி. 18. நன்றும் - பெரிதும்.

**விளக்கம்** : மழைத் தொடக்கத்தினாலே காடு அணி கொண்ட தன்மையினைக் காண்பவள், தான் அவளருகே இல்லாமையினாலே, தன் மேனி அணிகொள்ளாதிருத்தலை நினைவாள்; அதனால் தன்னைப் பழித்து ஊடியிருப்பாளோ என நினைந்து, காதலன் வருந்துகின்றான். குறித்த காலம் பிழைபடுதற்கு நேர்ந்தது; தன் வரவிற்கு ஏங்கியிருக்கும் அவள் தன் வாக்குப் பொய்ப்பட்டுப் போனதை நினைவாள்; அது நியாயமும் ஆகும் எனக் கருதுபவனாக, 'நன்றும் அறவர் அல்லர் நம் அருளாதோர்.... எனப் புலக்குங்கொல்?' என்று வேதனைப் படுகின்றான்.

'பெரும்புலர் வைகறை' என்றமையினாலே, இரவு முழுதும் உறக்கம் வாராதானாகி அவளையே நினைத்திருந்தவன் எனலாம். அவளும் தன்போலவே உறக்கமின்றிக் கலங்கி யிருப்பாள் என்பதனை அவன் உணர்வதனையும் இது உணர்த்தும்.

மழையின் வரவினாலே நிலம் களிகொள்ளுகின்ற இயற்கைச் செல்வி நயமுறக் கூறப்பட்டிருக்கின்ற சிறந்த செய்யுள் இது. மழையைப் பெற்ற நிலம் சமனாகி அழகுற விளங்கு வதனைச், 'செய்து விட்டன்ன செந்நிலம்' என்கிறார். 'சிறுமறி தழீஇய' தெறிநடை மடப்பிணை, வலந்திரி மருப்பின் அண்ணல் இரலையொடு, அலங்குசினைக் குருந்தின் அல்கு நிழல் வதியக்' காண்பவள், தானும் தன் காதலனுடன் கூடியிருக்கப் பெறாத நிலைக்கு வருந்திக் கலங்குவாள் என்றறிக, 'நம்நோய் தன்வயின் அறியாள்' என்ற வாசகத்திலே ஒலிக்கும் அவனுடைய ஏக்க மிகுதியையும் உய்த்து உணர்க. 'அவள் அறியாள்' என்றது, அறியமாட்டாத பேதைத் தன்மையுடையவள் என்று அவளை நினைந்து வருந்தியதுமாம். மாயோள்-மாமை நிறத்தை யுடையவள்; திருமகள் எனினும் பொருந்தும்; அவளும் எப்போதும் மாயவனின் மார்பிடத்தவளாகவே பிரியாதவளாக நிலவுதலால்.

## 305. கனலும் உள்ளம்!

**பாடியவர்** : வடம வண்ணக்கன் பேரிசாத்தனார்; வடம வண்ணக்கண் பேரிசாத்தனார் எனவும், வடம வண்ணக்கண் பெருஞ்சாத்தன் எனவும் உரைக்கப்படும். **திணை** : பாலை. **துறை** : பிரிவு உணர்த்தப்பட்ட தோழிக்குத் தலைவி சொல்லியது; தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகட்குச் சொல்லியதூஉம் ஆம்.

(தலைமகன், தலைவியைப் பிரிந்து போவதற்கான ஏற்பாடுகளிலே இருக்கின்றான்' என்பதை அறிந்தபோது, எழுகிற குமுறல் இது. தலைவி, அப்போது, 'தான் ஆற்றியிருக்க மாட்டாத நிலையினை' இவ்வாறு அவள் தோழிக்குக் கூறுகின்றனள். அன்றித், தலைமகனின் பிரிவுக்காலத்திலே, தோழி அதனைக் குறிப்பிட்டுத் தலைவிக்கு அவளைத் தேற்றுவாளாகச் சொல்லியதுமாம்.)

**பகலினும் அகலா தாகி யாமம்**
**தவலில் நீத்தமொடு ஐயெனக் கழியத்**
**தளிமழை பொழிந்த தண்வரல் வாடையொடு**

**பனிமீக் கூரும் பைதற் பானாள்**
**பருகு வன்ன காதலொடு திருகி**

**மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து**
**ஓருயிர் மாக்களும் புலம்புவர் மாதோ**
**அருளி லாளர் பொருள்வயின் அகல**
**எவ்வம் தாங்கிய இடும்பை நெஞ்சத்து**
**யானெவன் உளனோ - தோழி! தானே**

**பராரைப் பெண்ணைச் சேக்குங் கூர்வாய்**
**ஒரு தனி அன்றில் உயவுக்குரல் கடைஇய**
**உள்ளே கனலும் உள்ளம் மெல்லெனக்**
**கனைஎரி பிறப்ப ஊதும்**
**நினையா மாக்கள் தீங்குழல் கேட்டே?**

*தோழீ!*

*பகலெல்லாம் நீங்காததாகிப் பொழிந்தது; இரவின் யாமங்களும் நீங்காத வெள்ளப்பெருக்குடனே மெல்லெனக் கழிந்தன; மேகம் மழை பொழிந்ததனால் எழுந்த குளிர்ச்சியாக வருதலையுடைய வாடையும் வந்தது; இவற்றுடனே மிகுதியான வருத்தத்தை அடைகின்றதான துயர்மிகுந்த நள்ளிரவு வேளையிலே-*

*பல அடுக்குகளாலே உயர்ந்திருக்கும் வறுமையற்ற படுக்கையினிடத்தே, பருகுதலைப் போன்ற காதலுடனே பிணைந்து கிடந்து, ஒருவரின் உடல் மற்றவரின் உடலிற் புகுந்து ஒன்றாகியது போன்ற விருப்பமுடன், கைகளாலே தழுவிக் கிடக்கும் அணைப்பிலே ஒன்றுபட்டிருக்கும் மாக்களும், குளிருக்கு ஆற்றாராகிப் புலம்புவார்கள் அன்றோ? இங்ஙனமாகவும்,*

*அருள் இல்லாதவராக நம் காதலர், பொருள் கருதியவராகிப் பிரிந்துபோக, அதனால் வந்துற்ற துன்பத்தைத் தாங்கிய இடும்பை நெஞ்சத்தவளான யான், எங்ஙனம் தனித்திருந்து உயிர் வாழ்வேனோ?*

*பருத்த அடியினையுடைய பனைமரத்திலே, தன்னந்தனியே தன் துணையைப் பிரிந்து தங்கியிருக்கும், கூர்மையான வாயினையுடைய அன்றிற் பறவையின் வருத்தக்குரல் மூட்டி விடுதலினாலே, கனலுகின்ற உள்ளமானது மேலும் கொழுந்துவிட்டு எரியுமாறு, மெல்லெனத் தம் இனிதான குழலை ஊதி எழுப்புபவர் எண்ணமற்ற மக்களான ஆயர்கள்! அவர்களின் குழலொலியாகிய அதனைக் கேட்டும் யான் எவ்வாறு ஆற்றியிருப்பேனோடீ!*

**சொற்பொருள் :** 1. யாமம் - இரவின் ஒரு கூறு; இரவும் எனவும் பாடம். 2. தவலில் - நீக்கமற. நீத்தம் - வெள்ளம். ஐஎன - மெல்லென. 3. தளி - மேகம். 4. பனி - துன்பம். பனிமீக்கூரும் பைதற் பானாள் - பனியும் மிகுதியாகப் பெய்கின்ற வருத்தத்தையுடைய நள்ளிரவும் ஆம். 5.. பல்படை - பலவாகப் படைக்கப்பட்ட; அடுக்கடுக்காக மெத்தைகள் அமைந்த. நிவந்த - உயர்ந்த. 6. பருகுவன்ன - பருகுதலைப் போன்ற; காதல். பருகுவன்ன காதல் என்று கூறப்பெற்றது. இஃது இருவரும் தம்முட் காதலால் மிகுந்தவராகிப் படுக்கையிற் சேர்ந்திருந்த தன்மையைக் குறிப்பதாம். 7. கைகவர் முயக்கம் - இருவரும் ஒருவரையொருவர் தம் கைகளாலே வளைத்துத் தழுவியிருக்கும் நிலை. 8. ஒருயிர் மாக்கள் - உடலால் இருவரேனும், உயிரால் ஒன்றாயின கலந்த காதற்பெருக்குடையவர். 10. இடும்பை - துன்பம்; நைந்து நைந்து படும் வேதனை. 11. எவன் உளனோ? - எங்ஙனம் இருப்பேனோ? 12. சேக்கும் - தங்கியிருக்கும். 13. உயவுக் குரல் - வருத்தக் குரல். 15. கனைஎரி - சுடர்விட்டு எரிகின்ற நெருப்பு. 16. நினையா மாக்கள் - நம் துயரைப்பற்றி எண்ணாத பேதை மாக்கள்.

**விளக்கம் :** "கைகவர் முயக்கத்து ஒருயிர் மாக்களும் புலம்புவர்...யானெவன் உளனோ?" என்று கூறுதலிலே புலப்படுகின்ற ஆற்றாமையின் மிகுதியை எண்ணிக் காண்க. 'அருளிலாளர்' என்றது, தன் நிலையறிந்தவரா யிருந்தும் பிரிய நினைந்த கொடுமையினால். 'பொருள் வயின் அகல' என்று சொல்வதும், 'யான் எவன் உளனோ?' என்பதும் தன்னினும் காட்டில் பொருளினிடத்தே அவர் கொண்ட காதன்மிகுதியைப் புலப்படுத்தி நொந்துகொள்கின்றதனை உணர்த்துவனவாம். அன்றிலின் உயவுக்குரல் கேட்டு உள்ளே கனலும் உள்ளம், கோவலரின் தீங்குழல் ஒலிகேட்டுக் கனையெரியாகிப் பிறக்கும் தன்மைபோல, அவரது வரப்போகும் பிரிவை நினைந்தே கலங்கும் உள்ளம், பிரிவும் வந்துறின், கொதிப்புற்றுத் தன்னையே அழித்துவிடும் என்பதுமாம்.

தோழிக்குத் தலைமகள் சொல்வதாயின், இவ்வாறு பொருள் கொள்ளுதல் பொருந்தும். தோழி தலைமகட்குச் சொல்வதாகக் கொள்ளின், தலைவியின் நிலைக்கு இரங்கி வேதனைப்பட்டு, அவள் கொள்ளும் துயரமாக, 'யானெவன் உளனோ தோழி?' என்று தக்கவாறு பொருளுரைத்து முடித்துக் கொள்ளுக. 'உடனுறைபவரும் வாடைக்காற்றாது துயருறு கின்ற போதிலே, பிரிவின் எவ்வத்தோடு வாடையினாலும் இடும்பையுற்ற நெஞ்சத்தை நீ அடையின், அன்றிலின் உயவுக்குரல் கேட்டு உள்ளே கனலும் உள்ளம்போலப்

*பிரிவினால் வெதும்பியிருக்கும் நின்னுள்ளம், கோவலரின் தீங்குழல் ஒலிபோல் வாடையின் நடுக்கமும் சேர்ந்து வருத்தக் கனை எரி பிறக்கும் நிலையுற்றதானால் அதனைக் கண்டு யான் எவ்வாறு வாழ்வேனோ?' எனத், தோழி தலைவியை நினைந்து இரங்குவாளாய்க் கூறுகின்றனள் என்க.*

*"தீங்குழல் கேட்டு" என்பதனால், இப்பேச்சு, தோழியருக்குள் மயங்கும் மாலைப்பொழுதில் நிகழ்ந்ததாதல் வேண்டும்.*

**மேற்கோள் :** *"இப்பாட்டினுள்ளே பெருமணல் உலகத்துப் பாலை வந்தது" எனக் குறிப்பிட்டு, 'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே' என்னும் சூத்திரத்துக் காட்டி உரைப்பர் நச்சினார்க்கினியர்.*

## 306. நின் செம்மல் இதுவோ?

**பாடியவர் :** *மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.* **திணை :** *மருதம்.* **துறை :** *தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.*

*(தலைவியை மறந்து சிலகாலம் பரத்தையின் உறவிலே ஈடுபட்டிருந்த ஒருவன், அவளில்லத்தை நாடி வருகிறான். அவ்விடத்தே, தோழிபால் தன் விருப்பத்தைக் கூறித் தலைவியை ஊடல் நீக்கித் தன்னுடனே இசைவிக்க வேண்டுகின்றான். தோழி, அவனுடைய ஏவலை மறுப்பாளாகக் கூறுகிற தன்மையிலே அமைந்தது இச் செய்யுள்.)*

**பெரும்பெயர் மகிழ்ந! பேணா தகன்மோ!**
**பரந்த பொய்கைப் பிரம்பொடு நீடிய**
**முட்கொம் பீங்கைத் துய்த்தலைப் புதுவீ**
**ஈன்ற மாத்தின் இளந்தளிர் வருட**
**ஆர்குருகு உறங்கும் நீர்சூழ் வளவயற்**

**கழனிக கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து**
**பழன யாமை பசுவெயிற் கொள்ளும்**
**நெல்லுடை மறுகின் நன்னர் ஊர!**
**இதுவோ மற்றுநின் செம்மல்? மாண்ட**
**மதியோர் ஒள்நுதல் வயங்கிழை ஒருத்தி-**

**இகழ்ந்த சொல்லுஞ் சொல்லிச் சிவந்த**
**ஆயிதழ் மழைக்கண் நோயுற நோக்கித்**
**தண்ணறுங் கமழ்தார் பரீஇயினள் நும்மொடு**
**ஊடினள் - சிறுதுனி செய்தெம்**
**மணன்மலி மறுகின் இறந்திசி னோளே.**

**பெரிதும் பெயர்பெற்றோனாகிய தலைவனே!**

*பரந்துகிடக்கும் பொய்கையினிடத்தான பிரப்பங் கொடியோடு ஈங்கையும் சேர்ந்து நீண்டு வளர்ந்து கிடக்கும்; அந்த ஈங்கையிடத்துப் பஞ்சுபோன்ற உச்சியினையுடைய புதுப்பூக்கள் விளங்கும்; அப்பூக்களும், மாமரத்தின் ஈனப்பட்ட இளந்துளிரும் தன்னை வருடிக் கொண்டிருக்க நாரையானது மீனுண்டு விட்டதாகிப் பின் உறங்கியபடியிருக்கும். இத்தகைய நீர்வளம் சூழ்ந்துள்ள வளமான வயல்களிடத்தே நன்செய்க் கரும்புகளும் விளங்கும். அக்கரும்புகள் சாய்ந்து கிடக்கும் பக்கமாக, வயலாமைகள் ஊர்ந்து சென்று இளவெயில் காய்ந்து கொண்டிருக்கும். இத்தகைய நெல்வளம் கொண்ட, தெருக்கள் அமைந்த, நன்மை பொருந்திய ஊருக்கு உரியோனாகிய தலைவனே!*

*மாட்சியுடைய நிலவினைப் போன்று அழகு விளங்கும் ஒளிகொண்ட நெற்றியினையும், விளங்கும் அணிகளையும் கொண்டவளான பரத்தை ஒருத்தி, இகழ்ச்சியான சொற்களைச் சொன்னாள். அழகிய இதழ்களையுடைய குளிர்ச்சியான தன் கண்கள் சிவப்புற, நின்பால் நோய் வந்தடையும்படியாக, நின்னுடனே ஊடிச் சினந்து நோக்கினாள். குளிர்ச்சியான மணம் விளங்குகின்ற நின் மாலையினையும் பறித்து எறிந்தாள். இவ்வாறாக, அவள் நும்முடன் ஊடியதுடன், எம்முடைய மணல் மிகுந்த தெருவழியாகச், சிறிதளவு எமக்குத் துயரமும் செய்தவளாகிச் சென்றனளும் அல்லளோ?*

*நின் தலைமைப் பண்பு என்பதெல்லாம் இத்துணை தானோ? எனவே, நீ இவ்விடம் விட்டு அகல்க. (நின்னை யாம் மதித்து ஏற்பதற்கு இசையோம் என்பது குறிப்பாகும்.)*

**சொற்பொருள் :** *1. பெயர் - புகழ். மகிழ்ந - தலைவ. 2. பிரம்பு - பிரப்பங்கொடி. துய்த்தலைப் புதுவீ - பஞ்சு போன்ற உச்சியினையுடைய புதுப்பூக்கள். 4. மாத்தின் - மாமரத்தின். ஆர் குருகு - மீனுண்ட நாரை. 2. சாய்ப்புறம் - சாய்ந்து கிடக்கின்ற பக்கம்; இன்றும் 'சாய்ப்பு' என்ற சொல் தென் தமிழ்நாட்டிலே வழங்குவதனை அறிக. 6. கழனிக் கரும்பு - நன்செய்க் கரும்பு; நீர் மிகுதியால் நன்கு வளர்வது இது. புன்செய்க் கரும்பு நீரின் மிகுதியினாலே அழுகிப் போவதாம். 7. பசு வெயில் - பசுமையான வெயில்; இளவெயில்; மாலைக் காலத்து வெயில். 8. மறுகு - தெரு. நன்னர் ஊர் - நன்மை பொருந்திய ஊர். 13. பரீஇனள் - அறுத்தனளாக. 14. துனி - கலகம்.*

**உள்ளுறை உவமப்பொருள் :** 'ஆர்குருகு ஈங்கைப் புதுப்பூவும் மாவின் இளந்தளிரும் வருடக் கிடந்து நாரை

உறங்கும் நீர்சூழ் வளவயல்' என்றது, தலைவனும் அவ்வாறே குறியாத இன்பத்தினை எளிதிலே எய்துதற்கு உரியவன் என்பதனாலாம். இதனால், தோழி வாயில் மறுத்தனளேனும், அவனுக்குத் தலைவியை இசைவிக்கவே உள்ளத்தில் விருப்பம் உடையவள் என்பதும் புலப்படும். 'கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து பழன யாமை பசுவெயில் கொள்ளும்' என்றது கரும்பின் இனிமையை அறியமாட்டாத அது, அதனைவிட்டு ஒதுங்கிச் சிறிதுபோதிலே இல்லாது போகின்ற பசுவெயிலின் இனிமை யினை நுகர்ந்தபடி கிடப்பதுபோலத், தலைவன் தலைவியையும் இல்லத்தையும் மறந்து, புல்லிய பரத்தை யின்பத்தை நாடிச்செல்லும் பேதமையாளனாயினான் என்று பழித்ததாம்.

**விளக்கம்** : "மதியேர் ஒண்ணுதல்" என்றது முதல் 'இறந்திசினோளே' என்றதுவரை சொல்லியது, அவனுடைய பரத்தை யாவளென்பதும், அவள் அவனுடன் ஊடிச்சினந்து ஒதுக்கிவிட்டநிலை தாங்கள் அறிந்ததே என்பதும் காட்டுவதற்காம். 'எம் மணல்மலி மறுகின் இறந்திசினோள்' என்றது, பரத்தை தம்மேற் பகையுடையாளாய் வந்து கலகம் செய்தனள் என்பதை உரைத்ததாம். 'கமழ்தார் பரீஇயனள்' என்பதற்கு, அவள் அவன் தனக்களித்த மலர் மாலையினை அறுத்தெறிந்தனள் என்றலும் பொருந்தும்.

'இதுவோ மற்று நின் செம்மல்?' என்றது, அவனுடைய குடியுயர்வைச் சுட்டி, அவனுடைய ஒழுக்கத் தாழ்ச்சியை இழித்துப் பழித்துரை கூறியதாம்.

## 307. பிரிதல் பொருந்துமோ?

**பாடியவர்** : மதுரை ஈழத்துப் பூதன் தேவனார். **திணை** : பாலை. **துறை** : பிரிவு உணர்த்தப்பட்ட தோழி தலைமகனைச் செலவு விலக்கியது.

(தான் பிரிந்து போகவிருக்கின்ற செய்தியைத் தோழிக்கு அறிவிக்கிறான் ஒரு தலைவன். அத் தலைவனுக்கு, அவள் அதனால் தலைவிக்கு வந்துறுகின்ற ஏதத்தின் மிகுதியினைச் சொல்லிப் பிரிந்துபோகும் எண்ணத்தைக் கைவிடச் செய்வதாக அமைந்த செய்யுள் இது.)

**'சிறுநுதல் பசந்து பெருந்தோள் சாஅய்**
**அகலெழில் அல்குல் அல்வரி வாடப்**
**பகலுங் கங்குலும் மயங்கிப் பையெனப்**
**பெயல்உறு மலரின் கண்பனி வார**
**ஈங்கிவள் உழக்கும்' என்னாது வினைநயந்து**

**நீங்கல் ஒல்லுமோ-ஐய!-வேங்கை**
**அடுமுரண் தொலைத்த நெடுநல் யானை**
**மையலம் கடாஅஞ்செருக்கி மதஞ்சிறந்து**
**இயங்குநர்ச் செருக்கும் எய்படு நனந்தலைப்**
**பெருங்கை எண்கினம் குரும்பி தேரும்**

**புற்றுடைச் சுவர புதலிவர் பொதியிற்**
**கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து**
**உடனுறை பழமையின் துறத்தல் செல்லாது**
**இரும்புறாப் பெடையொடு பயிரும்**
**பெருங்கல் வைப்பின் மலைமுதல் ஆறே?**

*ஐயனே!*

*தன் சிறுத்த நெற்றி பசந்துபோகவும், பெருத்த தன் தோள்கள் தளரவும் அகன்ற அழகிதான தன் அல்குல் பகுதியினிடத்து இரேகைகள் அழகிழந்து வாடவும், பகலும் இரவும் மயங்கிக் கிடந்து, மெல்லெனப் பெய்தலைப் பொருந்திய மழைபோல, மலரனைய கண்களினின்றும் நீர்த் துளிகள் வீழ்ந்துகொண்டிருக்க, இவ்விடத்தே, நின் தலைவியாகிய இவளும் வருத்தம் அடைவாள். இதனைக் கருதாது, செய்கின்ற தொழிலிலேயே விருப்புற்று, இவளைப் பிரிந்து செல்லுதல், நினக்குப் பொருத்தம் உடையதாகுமோ?*

*வேங்கைப்புலி தாக்குவதாகிய தனக்குற்ற மாறுபாட்டினை, அதனோடு பொருதிப் போக்கிக் கொண்ட நெடிய நல்ல களிற்றியானையானது, மயக்கஞ்செய்கின்ற மதத்தினாலே செருக்குற்றதாகி, மதவெறியாலே மிகுந்ததுமாகி, வழிச் செல்பவரைக் கொல்லுகின்ற தன்மையைக் கொண்டது. முள்ளம் பன்றிகளை உடையதான அகன்ற காட்டிடம்.*

*பெருத்த கைகளையுடையவான கரடியினங்கள் புற்றாஞ் சோற்றினைத் தேடியபடியிருக்கும் புற்றுகளைக் கொண்ட சுவர்களையுடையதாயும் புதர்கள் மண்டிக்கிடக்கும் இயல்பின தாயும் உள்ள பொதியினிடத்தே, கடவுள் வழிபாடு இல்லாது போய்க் கிடக்கும் கருத்த அடியினையுடைய தூண்களமைந்த தேவகோட்டத்தினிடத்தே, உடன்வாழ்ந்த பழைமையினாலே கைவிட்டுப் போதலைக் கருதாது, பெரிய காட்டுப்புறாக்கள் தம் பெடையோடும் கூடி இன்புற்றிருக்கும். பெருங்கற்களைக் கொண்ட ஊர்களையுடைய, அத்தகைய மலையடிவாரத்தே செல்வது நுமது வழியுமாகும். (அதனாலும், நீர் போதல் பொருந்துமோ? என்றனளாம்.)*

**சொற்பொருள் :** *1. சிறுத்த நுதலும் பெருத்த தோள்களும் பெண்மைக்குப் பொலிவு தருவன; அவை பசந்தும் சாஅயும் பொலிவிழக்கும் என்றனள். 3. கங்குல்தான் மயங்குவள் - பகலெனில் பலரோடும் கலந்து உரையாடலால் மறந்திருப்பவள் எனலாமோ எனில், அதுவும் இல்லை; அவள் இரவைப்போன்று பகலிலும் மயங்கியே இருப்பள் என்பார் 'பகலும் கங்குலும் மயங்கி' என்றனர். 4 பெயலுறு மலர் - பெயலைப் பெற்ற குவளை மலரும் ஆம். கண் பனி வார - கண் துளிகளைச் சொரிய. 7. தொலைத்த - போக்கி வென்ற. 9. எய் - முள்ளம் பன்றி. 10. எண்கு - கரடி. குரும்பி - புற்றாஞ் சோறு. 13. கந்தம் - தெய்வ வழிபாட்டிடம். 15. மலைமுதல் ஆறு - மலையடிவாரத்தேயாகச் செல்லும் வழி.*

**விளக்கம் :** *'ஈங்கிவள் உழக்கும் என்னாது வினைநயந்து நீங்குதல் ஒல்லுமோ?' என்ற கேள்வியினை நன்கு கவனிக்க, 'இவள் வாடி அழிவதனைக் கருதாயாய்ப், பொருட்குப் பிரிவதனை நினைக்கின்றனையே?' இவள் நலத்தினும் மேலானதாக விளங்குவதோ அப்பொருள்?' என்று, பொருளார்வத்தினும் உடனுறை வாழ்வினையே மேற்கொள்ளத் தூண்டும் சொல்லாற்றலை நினைந்து இன்புறுக. இவள்தான் அழிந்தனள் எனினும், நின் வினை சிறந்து, நீயாயினும் அந்த இன்பத்தை உறுதியாக அடைதல் கூடுமோ? எனில், அதுவும் சொல்லுவதற்கில்லையே? யானை மதஞ்சிறந்து இயங்குநரைச் செருக்கும் நனந்தலைப் பட்டதும், பாழ்பட்ட ஊர்களை யுடையதுமான வழியூடன்றோ நீ செல்லுதல் வேண்டும்?' என்று. தோழிகூற்றாக வருவனவற்றின் வாதத்திறனைக் காண்க. 'யானையை வெல்வேன்' என்றனையாயின், அதுவும் நின்னால் இயலாது என்பவள்போன்று, 'வேங்கை அடுமுறண் தொலைத்த மையலங் கடாஅம் செருக்கி மதம் சிறந்து இயக்குநர்ச் செருக்கும் யானை' என்றனள். பாழ்பட்ட பொதியிலாயினும், அதனை விட்டகலாது 'இரும்புறாப் பெடையொடு பயிர்தலைக் காணும் நீ நின் உள்ளத்தே இவள் நினைவு எழுந்துவிடத் திரும்புதலன்றி, மேலும் செல்வாயோ?' எனவும் உரைத்தனள். புறவின் பயிர் தலைக் கூறியது, பிரிந்து வினைசெயலால் வரும் இன்பமிக்க வாழ்வினும், வறுமைக் காலத்தும் பிரிந்தகலாது உடனிருந்து வாழும் வாழ்வே தலைவிக்கு இன்பம் தருவதாகும் என்றதாம்.*

## 308. பகலில் வருக!

**பாடியவர் :** *பிசிராந்தையார்.* **திணை :** *குறிஞ்சி.* **துறை :** *இரவு வருவானைப் பகல் வருகென்றது.*

*(களவிற்கூடி மகிழ்ந்துவந்த காதலர்கள், தினையறுவடைக்குப் பின், தலைவி இற்செறிக்கப்பட்டனளாக, இரவுக் குறியிலே இன்புற்று வருகின்றனர். இரவுக் குறியினால் வரும் ஏதங்கள் பலவற்றையும் கருதிய தோழி, விரைவிலே மணஞ்செய்து கொள்வதற்குத் தலைவனைத் தூண்டி, அதனை நிகழ்வித்து விடவும் விரும்புகின்றாள். அதனால், 'அவனைப் பகலில் வருக' என்று கூறி, அதுவும் இயலாதாதலை உணர்த்தித், தன் கருத்தைப் புலப்படச் செய்கின்றாள்.)*

**உழுவையொ டுழந்த உயங்குநடை ஒருத்தல்**
**நெடுவகிர் விழுப்புண் கழாஅக கங்குல்**
**ஆலி அழிதுளி பொழிந்த வைகறை**
**வால்வெள் அருவிப் புனல்மலிந் தொழுகலின்**
**இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்**

**கலஞ்சுடு புகையிற் றோன்றும் நாட!**
**இரவின் வருதல் எவனோ? பகல்வரின்**
**தொலையா வேலின் வண்மகிழ் எந்தை**
**களிறணந் தெய்தாக் கன்முகை இதணத்துச்**
**சிறுதினைப் படுகிளி எம்மொடு ஓப்பி**

**மல்ல லறைய மலிர்சுனைக் குவளை**
**தேம்பாய் ஒண்பூ நறும்பல அடைச்சிய**
**காவலர்க் கரந்து கடிபுனம் துழைஇய**
**கூந்தல் மெல்லணைத் துஞ்சிப் பொழுதுபடக்**
**பெருங்களிற்று ஒருத்தலின் பெயர்குவை**

**கருங்கோற் குறிஞ்சிநும் உறைவி னூர்க்கே.**

*புலியோடு போரிட்டுப் புண்பட்டுத் தளர்ந்த நடையுடைய தாகிச் செல்லும் களிற்றினது, நீண்ட பிளப்பாகிய விழுப் புண்ணினைக் கழுவுவதாக, இரவிலே, பனிக்கட்டியோடுங் கூடியதான மிக்க துளிகளையுடைய மழையினையும் வானம் பொழிந்தது. அதனாலே, வைகறைப் போதிலே, மிக்க வெண்மையினையுடைய அருவிகள் புனல் மிகுந்தவையாக வீழ்வனவாய் விளங்கும் மலையும் புதைப்பட்டுத் தோன்றுமாறு வெண் மேகங்கள் சூழ்ந்து கொண்டன. அக்காட்சி மட்கலன் சுடுகின்ற சூளையினிடத்தே இருந்து எழுகின்ற புகையினைப் போலத் தோன்றுகின்ற, மலைநாட்டானே! இப்படிப்பட்ட மழைக்காலத்து இரவில் நீ வருவதுதான் ஏனோ?*

*தொலைதலில்லாத வேற்போரிலே, வளவிய மகிழ்ச்சி யினை அடைகின்ற தன்மையுடையவன் எம்முடைய தகப்ப னாவான். அவன், களிறு கையுயர்த்தும் அடைதற்கியலாத,*

குன்றுகளின் உச்சியிடத்ததான பரணிடத்தே, சிறுதினைப் பயிரிற் படுகின்ற கிளிகளை ஓட்டுமாறு, எம்மையும் அமைத்திருப்பான்.

அவ்விடத்தே, பகலில் வந்து, அக்கிளிகளை எம்முடனிருந்து ஓட்டியும், வளமான பாறையிடத்தாகிய நிறைந்த சுனையிடத்துக் குவளையினது தேன் சொரிகின்ற ஒள்ளிய பூக்களை மிகுதியாகச் செறித்திருக்கின்ற எம் கூந்தலாகிய மெல்லணையிலே எம்முடன் கூடித் துயின்றும், பொழுது சாயக், காவலர்க்கு மறைந்து, காவலுடைய தினைப்புனத்தே நுழைந்து மேய்ந்து செல்லும் பெரிய களிற்றியானையினைப் போல, நீயும், கருமையான கொம்புகளையுடைய குறிஞ்சிச் செடிகளை கொண்டதான, நீ வாழும் ஊரினை நோக்கிச் செல்வாயாக!

**சொற்பொருள் :** 1. உழுவை - புலி. உழந்த - போரிட்டு நொந்த. உயங்கு நடை - வருத்தத்தால் தளர்ந்த நடை. ஒருத்தல் - தலைமைச் செவ்வியுடைய பெரிய களிற்றியானை. 5. வெண் மழை - வெண் மேகம்; மஞ்சு கவைஇ - கவிந்து. 6. கலம் - மட்கலம். 8 தொலையா வேல் - வெற்றி நீங்காத வேற்போர். வண்மை - மேலெறிந்து உவக்கின்ற ஆண்மைச் செவ்வியைக் குறித்தது. 9. அணந்து எய்தா - நிமிர்ந்து அடையாத. கன்முகை - குன்றின் உச்சி; அது மலர்முகை போன்று செங்குத்தான பாறையாக இருத்தல்பற்றிக் கன்முகை என்றனர்; முகை - மொட்டு. இதணம் - பரண். 10. சிறுதினை - சிறுதினைப் பயிர். 14. அறைய - பாறையிடத்ததான. மல்லல் - நீர்ப்பெருக்குடன் விளங்கிய. மலிர் - நிறைந்த. 14. பொழுது பட - பொழுது சாய

**விளக்கம் :** 'உழுவையொடு உழந்த உயங்குநடை ஒருத்தல்' எனக் காட்டுயானை திரிதலையும், 'வடுவகிர் விழுப்புண் கழாஅக் கங்குல் ஆலி யழிதுளி பொழிந்த' என, மழைக்காலத்துத் தன்மையினையும் கூறி, வழியின் ஏதத்துக்குத் தாம் அஞ்சுவதனை உணர்த்தி, இரவில் வரவேண்டாம் என்றனள். பகலில் வந்து இன்புற்றுச் செல்லலாம் என்றவள் தந்தையின் வேலாண்மை யைக் கூறியும், 'காவலர்க் கரந்து' என எச்சரித்தும், அதுவும் கைகூ டாததே என்பதனையும் உணரவைத்தனள். இதனால், விரை விலே மணம்வேட்டு வருதலைத் துணியுமாறு அறிவுறுத்தினள் எனலாம்.

'புலியொடு உழந்து புண்பட்ட உயங்குநடை ஒருத்தலின் நெடுவகிர் விழுப்புண்ணினை, மழைநீர் பெய்து கழுவுகின்ற நாடன்' என்றது, அவனும் காமத்தால் வருந்தி நொந்திருக்கும் தலைவியின் துயரைப் போக்கும் அருள் உள்ளம் உடையவனாகுதல் வேண்டும் என உணர்த்துவதற்காம்.

'கடிபுனந் துழைஇய ஒருத்தலிற் பெயர்குவை' என்றது, புனத்தழிவு கண்ட காவலர், தம்மைக் கரந்து சென்றுவிட்ட யானையினைத் தொடர்ந்து சென்று அழிக்கும் ஆற்றலும் சினமும் உடையவராவர் என அறிவித்ததாம்.

'கூந்தல் மெல்லணைத் துஞ்சி' என்ற தொடரின் நயத்தினை அறிந்து இன்புறுக. இதனால், அவன்பால் ஆராக் காதலுடையவள் தலைவி என்பதனை நயமுடன் உரைக்கின்ற செவ்வியினையும் காண்க.

## 309. நாமே சென்றால் என்ன?

**பாடியவர் :** கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார்; கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் எனவும் இவர் பெயர் வழங்கும். **திணை :** பாலை **துறை :** பிரிவிடை வேறுபட்ட தலைமகனது வேறுபாடு கண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு :** கூத்தர்கள் நற்போர் வானவனின் சேவடியினை நாடிச் செல்லுகின்றதான அவனது வள்ளன்மையும், அவ் வானவனின் குதிரைப் பெரும்படையின் சிறப்பும்.

(தலைவியைப் பிரிந்து தலைவன் வினைமேற் சென்றிருந்த காலத்திலே, தலைவி துயரத்தால் அடைந்த வேறுபாட்டினைக் கண்டு அவளுடைய தோழி தானும் வருந்திச் சோர்ந்து விடுகின்றாள். அப்போது, தோழியின் வேறுபாட்டைப் போக்கும் வகையாகத் தலைவி சொல்வதாக அமைந்தது இச்செய்யுள்.)

**வயவாள் எறிந்து வில்லின் நீக்கி**
**பயநிரை தழீஇய கடுங்கண் மறவர்**
**அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தெனத்**
**தெய்வஞ் சேர்ந்த பராரைவேம்பிற்**
**கொழுப்பா எறிந்து குருதி தூஉய்ப்**

**புலவுப் புழுக்குண்ட வான்கண் அகலறைக்**
**களிறுபுறம் உரிஞ்சிய கருங்கால் இலவத்து**
**அரலை வெண்காழ் ஆலியின் தாஅம்**
**காடுமிக நெடிய என்னார் கோடியர்**
**பெரும்படைக் குதிரை நற்போர் வானவன்**

**திருந்துகழற் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு**
**நாஞ்செலின் எவனோ - தோழி! - காம்பின்**
**விளைகழை உடைந்த கவண்விசைக் கடிஇடிக்**
**கனைசுடர் அமையத்து வழங்கல் செல்லாது**
**இரவுப்புனம் மேய்ந்த உரவுச்சின் வேழம்**

**தண்பெரும் படாஅர் வெரூஉம்**
**குன்றுவிலங் கியவினவர் சென்ற நாட்டே?**

வெற்றி வாளினாலே வெட்டிக் கொன்றும், வில்வினைத் தொழிலினாலே அடித்து வெருட்டியும், பசுமந்தைகளைக் கைகொண்ட அஞ்சாமையாளரான மறவர்கள், அம்புகளைத் தொலைவுக்குச் செல்லுமாறு செலுத்தி நிரைகாவலரை ஓட்டியபின், வன்மையான காட்டு நிலத்தை அடைந்தனர். அடைந்தாராக -

தெய்வம் குடிகொண்டிருக்கும் பருத்த அடியினையுடைய வேம்பிற்குக் கொழுத்த ஒரு பசுவினைக் கொன்று பலியிட்டனர். அதன்குருதியைத் தூவித் தெய்வத்தைப் போற்றி வழிபட்டனர். பின், அப்பசுவின் புலாலினைப் புழுக்கி உண்டு விட்டுச் சென்றனர். அவ்வாறு அவர் உண்டுவிட்டுச் சென்றிருந்த அகன்ற பாறையிடத்தே, களிறு தன் முதுகினை உராய்ந்த கருத்த அடிமரத்தையுடைய இலவமரத்தின் வெண்பஞ்சுடன் கூடிய விதைகள், பனிபெய்வதுபோல் வீழ்ந்து கொண்டிருக்கும்.

அத்தகைய காட்டுவழி மிகவும் நெடியதெனவும் அவர் அஞ்சார். பெரிதான குதிரைப் படையினையுடைய, நல்ல போராற்றல், மிக்க, வானவனின் கழல் விளங்கும் திருத்தமான செவ்விய பாதங்களை அடையும் விருப்பத்தினாலே செல்லுகின்ற இயல்புடையவர்கள் கூத்தர்கள். அவர்களைப் போலவே -

கதிரவன் எரிக்கும் பகற்பொழுதிலே, மூங்கிலின் விளைந்த கழைகளும் உடைந்துபோகின்ற வேகத்துடனே வந்து தாக்கும் கவண்கல்லின் இடிக்கு அஞ்சிச் செல்லுதலன்றி, இரவு வேளையிலே சென்று, தினைப்புனத்தினை மேய்ந்த வலிய சினமிக்க வேழமானது. குளிர்ந்த பெரிதான தூற்றினுக்கு அஞ்சிக் கலங்கும் தன்மையினையுடையதும், குன்றுகள் குறுக்கிடும் நெறிகளையுடையதுமான, நம் தலைவரான அவர் சென்ற நாட்டினுக்கு, நாமும் இனிச் சென்றால் என்னவோ?

**சொற்பொருள்** : 1. வயவாள் - வெற்றிவாள்; வாளை ஏந்தியவனின் ஆற்றல் அவன் ஏந்திய வாளின்மேல் ஏற்றிக் கூறப்பெற்றது. நீக்கி - போக்கி; கொன்று. 2. பயநிரை - பசுமந்தை; பயம் - பால். தழீஇய- கைப்பற்றிய. கடுங்கண் - அஞ்சாமை. மறவர் - பாலை நிலத்து மக்கள்; மழவர் எனவும் பாடம். 5. கொழுப்பா - கொழுத்த ஆ 6. புலவுப் புழுக்கு - புழுக்கிய புலால். அறை - பாறை. 9. கோடியர் - கூத்தர். 10. வானவன் - சேரன். 12. காம்பு - மூங்கில். 13. விளை கழை - முற்றிய மூங்கில் தண்டு, வனை கழை எனவும்

பாடம்; வனை - அழகிய. 14. வழங்கல் - இயங்கல்; நடமாடல். 15. உரவு - வலிமை.

**விளக்கம் :** "வானவனின் திருவடிகளை நாடிச் செல்லும் கூத்தர் தாம் பெறுகின்ற பேரின்பத்தை உளங்கொண்டு, வழியிடைப் படுந் துயரை எல்லாம் பாராட்டாது செல்வது போன்று, நாமும் நம் காதலரை நாடிச் செல்வோமா?" என்றனள். கூத்தரின் வறுமைநிலை போன்றது தன் ஏக்கநிலை எனவும், அஃது அவர் அருள்பெறின் அன்றிப் பிற யாதானும் மாறாது எனவும், உரைத்தனள்.

காவலரின் கவண் கல்லால் அடிபடற்கு அஞ்சி, இரவிலே புனத்தை மேயச்சென்ற வேழம், படாஅரைக் கண்டு காவலரோ என அஞ்சுவது, அது செய்யமுனைந்த களவுத் தொழிலினாலே உண்டாகும் அச்சம் என்க.

## 310. கூப்பிடு தூரமே!

**பாடியவர் :** நக்கீரனார். **திணை :** நெய்தல். **துறை :** தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி சொல்லியது.

(தலைவன் ஒருவன் தலைவி ஒருத்தியைக் கண்டு காதலுற்றான். பலநாளும் அவள் நினைவாகிய ஏக்கத்தினாலே, அவளையே சுற்றிக் கொண்டும் இருந்தான். அவளும் அவனை விரும்பத் தொடங்கினாள். ஆயினும் மடம் குறுக்கிட்டுத் தடுத்துவிடுகிறது. இந்நிலையிலே அவன் குறையினைத் தீர்க்க இசைந்த தலைவியின் தோழி, அவனிடத்துக் கூறும் தன்மையினை உடையது இச்செய்யுள்.)

**கடுந்தேர் இளையரொடு நீக்கி நின்ற**
**நெடுந்தகை நீர்மையை அன்றி நீயும்**
**தொழுதகு மெய்யை அழிவுமுந் துறுத்துப்**
**பன்னாள் வந்து பணிமொழி பயிற்றலின்**
**குவளை யுண்கண் கலுழ நின்மாட்டு**

**இவளும் பெரும்பே துற்றனள் ஓரும்**
**தாயுடை நெடுநகர்த் தமர்பா ராட்டக்**
**காதலின் வளர்ந்த மாதர் ஆகலின்**
**பெருமடம் உடையரோ சிறிதே; அதனால்**
**குன்றின் தோன்றும் குலவுமணற் சேர்ப்ப!**

**இன்றிவண் விரும்பா தீமோ! சென்றப்**
**பூவிரி புன்னை மீதுதோன்று பெண்ணைக்**
**உம்கண் ணஃதே தெய்ய - ஆங்கண்**

**உப்பொய் உமணர் ஒழுகையொடு வந்த**
**இளைப்படு பேடை இரியக் குரைத்தெழுந்து**
**உருமிசைப் புணரி யுடைதரும்**
**பெருநீர் வேலிஎம் சிறுநல் ஊரே.**

விரையச் செல்லுகின்ற நின் தேரினை நின் ஏவலாளருடனே விட்டுவிட்டுத் தனியனாக இவண் வந்துநின்ற பெருந்தகை யாளனே! நீ நல்ல ஒழுக்கத்தினை உடையை! அன்றியும், கண்டவர் தொழுது போற்றக் கருதும் உடலழகுபெற்றவனும் நீ ஆவாய்! நீ, மனச்சிதைவை முற்படப்பெற்றவனாகப் பல நாளும் வந்து பணிவான சொற்களையும் பேசுகின்றனை! அதனாற் குவளை மலர்போலும் மையுண்ட தன் கண்கள் கலங்க, இவளும் நின்னிடத்தே பெரிதும் மயக்கங் கொண்டவளாயினாள்.

மனமறிந்து பேணும் தாயினைக் கொண்டிருக்கும் பெரிய மனையிலே, சுற்றத்தவர் அனைவரும் பாராட்டுமாறு, அன்பின் பெருக்கிலே வளர்ந்த அழகியாள் இவள். அதனாலே, சிறிதளவு பெரிதான மடத்தினையும் இவள் கொண்டிருப்பவள் ஆவாள்!

அதனால், குன்றுபோலத் தோன்றும் திரண்ட மணல் மேட்டினையுடைய கடற்கரை நாடனே!

இன்று, இவளை இவ்விடத்தேயே அடைய விரும்பாது நீயும் சென்று வருவாயாக. பூக்கள் விரிந்துகிடக்கத் தோன்றும் புன்னைக்கு மேலாகக் காணப்படும் அப் பனைமரத்தருகே சென்றால், அதனின்றும் கூப்பிடு தூரத்தில் உள்ளதே எங்கள் ஊராகும்.

உப்பு விலைகூறி விற்கும் உமணரது வண்டியோடுவந்த, ஈன்று காவற்பட்ட பேடையானது அஞ்சும்படியாக எழுந்த இடிமுழக்கம்போல, ஒலிசெய்து வரும் அலைகள் உடைந்து சிதறுகின்ற கடற்கரையின் எல்லையிலே உள்ளதே எம்முடைய நல்ல சிற்றூராகும்!

**சொற்பொருள் :** 1. கடுந்தேர் - கடிதாகச் செல்லுதலை யுடைய தேர். 2. இளையர் - பணியாளர். 3. அழிவு - நெஞ்சழிவு. 4. பணிமொழி - பணிவான பேச்சு. 6. பேது - மயக்கம். 7. நகர் - மனை. 8. மாதர் - பெண். 9. மடம் - மடமை; கொளுத்தக் கொண்டு - கொண்டது விடாத தன்மை. 10. குலவு மணல் - திரண்ட மணல், 13. தெய்ய; அசை. உப்புஒய் - உப்பு விலைகூறும் - ஒழுகை - வண்டி. 15. இளைப்படல் - ஈன்று காவற்படல். குரைத்து - ஒலித்து 17. பெருநீர் - கடல்.

**விளக்கம் :** *'நெடுந்தகை! நீர்மையை! தொழுதகு மெய்யை!' என விளித்ததெல்லாம், அவனை அறிந்தமைகாட்டிக் கூறுதலாம். 'அத்தகையவன் தன் குறைகூறி இரந்து நிற்றல் வேண்டா' என்பவள், 'பணிமொழி பயிற்றலின்' என்றனள்.*

*'ஈன்று இளைப்படு பேடை இரியக் கடல்அலை உடைவது' காணாது அஞ்சியிருப்பாள் என்றனளுமாம்.*

*தலைவியிடம் இவன்பாற் காதல் தோன்றியதனை அறிவுறுத்துவாள்; 'குவளை யுண்கண் கலுழ நின் மாட்டு இவளும் பெரும்பேது உற்றனள்' என்கின்றாள்.*

## 311. நீடலர் அவர்!

**பாடியவர் :** *மாமூலனார்.* **திணை :** *பாலை* **துறை :** *பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.* **சிறப்பு** *: புல்லியின் நாட்டைப் பற்றிய குறிப்பு.*

*(தலைவன் பொருளீட்டி வருதலின் பொருட்டாக வேற்று நாட்டிற்குச் சென்றனன். தலைவி அவன் பிரிவினைத் தாங்கவியலாதவளாய் நோயுற்றனள். அவன் மீள்வதாகக் குறித்த அந்தக் காலம் வரையினும் ஒருவாறு அடங்கியிருந்ததேனும், அவன் குறித்துச் சென்ற காலத்தும் வாராது போகவே, தலைவியின் துயரமும் அளவிற்கடங்காப் பேரளவினதாயிற்று. அவ்வேளை, அவளுடைய ஆருயிர்த் தோழியானவள், அவளைத் தேற்றுவாளாக, இவ்வாறு சில கூறுகின்றனள்.)*

**இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று**
**அருங்கடிக் காப்பின் அகனகர் ஒருசிறை**
**எழுதி யன்ன திண்ணிலைக் கதவம்**
**கழுதுவழங்கு அரைநாள் காவலர் மடிந்தெனத்**
**திறந்துநப் புணர்ந்து 'நும்மிற் சிறந்தோர்**

**இம்மை உலகத்து இல்'லெனப் பன்னாள்**
**பொம்மல் ஓதி நீவிய காதலொடு**
**பயந்தலை பெயர்ந்து மாதிரம் வெம்ப**
**வருவழி வம்பலர்ப் பேணிக் கோவலர்**
**மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி**

**செவியடை தீரத தேக்கிலைப் பகுக்கும்**
**புல்லி நன்னாட்டு உம்பர் செல்லருஞ்**
**சுரமிறந்து ஏகினும் நீடலர்**
**அருண்மொழி தேற்றிநம் அகன்றிசி னோரே!**

தோழி! பேய்கள் நடமாடிக் கொண்டிருக்கின்ற நள்ளிரவு வேளையிலே, அரிதான காவலைக் கொண்ட மதில்சூழ்ந்த நம் அகன்ற மனையிடத்தின் ஒரு பக்கத்தே, பெரிய பெண் யானை யைப் பரிசில்பெற விரும்பிவந்து, மனைக்கடையிற் செவ்வி பார்த்துக் காத்து நிற்கின்ற பரிசிலரைப் போன்ற ஆர்வமுடனே, அவரும் காத்து நின்றனர். காவலர்கள் சோர்ந்து அயர்ந்தனராக, எழுதினாற் போன்று அழகியதாக விளங்குவதும், திண்ணிய நிலையினை யுடையதுமாகிய கதவினைத் திறந்துகொண்டு, நம் மனையுள்ளும் அவர் வந்தனர். நம்மைக் கூடி, 'நம்மினும் சிறந்த காதலர் இவ்வுலகத்து எவருமில்லை' என்றும் கூறினர். பொலிவுபெற்ற நம் கூந்தலை நீவியபடியே, காதலோடு இவ்வாறு நம்மைக்கூடி அவர் சென்றது பலநாட்களாகும்.

மழையாகிய பயன்கெட்டுத் திசைகளெல்லாம் கொதிப் படையவும், புதியரான வழிப்போக்கர் வருங்கால் அவர்களைப் பேணுபவராக, இளைய எருதுகளின் கழுத்திற் கட்டியிருக்கும் மூங்கிற் குழாயினிடத்தேயுள்ள இனிதான புளிச்சோற்றினை, அப்புதியரின் பசியினாலேயுண்டான காதடைப்புத் தீரும் படியாகத் தேக்கிலையிலே வைத்துப் பகிர்ந்து அளிக்கின்ற கோவலர்களையுடையது, புல்லி என்பான் காத்து வரும் நல்ல தன்மையினையுடைய வேங்கட நன்னாடு. அதற்கும் அப்பாலுள்ள, செல்லுதற்கும் அரிதான சுரநெறியைக் கடந்து அவர் சென்றிருப்பினும், நம்மீது அருள் கொண்ட சொற்களினாலே நம்மைத் தெளிவித்து அந்நாளிலே நம்மைப் பிரிந்து சென்றவரான அவர், பிரிந்துறையுங் காலத்தினை நீட்டிக்கமாட்டார் என்று அறிவாயாக.

**சொற்பொருள் :** 1. இரும்பிடி - பெரிய பெண்யானை; கரிய பெண் யானையும் ஆம். 2. கடை - வாயிற்கடை. காப்பின் - மதிற்சுவரினையுடைய. அகனகர் - அகற்சியினையுடைய பெரிய மனை 3. எழுதியன்ன - எழுதிப் புனைந்தாற் போன்று அழகிய, திண்மை - செறிவுடைமை. 4. கழுது - பேய். அரை நாள், நள்ளிரவு வேளை, 7. பொம்மல் ஓதி - பொலிவினையுடைய மகளிரின் கூந்தல் நீவி - தடவிவிட்டு, 8. பயம் - மழைப்பயன். தலைப் பெயர்தல் - நிலைமாறிப் போதல். 9. வம்பலர் - புதியரான வழிச்செல்வார். 10. மழவிடை - இளைய எருது. 11. செவியடை - காதடைப்பு; இது பசியினாலே வந்துறுவது. 12. புல்லி நன்னாடு - கள்வர் கோமான் புல்லிக்கு உரியதான வேங்கட நன்னாடு. 14. தேற்றி - தெளிவித்து.

**விளக்கம் :** தலைவன் தலைவியை அடைவதற்கான செவ்வியை எதிர்நோக்கி அவளுடைய மனையின் கடை

வாயிலிலே காத்துநின்ற நிலையினைப், பிடியானையினைப் பரிசிலாக அடையவிரும்பிக் காத்துநிற்கும் பரிசிலரின் நிலைக்கு ஒப்பிட்டுக் கூறினர் காவலர்க்கும் அஞ்சாது, அவளை இரவுக் குறியிற் கூடிய அவனது துணிவும், 'நம்மிற் சிறந்தோர் இம்மையுலகத்து இல்' என, அவன் சொல்லிய சொற்களும், கூந்தலை நீவித் தலையளிசெய்த செயலும், பிறவும், அவனுடைய காதலின் மிகுதியை உணர்த்துவனவாம். அந்தக் காதலும் நிலையானது என்பார், இந்நிகழ்ச்சிகள் பன்னாள் நிகழ்ந்தவை என உரைக்கின்றனர்.

'இரும்பிடிப் பரிசிலர்போலக் கடை நின்று' என்பதும், 'அருங்கடிக் காப்பின அகனகர்' என்பதும், தலைவியின் குடும்பத் தகுதியினை உணர்த்துவன; அதனை அவன் அறிந்திருந்த நிலையினையும் காட்டுவன.

புதியராய பரிசிலர்க்கும் கோடையின் வழிநடை வருத்தம் தீர உபசரிக்கும் புல்லிநாட்டுக் கோவலரின் செயலைக் கூறினார்; அவருடைய அருளுடைமையைக் காணுகின்ற தலைவன், பன்னாட் பழகிய தன் காதலியைத் தான் துறந்து வருந்தவிட்டு வந்ததனை நினைந்து, தானும் அருளுள்ளம் கொள்வான் என்பதனால்.

இதனால், தலைவன் வரைவிடை வைத்துத் தலைவியைப் பிரிந்து சென்றவன் என்பதும் பெறப்படும். அவன், காலம் தாழ்க்காது திரும்புவான் என்ற உறுதியும் உணரப்படும்.

கோடையின் வெம்மையாலும், வழிநடைத் துயராலும், பசியினாலும் வருந்தும் வம்பலர்க்குப் புளியஞ் சோற்றினைத் தேக்கிலையிற் பகுத்தளிக்கும் கோவலர்போலத், தலைவியின் காமநோயும், அதனாலுற்ற துயரமும், உணவு வேண்டாமையும் அகலத் தலைவனும் வந்து தலையளி செய்வான்' என்பது கருத்தாகும்.

## 312. ஆடலாம் வருக!

**பாடியவர்** : மதுரை மருதன் இளநாகனார். **திணை** : குறிஞ்சி. **துறை** : தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது; தலைமகள் சொல்லியதுமாம். **சிறப்பு** : வழுதியின் போராற்றல் பற்றிய செய்தி.

(கார்காலத்தின் தொடக்கத்தினைக் கண்ட தோழி, தலைவனின் இரவுக்குறி வருதலை நீக்கி, அவன் உள்ளத்தினை வரைந்துகோடலிற் செலுத்துபவளாக, இங்ஙனம் தலைவி யிடத்தே கூறுகின்றனள், இரவுக் குறியிடத்தே அவன் வந்து

*ஒருசிறை நிற்பதறிந்து, அவன் கேட்குமாறு கூறியதும் இது. தலைவியே தோழிபாற் கூறியதாகவும் கொள்ளலாம்.)*

**நெஞ்சுடன் படுதலின் ஒன்றுபுரிந் தடங்கி**
**இரவின் வரூஉம் இடும்பை நீங்க**
**வரையக் கருதும் ஆயின் பெரிதுவந்து**
**ஓங்குவரை இழிதரும் வீங்குபெயல் நீத்தம்**
**காந்தளஞ் சிறுகுடிக் கௌவை பேணாது**

**அரிமதர் மழைக்கண் சிவப்ப நாளைப்**
**பெருமலை நாடன் மார்புபுணை யாக**
**ஆடுகம் வம்மோ - காதலம் தோழி!**
**வேய்பயில் அடுக்கம் புதையக் கால்வீழ்த்து**
**இன்னிசை முரசின் இரங்கி ஒன்னார்**

**ஓடுபுறம் கண்ட தாள்தோய் தடக்கை**
**வெல்போர் வழுதி செல்சமத் துயர்த்த**
**ஆடுபுகழ் எஃகம் போலக்**
**கொடிபட மின்னிப் பாயின்றால் மழையே!**
**அன்பு மிகுந்தவளான தோழியே!**

*மூங்கில்கள் செறிந்திருக்கும் மலைச்சாரல்கள் அனைத்தும் மறையும்படியாகக் காலிரங்கியும், இனிதாக இசைத்தலைக் கொண்ட முரசத்தினைப்போல இடிமுழக்கியும் பகையாயினோர் களத்தினின்றும் புறமுதுகிட்டு ஓடிப்போகின்ற புறக்கொடையினைக் கொண்டவனும், முழந்தாளினைப் பொருந்துமாறு நீண்ட பெரிய கையினை உடையவனும், போரில் வெற்றிகொள்வோனும் ஆகிய பாண்டிய மன்னன், நிகழ்ந்து கொண்டிருக்கின்ற போரினிடத்தே உயர்ந்த, பகைவரைக் கொல்லும் புகழினையுடைய வேலினைப்போல ஒழுங்குபட மின்னிக் கொண்டும், அதோ மேகங்கள் பரவியிருக்கின்றன,*

*பெரிய மலைநாட்டினனாகிய நம் தலைவன், நம்முடனே தன் நெஞ்சம் ஒன்றுபட்டிருத்தலினாலே, நம்மை வரைந்து கொள்ளுதலாகிய அந்த ஒன்றினையே விரும்பி அமைந்தவனாகி, இரவு நேரத்திலே இங்ஙனம் வருகின்றதான வருத்தமெல்லாம் நீங்கிப்போமாறு, நம்மை வரைந்து கொள்ளுதலையும் எண்ணுபவன் ஆவான். ஆதலினாலே,*

*காந்தட்பூக்களை உடையதான நம் சிற்றூரினிடத்தே, நம்மைப்பற்றி எழுந்த அலரினைப் பாராட்டாது, உயரமான மலைமுகட்டினின்று வீழுகின்ற பெருமழையினாலாகிய வெள்ளத்தினையுடைய அருவியிலே, நம் தலைவனாகிய அவனுடைய மார்பே தெப்பமாகக் கொண்டு, செவ்வரி பரந்து*

குளிர்ச்சியான நம் கண்கள் சிவக்குமாறு, நாளைப் பொழுதிலே, மிகவும் மகிழ்ச்சியுடனே நாம் நீராடி மகிழ்வோம், வருவாயாக.

**சொற்பொருள் :** 1. உடம்படுதல் - ஒன்றுபடுதல்; இருவர் நெஞ்சமும் காதலால் ஒருநிலையினை அடைந்திருத்தல். ஒன்று - ஒப்பற்றதாகிய வரைதல். புரிந்து அடங்கி - விருப்புற்று அமைந்து. 2. இடும்பை - துயரம். 4. வீங்கு பெயல் - மிகுதியான மழை. நீத்தம் - வெள்ளம். 5. கௌவை - பழிச்சொற்கள். 9. அடுக்கம் - மலையடுக்குகள். 12. வெல்போர் வழுதி - போரிலே வெற்றிகாணும் ஆற்றலையுடைய பாண்டியன்.

**விளக்கம் :** 'நீத்தம் வரையக் கருதும் ஆயின் ஆடுகம் வம்மோ' எனவும், 'நீத்தம் அரிமதர் மழைக்கண் சிவப்ப அவன் மார்பு புனையாக ஆடுகம் வம்மோ' எனவும், கூட்டிப் பொருள்கண்டு இன்புறுக இடித்து முழக்கி மின்னலிட்டுக் கால் வீழ்த்துப் பெய்யும் மழைக்கும், வெல்போர் வல்ல பாண்டியன் மாற்றாரை எதிர்த்துச் சென்று வெற்றி கொள்ளும் போருக்கும் ஒப்புக் கூறுகிற நயம் சிறப்புடையது.

'கார்காலத் தொடக்கம் வந்தது' என்பதனால், அது வரைந்துகோடற்கு உரிய காலம் என்பதனை உளங்கொண்டு அவனை அம்முயற்சியிற் செலுத்துவாளாகக் கூறினள் என்க. 'நாளை அவன் மார்பு புணையாக நீத்தத்து அரிமதர் மழைக்கண் சிவப்ப ஆடுவோம்' என்ற துணிவுரை, இரவுக் குறியிடத்துக்கு வருவதற்கு நேரிடுகிற இடையூறுகளையும், வீட்டவர் அறிந்தமை யினையும், ஊரவர் எழுந்தமையினையும் இனி யாம் பொருட்படுத்தோம்! அவனுடன் பகற் போதிலே துணிந்துசென்று நீர்விளையாடலும் செய்வோம் என்னும் கவலை நீங்கிய உள்ளத்தினோடு கூடிச் சொன்னதாகும்.

## 313. அருள் புரிந்து வருவர்!

**பாடியவர் :** பாலை பாடிய பெருங்கடுங்கோ. **திணை :** பாலை. **துறை :** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

(தலைமகன் பொருள்தேடி வரும்பொருட்டாக வேற்று நாடு சென்றிருந்தனன். அவன் காதலியோ பிரிவின் கொடுமையினால் உடலும் உள்ளமும் நலிந்தவளாயினாள். அப்போது, அவளின் நிலையினைக் கண்ட தோழி, அவளைத் தேற்றுவாளாகக் கூறுகிற பான்மையில் அமைந்தது இச்செய்யுள்.)

**'இனிப்பிறி துண்டோ? அஞ்சல் ஓம்பென!'**
**அணிக்கவின் வளர முயங்கி நெஞ்சம்**

**பிணித்தோர் சென்ற ஆறுநினைந்து அல்கலும்**
**குளித்துப்பொரு கயலிற் கண்பனி மல்க**
**ஐய வாக வெய்ய வுயிரா**

**இரவும் எல்லையும் படரட வருந்தி**
**அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்பத்**
**தம்மல தில்லா நம்மிவண் ஒழியப்**
**பொருள்புரிந்து அகன்றன ராயினும் அருள்புரிந்து**
**வருவர் - வாழி, தோழி! - பெரிய**

**நிதியஞ் சொரிந்த நீவி போலப்**
**பாம்பூன் தேம்பும் வறங்கூர் கடத்திடை**
**நீங்கா வம்பலர் கணையிடத் தொலைந்தோர்**
**வசிபடு புண்ணின் குருதி மாந்தி**
**ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல**

**இல்வரிப் பருஉக் காக்கைப்**
**கல்லுயர் பிறங்கல் மலைஇறந் தோரே.**

*'தோழி! நீ வாழ்வாயாக!*

*இனிப் பிறிதொரு இன்பமும் யாதாயினும் உளதோ? இதுவும் பிரிவினால் தடைப்படுமோ? என அஞ்சுதலை விட்டு விடுவாயாக' என்று கூறினார். உடலுக்கு அழகாயமைந்த நம் கவின் வளர்ந்து பெருகுமாறு நம்மைத் தழுவினார். நம் நெஞ்சத்தினை அவரிடத்தேயாகப் பிணித்துக் கொண்டவரும் ஆயினார். அத்தகையரான நம் தலைவர்---*

*நம்மைப் பிரிந்து சென்றிருக்கும் நெறியினை நாடோறும் நினைந்து, நீரிடத்தே மூழ்கிப் பொருதும் கெண்டைமீன்களைப் போலக், கண்களிடத்தே துன்பம் பெருகிக் கலக்கமுற, மென்மையாகச் சுடுமூச்சு உயிர்த்து, இரவும் பகலும் துன்பம் தாக்குதலால் வருந்திப், பாம்பு விழுங்கிய மதியினைப் போல நெற்றியும் ஒளியிழந்து போகத், தம்மையன்றி வேறு புகலில்லாத நாம் இவ்விடத்தே தனித்திருந்து நலியுமாறு விட்டு விட்டுப், பொருளை விரும்பியவராகப் பிரிந்து சென்றனர். ஆயினும்......*

*மிகுதியான நிதியத்தினைச் சொரிந்தபின் கிடக்கும் துணிப்பையினைப் போலப், பாம்புகளும் ஊன்வற்றி உலர்ந்து கிடக்கும் வறட்சிமிகுந்த பாலைவழியிடையே, ஆறலை கள்வர்கள் அம்பினை எய்ய, அதனால் செத்து வீழ்ந்தோரான ஒழியாத புதிய வழிப்போக்கரது பிளவுபட்ட புண்ணினின்றும் வழியும் குருதியினை மிகவும் உண்ட காக்கைகள், ஒற்றராகச் செல்லும் மாக்களின் ஒடுக்கமான குரலினை உடையவாய், தம்*

*மனையிடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் இடமாகிய, கற்கள் உயர்ந்த பக்கமலைகளையுடைய வழியினைக் கடந்து சென்றவரான அவர், நம்பால் அருள்புரிந்தவராக மீண்டும் வந்து விடுவார், காண்பாயாக!*

**சொற்பொருள்:** *1. பிறிது - இணைந்த இன்பத்தினும் பிறிதான பிற ஓரின்பம்: அன்றி இனிப் பிரிவாகிய பிறவும் ஒன்று உண்டோ எனலும் ஆம். 2. அணிக்கவின் - அணியாக விளங்கும் கவின்; கவின் - மேனியின் ஒளி. 4. பனி - துன்பம்; கண்ணீரும் ஆம். 5. ஐயவாக - மெல்ல மெல்ல; இது பெருமூச்சு விடுவதற்கும் வலுவிழந்துபோன நிலையினைக் குறிப்பதாம். 6. எல்லை - பகல், 7. படர் - துன்பம். அட - வருத்த. 7 நுங்குதல் - விழுங்குதல். 9. புரிந்து - விரும்பி. 11. நிதியஞ் சொரிந்த நீவி - நிதியத்தைத் சொரிந்து போட்டிருக்கும் துணிப்பை: இது நீண்டதாக அரையிற் கட்டிக்கொண்டு செல்லும் பணப்பை ஆகும். 12. ஊன் தேம்பும் - உடல் வாடிக் கிடக்கும். 14. வசிபடு புண் - அம்பினாற் பிளக்கப்பட்ட புண். 17. பிறங்கல் - பக்க மலை.*

**விளக்கம்:** *பாலையின் வெம்மை மிகுதியைப், "பாம்பூன் தேம்பும் 'வறங்கூர் கடம்' என்பதனால் பெறவைத்தனர். 'வம்பலர் அம்பினாற் றுளைப்பட்டு வீழவும், அவருக்கு இரக்கங் காட்டாது, அவருடற் புண்ணினின்றும் வழியும் குருதியை மாந்திக் குரலும் குறைந்துபோன கொடிய காக்கையும் இல் வழிப் படூஉம் மலை' என்றது, அதுவும் தன் துணையை நாடிச் சென்றது என்பதாம். 'அதற்கே மாலையில் வீடு திரும்பும் எண்ணமுள்ள போது, அருளுள்ள அவர், அன்பராய அவர், திரும்பி வருவாரோ? எனக் குறிப்பினால் தேற்றியதும் ஆம். 'ஒற்றுச் செல்பவர் ஒடுங்கிய குரலினராயிருப்பர்' என்று கூறுகின்ற தன்மை விளக்கத்தைக் கண்டு இன்புறுக. ஒற்றர், தம்மைப் பிறரறியாதவாறு செய்தி சேகரிக்க வேண்டியவராதலின், உரத்துப் பேசுதலின்றி, ஒடுங்கிய குரலிலேயே பேசுவர் என்பது தெளிவு. இதனையே மிகவும் உண்டு குரலும் குறைந்த காக்கையின் கரைதலுக்கு ஒப்பிட்டனர்.*

*நீங்கா வம்பலர் இடையறாது வழிச்செல்வோராகிய புதியவர். புதியவர், அந்த வழியிடத்திற்கு என்க.*

**மேற்கோள்:** *தொல்காப்பிய உவம சூத்திரத்து உரையில், 'குளித்துப் பொரு கயலிற் கண்பனி மல்க' என்பது, உவம உருபினறி இன்னுருபு தன் பொருட்கண்ணும் வந்ததாகும்' என்று காட்டி உரைப்பர் நச்சினார்க்கினியர்.*

## 314. மன்னுக பெரும!

**பாடியவர்:** *மதுரை அளக்கர் ஞாழார் மகனார் அம் மள்ளனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிப் புகுந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*(பிரிந்து சென்ற தன் தலைவனை நினைந்து வாடி நலிந்த தலைவி, அவனுடைய பாணனிடம், 'இந்நிலை வாராராயின் தன்னிலை எவன் கொல்?' என்று கேட்டுத் துடிக்கின்றனள். அவ்வமயம், தலைமகன் தேரூர்ந்து வந்துசேரக் கண்ட தலைவியின் தோழி, அவனை வாழ்த்திக் கூறுவது இது. தலைவியின் இல்லிருந்து இரங்கிய நிலையினைக் குறித்தலால் முல்லையாயிற்று.)*

**நீலத் தன்ன நீர்பொதி கருவின்**
**மாவிசும் பதிர முழங்கி ஆலியின்**
**நிலம்தண் ணென்று கானங் குழைப்ப**
**இனந்தேர் உழவர் இன்குரல் இயம்ப**
**மறியுடை மடப்பிணை தழீஇப் புறவின்**

**திரிமருப் பிரலை பைம்பயிர் உகள**
**ஆர்பெயல் உதயிவ கார்செய் காலை**
**நூனெறி நுணங்கிய கானவில் புரவிக்**
**கல்லெனக் கறங்குமணி இயம்ப வல்லோன்**
**வாய்ச்செல வணங்கிய தாப்பரி நெடுந்தேர்**

**ஈர்ம்புறவு இயங்குவழி அறுப்பத் தீந்தொடைப்**
**பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப**
**இந்நிலை வாரார் ஆயின் தந்நிலை**
**எவன்கொல்? பாண! உரைத்திசிற் சிறிதெனக்**
**கடவுட் கற்பின் மடவோள் கூறச்**

**செய்வினை அழிந்த மையல் நெஞ்சில்**
**துனிகொள் தனையால் வாழ்கநின் கண்ணி!**
**வேலி சுற்றிய வால்வீ முல்லைப்**
**பெருந்தார் கமழும் விருந்தொலி கதுப்பின்**
**இன்னகை இளையோள் கவவ**
**மன்னுக பெரும! நி மலர்ந்த மார்பே!**

*நீலமணியினைப் போன்றதாக நீராற் பொதிவுற்றுச் சூலுடையது ஆகியும், பெரிதான வானமும் அதிரும்படியாக இடிமுழக்கத்தினைச் செய்தும் பெய்த நீரினால் மண்ணெல்லாம் குளிரவும், காட்டகமெல்லாம் தழைத்திடவும், தம்முடன் உழவுக்கு வருகிற இனத்தவரை ஆராய்வரான உழவர்கள் இனிய*

குரலெடுத்து அழைக்கவும், குட்டியினையுடைய தன் இளைய பிணையினைத் தழுவியபடியாக, முறுக்குண்ட கொம்புகளை யுடைய கலைமானானது காட்டில் மெல்லெனப் பயிர்தலுடனே துள்ளித் திரியவுமாக, மேகங்கள் மிகுதியான மழையினைப் பெய்து உதவிக் கார்ப்பருவத்தினைச் செய்யும் காலத்திலே-

"பாணனே! அசுவசாத்திர முறைப்படி நுட்பமான இலக்கணக் கூறுபாடுகள் எல்லாம் அமைந்ததும், வேகத்தாற் காற்றெனக் கூறத் தகுவதுமான குதிரைகள், கல்லென்று ஒலிக்கும் தம் மணிகள் முழக்கமிடத் தாவிச் செல்லுமாறு, தேர் செலுத்துதலில் வல்லோனாகிய பாகன், தாவும் செல வினையுடைய நெடிய தேரானது ஈரம் பொருந்திய செல்லும் வழியிடங்களை அறுத்துக்கொண்டு செல்லுமாறு செலுத்த, இனிதான நரம்புத் தொகுதியினையுடைய நல்ல யாழினிடத்தே வருத்தத்தைத் தரும் செவ்வழிப்பண் தோன்றுகின்ற இந்த மாலைப்பொழுதிலே, நம் தலைவரும்வந்து சேராராயின், அவரது, காதலின் தன்மைதான் யாதாகுமோ? சிறிதே உரைப்பா யாக" என்று, கடவுட் கற்பினையுடைய இளையோளாகிய நின் தலைவி சொல்லவும்-

பெருமானே! செய்யத்தகும் செயல்களின் நினைவும் அழிந்துபோக, மயக்கமுற்றுவிட்ட எம் நெஞ்சிடத்துத் துன்பங் கொள்ளுதலாகிய வருத்தமெல்லாம் தீர்ந்துபோகும் படியாக, நீயும் வந்து அடைந்தனை.

அதனால், எமக்கு இனிதான செயலினைச் செய்தனை யாவாய், நின் கண்ணி வாழ்வதாக! நின்னுடைய அகன்ற மார்பு, மனைக்கு வேலியாகச் சூழ்ந்து கிடக்கும் முல்லையின் வெண்மையான மலர்களினாலேயாகிய பெரிதான மாலை யானது மணந்து கொண்டிருக்கும், புதுமையுறத் தழைத்த கூந்தலையுடைய, இனிதான மகிழ்ச்சியினை உடையோளாகிய இளையவளான நின் காதலியானவள் தழுவிக்கொள்ள, இனி நிலை பெறுவதாகுக!"

**சொற்பொருள்:** 1. நீலம்-நீலமணி; நீலத்தன்ன நீலமணியின் ஒளியுடைய கருநிறத்தைப் போன்றதாக. கருவின் - சூலின். 2. மாவிசும்பு - பெரிதான வானம்; அமர்விசும்பு எனவும் பாடம். 3. குழைப்ப - தழைப்புற. 4. இனம் - உழவரினம். 5. புறவில் - காட்டில். 6. பயிர்தல் - அழைத்தல்: இரலை - ஆண்மான். 7. ஆர்பெயல் - மிக்க மழை. கார்பெயல் எனவும் பாடம். 8. கானவில் - புரவி வேகத்திற்குக் காற்றினை ஒப்பாகச் சொல்லக்கூடிய குதிரைகள். நூல் நெறி அசுவசாத்திர முறைமை. 9. வல்லோன் - தேர்

செலுத்தலில் வல்லபாகன். 10. வாய்ச்செல - தாவிச் செல்ல; வழிகொண்டு செல்லவும் ஆம். 12. பையுள் வருத்தம். பிறப்ப ஏழ; மறப்ப எனவும் பாடம்; யாழ், செவ்வழிப் பண்ணையும் மறப்ப என்று பொருள் கொள்க. 15. கடவுட் கற்பு - தெய்வக் கற்பு, மடவோள் - இளையோள். 16. செய்வினை - செயத்தகு வினை; அவை விருந்து புறந்தருதல் முதலியவான இல்லறக் கடமைகள். 18. கண்ணி - தலைமாலை. 20 பெருந்தார் - பெரிதான தார்; பொருந்திதழ் எனவும் பாடம். ஒலிகதுப்பு - தழைத்த கூந்தல். 21. நகை - ஒளியுமாம்; அது கணவன் வந்துறக் கண்ட பூரிப்பினாலே வந்தடைந்தது. கவவ-இறுகத் தழுவ.

**விளக்கம்:** மறியுடை மடப்பிணை தழீஇப் புறவின் திரிமருப்பு இரலை பைம்பயிர் உகழ' என்றது, தலைவியும் அக்காலத்தில் அங்ஙனந் தானும் தன் காதலனுடனே கூடித் தழுவி இன்புற மாட்டோமாவென ஏங்கிய தன்மையினைப் புலப்படுத்துவதாம். 'தம்நிலை அவன் கொல்' என்றது, 'அவர் வாராராயின் தான் அழிந்துபடக் காண நேரும் அவர் நிலை தான் யாதாகுமோ? என்றதாம்.

**மேற்கோள்:** தொல்காப்பியக் கற்பியலின், 'பெறற்கரும் பெரும் பொருள் முடிந்தபின் வந்த' என்னும் சூத்திர உரையுள், இச்செய்யுளைக் காட்டி, இது, 'தோழி முன்பு தலைவிக்கு நிகழ்ந்த ஆற்றாமையும் அதுகண்டு தான் கலங்கிய வாறும் தலைவற்குக் கூறியது' என்பர் நச்சினார்க்கினியர்.

## 315. சேக்குவள் கொல்லோ?

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய தாய் சொல்லியது **சிறப்பு:** பெரும்பெயர் வழுதியின் கூடற் பெருநகரத்துக் காவற்சிறப்பு.

(தலைவி ஒருத்தி, இற்செறிப்பின் காரணமாகத் தன் தலைவனைக் காணாது வருந்தியவள், முடிவில், தான் காதலித்த அவனுடனேயே உடன்போக்கில் தன்னில்லத்தைவிட்டு அகன்று போய்விட்டனள். அதுகாலைத் தன் மகள்போகியதனால் வருத்தமுற்றுப் புலம்புவாளான தாய், இவ்வாறு தன் நெஞ்சுக்குச் சொல்லுகின்றனள்.)

**கூழையுங் குறுநெறிக் கொண்டன முலையும்**
**சூழி மென்முகஞ் செப்புடன் எதிரின**
**பெண்துணை சான்றனள் இவளெனப் பன்மாண்**
**கண்துணை ஆகநோக்கி நெருநையும்**
**அயிர்த்தன்று மன்னே நெஞ்சம்! பெயர்த்தும்** 5

**அறியா மையிற் செறியேன் யானே**
**பெரும்பெயர் வழுதி கூடல் அன்னதன்**
**அருங்கடி வியனகர்ச் சிலம்புங் கழியாள்**
**சேணுறச் சென்று வறுஞ்சுனைக்கு ஒல்கி**
**புறவுக்குயின்று உண்ட புன்காய் நெல்லிக்**

**கோடை யுதிர்த்த குவிகண் பசுங்காய்**
**அறுநூற் பளிங்கின் துளைக்காசு கடுப்ப**
**வறுநிலத் துதிரும் அத்தம் கதுமெனக்**
**கூர்வேல் விடலை பொய்ப்பப் போகிச்**
**சேக்குவள் கொல்லோ தானே தேக்கின்**

**அகலிலை குவித்த புதல்போல் குரம்பை**
**ஊன்புழுக்கு அயரும் முன்றில்**
**கான்கெழு வாழ்நர் சிறுகுடி யானே.**

*"இவளது தலைமயிரும் குறுகியதான நெறிப்பினைத் தம் மிடத்தே கொண்டன. இவளது முலைகளும் தம் உச்சியிலுள்ள மெல்லிய முகத்தின் புடைப்பினாலே சிமிழுடன் மாறுபட்ட வாயின. இவள், அதனாற் 'பெண்மை' எனும் தன்மையினைக் கொண்டுவிட்டனள். இங்ஙனமெல்லாம் என் கண்களே துணையாகக்கொண்டு பலமுறை பார்த்துப் பார்த்து என் நெஞ்சம் நேற்றுங்கூட ஐயுற்றதே? அங்ஙனம் ஐயுற்றதன் பின்னரும். என் அறியாமையின் காரணமாக, இவளை இற்செறித்துக் காவாது போயினனே?*

*"பெரிதான புகழினையுடைய பாண்டியனது கூடல் நகரினைப்போன்ற, தன்னுடைய அரிய காவலைப் பொருந்திய பெரிய மனையிடத்தே, சிலம்புகழி நோன்பும் செய்யப் பெற்றன ளில்லையே? நெடுந்தொலைவும் அடையச் சென்றனளே? நீர் வறட்சியுற்றுக் கிடக்கும் சுனைகளைக் கண்டு தளர்ச்சியுற்று, புறவானது துளைத்து உண்ட புல்லிய நெல்லியினது, கோடைக் காற்று உதிர்த்த குவிந்த இடத்தையுடைய பசிய காய்கள், நூலற்று உதிர்ந்து கிடக்கும் துளைகளையுடைய பளிங்குக் கற்களைப் போன்று வறிய நிலத்தே உதிர்ந்திருக்கும் காட்டுவழியில் கூர்மையான வேலினையுடைய அவ்விளை யோன் பொய்ம்மை அழைக்கக், கதுமென அவனுடன் போகவும் செய்தனளே?*

*"புதரினைப் போன்றதான குடிசையின் முற்றத்திலே, தேக்கின் அகன்ற இலையிலே குவிக்கப்பெற்ற, புழுக்கிய ஊனினை உண்ணும் காட்டிற் பொருந்திய வாழ்வினை உடைய வரது சிற்றூர்க்கண்ணே, அவள் இப்போது தங்கியும் இருப்பாளோ?"*

**சொற்பொருள்:** 1. கூழை - தலைமயிர். குறுநெறிக் கொண்டன குறுகிய நெறிப்பினை அடைந்தன; நெறிப்பு சுருள்தல். 2. சூழி மென்முகம் - உச்சியிடத்து மெல்லிய முகம்; பாடம் அணிந்த மென்முகமும் ஆம் 3. துணை சான்றனள் - தன்மையைப் பொருந்தினள். 4. நெருநை - நேற்றை. 8. சிலம்பும் கழியாள் சிலம்பும் கழித்திலளே: இது மணமாவதற்கு முற்படக் கன்னியர் மேற்கொள்ளுகின்ற சிலம்புகழி நோன்பினைத் தன் மகள் செய்யப் பெற்றிலளே என வருத்தமுற்றதாம். 9. ஒல்கி - தளர்ந்து. 10. குயின்று - தொளைத்து. 12 பளிங்கு - பளிங்குக் கற்கள் 13. வறுநிலத்து - வறட்சியுற்ற நிலத்து; வறனிலத்து எனவும் பாடம். 15. சேக்குவள் - தங்குவள். 18. சிறுகுடி - சிற்றூர்.

**விளக்கம்:** 'வறுசுனைக்கு ஒல்கிப் புறவுக் குயின்று உண்ட புன்காய், நெல்லி கோடை உதிர்த்த குவிகண் பசுங்காய், அறுநூற் பளிங்கின் துளை காசு கடுப்ப' விளங்கும் என்ற, சிறந்த உவமைநயம் அறிந்து இன்புறற்பாலதாகும். புறவினால் துளைத்து உண்ணப்பட்ட நெல்லிக்காய்கள் சிதறி வீழ்ந்து கிடக்கும் காட்சி, நூலறுந்து சிதறிக் கிடக்கும் மணிகளைப் போன்று விளங்கின வென்க, புறக் குயின்றுண்ட காய்கள் அவ்வாறு கிடப்பதுபோல, எம் பெருமனைச் செல்வியும், அவன் பொய்யுரைக்கு மயங்கி யாருமற்றவளாய்த் தவிக்கின்றனளே? என்க் குறித்து வருந்தியதாகவும் கொள்க.

## 316. அறிந்தும் அறியார்!

**பாடியவர்:** ஓரம்போகியார். **திணை:** மருதம், **துறை:** தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி தலைமகளை நெருங்கிச் சொல்லியது.

(தலைமகன், பரத்தை ஒருத்திபால் உறவுபூண்டு தன்னை மறந்து திரிதலால், வருத்தமுற்று வாடி இருந்தனள் மகனைப் பெற்றெடுத்திருக்கும் ஒரு தலைவி. பின்னர்த் தலைவன் மீண்டுதன் வீடு வரவும், அவளுடைய ஊடல் தணிந்தபாடில்லை. அப்போது,அவன் தலைவியின் தோழியினுடைய உதவியை நாடுகின்றான். அவளும் தலைவிபாற் சென்று ஊடல் தணிந்து கூடுதலைக் கைக்கொள்ளுமாறு அவளுக்கு எடுத்து உரைக் கின்றாள். இந்த முறையிலே அமைந்த செய்யுள் இது.)

**துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை**
**அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு**
**ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்துத்**
**தூங்குசேற்று அள்ளல் துஞ்சிப் பொழுதுபடப்**
**பைந்நிண வராஅல் குறையப் பெயர்தந்து**

**குரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்**
**போர்ச்செறி மள்ளரிற் புகுதரும் ஊரன்**
**தேர்தர வந்த தெரிஇழை நெகிழ்தோள்**
**ஊர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்**
**பரத்தைமை தாங்கலோ இலனென வறிதுநீ**

**புலத்தல் ஒல்லுமோ? - மனைகெழு மடந்தை**
**அதுபுலந்து உறைதல் வல்லி யோரே**
**செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்**
**தாமட்டு உண்டு தமியர் ஆகித்**
**தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப**

**வைகுநர் ஆகுதல் அறிந்தும்**
**அறியார் அம்மவஃது உடலு மோரே!**

*துறையிடத்தே மீன்கள் உலவிக்கொண்டிருக்கும் மிக்க நீரினை உடைய பொய்கை ஒன்று; அதன்கண் விளங்கும் ஆம்பல் மலரை மேய்ந்தது, நெறித்த கொம்புகளையும் மிக்க குளிச்சியுற்ற முதுகினையுமுடைய முதுமையுற்ற எருமைக் கடா ஒன்று; உண்டபின், மிகுதியாகச் சேறுபட்டுக் கிடந்த இடத்திலே இரவெல்லாம் கிடந்து அது உறங்கியது. காலையில், பசிய நிணத்தினைக் கொண்ட வரால்மீன்கள் தன் கால் களுக்கிடையே மிதிபட்டு அழியுமாறு அது அச்சேற்றினின்றும் வெளிப்பட்டது. வெள்ளிய பூக்களையுடைய பகன்றைக் கொடியினைத் தன் தலையிற் சூடிக்கொண்டதாக, அது பழைமையினையுடைய ஊரின் கண்ணும் புகுந்தது. அந்தக் காட்சி போரிலே வெற்றிபெற்று வாகைசூடி வருகின்ற வீரர்கள் வருவதுபோன்று செருக்குடன் இருந்தது. அத்தகைய ஊரினையுடையவன் நம் தலைவன்.*

*'தன் தேரிற் பாகன் ஏற்றிக்கொண்டு தருதலால் வந்தடைந்த, விளங்கும் அணிகள் நெகிழ்ந்த தோள்களையுடைய ஊர் ஏற்றுக்கொள்ளும் முறைமையினைக் கல்லாத மகளிரான பரத்தையர்கள் பரத்தமையினை மென்மேலும் தந்து கொண்டிருக்கத் தாங்கலாற்றாதவனாக உள்ளனனே?' என்று? மனைக்குப் பொருந்திய கற்புடைய மடந்தையான நீ, பயனின்றி இவனோடு ஊடியிருத்தல் நினக்குப் பொருந்துவதாகுமோ?*

*அங்ஙனம் தலைவனின் பரத்தமைக்காக அவனுடனே ஊடிக்கொண்டு வாழ்தற்கு வன்மையுடைய மகளிர், தம்மிடத்து நின்றும் திருமகள் நீங்கிப்போகச், சிறிதளவான அரிசியைப் புடைத்துத் தாமே சமைத்து உண்டு தனித்திருப்போர் ஆகித், தேன் போன்று இனிக்குஞ் சொல்லினரான புதல்வர் பாலற்றுச்*

சுருங்கிப்போன தம் முலையினைச் சுவைத்து வருந்த வாழ்ந் திருத்தலை அறிந்திருந்தும், அதனை மேற்கொள்பவர் அறிவற்றவரே யாவரன்றோ!

**சொற்பொருள்:** 1. துறை - நீர்த்துறை. வழங்கும் - இயங்கும் 2. அரிமலர் - விளங்கும் மலர்; செவ்வரிபெற்ற மலரும் ஆம். நெறிமருப்பு - நெறித்தலைக்கொண்ட கொம்பு 3. சுவல் - முதுகு. போத்து - கடா. 4. அள்ளல் - அளல் என வழங்கும் சேற்றுப்பள்ளம். 5. குறைய - அழிந்துபட 6. குரூ உக்கொடி - நிறமமைந்த கொடி; பரூஉக்கொடி எனவும் பாடம். 8. தேர் தர - தேர்ப்பாகன் தேரேற்றிக் கொண்டு தர. தெரியிழை நெகிழ்தோள் ஆய்த்தணிந்த அணிகள் நெகிழ்ந்துபோக விளங்கும் தோள்கள். 9. ஊர்கொள் - ஊர் கொள்ளலான ஒழுக்கமரபு 10. தாங்கலோ இலன் - பொறுத்தலோ இலன்; கைவிடுதல் அற்றவனாக உள்ளவன். 13. சிலபதம் - சிறிதளவான உணவு. 14. தாமட்டுண்டு தமியராகி - தாமே சமைத்து உண்டு தனித்தோராகி; இது அவனால் அவர் ஒதுக்கிவைக்கப் பெறும் வாழாவெட்டியராகிய வாழ்வைக் குறிப்பது 17. உடலுதல் - மாறுபாடு கொள்ளுதல்.

**விளக்கம்:** 'ஊர் கொள் கல்லா' என்பது, 'ஊரே இடமில்லையாகும்படி ஆரவாரித்து வருகின்ற அறியாமை செறிந்த பரத்தையர் எனவும் சுட்டும்.' தாங்கலோ விலன்? என்றது, பரத்தையர் மிகுதியாக வந்துவந்து போதலினால், அவன் அவரைத் திருப்திசெய்விக்க ஆற்றானாகிய நிலையில் தளர்வுற்றுத், தானே, அதனைத் தாங்கமாட்டாத தன்மையனா யினான் என்றும் பொருள் தருவதாம்.

**உள்ளுறை:** "முது எருமைப் போத்து, பொய்கை ஆம்பல் மேய்ந்து, அள்ளல் துஞ்சிப், பொழுதுபட., வரால் குறையப் பகன்றை சூடி மூதூர்க்கண் போர்ச்செறி மள்ளரிற் புகுதரும் ஊரன்" என்றனர். இது, தலைவன் பரத்தையர் சேரியிடத்தே பரத்தையரை நுகர்ந்து, இரவெல்லாம் அங்கேயே மயங்கிக் கிடந்து, காலையில் அவ்விடத்தே பெற்ற அடையாளங்களுடன் வீடுநோக்கி வெட்கமின்றி வருவதைக் குறித்துப் பழித்ததாம். ஆம்பல் பரத்தையர்க்கும், மிகுசேற்று அள்ளல் அங்குப் பெற்ற இழிந்த இன்பத்திற்கும், பகன்றை சூடிவரல் அவன் மேனியில் விளங்கும் பரத்தமையால் விளங்கிய குறிகட்கும், முதுபோத்து அவனுக்குமாகப் பொருத்திக் காண்க. 'துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கையிடத்து அரிமலர் ஆம்பல் மேய்ந்த கடாப்போல, அவனும் பலர் உலவும் பரத்தையர் சேரிக்கண் அழகுடையாளாகிய ஒருத்தியின் இன்பத்தை நயந்து பெற்று உண்டனன்' என்க. 'பைந்நிண வரால் குறைய' என்றது,

'அவ்விடத்து அவனுடைய கூட்டம் பெறாத இளம்பரத்தையர் வருத்தமுற' என்றதாம்.

**மேற்கோள்:** தொல்காப்பியக் கற்பியலின், 'பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின்' என்னுஞ் சூத்திரத்து, உணர்ப்பு வயின் வாரா ஊடலுற் றோன்வயின், உணர்த்தல் வேண்டிய கண்ணும்' என்னும் பகுதியில். இச் செய்யுளை எடுத்துக் காட்டி, 'இது தோழி தலைவியை வெகுண்டு ஆக்கியவாறு காண்க' என்று உரைப்பர் நச்சினார்க்கினியர்.

தொல்காப்பியப் பொருளியலின், 'வருத்தமிகுதி சுட்டுங் காலை' என்னுஞ் சூத்திர உரையுள், இச் செய்யுளுள் வரும் 'அது புலந்துறைதல் வல்லியோரே' என்ற பகுதியைக் காட்டிப், 'புலவியால் நின் இல்வாழ்க்கை குறைபடுமெனத் தோழி கூறியவாறு காண்க' எனவும் நச்சினார்க்கினியர் உரைத்துள்ளனர்.

## 317. வந்து நின்றனர்!

**பாடியவர்:** வடமோதங்கிழார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

(வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து சென்றிருக் கிறான் தலைவன். பிரிவுத் துயரினாலே மெலிவுற்றனள் தலைவி. எனினும் தன் யாயும் பிறரும் அறியாவாறு மறைத்தும் ஒழுகி வந்தனள். அவளுடைய வேதனை அவளுடைய தோழிக்குக் கலக்கத்தைத் தந்தது. அவன் குறித்துச் சென்ற பருவத்தும் வராதுபோகவே அவர்கள் துயரம் நனிமிகுந்தது. அவ்வேளை, தலைவனும் வந்து நிற்கத் தோழி கவலை நீங்கிய களிப்பினளாகச் சொல்லிய முறையில் அமைந்தது இச் செய்யுள்.)

**"மாக விசும்பின் மழைதொழில் உலந்தெனப்**
**பாஅய் அன்ன பகலிருள் பரப்பிப்**
**புகைநிற உருவின் அற்சிரம் நீங்கக்**
**குவிமுகை முருக்கின் கூர்நுனை வைஎயிற்று**
**நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்**

**முதிராப் பல்லிதழ் உதிரப் பாய்ந்துடன்**
**மலருண் வேட்கையின் சிதர்சிதர்ந் துகுப்பப்**
**பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி**
**நுண்கோல் அறைகுறைந்து உதிர்வன போல**
**அரவ வண்டினம் ஊதுதொறுங் குரவத்து**

**ஓங்குசினை நறுவீ கோங்கலர் உறைப்பத்**
**துவைத்துஎழு தும்பி தவிர்இசை விளரி**
**உதைத்துவிடு நரம்பின் இம்மென இமிரும்**
**மரனே முற்ற காமர் வேனில்**
**வெயிலவிர் புரையும் வீததை மாஅத்துக்**

**குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப**
**வருவேம்" என்ற பருவம் ஆண்டை**
**இல்லை கொல்லென மெல்ல நோக்கி**
**நினைந்தனம் இருந்தன மாகநயந் தாங்கு**
**உள்ளிய மருங்கின் உள்ளம் போல**

**வந்துநின் றனரே காதலர் நத்துறந்து**
**என்னுழி யதுகொல் தானே பன்னாள்**
**அன்னையும் அறிவுற அணங்கி**
**நன்னுதற் பாஅய பசலை நோயே?**

*பெரிதான வானத்தினிடத்தே மேகங்கள் பெய்தலாகிய தம் தொழிலினை நிறுத்திய வாயின. பரப்பிவைத்தாற் போன்ற இருளினைப் பகலினும் பரப்பியதாக வானமும் விளங்கியது. புகையின் நிறத்தைப்போன்ற உருவினைக் கொண்டு அங்ஙனம் மேகங்கள் விளங்கும் பனிக்காலமும் நீங்கியது.*

*கூர்மையான பற்களையும் ஒளியுடைய முகத்தினையும் உடைய இளம்பெண்களது, செம்பஞ்சி ஊட்டிய நகத்தினைப் போன்று விளங்கும், குவிந்த முகைகளையுடைய முருக்க மரத்தினது கூரிய முனையையுடைய முதிர்ச்சிபெறாத பல இதழ்களும் உதிரும் படியாக, மலரிடத்துத் தேனுண்ணும் வேட்கையினவாகிய வண்டினம், கூட்டமாகப் பாய்ந்து கிண்டி அவற்றை உதிர்த்துக் கொண்டிருக்கும்.*

*பொன்னாற் செய்த சிறு தராசுத்தட்டு அழகு பெற, வெள்ளியின் நுண்ணிய கம்பி அறுத்தலால் குறைப்பட்டு உதிர்வனபோல, ஒலியுடைய வண்டினம் ஊதுந்தோறும், கோங்கமரத்தின் பூவிடத்தே, குரவமரத்தின் உயர்ந்த கிளையிடத்து நறும்பூக்கள் குறைந்து உதிர்வனவாயிருக்கும்.*

*ஆரவாரித்து எழுகின்ற வண்டின் விட்டுவிட்டிசைக்கும் ஒலியானது தெறித்துவிடுகின்ற விளரி நரம்பினிடத்து நின்று எழுகின்ற ஒலிபோல இம்மென ஒலித்துக் கொண்டிருக்கும்; மரங்களும் இன்பமுற்றனவாக விளங்கும் அத்தகைய அழகிய வேனிற்காலத்திலே*

"வெயிலொளியைப் போன்ற வெண்பூக்கள் செறிந்திருக்கும் மாமரத்திலிருந்து குயில்கள் செய்கின்ற ஆரவாரத்தினை நம்முடனிருந்து கேட்க வருவேம்; என்று அவர் குறித்துச் சென்ற இத்தகைய இளவேனிற் பருவம் அவர் சென்றுள்ள அவ்விடத்தே இல்லைபோலும்" என, மெல்லென அக்காலத்துச் செவ்வியைக் கண்டு அவனை நினைந்தவராக இருந்தனம். அவ் வேளையிலே.

ஒன்றை விரும்பி நினைந்தவிடத்து அங்ஙனமே அது வந்து சேரக் களிகொள்ளும் உள்ளக்களிப்பினைப் போல, இனியவராகிய காதலரும் வந்து நம் எதிரே நின்றனர். அக்கணமே-

அன்னையும் அறிவுறும் வண்ணமாகப் பல நாட்கள் நம்மை வருத்தியவாறே, நம் நல்ல நெற்றியிற் படர்ந்த பசலைநோயும் நம்மைப் பிரிந்து எவ்விடத்துச் சென்றதோ?

**சொற்பொருள்:** 1. மாக விசும்பின் - வானினிடத்தே தொழில் உலந்தென - தொழில் செய்து முடிந்ததாக 3. அற்சிறம் - பனிக்காலம். 5. நகைமுகம் -. ஒளியுடைய முகம் 7. சிதர் - வண்டு கன்னம் - பொற்கொல்லரின் சிறு தராசுத் தட்டு 12. தவிரிசை - விட்டிசைக்கும் இசை, 13 உதைத்து விடல் - தெறித்துவிடல் 14. மரன் ஏமுற்ற - மரங்கள் பூத்துக் குலுங்கி இன்புற்றுத் தோன்றிய; மானே முற்ற எனவும் பாடம்; அதற்கு மானினம் இன்புறுதலுற்ற என்பது பொருள். 22. என்னுழியது கொல் எங்குச் சென்றதோ? 23. அணங்கி - வருத்தி.

**விளக்கம்:** தலைமகனின் வரவினை உணர்ந்த தோழி, அவனை நினைந்து தாம் கொண்டிருந்த துயரமிகுதியினை எடுத்துக் கூறுவதனால், இது பாலைத்திணையாகக் கொள்ளப் பெற்றது.

பொன்னாற் செய்த சிறுதட்டிலே வெள்ளிக் கம்பித் துண்டுகள் விழுவது போலக் கோங்கம் பூவிடத்தே குரவ மலர்கள் விழுவதெனக் கூறுகின்ற நயத்தினை அறிந்து இன்புறுக.

"உண்ணிய மருங்கின் உள்ளம் போல்" என்பதற்கு உள்ளியவிடத்தே அந்த உள்ளத்து எழுந்த ஒன்றே வந்து எதிருறுமாறுபோல என்று பொருள் கொள்ளுக.

## 318. ஊதல் வேண்டும்!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக்குறி வந்த தலைமகனை வரவுவிலக்கி வரைவு கடாவியது.

*(இரவுக் குறியிடத்தே காதலர் சந்தித்து வருகின்ற காலம். தலைவன் வரும் வழியின் ஏதமும் பிறவும் அவளுள்ளத்தை வருத்துகின்றன. திருமண நாட்டமும் எழுகின்றது அதனால், அவனிடத்தே இங்ஙனம் கூறுகின்றனள். இவ்வாறு அமைந்தது இச்செய்யுள்.)*

**கான மானதர் யானையும் வழங்கும்**
**வான மீமிசை உருமுநனி உரறும்**
**அரவும் புலியும் அஞ்சுதக வுடைய**
**இரவழங்கு சிறுநெறி தமியை வருதி-**
**வரையிழி யருவிப் பாட்டொடு பிரசம்**

**முழவுச்சேர் நரம்பின் இம்மென இமிரும்**
**பழவிறல் நனந்தலைப் பயமலை நாட!-**
**மன்றல் வேண்டினும் பெறுகுவை ஒன்றே**
**இன்றுதலை யாக வாரல் வரினே**
**ஏமுறு துயரமொடு யாமிவண் ஒழிய**

**எற்கண்டு பெயருங் காலை யாழநின்**
**கற்கெழு சிறுகுடி எய்திய பின்றை**
**ஊதல் வேண்டுமாற் சிறிதே-வேட்டொடு**
**வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்**
**நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே!**

*விலங்கினம் இயங்குகின்ற காட்டிடத்து நெறியின் கண்ணே, காட்டியானைகளும் இயங்குவனவாகும். வானத்து உயர்ந்த உச்சிக்கண்ணே இடிமுழக்கமும் பெரிதாக எழும். பாம்பும் புலியும் வழங்கும் அக்காடு அச்சந்தரும் தன்மையினையும் தன்பாற் கொண்டது. இரவு நேரத்தில், அத்தகைய சிறுநெறி வழியே தன்னந் தனியனாக நீயும் வருகின்றனை!*

*மலையினின்று இழியும் அருவியின் இன்னொலியோடு வண்டினங்களும் இணைந்தனவாக, முழவொலியுடன் இணைந்து எழுகின்ற யாழ்நரம்பின் ஒலிபோல ஒலியெழுப்பிக் கொண்டிருக்கும், பழைதான ஆற்றல்கொண்ட, அகன்ற இடத்தினையுடைய பயன்நிறைந்த மலைநாட்டின் தலைவனே! நீ திருமணத்தை விரும்பினாலும் அதனைப் பெறுபவன் ஆவாய். ஆயின்-*

*இன்று முதலாக நீ இரவுநேரத்தில் வாராதே. வருவா யானால், எம்மை மயக்கமுறச்செய்து அடைகின்ற துயரத்தினை யாம் இவ்விடத்தேயே நீக்கிக் கொள்ளுமாறு. என்னைக் கண்டுவிட்டு நீங்குகின்ற பொழுதிலே, கற்கள் பொருந்திய நின்னுடைய சிற்றூரினை நீ சென்றடைந்ததன் பின்னர், மூங்கில்*

செறிந்த காட்டிடத்தே வழிதப்பிப் பிரிந்த நின் வேட்டுவரோடு நாய்களையும் அழைக்கின்ற குறிப்பாகிய தன்மையினைக் கொண்ட, நின் ஊதுகொம்பினை எடுத்துச் சிறிதே ஊதுதலும் வேண்டுகின்றேன்.

**சொற்பொருள்:** 1. மானதர் - விலங்கினம் வழங்குகிற சிறு பாதை. 4. சிறு நெறி - சிறு வழி; குறுகலான நெறி. இரவுச் சிறு நெறி என்பது, இர வழங்கு சிறுநெறி எனவும் பாடபேதத்துடன் வழங்கும். 7. விறல் - வெற்றி மலையின் வெற்றி என்றது அம் மலைவாழ்நரின் வெற்றிச் செவ்வியை உரைத்ததாம். 8. மன்றல் - மணம். 9. இன்று தலையாக - இன்று முதலாக. 10. ஏம் உறு - மயக்க முறுவித்தலான; அதாவது மிகுதியான துயரம் என்க. 13. வேட்டு - வேட்டுவர். 14. அழுவம் - அடர்ந்த காடு. 15. கோடு - ஊது கொம்பு.

**விளக்கம்:** "வரையிழி யருவிப் பாட்டொடு பிரசம் முழவுச்சேர் நரம்பின் இம்மென இமிரும், பழவிறல் நனந் தலைப் பயமலை நாட" என்றது, அத்தகையோனாகிய சிறப்புடைய அவன் வரைந்து வரின். தம்மவரும் மாறாது இசைவர் எனக் குறித்ததாம். அதனை மேலும் விளக்கமுறக்கூறுபவள், 'மன்றல் வேண்டினும் பெறுகுவை" என்றனள்.

'இன்று தலையாக வாரல்' என்றவள், வந்தால், 'நின் கோடே ஊதல் வேண்டுமால்' என வேண்டுகின்றனள். 'ஏமுறு துயரம் யாமிவண் ஒழிய' என் அவளுரைத்தாலும், அதனால் இவர்களின் களவு ஊரறிந்ததாகி அலர் பெருகத் தெளிவாகும். எனவே, அவன் மனம் வரைந்துகோடலிலேயே முற்றமும் செல்லும் என்பதும் பெற்றனள்.

**மேற்கோள்:** தொல்காப்பியக் களவியலுள், 'நாற்றமும் தோற்றமும்' என்ற சூத்திரத்து, ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்' என்னும் பகுதிக்கண், இச் செய்யுளைக் காட்டி, இதனுள், 'வரினே ஏமுறு துயரம் நாமிவண் ஒழிய நின் நாய் பயிர் குறிநிலை கொண்ட கோட்டை ஊதல் வேண்டு மாற் சிறிது' என வருவது, ஆற்றிடை ஏதமின்றிச் சென்றமை தோன்ற ஆண்டோர் குறிசெய்' எனக் கூறுவனவும் கொள்க' என்பர் நச்சினார்க்கினியர்.

## 319. எய்துக உமக்கே!

**பாடியவர்:** எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** செலவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவழுங்கச் சொல்லியது.

(தலைமகன் பொருள் கருதியவனாகத் தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு செல்லுதற்கு முற்படுகின்றவன், தோழியிடத்து அச் செய்தியைக் கூற, அவள் தலைவியின் ஆற்றாமை மிகுதியை எடுத்துக் காட்டி, அவன் போக்கினைத் தடை செய்பவளாக இவ்வாறு உரைக்கின்றனள்:)

**மணிவாய்க் காக்கை மாநிறப் பெருங்கிளை**
**பிணிவீழ் ஆலத் தலங்குசினை ஏறிக்**
**கொடுவில் எயினர் குறும்பிற் கூக்கும்**
**கடுவினை மறவர் வில்லிடத் தொலைந்தோர்**
**படுபிணங் கவரும் பாழ்படு நனந்தலை**

**அணங்கென உருத்த நோக்கின் ஐயென**
**நுணங்கிய நுசுப்பின் நுண்கேழ் மாமைப்**
**பொன்வீ வேங்கைப் புதுமலர் புரைய**
**நன்னிறத் தெழுந்த சுணங்கணி வனமுலைச்**
**சுரும்பார் கூந்தற் பெருந்தோள் இவள்வயிற்**

**பிரிந்தனிர் அகறல் சூழின் அரும்பொருள்**
**எய்துக மாதோ நுமக்கே கொய்குழைத்**
**தளிரேர் அன்ன தாங்கரு மதுகையள்**
**மெல்லியள் இளையள் நனிபேர் அன்பினள்**
**'செல்வேம்' என்னும் நும்மெதிர்**

**'ஒழிவேம்' என்னும் ஒண்மையோ இலளே!**

கருமணியினைப் போன்ற வாயினவான காக்கையின் கருநிறப் பெருஞ்சுற்றமானது, பிணிப்புண்டு வீழ்ந்திருக்கும் விழுதுகளையுடைய ஆலமரத்தின் அசைகின்ற கிளைகளிலே ஏறியிருந்து.

வளைந்த வில்லினையுடைய எயினரது குறும்பிற்கு, ஊக்கத்துடன் படைகொண்டு எழுகின்ற கொடுந் தொழிலினை யுடைய மறவர்கள், வில்லிட்டு எய்தலால் இறந்து வீழ்ந்தோருடைய பிணங்களைக் கவர்ந்து உண்ணுகின்ற தன்மையினை யுடைய, பாழ்பட்டுக் கிடக்கின்ற அகன்ற பாலையினிடத்திலே-

தெய்வத்தைப் போன்ற உருத்த நோக்கினையும், அழகிதென நுணுகிய இடையினையும், நுண்மையாகப் பொருந்திய மாமைப் புள்ளிகளையும், பொன்போன்ற பூக்களைக் கொண்ட வேங்கை மரத்தின் புதுமலரைப் போன்ற தேமலை அணிந்திருக்கும் நல்ல மார்பிடத்து எழுந்துள்ள அழகிய முலைகளையும், வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கும் கூந்தலினையும், பெருத்த தோள்களை யும் உடைய, நும் காதலியான இவளிடத்திருந்தும் பிரிந்தவராக நீங்கிப்போதலைக் கருதினீரானால்-

நுமக்கு, நீர் நாடிச் செல்லும் அரிதான பொருளும் வந்தடைவதாக! கொய்த குழையாகிய தளிரின் அழகினைப் போன்ற தாங்குதற்கற்ற வலியினையுடையவளும், மென்மைத் தன்மையினளும், இளமைப் பருவத்தினளும், நும்மிடத்து மிக்க பேரன்பினளுமாகிய இவள், 'யாம் பிரிந்து போவோம்' என்று கூறும் நுமக்கு எதிரே. 'பிரிந்திருப்போம்' என்று கூறுகின்ற அறிவுடைமையினை இல்லாதவளாயிற்றே! யான்றான் என் செய்வேனோ?

**சொற்பொருள்:** *1. கிளை-இனம்; கூட்டம். 3. குறும்பு - சிற்றரண். 11. சூழின் கருதின். 13. மதுகை - வலிமை 16. 'ஒழிவேம் ஒழியோம் எனவும் பாடம்.*

**விளக்கம் :** *காட்டின் கடத்தற்கரிய கொடுமையினையும், தலைவியின் மிகுந்த அழகினையும், அவளின் பேரன்பினையும், பிரிந்தால் அவள் படும் வாட்ட மிகுதியையும் கூறி, அவளது பேதைமையினையம் உணர்த்திச், செலவு அழுங்குவிக்கும் நயத்தினை அறிந்து இன்புறுக.*

## 320. சூளும் பொய்யோ?

**பாடியவர்:** *மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது.*

*(கடற்றுறைப் பகுதித் தலைவன் ஒருவன், நங்கை யொருத்தியைக் கண்டு காதலித்துக் களவிற் கூடியும் வருகின்றான். பகற்போதில் வருதலையுடைய அவனைத் தோழி கண்டு, தலைவியை வரைந்துவந்து மணந்து கொள்ளுமாறு கூறியமுறையிலே அமைந்தது இச்செய்யுள்.)*

**ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇத்**
**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்**
**தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்**
**விழவுஅயர் மறுகின் விலைஎனப் பகரும்**
**கானல்அம் சிறுகுடிப் பெருநீர்ச் சேர்ப்ப!**

**மலர்ஏர் உண்கண்ணெம் தோழி எவ்வம்**
**அலர்வாய் நீங்கநீ அருளாய் பொய்ப்பினும்**
**நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்**
**அடும்புஅமர் எக்கர் அம்சிறை உளரும்**
**தடவுநிலைப் புன்னைத் தாதுஅணி பெருந்துறை**

**நடுங்குஅயிர் போழ்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்**
**வண்டற் பாவை சிதைய வந்துநீ**
**தோள்புதிது உண்ட ஞான்றைச்**
**சூளும் பொய்யோ கடல்அறி கரியே?**

*உயர்ந்த அலைகளையுடைய கடற்பரப்பிலே சென்று, மீன் பிடிக்கும் படகினையுடையவரான தமையன்மார், விசைத்து வலையினை இழுத்துப் பிடித்துக்கொணர்ந்த ஆற்றலுடைய வலிய மீன்களைத், தழையணிந்த அல்குலை உடையவரான அவர்தம் செல்வமிக்க நங்கைமார், விழாக்கள் நிகழுகின்ற ஊர்த்தெருக்களிலே கொண்டு, 'இன்ன விலை' எனக் கூறி விற்கின்ற, கானற்சோலையிடத்தான சிற்றூர்களையுடைய, கடற்கரை நாட்டுத் தலைவனே!*

*நீலமலரினை ஒத்த அழகிய மையுண்ட கண்களை யுடையவள் என் தோழி. அவள் துயரமும், அலருரைக்கும் வாயினரின் பேச்சும் நீங்குமாறு, நீ விரைந்துவந்து எமக்கு அருள்செய்க. அருள் செய்யாது பொய்த்தனை யானாலும்,*

*நெடிதான உப்பங்கழியினிடத்தே துழாவி மீன்பிடித்து உண்ணுந் தன்மையுடைய குறுகிய கால்களையுடைய அன்னப் பறவையானது, அடும்பங்கொடிகள் செறிந்துள்ள மணல் மேட்டினிடத்தே அமர்ந்து, தம் அழகிய சிறகினை உலர்த்திக் கொண்டிருக்கும் வளைந்த நிலையினையுடைய புன்னையின் தாதுகள் வீழ்ந்து அழகுசெய்திருக்கும்; அப்பெரிய துறையி னிடத்தே, நெகிழும் நுண்மணலைப் பிளந்துவரும் தேர் மொட்டினையுடைய நின் நெடிய தேரிலே, யாங்கள் புனைந்தாடிய வண்டற்பாவை சிதையுமாறு ஊர்ந்துவந்து, இவள் தோள்நலத்தினைப் புதுவதாக உண்ட அந்தச் சமயத்தில், கடல் தெய்வமே அறிகின்ற சான்றாக வைத்து உரைத்தனையே, அந்தச் சூளுரையும் .பொய்தானோ? (அதனையேனும் கூறுவாயாக.)*

**சொற்பொருள்:** *2. திமில் - மீன்பிடி படகு. 3. தழை - தழையாடை. 4. விழவு அயல்தல் - விழாக்கொண்டாடல், 8. துழைஇய - துழாவியுண்ட 9. அடும்பு - அடும்பங்கொடி 10. தடவு நிலை - வளைந்த நிலை: கிளைகள் தரையைத் தடவியிருக்கும் தன்மையுமாம். 11. அயிர் - நுண்மணல், கொடுஞ்சி - தேர்மொட்டு. 12. வண்டற்பாவை - புனைந்து விளையாடுதற்கு அமைத்த பாவை. 13. தோள் - தோள்நலம் 14. கடல் அறிகரி - கடல் தெய்வமே அறிகின்ற சான்று எனச் சான்றிடல். சூள் உறுதிமொழி; நின்னைப் பிரியேன்; விரைவில் மணப்பேன் எனவெல்லாம் கூறுவன.*

**விளக்கம்:** 'திமிலோன் தந்த வயமீன், செல்வத் தங்கையர் விழவயர் மறுகின் விலையெனப் பகரும், கானலஞ் சிறு குடிப் பெருநீர்ச் சேர்ப்ப என்றது, 'அதனை உண்டு மகிழும் அம் மறுகினர்போல, நீயும் முயற்சி ஏதுமின்றி நல்லூழால் இவளை அடைந்து இன்புற்றனை' என்றதாம்.

'மலரேர் உண்கண் எந்தோழி அவ்வம், அலர்வாய் நீங்க நீ அருளாய் பொய்ப்பினும், வண்டற்பாவை சிதைய வந்து தோள் புதிது உண்ட ஞான்றைக் கடலறி கரியாக உரைத்த சூளும் பொய்யோ?' என்றது, 'எமக்கு அருள்தலும், எம் எவ்வம் துடைத்தலும் நின் கடமையாயிருக்க, அதனை மறந்தனை யேனும், கடல்தெய்வம் சான்றாகச் சூளுரைத்தனையே அதையேனும் பேண வேண்டாமோ?' என்று 'தெய்வக் குற்றம் நேரும் எனக் கூறி உச்சரித்ததாம். இதனால், அவன் விரையவந்து தலைவியை மணப்பான் என்பதும் அறியப்படும்.

## 321. என்ன செய்வாளோ?

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய செவிலி சொல்லியது.

*(இளையோள் ஒருத்தி தன் களவுக் காதலனுடனே கூடியவளாக உடன்போக்கிலே சென்றுவிடுகின்றனள். அவளைப் பேணி வளர்த்த செவிலித்தாய், கோடைக்காலத்திலே. கொடுவழி யூடே செல்லத்துணிந்த மகளது பிரிவினை எண்ணி ஏங்கித் துயருறுகின்றாள். பொழுது சாயவும், அவள் நினைவோட்டம் இப்படிச் செல்ல, அவள் தன் உள்ளத்துடன் இவ்வாறு கூறிக் கொள்ளுகின்றாள்.)*

**பசித்த யானைப் பழங்கண் அன்ன**
**வறுஞ்சுனை முகந்த கோடைத் தெள்விளி**
**விசித்துவாங்கு பறையின் விடரகத்துஇயம்பக்**
**கதிர்க்கால் அம்பிணை உணீஇய புகல்ஏறு**
**குதிர்க்கால் இருப்பை வெண்பூ உண்ணாது**

**ஆண்குரல் விளிக்கும் சேண்பால் வியன்சுரைப்**
**படுமணி இனநிரை உணீஇய கோவலர்**
**விடுநிலம் உடைத்த கலுழ்கண் கூவல்**
**கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்**
**புன்றலை மன்றத்து அம்குடிச் சீறூர்**

**துணையொடு துச்சில் இருக்கும் கொல்லோ?**
**கணையோர் அஞ்சாக் கடுங்கண் காளையொடு**
**எல்லி முன்னுறச் செல்லும் கொல்லோ?**

**எவ்விணை செயுங்கொல்? நோகோ யானே!-**
**அரிபெய்து பொதிந்த தெரிசிலம்பு கழீஇ**

**யாயறி வுறுதல் அஞ்சி**
**வேய்உயர் பிறங்கல் மலையிறந் தோளே!**

*பரற்கற்களை உள்ளீடாகப் பெய்து மூட்டுவாயினைப் பொதிந்து அழகிதாக ஆராய்ந்து அணிந்திருந்த தன் காற்சிலம்புகளையும் நீக்கிவிட்டாள்; தன் தாய் தன்னுடைய ஒழுக்கத்தை அறிவாளோ என அஞ்சிய அவள், தன் தலைவனுடன் கூடியவளாக, மூங்கில் உயரமாக வளர்ந்திருக்கும் சாரலையுடைய மலைவழியூடுங் கடந்து செல்பவளாயினாள். அத்தகைய என் மகள்-*

*பசியினை உடைய யானையின் அழகிழந்த கண்ணினைப் போன்று நீர் வறண்டதாகிக் காய்ந்து கிடக்கும் சுனையுள், புகுந்துவரும் மேல்காற்றின் தெளிவான ஒலியானது. தோலினை இழுத்துக்கட்டிய பறையொலியினைப் போல மலைப் பிளப்புக்களிடத்தே ஒலிக்கவும்*

*மெலிந்து நீண்ட கால்களையுடைய தன் அழகிய பிணையானது உண்பதற்காக, அதன்பால் விருப்பமுடைய அதனுடைய ஆண்மானானது, குதிர்போன்ற அடிமரத்தையுடைய இருப்பைமரத்தின் வெண்மையான பூக்களைத் தான் உண்ணாததாக, தன் ஆண்மைக்குரல் தோன்ற, தன்பெண் மானைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கவும்- விளங்குகின்ற தொலைவிடத்ததாகிய-*

*பெரிதான பால்மடியினையும், ஒலிமுழங்கும் கழுத்து மணியினையும் உடையவான ஆனிரைகள் உண்ணும் பொருட்டாக, அவற்றை மேய்ப்போரான ஆயர்கள் பிளப்புண்டு கிடந்த நிலத்தினை உடைத்து ஆக்கிய, கண்ணீர் கசிவதுபோல் நீர் கசிந்து வந்துகொண்டிருக்கும் கூவலைக், கன்றினையுடைய இளைய பெண்யானையானது தன் களிற்றுடனும் கூடியதாகத் தடவிப்பார்க்கும், அழகிழந்த இடமாகிய மன்றத்தையும் அழகிய குடியிருப்பினையும் உடைய சிற்றூரினிடத்தே-*

***இரவில், தன் துணைவனுடனே, ஒதுக்கிடத்தே அச்சமின்றித் தங்கியிருப்பாளோ? அன்றி அம்பேவி ஆறலைக்கும் கொடியார்க்கு அஞ்சாத தறுகண்மையினைக் கொண்ட காளையாகிய தன் காதலுனுடனே, அவனுக்கு முன்னராகத் தான் நடந்து சென்று கொண்டிருப்பாளோ? அதனை நினைந்து யான் நோகின்றேனே!***

**சொற்பொருள்:** 1. பழங்கண் - பசியால் அழகற்ற கண் 2. வறுஞ்சுனை - வறட்சியுற்றுக் கிடக்கும் சுனை. கோடை - மேல்காற்று. விளி ஒலி. 3. விசித்து வாங்கல் - இழுத்துக் கட்டுதல் விடரகம் - மலைப் பிளப்புக்கள். 4. கதிர்க்கால் - நீண்ட மென்கால். புகல் - விருப்பம். 5. குதிர்க்கால் - குதிர் போற் பருத்த அடிமரம். 6. ஆண்குரல் - ஆண்மைக் குரல் 8. கூவல் - சிறுகிணறு. விடுநிலம் - தரிசுபட்ட நிலம்; பிளந்து கிடக்கும் நிலமுமாம். 11. துச்சில் - ஒதுக்கிடம்; சிறு குடிலுமாம். 12. கணையோர் - வில்லேந்திக் கணைதொடுப்போரான ஆறலைக் கள்வர். கடுங்கண் - தறுகண்மை. 13. எல்லி - இரவு 15. பொதிந்த மூட்டு - வாய் மூடியுள்ள.

**விளக்கம்:** மணப்பதற்கு முன், அந்நாளைய கன்னியர், தம் சிலம்புகளை நீக்கிகொள்வது மரபு இதனைச் சிலம்பு கழி நோன்பு என்பர். சிலம்பினைக் கழித்து, அவள் சென்றனள் என்பதும் புலப்படும். அவள் அங்ஙனம் சென்றது, தன் தாய் தன்னுடைய களவு உறவினை அறிந்ததற்கு அஞ்சி எனவும் கூறினர். இனி, இரவில் வெளியேறி வீட்டைவிட்டு அகலுங்கால், அரிபெய்த சிலம்பின் ஒலிமுழக்கங் கேட்பத், தாய்தன் போக்கினைத் தடுத்துவிடுதலை அஞ்சியவளாக, அவற்றைக் கழற்றிவைத்துச் சென்றனள் எனவும் கூறலாம்.

'பசித்த யானைப் பழங்கண் அன்ன வறுஞ்சுனை முகந்த கோடைத் தெள்விளி, விசித்து வாங்கு பாறையின் விடரகத்தியம்ப' என்றது. கோடையின் கொடுமையைக் கூறியதாம். சுனை வறட்சியினாற் காற்றுப் புகுந்து ஒலியோடு எழ, அந்த ஒலி விடரகத்தேயும் எதிரொலித்தது என்க.

'இருப்பை வெண்பூவைத் தான் உண்ணுதல் இன்றித் தன்பெண்மானை விரும்பி அழைக்கும் ஆண்மாணின் செயலைக் கருதினாள், அங்ஙனமே அவள் காதலனும் அவளைப் பேணிய வனாகத் தன் துயரையும் மறந்து செல்லும் அன்புடையவன் ஆக இருத்தலை நினைந்து; அன்றி, அத்தகைய அன்புடையானா தலை விரும்பியுமாம்.

'விடுநிலம் உடைத்த கலுழ்கட் கூவல் கன்றுடை மடப்பிடி களிறோடு தடவும்' என்றனள், வறுமைக்கண்ணும் பிரிதலின்றி, அவன் தன் காதலனுடனும், காதற்பேறான மகனுடனும் பிரியாது வாழ்தலை விரும்பினாளாக என்க.

இப்படிப் பகற்போதை நினைந்தவட்கு, இரவுவேளையின் நினைவு கவலையைத் தருகிறது. அதனால் 'துச்சில் இருக்குங் கொல்லோ? காளையொடு முன்னுறச் செல்லுங் கொல்லோ?"

என நோகின்றாள். இதனால் தன் மகளின் நலனிலே செவிலிக்கு உண்டாயிருந்த பொறுப்பும், அவள் பாசச் சிறப்பும் நன்கு புலனாகும்.

## 322. தேம்புதியோ நெஞ்சே?

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *அல்ல குறிப்பட்டுப் போகின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *பொதியிலுக்கு உரியவனாக விளங்கிய போர்வல்ல திதியனின் மலைவளம்.*

*(இரவுக்குறியிலே அன்பிற்கு உரியவளைச் சந்தித்து இன்புறப் பெரிதும் முயன்று வந்த தலைவன், அவளைக் காணப் பெறாதவனாகக் காத்திருந்து சோர்ந்து போய்த் தன்னூர் திரும்புகிறான். அப்போது. அவன் நெஞ்சிலே எழுந்த துயரம், இங்ஙனம் தானே பேசும் பேச்சாக எழுகிறது.)*

**வயங்குவெயில் ஞெமியப் பாஅய் மின்னுவசிபு**
**மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல்**
**ஆராக் காமம் அடூஉநின்று அலைப்ப**
**இறுவரை வீழ்நரின் நடுங்கித் தெறுவரப்**
**பாம்புஎறி கோலிற் றமியை வைகி**

**தேம்புதி கொல்லோ?-நெஞ்சே உருமிசைக்**
**களிறுகண் கூடிய வாள்மயங்கு ஞாட்பின்**
**ஒளிறுவேல் தானைக் கடுந்தேர்த் திதியன்**
**வருபுனல் இழிதரு மரம்பயில் இறும்பிற்**
**பிறையுறழ் மருப்பின் கடுங்கண் பன்றிக்**

**குறைஆர் கொடுவரி குழுமுஞ் சாரல்**
**அறையுறு தீந்தேன் குறவர் அறுப்ப**
**முயலுநர் முற்றா ஏற்றுஅரு நெடுஞ்சிமைப்**
**புகலரும் பொதியில் போலப்**
**பெறலருங் குரையள்எம் அணங்கி யோளே!**

*நெஞ்சமே! நம்மைத் தம் அழகினாலே தாக்கி இங்ஙனம் வருத்தியோள் அவள்.*

*இடிமுழக்கம்போன்று முழங்கியவையாகப் போர்க் களிறுகள் தம்முள் திரண்ட வாட்கள் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொண்டிருக்கிற போர்க்களத்தின் கண்ணே, ஒளியெறிக்கும் வேலினனாகத் தன் தேரிலே விரைந்து சென்று கலந்து வெற்றி கொள்பவன், படைவீரர் பெருக்கினைக் கொண்ட திதியன் என்பவன், மலையுச்சியினின்று வருகின்ற அருவிப் புனல் வீழ்ந்து*

ஓடிக்கொண்டிருக்கும், மரங்களடர்ந்த காட்டிலே, பிறைபோன்ற வெள்ளிய வளைந்த கொம்பினையுடைய அச்சமற்ற பன்றியினது இறைச்சித் துண்டுகளைத் தின்ற, வளைந்த கோடுகளையுடைய புலியானது முழங்கிக்கொண்டிருக்கும் மலைச்சாரலை உடையது அவனது பொதியில் மலை, உச்சிப் பாறைகளிடத்தே பொருந்திய இனிதான தேனடைகளை அறுத்தெடுக்க முயலுகின்ற குறவர்களும் ஏறிச்சென்று அறியாத, ஏறுதற்கரிய உயர்ந்த மலை முடிகளையும் உடையது அம்மலை புகுதற்கு அரியதும், திதியனுக்கு உரியதுமான அப்பொதியில் மலையினைப்போலப் பெறுதற்கு அருமையானவள் நம் காதலியாகிய அவள் அதனை அறியாதே-

விளங்கும் கதிரவனும் மறையும்படியாகப் பகலிற் பரந்தனவாய மேகங்கள், இரவில் மின்னலிட்டுப் பிளந்தவையாக, மிகுதியான மழையினைப் பொழிந்த நள்ளிரவு வேளையிலே, ஆராத காமநோயானது வருத்தாநின்று அலைக்கழிப்ப, மலை முகட்டினின்றும் வீழ்ந்திறக்கும் மனத்துயரினைக் கொண்டவரே போலவும், அச்சமுண்டாக நடுக்கமுற்றுப் பாம்பினை அடித்த கோலினைப்போலவும், தனித்துக் கிடந்து நீயும் வாடுவையோ?

**சொற்பொருள்:** *1. வயங்கு வெயில் - ஒளி விளங்கும் கதிரவன். ஞெமிய - மறைய. பாஅய் - பரவி வசிபு - பிளத்தல்; மேகங்களை ஊடறுத்து எழும் மின்னலை மின்னு வசிபு என்றனர் 2. மயங்குதுளி - மிக்கமழை; அடைமழை; பானாட்கங்குல் - இரவின் பாதிநாளாகிய நள்ளிருள் பொழுது. 3. அடூஉ - வருத்துவதாய். 4 தெறுவர - அச்சமுண்டாக; தேம்புதல் - வாடிக் கலுழ்தல், 7. கண்கூடிய - திரண்டுநிறைந்த. ஞாட்பு - போர் 9. இறும்பு - காடு. 10. கடுங்கண் - தறுகண்மை. 11. குறை - இறைச்சித் துண்டு. கொடுவரி - வளைவான கோடு களையுடைய புலிகள். 12. அறை - பாறை. 13. ஏற்றரு - ஏறுதற்கு அரிய.*

**விளக்கம்:** *நெஞ்சத்தின் தேம்புதலுக்கு வயங்குவெயில் ஞெமியப் பாஅய். மின்னு வசிபு மயங்குதுளி பொழிந்த பானாட்கங்குல், ஆராக் காமம் அடுஉநின் றலைப்ப, இறுவரை வீழ்நரின் நடுங்கித், தெறுவரப் பாம்பெறி கோலின் தமியைவைகி' என்று கூறி, அதன் மிகுதியை விளக்கினர். பலநாட்கைக்குத் துணையாயிருந்த கோலினைப் பாம்பினை அடித்ததும் வீசி எறிந்து கழித்துவிட, அது அவர் உறவினை விட்டுத் தனித்துக் கிடப்பதுபோல, நீயும் அவளைக் கண்டு உறவாடிய வகையெல்லாம் இழந்தனையாய், இன்று தனித்துத் தனிமை பொறாமல் வருந்துகின்றனையோ? என்பான், 'பாம்பெறி கோலில் தமியை வைகி' என்றனன், பாம்படித்த*

கோலினை அதன்பால் நஞ்சுபடிதலும் கூடுமென நினைந்து இன்றும் எறிந்துவிடுவது மரபு.

காமமிகுதியால் பெற்ற துயரத்தின் மிகுதியினை, 'இறு வரை வீழ்நரின் நடுங்கி' எனக் கூறுவதன்மூலம் உயிரையே மாய்த்துக்கொள்ள நினைக்கும் பேரளவினது அத்துயரம் என்றனர்.

பகைவராற் புகுதற்கரிய திதியனின் பொதியில் மலைச் சிறப்பினைக் கூறுபவர், அவனுடைய போராண்மையினையும், அந்த மலைச்சாரலின் அஞ்சத்தக்க தன்மையினையும், அந்த மலைமுடிகளின் உயர்ச்சியினையும் கூறினார். அது எளிதிற் சென்றடைய இயலாதாக விளங்கும் தன்மையினைப் போலவே, அவளும் எளிதில் அடைதற்கு உரியள் அல்லள் என, அவ ளுடைய குடிப்பெருமையினையும் இதனால் அறிவித்தனராம்.

'குறவர் முற்றா ஏற்றரும் நெடுஞ்சிமை' என்பதனால்' மலைவாழ்நரான அவர்க்கும் அடைதற்கு அரிதாய அவை, பிறரால் எளிதிற் சென்றடைதற்கு இயலாவாகும் என, அவற்றின் அடையவியலாத் தகைமையினை நன்றாகக் காட்டியதும் அறிந்துஇன்புறுக.

'பாம்பெறி கோலில்' என்பதனைக், கோலெறி பாம்பின்' என மாற்றிக்கொண்டு, 'கோலினாலே அடியுண்ட பாம்பினைப் போலச் செயலற்று' என்றும் பொருள் கொள்வர்.

## 323. கூந்தல் போன்ற மேகம்!

**பாடியவர்:** புறநாட்டுப் பெருங்கொற்றனார். **திணை** பாலை. **துறை:** பரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

(தன்னுடைய தலைவனைப் பிரிந்தவளாக வாடியிருக்கின்ற தலைவியொருத்தியின் அளவற்ற பெருந்துயரினைக் கண்டு மனம் கலங்குகின்றாள் தோழி. அப்போது, கார்காலத் தோற்றமும் தோன்றவே. அதனைத் தலைவிக்குக் காட்டி, அவன் குறித்துச் சென்ற காலமும் அதுவாதலை உணர்த்தி, அவன் விரைவில் வருவானெனத் தேற்றித் தெளிவிக்கின்றாள் அவள். இந்த இனிமையுடன் அமைந்தது இச் செய்யுள்.)

**இம்மென் பேர் அலர் இவ்வூர் நம்வயின்**
**செய்வோர் ஏச்சொல் வாடக் காதலர்**
**வருவர் என்பது வாய்வ தாக**
**ஐய செய்ய மதனில சிறியநின்**
**அடிநிலன் உறுதல் அஞ்சிப் பையத்**

**தடவரல் ஒதுக்கம் தகைகொள இயலிக்**
**காணிய வம்மோ? - கற்புமேம் படுவி!**
**பலவுப்பல தடைஇய வேய்பயில் அடுக்கத்து**
**யானைச் செல்லினம் கடுப்ப வானத்து**
**வயங்குகதிர் மழுங்கப் பாஅய்ப் பாம்பின்**

**பைபட இடிக்கும் கடுங்குரல் ஏற்றோடு**
**ஆலி அழிதுளி தலைஇக்**
**கால்வீழ்த் தன்றுநின் கதுப்புறழ் புயலே!**

*கற்பின் மேம்பாட்டினை உடையவளே!*

*பலாமரங்கள் பலவாகத் திரண்டுள்ளதும், மூங்கில்கள் நெருக்கமுற வளர்ந்திருப்பதுமான பக்கமலைகைளிலே சென்று கொண்டிருக்கின்ற யானைக் கூட்டங்களைப்போல, வானத்தின் கண்ணே ஒளிவிளங்கும் கதிரும் மழுங்கிப்போமாறு எங்கணும் பரவிப் பாம்பின் படமும் அற்றுவீழுமாறு இடிக்கின்ற கடுமையான குரலினையுடைய இடியேற்றுடனே பனிக் கட்டியுடன் கூடிய மிக்க துளிகளைப் பெய்துகொண்டு, நின்னுடைய கூந்தலைப்போன்று இருண்டதான மேகங்கள் காலிரங்கியுள்ளன.*

*இம்மென்னும் ஒலியுடனே எழுகின்ற பெரிதான ஊரலரினை இவ்வூரிடத்தே நம்பாற் செய்கின்றவர்களுடைய செருக்குடைய சொற்கள் அற்றுப்போகுமாறு, நம் காதலற்கு உரியவர் வருவார் என்பதும் இனி வாய்ப்பதாகும். அதனை,*

*நின் அழகிய சிவந்த வலியிழந்த சிறிய அடிகள் நிலத்திற் பதிதலை அஞ்சி, உடல் வளைந்து வருதலான நின் தளர்நடையின் தகைமையனைத்தும் பொருந்துமாறு, மெல்லென நடந்து காணுதற்கு நீயும் வருவாயாக!*

**சொற்பொருள்:** *1. இம் என் பேரலர் - இம்மென எழுகின்ற பெரிதான அலர்; அன்றி, இடைவிடாது எழுகின்ற பேரலரும் ஆம். 2. ஏச் சொல் - செருக்குடைய சொல். 4. மதனில - செருக்கற்ற; வலியற்ற; மென்மையான. 6. தடவரல் ஒதுக்கம் - உடல் வளைந்து நடக்கும் நடை. 11. ஏறு - இடியேறு.*

**விளக்கம்:** *'நச்சுத் தன்மையுடைய பாம்பின் படம் அற்று வீழுமாறு இடிக்குரல் எழுதல்' என்றது, அவ்வாறே நச்சுத் தன்மையுடைய ஊரலரும் கார்காலத்து வரவினாலே அழிந்து போம் என்றதாம். வேனில் இறுதிக்கண்ணே காதலர் வருவார் என்று தலைவியை வற்புறுத்தி, அவளையே வந்து காணுமாறு அழைக்கும் தோழியின் உறுதி, காதலனின் காதலன்பின் திறத்தையும் கூறியதாகும்.*

## 324. விருந்தும் பெறுகுநள் போலும்!

**பாடியவர்:** *ஒக்கூர் மாசாத்தியார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிய தலைமகன் கருத்துணர்ந்து உழையர் சொல்லியது.*

*(தலைவன் தன் தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்றிருந்தான். சென்ற வினையும் நன்கு நிறைவுற்றது. அவனும் தேரேறி விரைய ஊர்செல்லும் கருத்துடையவனாக இருந்தான். தேரும் செல்லுதலைத் தொடங்கிற்று. ஒரே பகற் பொழுதுப் பயணந்தான் எஞ்சியிருந்தது, அப்போது, அவனுடனிருந்தோர் தமக்குள் சொல்லிக்கொள்வதாக அமைந்தது இச்செய்யுள்.)*

**விருந்தும் பெறுகுநள் போலும் திருந்திழைத்**
**தடமென் பணைத்தோள் மடமொழி அரிவை**
**தளிரியல் கிள்ளை இனிதின் எடுத்த**
**வளராப் பிள்ளைத் தூவி அன்ன**
**வார்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவில்**

**பறைக்கண் அன்ன நிறைச்சுனை தோறும்**
**துளிபடு மொக்குள் துள்ளுவன சாலத்**
**தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய**
**வளிசினை உதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்**
**சிரற்சிறகு ஏய்ப்ப அறற்கண் வரித்த**

**வண்டுண் நறுவீ துமித்த நேமி**
**தண்ணில மருங்கிற் போழ்ந்த வழியுள்**
**நிறைசெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்**
**செல்லும் நெடுந்தகை தேரே-**
**முல்லை மாலை நகர்புகல் ஆய்ந்தே!**

*தளிரினது பசுமை அழகினைப் பெற்றுள்ள கிளியினது, இனிதாக வளர்ந்துவருகிற அதன் வளர்ச்சிபெறாத பார்ப்பினது சிறகினையொத்துப் பெய்யும் மழையானது காட்டிலே பசுமையான பயிரினை வளர்த்திருக்கும். பாறையின் கண்ணைப் போல விளங்கும் நீர் நிறைந்து விளங்குகின்ற சுனைகள் தோறும் மழைத்துளி படுதலாற் பூமொட்டுக்கள் துள்ளுவன போல, சேற்றுடன் பொருதும் நீர்க்குமிழ்கள் தோன்றுவனவும் அழிவனவுமாய் விளங்கும். காற்றுக் கிளைகளினின்றும் உதிர்த்தலால் மணம் பரப்பியபடி கீழே வீழ்ந்து, சிச்சிலிப் பறவையின் சிறகுகளைப்போல அறல்பட்ட நிலத்திடத்தே கோலஞ்செய்த, வண்டினம் தேனுண்ணும் நறுமலர்களை ஊடறுத்துச் சென்ற தேரின் உருளைகள், குளிர்ந்த நிலத்திடத்தே பிளந்துசென்ற தடத்தில், மழைநீரானது, வரிசைப்படச் சென்று*

கொண்டிருக்கும் பாம்புகளைப்போலத் தோற்றியபடி, விரைய முடுகிச் செல்லும். இத்தகைய, முல்லை மலருகின்ற மாலைக் காலத்திலே, நகரின்கண் புகுதலை ஆராய்ந்தபடியே நம் பெருந்தகையாகிய தலைவனின் தேரும் செல்வதாகும்.

திருந்திய அணியினையும், பெரிதான மென்மைவாய்ந்த மூங்கிலையொத்த தோள்களையும், மடப்பமான பேச்சினையும் உடைய நம் தலைவியானவள், இன்று விருந்தயர்தலையும் பெறுகின்றவள் ஆவாள் போலும்!

**சொற்பொருள்:** *1. விருந்து - பசிக்கான உணவென்றில்லாது சிறப்பான உணவு; பிரிவால் நலிவுற்றவள் பெற்றுக் களிக்கப் போகும் பேரின்பச் செவ்வியைக் குறித்தது 4. வளராப் பிள்ளை - வளர்தற்குரிய பார்ப்பு 5. புறவு - காடு. 6. வார் பெயல் - பெருமழை; 11. நேமி - தேருருள்.*

**விளக்கம்:** *மழையினாலே தோன்றிய புதிய காட்சிகளைக் கூறியது, அங்ஙனம் அவன் சென்றடையத் தலைவியும் புது நலம் பெற்றுப் பொலிவுறுவாள் என்று காட்டுதற்காம்.*

**மேற்கோள்:** *தலைவன் மீளுங்கால் தலைவி விருந்து பெறுகுவள் கொல்லென இளையோர் தலைவியின் நிலையினை உரைத்தற்கு, இச்செய்யுளை, 'ஆற்றது பண்பும்' என்னும் சூத்திர உரையிலே காட்டிக் கூறுவர் நச்சினார்க்கினியர்.*

## 325. பழி யாது ஆகுமோ?

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை* **துறை:** *கொண்டு நீங்கக் கருதி யொழிந்த தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *அள்ளனை நாடுகோள் பணித்த அதியன்; வடக்கின்கண் உள்ள நல்வேற் பாணனின் நல்ல நாடு.*

*(களவிலே உறவாடிக் களித்த காதலியை முறையாக மணந்துகொண்டு வாழக் கருதிய தலைவன் ஒருவன், அதற்கான பொருளீட்டி வரலின் பொருட்டாக, அவளைத் தேற்றிப் பிரிந்து வேற்றுநாடு சென்றனன் அங்ஙனம் பிரிந்து சென்றிருந்த காலத்துத், தலைவி தோழிபாற் சொல்லியதாக அமைந்தது இச் செய்யுள். தலைமகனின் குறிப்பினை அறிந்த தோழி, தலைமகட்குச் சொல்லியதாகவும் இதனைக் கொள்வர்.)*

**அம்ம! வாழி தோழி! காதலர்**
**'வெண்மணல் நிவந்த பொலங்கடை நெடுநகர்,**
**நளிஇருங் கங்குல் புணர்குறி வாய்த்த**

**களவும் கைம்மிக அலர்ந்தன்று அன்னையும்**
**உட்கொண் டோவாள் காக்கும் பிற்பெரிது**

**இவண்உறைபு எவனோ? அளியள்!' என்று அருவி**
**'ஆடுநடைப் பொலிந்த புகற்சியின், நாடுகோள்**
**அள்ளனைப் பணித்த அதியன் பின்றை**
**வள்ளுயிர் மாக்கிணை கண்ணவிந் தாங்கு**
**மலைகவின் அழிந்த கனைகடற்று அருஞ்சுரம்**

**வெய்ய மன்றநின் வைஎயிறு உணீஇய**
**தண்மழை ஒருநாள் தலைஇய ஒண்ணுதல்**
**ஒல்கியல் அரிவை நின்னொடு செல்கம்!**
**சில்நாள் ஆன்றனை யாகஎனப் பன்னாள்**
**உலைவில் உள்ளமொடு வினைவலி உறீஇ**

**எல்லாம் பெரும்பிறி தாக வடாஅது**
**நல்வேற் பாணன் நல்நாட்டு உள்ளதை**
**வாட்கண் வானத்து என்றூழ் நீள்இடை**
**ஆட்கொல் யானை அதர்பார்த்து அல்கும்**
**சோலை அத்தம் மாலைப் போகி**

**ஒழியச் சென்றோர் மன்ற**
**பழியெவன் ஆங்கொல் நோய்தரு பாலே?**

*தோழி! நீ வாழ்வாயாக! யான் கூறுவதனைக் கேட்பாயாக!*

*"வெண்மையான மணல் உயரமாக விளங்கிக் கொண்டிருக்கும் அழகிய வாயிலையுடைய நம் பெரிய மனையினிடத்தே, இருள்செறிந்த இரவு நேரத்திலே, கூடுதற்கான குறியானது வாய்த்த களவொழுக்கமும் வரம்புகடந்து வளர்ந்ததாயிற்று. நம் அன்னையும் அதனைத் தன் உள்ளத்தே கருதிக்கொண்டவளாக, நம்மை நீங்காது காத்திருப்பாளாயினள். அதன் பின்னரும் இவ்விடத்தே மிகுதியாகத் தங்கியிருப்பது யாங்ஙனம்? அதனால், இவள் இரங்கத்தக்கவள்!" என்று நினைந்து நம்பால் அருள்கொண்டனர்.*

*"வெற்றி நடக்கையினாற் பொலிவுற்ற விருப்பத்தினாலே அள்ளனை நாட்டினைக் கொள்ளும்படியாகப் பணித்த அதியன் என்பானுக்குப் பின்னால், சிறந்த ஒலியினையுடைய பெரிய கிணைப்பறையின் ஒலியும் அடங்கிற்று. அதனைப்போல மலையும் அழகிழந்து போகிய, வெம்மை மிகுந்த காடாகிய பாலை நிலத்து வழிகள், ஒருதலையாக மிகவும் கொடுமை உடையவாயின. நின்னுடைய கூரிய பற்களிடையே உண்ணப்*

படுவதற்கேற்றவாறு குளிர்ச்சியான மழையும்அவ்வழிகளில் ஒரு நாள் பெய்வதாகுக. ஒளிபொருந்திய நுதலினையும் தளரும் இயவினையும் உடையவளான அரிவையே! அப்போது, யாம் நின்னோடும் அவ்வழியாக எம்மூர் செல்வேம். அதுவரச் சிலநாட்கள் அமைந்திருப்பாயாக" என்றனர்.

பலகாலமும் உலைவில்லாத உள்ளத்துடனே. வினையின் வலிமையினை வற்புறுத்தி உரைத்தவராக, அவர் சொன்ன அவையெல்லாம் பெரிதும் மாறுபட்டதாக இப்போது நம்மைப் பிரிந்தும் சென்றனர்.

வடபகுதியிலே நல்ல வேலினைக் கைக்கொண்ட பாணன் என்பானின் நன்மைவிளங்கும் நாட்டினிடத்தே உள்ளதான, ஒளியமைந்த வானத்தின் கண்ணதாகிய ஞாயிற்றினது வெம்மை மிக்கதான நீண்ட சுரத்தினிடையே, வழிச்செல்வோரைக் கொல்லும் தன்மையுடைய யானையானது, வழியினை நோக்கியபடியே ஒதுங்கியிருக்கும் சோலைகளையுடைய காட்டகத்தே, மாலைவேளையிற் செல்பவராக, நாம் இவ் விடத்தே தனித்திருப்ப, அவர் விட்டுச் சென்றனர்.

ஆதலின், நோயினைத் தருகின்ற பகுதியாகவுள்ள பழிதான் ஒருதலையாக எவ்வாறு அவர்பால் ஆகும்?

**சொற்பொருள்:** 2. நிவந்த - உயர்ந்த. கடை வாயில் - நகர் மனை. 3. நளியிரும் - கங்குல் செறிந்த இருளுடைய இரவு; இருளடர்ந்த இரவு. 7. புகற்சி - விருப்பம். 8. பின்றை - பின்னால்; அதியனின் மறைவுக்குப் பின்னரும் ஆம். 9. வள்ளுயிர் மாக்கிணை - சிறந்த ஒலியுடைய பெரியதான கிணைப் பறை. 13. ஒல்கு இயல் - தளர்நடை கொள்ளும் அழகு. 14. ஆன்றல் - அமைந்திருத்தல். 15. வினைவலியுறீஇ - வினையை வலியுறுத்தியும் ஆம். 18. வாட்கண் வானம் - ஒளிகொண்ட இடத்ததான வானம். 19. அதர் - வழி. 20. அத்தம் - காடு.

**விளக்கம்:** "இருள்செறிந்த இரவிலே நம் பெருமனை யிடத்தே வாய்த்த புணர்குறிக் களவு கைம்மிக வளர்ந்ததும், அன்னையின் காவலும் நினைந்து, அதன்பின் இங்குத் தங்குவது ஏனோ என்று நம் நிலைக்கு இரங்கியவர் அவர். அந்நாள், உடன்செலற்கு விரும்பாத நம்மைக் காட்டின் வெம்மையைக் காட்டி, மழை தொடங்கியதும் வந்து அழைத்தேகுவதாகவும் அதுவரை பொறுத்திருக்கவும் கூறினர். அந்தக் காலமும் வந்தது. ஆனால், அவரையோ வரக்காணேன்? ஆட்கொல்யானை அதர்பார்த்து அல்கும் சோலை அத்தம் மாலைப்போகி ஒழியச் சென்றோர் அவர், அங்ஙனமாக, நமக்கு நோய்தரும் பகுதியாகப்

*பழி அவர்பால் எங்ஙனம் ஆகும்?" இங்ஙனம் கூறியதாக உரைத்துக்கொள்க. இதனால், தலைவன்பாற் பழியில்லை என்றுரைத்த அவள் கற்புச்செவ்வி புலனாகும். வழியின் ஏதத்தைக் கூறியது. அவர் சொற்பேணாத பழியால் அங்குத் துன்புற நேர்தல் கூடாது என்றதனாலாம்.*

*மலை கவின் அழிந்த நிலைக்கு, அதியனுக்குப்பின், கிணை யொலி அடங்க, அதனால் உணவற்றுப் பொலிவற்று வாடி நலிந்த இரவலரின் நிலையினைக் கூறியுள்ளது அதியனின் கொடை மேம்பாட்டை விளக்குவதாகும்.*

*இதனால், தோழியும் தலைவனைப் பழிப்பதனை நிறுத்திக் கொள்வாள் எனலாம்.*

## 326. கண் பிழைப்பதில்லை!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *தோழி தலைமகனை வாயில்மறுத்தது.* **சிறப்பு:** *போஒர் கிழவன் பழையனின் படையாண்மை.*

*(பரத்தையுறவு கொண்டிருந்தானாகிப் பின் தன் இல்லத் துணைவியை நாடிவந்த தலைவனுக்கு, 'அவன் ஆணைப்படி சென்று தலைவியிடம் கூறி அவளை இசைவிக்கச் செய்வதற்குத் தன்னால் இயலாது' எனத் தோழி சொல்வதாக அமைந்தது இச் செய்யுள்.)*

**ஊரல் அவ்வாய் உருத்த தித்திப்**
**பேரமர் மழைக்கண் பெருந்தோட் சிறுநுதல்**
**நல்லள் அம்ம குறுமகள் செல்வர்**
**கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்**
**நெடுங்கொடி நுடங்கும் அட்ட வாயில்**

**இருங்கதிர்க் கழனிப் பெருங்கவின் அன்ன**
**நலம்பா ராட்டி நடையெழில் பொலிந்து**
**விழவிற் செலீஇயர் வேண்டும் வென்வேல்**
**இழையணி யானைச் சோழர் மறவன்**
**கழை யளந்து அறியாக் காவிரிப் படப்பைப்**

**புனன்மலி புதவிற் போஒர் கிழவோன்**
**பழையன் ஒக்கிய வேல்போற்**
**பிழையல கண்ணவள் நோக்கியோர் திறத்தே!**

*மேனியிலே ஊர்ந்து படர்தலாகிய அழகு வாய்க்கப் பெற்ற, உருப்பெற்ற தேமலை உடையவள்; பெரிதான அமரினைச் செய்யும் குளிர்ச்சிகொண்ட கண்களை உடையவள்; பெருத்த*

தோள்களை உடையவள்; சிறுத்த நெற்றியினையுடையவள்; இங்ஙனமாகிய நலமெல்லாம் பெற்றவள், இளமைச் செவ்வியினையுடைய நின் பரத்தையாவாள், அதனால்-

வெற்றிச் சிறப்புடைய வேலினையும், அணிபல அணிந்து ஒப்பனை செய்ததாகி விளங்கும் பட்டத்து யானையினையும் உடையவன் சோழமன்னன்; அவனுடைய படைத்தலைவன் பழையன் என்பவன்; அவன், ஓடக்கோலும் அளந்து ஆழங் கண்டறியாத வெள்ளப் பெருக்கையுடைய காவிரிக்கரையின் தோட்டங்களையும், நீர் வழிந்தோடும் மதகுகளையும் உடைய 'போர்' என்னும் ஊருக்குரிய தலைவன்; அவன், களத்திலே தனக்கு எதிர்வருவார்மேல் எறிந்த வேலினைப்போல, அவள் நோக்கியவரிடத்தும், அவள் கண்கள் சென்று தைத்தலில் என்றும் தவறுவதேயில்லை.

செல்வம் உடையாரது விரைந்து செல்லும் தேர்கள் குழித்த தெருக்களிடத்தே, நெடிதாகக் கொடிகள் பரந்து கொண்டிருக் கின்ற அட்டவாயில் என்னும் ஊரிடத்தேயுள்ள, பெரிய கதிர்களையுடைய வயல்களின் பெரிதான அழகினைப்போன்ற அவளுடைய நலத்தினைப் பாராட்டி, நின் நடையிலே அழகு தோன்றும்படியாக, புதுநீர் விழாவில் அவளுடன் செல்லு தலையே நீயும் விரும்புபவன் ஆவாய்! (அதனால், எம் தலைவியின் கூட்டம் நினக்கு இனி வேண்டாதது என்றனளாம்.)

**சொற்பொருள்:** 1. ஊரல் - ஊர்ந்து படர்தல், அவ்வாய் - அழகு வாய்ந்த. உருத்த - உருப்பெற்ற; நிறமுடைய எனினும் ஆம். 3. குறுமகள் - இளையோள்; பருவத்தால் கவர்ச்சி கொண்டவள். 4. ஞெள்ளல் - தெரு. 5. அட்டவாயில் - ஓர் ஊர். 8. விழவில் - நீர்விழவில். 10. படப்பை தோட்டம். 11. புதவு - மதகு.

**விளக்கம்:** பரத்தையிடமிருந்து வருபவன் தலைவன். அவனைக் குறைகூறாமல், அந்தப் பரத்தையின் அழகு நலத்தையும், அவள் கண்ணோக்கத்தின் கொடுமையையும் கூறி, அதனால் தளர்வுற்றுத் தோற்ற நீ, இனியும் அவள் உறவினை மறந்துவிடுவாயல்லை: அவளுடன் புதுநீர்விழவிற் காவிரி யாடலையே விரும்புவாய்; ஆதலின் அவள்பாலே செல்க எனக் கூறுகின்ற திறத்தினை அறிந்து இன்புறுக. மேனி வண்ணத்தின் சிறப்பினைப் பொன்வண்ணம் என்பவர், 'பெரிதான கதிர்களையுடைய கழனியின் பேரழகினைப் போன்றது' என்றனர்.

இதனால், அத்தகைய அழகும், நின்னை எம்பால் அடிமை கொள்ளும் கண்நோக்கின் வலிமையும் இல்லாதவர் யாம்;

*எம்முடன் உறவுகூடுதல் நினக்குப் பொருந்தாது என, இடித்துக் கூறியதுமாம்.*

*'பிழையல கண்' என்றது, பழையனால் வேலினைச் செலுத்தப்பெற்ற மாற்றாரின் உயிர் மீள்தலில்லை என்றாற் போல, நின் உள்ளமும் அவளுக்கு இரையாகிப் போனதன்றி என்பால் மீளுவதாகாது என்றதாம்.*

## 327. அடைதலும் தகுமோ?

**பாடியவர்:** *மருங்கூர்ப்பாகைச் சாத்தன் பூதனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறியது; பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது எனவும் பாடம்.*

*(தான் காதலித்த நல்லாளை மணந்து, அவளுடனே கூடியிருந்து, இன்பத்திலே திளைத்து வருகின்றான் தலைவன் ஒருவன். நெடிது அந்த இன்பம் நிலைபெறுதற்குப் பொருள்தேடி வருதலும் வேண்டும் என்ற கடமையினை அவன் உணருகின்றான். அவன் உள்ளம் பொருளார்வத்தைத் தூண்டிச் செலுத்துகிறது. காதலியைப் பிரிவதான துயரச்சுமை ஒருபால் வருத்த, அவன் வெதும்புகின்றான். வழிநடையின் கொடுமையும் அவன் மனத்தே எழுகின்றது. இத் தன்மைகளை விளக்கும் செய்யுள் இதுவாகும்.)*

**'இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்**
**நன்பகல் அமையமும் இரவும் போல**
**வேறுவேறு இயல ஆகி மாறெதிர்ந்து**
**உளவென உணர்ந்தனை ஆயின் ஒரூஉம்**
**இன்னா வெஞ்சுரம் நன்னசை துரப்பத்**

**துன்னலும் தகுமோ? துணிவில் நெஞ்சே**
**நீசெல வலித்தனை ஆயின், யாவதும்**
**நினைதலும் செய்தியோ எம்மே கனைகதிர்**
**ஆவி அவ்வரி நீரென நசைஇ**
**மாதவப் பரிக்கும் மரல்திரங்கு நனந்தலைக்**

**களர்கால் யாத்த கண்ணகன் பரப்பிற்**
**செவ்வரைக் கொழிநீர் கடுப்ப அரவின்**
**அவ்வரி உரிவை அணவரும் மருங்கிற்**
**புற்றரை யாத்த புலர்சினை மரத்த**
**மைந்நிற உருவின் மணிக்கட் காக்கை**

**பைந்நிணங் கவரும் படுபிணக் கவலைச்**
**சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்**
**கோல்கழிபு இரங்கும் அதர**
**பேய்பயில் அழுவம் இறந்த பின்னே.**

*துணிவு என்பதொன்று இல்லாத நெஞ்சமே!*

*இன்பமும் துன்பமும், புணர்தலும் பிரிதலும், நன்மை யுடைத்தான பகற் காலத்தையும் இரவுக் காலத்தையும் போல வேறுவேறான தன்மையுடையன. அங்ஙனமாகி, அவை இல்வாழ்விற்கு மாறாக எதிர்ப்பட்டு விளங்குவன என்பதனை நீதான் உணர்ந்தனையோ? உணர்ந்தனையாயின், இவளைப் பிரிந்து, இன்னாமையினை உடைய வெம்மைகொண்ட சுரநெறியிற் செல்லுதலிலே நல்ல பொருள்வேட்கை செலுத்த, நீ அவ்வாறே சென்று அடைதலும் நினக்குப் பொருந்துவ தாகுமோ? அங்ஙனம், நீ செல்வதற்கே துணிந்து விட்டனை யாயின்-*

*மிக்க வெம்மையுடைய ஞாயிற்றின் கிரணங்களாலே எழுகின்ற ஆவிபாய அவற்றின் அலைகளை, நீர் என்று கருதி விருப்புற்று, விலங்கினம் மிகுதியும் ஓடியலைந்து கொண் டிருக்கும், மரற்செடியும் வாடிகிடக்கும், அகன்ற இடத்தினை யுடையதும், களர் பரந்துகிடக்கும் இடமகன்ற பரப்பினையும், செங்குத்தான மலைமுகட்டினின்றும் கொழித்துவரும் அருவி நீரினைப்போலப் பாம்பின் அழகிய வரிகளையுடைய தோல்கள் கிடந்து அசைந்து கொண்டிருக்கும் பாறைகளை உடையதும், அடிமரத்தே புற்றுக்கள் கட்டியிருக்கப் பெற்றிருத்தலைக் கொண்டதும் காய்ந்த கிளைகளை உடையதுமான மரத்தினிடத்தே, இருட்டின் நிறத்தைப் போன்ற உருவத்தினையும் நீலமணி போன்ற கண்களையும் உடைய காக்கையானது, பசிய நிணத்தினைக் கவர்ந்து உண்ணுகின்ற, பிணங்கள் மிகுதியாக வீழ்ந்துகிடக்கும் கவர்த்த நெறிகளை உடையதும், அவ்வழிச் சென்றோரின் பின்புறத்திலிருந்து இரக்க மிலராய் அவரைக் கொன்ற ஆறலை கள்வர்கள் தம் அம்புகள் வீணே கழிந்ததற்கு வருந்திக்கொண்டிருக்கும் நெறிகளை உடையதும், மூங்கில் அடர்ந்திருப்பதுமான காட்டினைக் கடந்தபின், எங்களைப்பற்றி எவ்வகையானும் நினைதலையும் செய்வாயோ?*

**சொற்பொருள்:** *4. ஒரூஉம் - பிரியும் 5. நன்னசை - நன்மை விளைப்பதாகிய பொருள் வேட்கை. 6. துன்னல் - சென்று சேர்தல். 7. வலித்தல் - துணிதல். 8. கனைகதிர் ஆவி அவ்வரி - கோடையிலே தோன்றும் கானல்; பேய்த்தேர் எனவும்*

கூறப்படும். 10. மா - விலங்கு. தவப்பரிக்கும் - மிக்கு அலைந்து வருந்தும். மரல் - மரற்செடி; ஒரு வகைக் கள்ளி என்பர். 12. செவ்வரை - செங்குத்தான பாறை. 13. உரிவை - உரித்துப் போட்ட தோல். 14. புற்று அரை யாத்த - அரை புற்று யாத்த அடிமரத்தே புற்றுக்கள் கட்டியிருத்தலை உடைய. 15. மைநிறம் - இருள்நிறம்; கருநிறம். 16. படுபிணம் - மிகவான பிணம். கவலை - கவர்த்த வழிகள். 18. கோல் - அம்பு.

**விளக்கம்:** 'இன்பம் புணர்வு; அது நண்பகல் போன்றது; இடும்பை பிரிவு; அது இரவு போன்றது என்க, இவை ஒன்றற்கொன்று எதிராக அமைந்து விளங்குவன. இவற்றுள் இன்பத்தே இருக்கும் நீ துன்பத்தை நாடிச் சென்று பொருளார் வத்தால் அடைதலையும் நினைவாயோ என்பவன், 'துன்னலும் தகுமோ' என்றனன். சென்றபின் 'நினைதலும் செய்தியோ? என்றது, தான் செல்ல விரும்பாததனை உணர்த்தியதாம். ஆறலைப்போர் அம்பெய்து வழிச் செல்வாரைக் கொன்று பறித்துவிட்டு, அவருக்காக இரக்க மின்றிக் கழிந்த அம்புக்காக இரங்குவர் என்று, அவர்தம் ஆறலைக்குங் கொடுந்தன்மையினை நன்கு கூறியவாறு காண்க.

## 328. அடக்கி இருப்போமோ!

**பாடியவர்:** மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்: ஈழன்தேவனார் எனவும் பாடம். **திணை:** குறிஞ்சி, **துறை:** இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.

(ஒரு தலைவனும் தலைவியும் தம்முட் கண்டு காதலித்துக் களவிலே உறவாடி வருகின்றனர். அவர்கள் இரவுக்குறியிடத்தே கூடிவந்த காலத்தே, ஒரு நாளிரவு தலைவியும் தோழியும் தலைவனுக்காக வந்து குறித்த இடத்தே காத்திருக்கின்றனர். குறித்த நேரம் கழிந்தும் அவனை வரக்காணாத தோழி, அதனைப்பற்றிக் கேட்க, அப்போது, அவளுக்குத் தலைவி தன் உள்ளத்து நிலையினைச் சொல்லுந் தன்மையிலே அமைந்தது இச்செய்யுள்)

**வழையமல் அடுக்கத்து வலனேர்பு வயிரியர்**
**முழவதிர்ந் தன்ன முழக்கத்து ஏறோடு**
**உரவுப்பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து**
**அரவின் பைந்தலை இடறிப் பானாள்**
**இரவின் வந்தெம் இடைமுலை முயங்கித்**

**துனிகண் அகல வளைஇக் கங்குலின்**
**இனிதின் இயைந்த நண்பவர் முனிதல்**

**தெற்றுஆ குதல்நற்கு அறிந்தனம் ஆயின்**
**இலங்குவளை நெகிழப் பரந்துபடர் அலைப்பயாம்**
**முயங்குதொறும் முயங்குதொறும் உயங்க முகந்துகொண்டு**

**அடக்குவம் மன்னோ - தோழி மடப்பிடி**
**மழைதவழ் சிலம்பிற் கடுஞ்சூல் ஈன்று**
**கழைதின் யாக்கை விழைகளிறு தைவர**
**வாழையஞ் சிலம்பிற் றுஞ்சும்**
**சாரல் நாடன் சாயல் மார்பே!**

*தோழீ!*

*சுரபுன்னை மரங்கள் அடர்ந்திருக்கும் மலைச்சாரலிலே, மேகங்கள் வலமாக எழுந்து கூத்தரின் முழவுகள் அதிர்ந்தாற் போலும் முழக்கத்தையுடைய இடியேறுகளுடன் பொறுந்திய வாய் மிக்க மழையினைப் பொழிந்த, நள்ளென்னும் ஒலியினைக் கொண்ட இரவின் நடுயாமத்தே-*

*பாம்பினது பசிய தலையிலே இடறிக்கொண்டும், அப்பாதி இரவிலே தவறாமல் வந்து எம் முலைகளிடையே தழுவிக் கிடந்தும், தம் வருத்தமெல்லாம் நீங்குமாறு நம்மை அணைத்தவராய், இரவெல்லாம் இனிதாகப் பொருந்தியிருந்த தம் உறவினை, விளங்கும் நம் வளைகள் நெகிழ்ந்து போகவும், துன்பம் பரவி நம்மை வருத்தவுமாக, அவர் வெறுத்தல் தெளிவுடையதாதலை நாம் நன்கு அறிந்திருந்தோமானால்-*

*இளைய பிடியானையானது, மேகங்கள் தவழுகின்ற மலையிடத்தே, தன் முதற்கன்றினை ஈன்றதாகி, மூங்கிலைத் தின்று கொண்டிருக்கும் உடலினைக் கொண்டதும், தன்னிடத்தே விருப்பத்தை உடையதுமான களிறானது தடவிக் கொண்டிருக்க, வாழைகளையுடைய அப் பக்கமலையினிடத்தே கிடந்து உறங்கிக்கொண்டிருக்கும், அத்தகைய சாரல்களை யுடைய நாட்டிற்குரிய நம் தலைவனின் அழகிதான மார்பினை-*

*அன்று, அவர் நம்மைத் தழுவுந்தோறும் தழுவுந்தோறும், வருந்த முகந்து கொண்டவராய், அவரை எம் மார்பிடத்தேயே அடக்கிக்கொண்டிருப்போமே? அதுவும் இதுகாலை இயலாமற் கழிந்ததே!*

**சொற்பொருள்:** *1. வாழை - சுரபுன்னை, அமல் - நிறைதலை யுடைய வயிரியர் - கூத்தர் 2. ஏறு - இடியேறு. 3. உரவுப்பெயல் - மிக்க பெயல்; அடைமழை, பைந்தலை - பசிய தலை; படத்தை யுடைய தலையும் ஆம். 5. இடைமுலை முயங்கி - முலையிடை முயங்கி எனக் கூட்டிப் பொருள் கொள்க. 6. துனி - வருத்தம்.*

*7. நண்பு - உறவு; முனிதல் - வெறுத்தல் 8. தெற்று - தெளிவு. 9. படர் - துன்பம். 10. உயங்க - வருந்த. 12. மழை - மேகம் கடுஞ்சூல் - முதற்சூல். 13. கழை - மூங்கில். 15. சாயல் மார்பு; அழகிய மார்பு; மென்மையுடைய மார்பும் ஆம்.*

**விளக்கம்:** *அவரது துனிகண் அகல அளைஇ, எம் முலையிடை முயங்கிக்கூடிய அவர், இந்நாள் வளைநெகிழப் படர் அலைப்ப யாம் வாடுதலை நீக்க வாராராயினரே' என்றுரைக்கும் ஆற்றாமையினை அறிக. 'முகந்துகொண்டு அடக்குவோம்' என்றதனால், பிரியாத இன்பச் செவ்வியான மணந்து மனையறம் கொள்ளுதலை விரும்பிய அவள் உள்ளக் கிடக்கை யினையும் உணர்க.*

**உள்ளுறை:** *'மடப்பிடி மழைதவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று, கழைதின் யாக்கை விழைகளி தைவர, வாழையம் சிலம்பில் துஞ்சும்' என்று சொல்லியதனை நினைக்க. அவ்வாறே, தானும் அவனை மணந்து கூடியிருத்தலையும், தங்கட்கு ஒரு மகனைப் பெறுதலையும், அப்போது தலைவன் தன் அருகிருந்து அன்பு பாராட்டுதலையும், அவள் உள்ளம் எதிர் நோக்கியதனை அது உணர்த்துவதனையும் அறிந்து இன்புறுக.*

**மேற்கோள்:** *'முகந்து கொண்டு அடக்குவம்' என, 'இடைவிடாது இன்பம் நுகர விரும்பியவாறும், உள்ளுறையான் இல்லறம் நிகழ்த்த விரும்பியவாறும் காண்க' என, 'ஒருதலை உரிமை வேண்டியும்' என்னுஞ் சூத்திர உரையில், நச்சினார்க் கினியர் காட்டிக் கூறுவர்.*

## 329. வாழ்தல் வல்லரோ?

**பாடியவர்:** *உறையூர் முதுகூத்தனார்; முதுகூற்றனார் எனவும் பாடம்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது: பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉம் ஆம்.*

*(தன்னைப் பிரிந்துசென்ற தலைவனின் செயலை நினைந்து, அந்தப் பிரிவுத் துயரினாலே வாடியிருக்கும் தலைவியானவள், தன் தோழியிடத்தே, இவ்வாறு தன் ஆற்றாமையினை உரைக் கின்றாள். அல்லது-*

*தலைவன் பிரிந்து செல்ல எண்ணிய செய்தியைத் தோழி தலைவியிடத்தே சொல்ல, அப் பிரிவைப் பொறுக்கவியலாத தன் நிலைமை தோன்றத், தலைவி தோழியிடத்திற் கூறியதும்ஆம்.)*

**பூங்கணும்நுதலும் பசப்ப நோய்கூர்ந்து**
**ஈங்கியான் வருந்தவும் நீங்குதல் துணிந்து**
**வாழ்தல் வல்லுநர் ஆயின் காதலர்**
**குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர்ப்**
**படுமணி இயம்பப் பகலியைந்து உமணர்**

**கொடுநுகம் பிணித்த செங்கயிற்று ஒழுகைப்**
**பகடுஅயாக் கொள்ளும் வெம்முனைத் துகள்தொகுத்து**
**எறிவளி சுழற்றும் அத்தம் சிறிதசைந்து**
**ஏகுவர் கொல்லோ தாமே.... பாய்கொள்பு**
**உறுவெரிந் ஒடிக்கும் சிறுவரிக் குருளை**

**நெடுநல் யானை நீர்நசைக் கிட்ட**
**கைகறித்து உரறும் மைதூங்கு இறும்பில்**
**புலிபுக்கு ஈனும் வறுஞ்சுனைப்**
**பனிபடு சிமையப் பன்மலை இறந்தே.**

*தோழீ!*

*அழகிய என் கண்களும் நெற்றியும் பசலையுறுமாறு துன்பத்தை அடைந்து, யான் இவ்விடத்தே தனித்திருந்து வருந்தவும், என்னைப் பிரிந்து செல்லுதலைத் துணிந்து, அவர் வாழ்ந்திருத்தற்கு வல்லவர் ஆயினார் என்றால்-*

*தலைகுவிந்த குடிசைகளாகிய அழகிய குடியிருப்பினை உடைய சிற்றூரினிடத்தே, பொருந்திய, மணிகள் ஒலி செய்யப் பகற்காலத்தே செல்லுதலைப் பொருந்தி, உப்பு வாணிகர் வளைந்த நுகத்தடிகளிலே செவ்வையான கயிற்றினாலே பூட்டிய பகடுகள், வண்டிகளை வருத்தத்துடனே இழுத்துச் செல்லும், வெப்பமான இடங்களிலே எழுகின்ற புழுதியைத் தொகுத்து வீசுகின்ற காற்றானது, சுழித்தடிக்கும் காட்டு நெறியிலே சிறிது தங்கியிருந்து-*

*பாய்தலை மேற்கொண்டதாகப் பொருந்திய முதுகினை நெளிக்கும் சிறிய புலிக்குட்டியானது, நீண்டு உயர்ந்த நல்ல யானையானது நீர் வேட்கையினாலே சுனையிடத்தே இட்ட துதிக்கையினைக் கடித்து முழக்கமிடும் இருள்செறிந்த காட்டிடத்தே, புலி புகுந்து குட்டியை ஈனுமாறு வறண்டுகிடந்த சுனையினையுடைய, பனிபடியும் உச்சியையுடைய பல மலைகளையும் கடந்து, தாம் செல்பவரும் ஆவாரோ? (ஆகமாட்டார் என்பது குறிப்பு.)*

**சொற்பொருள்:** *1. பூங்கண் - அழகிய கண். பூப்போலும் கண்ணும் ஆம்; அப்போது, குவளைமலர் போன்றது என்க. நோய்*

துன்பம் - பிரிவான் வந்தடைவது. 4. குரம்பை - குடிசை. 5. படுமணி - பொருந்திய மணி; பொருந்துதல், பகடுகளின் கழுத்திடத்தே. 6. ஒழுகை - வரிசையாகச் செல்லும் வண்டிகள் 10. வெரிந் - முதுகு. வரி - வரிகளையுடைய புலியைக் குறித்தது. 12. உரறும் - முழக்கமிடும்; மைதூங்கும் இருள் - கவிந்திருக்கும். இறும்பு - காடு

**விளக்கம்:** பூங்கணும் நுதலும் பசப்ப நோய் கூர்ந்து தான் வருந்தும் நிலைக்கு ஒப்பவே, சிறுவரிக் குருளை யானை நீர்நசைக்கு இட்ட கை கறித்து உரலும் மைதூங்கு இறும்பில் சுனை, புலி புக்கு ஈனும் வறுஞ்சுனையாயின தன்மையினையும் கூறினாள்.

புலி புக்கு ஈனும் வறுஞ்சுனையும், ஒழுகைப்பகடு அயாக் கொள்ளும் வெம்முனைத் துகள் தொகுத்து எறிவளி சுழற்றும் என்பதும் கூறினார். காடு கடத்தற்கு அரிதான கொடுமை யினையுடையது என்பதனைக் காட்டுதற்கு.

புலியின் கொடுந்தன்மையை. அதன் சிறு குட்டிகூட நெடுதல் யானை நீர் நசைக்கு இட்ட கையினைக் கடித்து முழங்கு மென்பதனால் தெளியவைத்தனர்.

இதனால், 'எனக்குத் துன்பமாயது, அவர்க்கும் துயர மானது, இத்தகைய பிரிவினை அவரேன் மேற்கொண்டனர்?' என வருந்தினள் என்க.

## 330. நிறையில் நெஞ்சம்!

**பாடியவர்:** உலோச்சனார். **திணை:** நெய்தல். **துறை:** தலை மகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

(நெய்தல் நிலப்பகுதியிலே ஒரு தலைவனும் தலைவியும் நாள்தவறாமல் சந்தித்து வருகின்றனர். அப்போது, யாது காரணத்தாலோ தலைவிக்கு அவனுக்கு இசைவதற்கு விருப்பம் இல்லை. தலைவன் தவறாது வரினும், தன்காதலியின் அணைப் பினைப் பெறத் துடிப்பினும் பயன் யாதுமின்று. அந்நிலையில் அவன் தலைவியின் தோழியும், தங்கள் உறவுக்குத் துணை நின்றவளுமான நங்கையின் உதவியினை நாடுகின்றான். அவனுக்காக இரக்கப்பட்ட அவளும், தலைவிபாற் சென்று அவனுடைய கவலையினைத் தீர்க்கும் எண்ணத்துடனே இங்ஙனம் கூறுகின்றாள். இதனால், தலைவியின் உள்ளத்தே நிலவும் காதலை எழுப்பி,அவளை, அவனுடைய குறையைத் தீர்க்கத் தூண்டினாளும் ஆம்.)

**கழிப்பூக் குற்றுங் கானல் அல்கியும்**
**வண்டற் பாவை வரிமணல் அயர்ந்தும்**
**இன்புறப் புணர்ந்தும் இளிவரப் பணிந்தும்**
**தன்றுயர் வெளிப்படத் தவறில் நம்துயர்**
**அறியா மையின் அயர்ந்த நெஞ்சமொடு**

**செல்லும் அன்னோ மெல்லம் புலம்பன்!**
**செல்வோன் பெயர்புறத்து இரங்கி முன்னின்று**
**தகைஇய சென்றவென் நிறைவில் நெஞ்சம்**
**எய்தின்று கொல்லோ தானே? எய்தியும்**
**காமஞ் செப்ப நாணின்று கொல்லோ**

**உதுவ காணவர் ஊர்ந்த தேரே**
**குப்பை வெண்மணற் குவவுமிசை யானும்**
**எக்கர்த் தாழை மடல்வயி னானும்**
**ஆய்தொடிப் பாசடும்பு அரிய ஊர்பிழிபு**
**சிறுகுடிப் பரதவர் பெருங்கடன் மடுத்த**

**கடுஞ்செலற் கொடுந்திமில் போல**
**நிவந்துபடு தோற்றமொடு இகந்துமா யும்மே!**

*தோழீ! மென்னிலமாகிய நெய்தலை உடையவன் நம் தலைவன். அவன்-*

*கழியிலுள்ள பூக்களைப் பறித்துத் தந்தும், கானற் சோலையிலே சேர்ந்திருந்தும், வரிப்பட்ட மணலிடத்தே வண்டற் பாவை சமைத்து விளையாடியும், நாம் இன்புறப் பலகாலும் நம்முடன் கூடியிருந்தும், சிறுமை தோன்ற நம்மைப்பணிந்து நின்றும், குற்றமற்ற நம் துயரினை அறியாமையினாலே, தான் தளர்வுற்ற நெஞ்சமுடையவனாகித், தன் துயரம் வெளிப்பட்டுத் தோன்றுமாறு காட்டி, மீண்டும் செல்லுகின்றான். அந்தோ!*

*அங்ஙனம் செல்பவன் செல்லும் திசையிலேயே, அவன் பால் இரக்கம் உடையதாகி, அவனுக்கு முற்படச்சென்று நின்று? அவனைப் போகாது தடைசெய்யச் சென்ற என் நிறையற்ற நெஞ்சமானது, அவனிடத்தே சென்றடைய வில்லையோ? அன்றி, அடைந்தும் நம் காமத்தினை அவன் பால் எடுத்துச் சொல்லுதற்கு நாணி நின்றுவிட்டதோ?*

*அவன் ஏறிச் சென்ற தேரும் அங்கே தோன்றுதலைக் காண்பாயாக, திரண்ட வெண்மணற் குவியல்களில் மேலும், மணல் மேட்டிடைத் தோன்றும் தாழை மடல்களிடத்தும், படர்ந்துள்ள அழகிய கொடிகளையுடைய பசுமையான அடுப்பங் கொடிகள் அரிபடுமாறு ஏறியும் இறங்கியும் அது*

செல்லுகின்றது. சிறுகுடி வாழ்வினரான பரதவர் மாக்கள், பெரிதான கடலிலே செலுத்திய கடிதாகச் செல்லுதலையுடைய வளைவான மீன்பிடி படகினைப்போல, உயர்ந்து மறையும் தோற்றத்துடனே, அது தொலைவிற் சென்று மறைவதனையும் காண்பாயாக.

**சொற்பொருள்:** 1. கழி - உப்பங்கழி. குற்றுதல் - பறித்தல். கானல் - கடற்கரைச் சோலை. அல்குதல் - தங்கியிருத்தல். 3. இளிவர - எளிமை தோன்ற. 7. பெயர் புறத்து - செல்லும் திசைக்கண் 13. எக்கர் - மணல்மேடு. 16. திமில் - மீன்பிடி படகு. 17. நிவந்து படுதல் - உயர்ந்தும் தாழ்ந்தும் தோன்றுதல்.

**விளக்கம்:** அவனைப்போலவே தலைவியும் அவன்பாற் காதல் கொண்டிருத்தலை. அவன் அறியாதானாகிப் போன தன்மையினைத் தலைவிக்கு இப்படித் தோழி எடுத்து உரைக்கின்றாள். தான் அதனை அறிந்த நிலையினையும் புலப்படுத்து கின்றான். அவன் கொண்ட துயரம் அவனுடைய அறியாமையின் காரணத்தாலே வந்து அமைந்ததே என்று கூறும் நயத்தினை அறிந்து இன்புறுக. தேர் படிப்படியே சென்று மறைதலையும், அது மணற்குவியல்கள் மீதும் அடும்பங் கொடிகள் மீதும் தாழை மடல்கள்மீதும் ஏறியும் இறங்கியும் செல்வதனையும், கடலிடையே அலைகளிடத்தே செல்லும் படகு உயர்ந்தும் தாழ்ந்தும் சென்று கண்ணுக்குச் சிறிது சிறிதாகி மறைதலையும் சிறப்புடன் உவமித்துக் கூறினள். தலைவியின் மனம் அவன் பின்னே செல்வதனையும், ஆயின் நாணத்தால் அவள் தன்விருப்பத்தைத் தோன்றக் கூறாத நிலையினையும், 'நெஞ்சம் எய்தின்று கொல்லோ தானே, எய்தியும் காமஞ் செப்ப நாணின்று கொல்லோ என உரைக்கும் நயத்தினை அறிந்து இன்புறுக. இங்ஙனமாகத் தலைவனுக்கு இசையுமாறு தலைவியைத் தோழி வயப்படுத்துவாளாகக் கூறினாளும் ஆகும்.

**மேற்கோள்:** அறியாமையின் அயர்ந்த நெஞ்சமொடு' என்பது, தன்வயின் உரிமை; 'இகந்து மாயும் என்பது, அவன்வயிற் பரத்தைமை என, இச் செய்யுட்பகுதிகளை, 'மறைந்தவற் காண்டல் என்னும்தொல்காப்பியக் களவியற் சூத்திர உரையிற் காட்டிக் கூறுவர் நச்சினார்க்கினியர். இவர் கருத்தின்படி இச்செய்யுள் தலைவி கூற்றாக அமையும்.

## 331. சென்றவர் அன்பிலாதவர்!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை **துறை:** தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** திதியன் என்பானின் வாளாற்றல்.

*('என்றும் பிரியேன்' என்று, தன்பாற்கூறித் தன்னைத் தெளிவித்துக் கூடிய காதலன் பிரிந்துபோயின காலத்திலே, அவனுடைய பிரிவினால் வந்துற்ற துயரத்தினைப் பொறுக்க மாட்டாது போயின தலைவி, 'தலைவன் தன்மீது அன்பற்றவ னாயினான்' எனக் கூறி வருந்துகின்றதாக அமைந்தது இச் செய்யுள்.)*

**நீடுநிலை அரைய செங்குழை இருப்பைக்**
**கோடுகடைந் தன்ன கொள்ளை வான்பூ**
**ஆபரந் தன்ன ஈனல் எண்கின்**
**சேடுசினை உரீஇ உண்ட மிச்சில்**
**பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்**

**கண்திரள் நீள்அமைக் கடிப்பிற் றொகுத்து**
**குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும்**
**சீறூர் நாடு பலபிறக் கொழியச்**
**சென்றோர் அன்பிலர் - தோழி! என்றும்**
**அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்**

**பாணர் ஆர்ப்பப் பல்கலம் உதவி**
**நாளவை இருந்த நனைமகிழ் திதியன்**
**வேளிரோடு பொரீஇ கழித்த**
**வாள்வாய் அன்ன வறுஞ்சுரம் இறந்தே!**

*தோழி!*

*நீண்டநிலையாகிய அடிமரத்தினையும் சிவந்ததளிர் களையும் கொண்டன இருப்பை மரங்கள். அவற்றிலே யானைத் தந்தங்களிற் கடைந்து அமைத்தாற்போன்ற வெள்ளிய பூக்கள் விளங்கும். ஆடுகள் பரவியிருந்தாற்போலப் பரவி நின்ற குட்டிகளை யீன்ற பெண்கரடிகளின் கூட்டமானது, கிளைகளினின்றும் உதிர்த்து அப்பூக்களை உண்ணும். அவை உண்டதுபோக எஞ்சிக் கிடப்பவற்றைப் பசுமையான தழையுடையினை அணிந்தவரான எயினரின் மகளிர், கணுக்கள் திரட்சியுற்று நீண்ட மூங்கிற்குழல்களிலே தொகுப்பார்கள். தொகுத்தவற்றைக் குன்றிடத்தவாய சிற்றூர்த் தெருக்கள் தோறும் சுற்றி விற்றுத்திரிவார். அத்தகைய அழகிய குடியிருப்பினை யுடையவான சிற்றூர்களைக் கொண்டிருக்கும் மலைநாடு பலவும் பிற்பட்டுக் கழிய, அவர் சென்றனர்.*

*அரிதான இசைத் துறைகளிலே முதிர்ச்சியும், கரிய தண்டினைக்கொண்ட சிறிய யாழினையுமுடையவர் பாணர். அவர்கள் என்றும் ஆரவாரித்துக் கொண்டிருக்குமாறு அவர் கட்குப் பல அணிகலன்களையும் அளித்தவனாக, நாளோலக்*

கத்தே வீற்றிருப்பவன், கள்ளின் மகிழ்வினை உடையவனா யிருக்கும் திதியன், அவன் வேளிரோடு போரிடுதலின் பொருட் டாகத் தன் உறையினின்றும் கழித்த வாளின் வாயினைப்போன்ற கொடுமையுடையதான வறண்ட சுரநெறியினைக் கடந்து சென்றனர் அவர்.

அங்ஙனம் சென்ற அவர், நம்பால் அன்பற்றவரேயாவர். (ஆதலின்) இனி யாது செய்வோமோ?

**சொற்பொருள்:** 1. அரைய - அடிமரத்தை உடைய. 2. கோடு - கொம்பு இங்கே யானைத் தந்தத்தைக் குறித்தது. கொள்ளை - மிகுதியான. வான்பூ - வெண்மையான பூக்கள். 4. சேடு - கூட்டம். 5. பழையர் - குன்றவர். 6. அமை - மூங்கில். கடிப்பு - குழாய். 7. மறுகும் - சுற்றித் திரியும், 12. நனை - கள் 13. பொரீஇய - போரிடற் பொருட்டாக, 14. வறுஞ்சுரம் - வறண்டசுரம் அருஞ்சுரம் எனவும் பாடம்.

**விளக்கம்:** "ஈன்ற கரடிக்கூட்டங்கள் தின்று மிஞ்சிய இருப்பைப் பூக்களைக் குன்றவர் மகளிர் தெருவிற் சுழன்று திரிந்து விலைகூறும் நாடு பல பிறக்கொழிய' என்றது, அது கண்டும் தன்பால் அன்புஎழப் பெற்றானில்லையே என வருந்தியதாம். 'நாளவை இருந்த திதியன் கழித்த வாள்வாய்' என்றது. அவ்வாறே அன்பு காட்டிய தலைவன் இன்று கொடிய தன்மையினைக் கொண்டனன் என்றதாம்.

## 332. தலைநாள் போலும்!

**பாடியவர்:** கபிலர் **திணை:** குறிஞ்சி, **துறை:** இரவுக்குறிக் கண் சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

(இரவுக் குறியிடத்தே தலைவனுடன் தலைவி சந்தித்துக் களவாகக்கூடி மகிழ்ந்துவருகின்ற காலத்தே ஒருநாள் அவன் வந்து ஒருபக்கமாக ஒதுங்கியிருக்கவும், அவள் தன் தோழியிடத்தே தான் அவனிடத்துக் கொண்ட காதலை உரைப்பாள் போலச் சொல்லுகின்றாள். இதனைக் கேட்கும் அவன். 'விரைவிலேயே தலைவியை மணந்து அவளுடன் பிரிவற்ற இன்பவாழ்விலே திளைப்பதனை நாடுவான்' என்பது அவளுடைய நோக்கமாகும். இது துறைப்பட அமைந்தது இச் செய்யுள்.)

**முளைவளர் முதல மூங்கில் முருக்கிக்**
**கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை**
**நீர்நசை மருங்கின் நிறம்பார்த்து ஒடுங்கிய**

**பொருமுரண் உழுவை தொலைச்சிக் கூர்நுனைக்**
**குருதிச் செங்கோட்டு அழிதுளி கழாஅக்**

**கன்முகை அடுக்கத்து மென்மெல இயலிச்**
**செறுபகை வாட்டிய செம்மலொடு அறுகால்**
**யாழிசைப் பறவைஇமிரப் பிடிபுணர்ந்து**
**வாழையம் சிலம்பில் துஞ்சும் நாடன்**
**நின்புரைத் தக்க சாயலன் எனநீ**

**அன்புரைத் தடங்கக் கூறிய இன்சொல்**
**வாய்த்தன - வாழி, தோழி!-வேட்டோர்க்கு**
**அமிழ்தத்து அன்ன கமழ்தார் மார்பின்**
**வண்டிடைப் படாஅ முயக்கமும்**
**தண்டாக் காதலும் தலைநாள் போன்மே!**

*நிறம் விளங்கிய களிறானது, தன் இனத்துடன் கூடியதாக, முளைகள் வளர்ந்திருக்கும் தூறுகளிலேயுள்ள மூங்கில்களை ஒடித்துத் தின்றபின், நீர் வேட்கையுடையதாய்த் துறையிடத்தே செல்லும் அவ்விடத்தே, தன் உருவினைப் பார்த்துத் தன்னைத் தாக்குவதன் பொருட்டாகப் பதுங்கிய, போரிடும் மாறு பாட்டைக்கொண்ட புலியினைப் பொருது, அது கொல்லும். கொன்றபின், கூர்மையான முனையிலே குருதித்தோய்ந்து செந்நிறமாயுள்ள தன் கொம்பினை, மிக்க மழையிலே கழுவிக் கொண்டதாகக், கல்முனைகளையுடைய மலைச்சாரலிடத்தே மெல்லமெல்லச் செல்லும், கொற்றங்கொண்ட தன் பகையினைக் கொன்றழித்த ஆண்மையுடனே மதங்கொண்டதாகி, அம் மதநீரிடத்தே யாழொலிபோல இசைக்கும் அறுகாற் பறவையான வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கச் சென்று, அது, தன் பிடியுடனே கூடி இன்புறும். அங்ஙனம் இன்புற்றதாக, அது வாழை மரங்களையுடைய மலையிடத்தே உறங்கியிருக்கும். அத்தகைய நாட்டிற்கு உரியவன் நம் தலைவனாவான்.*

*'அவன்' நின்னுடைய உயர்விற்குத் தகுதியான தன்மையன்' என, நீ அன்பினாலே உரைத்து; உன் உள்ளம் அமைதி கொள்ளும்படியாகக் கூறிய இனிதான சொற்கள் எல்லாம், இந்நாள் வாய்மையே ஆயின, விரும்பியவருக்கு அமுதத்தைப் போன்றதாக விளங்கும் இனிய மணங்கமழுகின்ற தாரினை யுடைய அவன் மார்பிடத்தே, வண்டும் இடையிலே பொருந்தாத செறிவுற்ற முயக்கமும், அவன்பேரிற் கொண்ட நீங்காத காதலும், முதலில் அவனோடு கூடிய அத் தலைநாளினைப் போன்றே என்றும் சிறவா நின்றன. தோழி! நீ வாழ்வாயாக!*

**சொற்பொருள்:** *1. முளை - மூங்கில் முளைகள். முருக்கி - ஒடித்து. 2. கேழ் - நிறம். கிளர் - ஒளிரும். 3. நிறம் - உருவத்தோற்றம்; மார்பும் ஆம். ஒடுங்கிய - பதுங்கிய. 4. உழுவை - புலி. 5. அழிதுளி - மிக்க பெயல். 6. கன்முகை - முனை கொண்ட கற்கள். 7. வாட்டிய - தொலைத்த. செம்மல் - செருக்கு. அறுகால் பறவை - வண்டு. 30. புரை - உயர்வு; சாயல் - மென்மைத் தன்மை. 11. அடங்க - உள்ளம் நிறைவற்று அமைதிகொள்ள. 15. தண்டாக் காதல் - நீங்காத காதல்.*

**விளக்கம்:** *களிறு, அறுகால் யாழிசைப் பறவை இமிரச் செம்மலுடன் சென்றது' என்றது, அது மதநீர் சொரியச் செருக்குடன் சென்றதனைக் குறித்தாம். 'அன்புரைத் தடங்கக் கூறிய இன்சொல்' என்றது, 'தலைநாள் தோழிபாற் குறையிரந்து, அவளால் இசைவிக்கப் பெற்றுத் தலைவியின் கூட்டத்தைப் பெற்றவன் தலைவன்' என்பதாம். அத்தகையன கூறித் தனக்கு உதவிய தோழிக்குத் தலைவி நன்றி பாராட்டுவாளாகக் கூறுகின்றனள் என்க. 'அமிழ்தத்தன்ன கமழ்தார் மார்பின்' என்றதற்கு ஏற்ப, அத் தாரின்கண் வண்டு மொய்த்தலும் உள என்று குறிப்பவர், தழுவுங்கால் 'வண்டிடைப் படாஅ முயக்கம்' வாய்ந்தது என்றனர். அத்தகைய இறுக்கமான முயக்கமும் ஆம். 'தண்டாக் காதல்' என்றனர், துய்க்கத் துய்க்கப் பின்னரும் புதிதுபுதிது துய்த்தற்கே அவாவும் விருப்பத்தினைக் குறித்தனர். இதனால், அவளை விரைந்து மணந்து கொள்ளுதலில் அவனுடைய நாட்டம் செல்லுமென்பதனையும் உணரவைத்தனர்.*

**உள்ளுறை பொருள்:** *'களிறு உழுவை தொலைத்துக் குருதிச் செங்கோடு அழிதுளி கழாஅச் சென்று, பகைவாட்டிய செம்மலொடு, யாழிசைப் பறவை இமிரச் சென்று, பிடி புணர்ந்து, வாழையஞ் சிலம்பில் துஞ்சும்' என்றனர் இது, தலைவன் அலர் கூறுவாரின் வாயினை அடக்கிக் களவினாலே வந்துற்ற மாசினைப் போக்கித் தலைவியை மணந்து சுற்றமும் நட்பும் கொண்டாட வளமிக்க இல்வாழ்விலே தலைவியுடன் கூடியிருந்து இன்புறுவன் என்றதாம்.*

*யாழிசைப் பறவை இமிரப் பிடிபுணரும்* **களிற்றினையும்,** *கமழ்தார் மார்பின் வண்டிடைப் படாஅ* **முயக்கம்***பெறும் தலைவனையும் ஒப்பிட்டுக் கண்டு இன்புறுக.*

## 333. நின்வாய் இன்மொழி!

**பாடியவர்:** *கல்லாடனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

*(தலைவனைப் பிரிந்திருக்கிறாள் தலைவி ஒருத்தி. குறித்த காலம் வந்தும், அவனை வரக்காணாத அவளுடைய வாட்டம் மிகுதியாகிறது. அவளுடைய துயரினைத் தீர்ப்பாளாக, அவளுடைய தோழி, அவன் விரைவில் வருவான்' எனக் கூறி அவளைத் தெளிவிக்க முயலுகின்றனள். அப்போது; தலைவி கூறுவதாக அமைந்த செய்யுள் இது.)*

**யாஅ ஒண்தளிர் அரக்குவிதிர்த் தன்னநின்**
**ஆக மேனி அம்பசப்பு ஊர**
**அழிவுபெரிது உடையை யாகி அவர்வயின்**
**பழிதலைத் தருதல் வேண்டுதி மொழிகொண்டு**
**தாங்கல் ஒல்லுமோ மற்றே ஆங்குநின்**

**எவ்வம் பெருமை உரைப்பின் செய்பொருள்**
**வயங்காது ஆயினும் பயம்கெடத் தூக்கி**
**நீடலர் - வாழி, தோழி! கோடையிற்**
**குருத்திறுபு உக்க வருத்தம் சொலாது**
**தூம்புடைத் துய்த்தலைக் கூம்புபு திரங்கிய**

**வேனில் வெளிற்றுப்பனை போலக் கையெடுத்து**
**யானைப் பெருநிரை வானம் பயிரும்**
**மலைச்சேண் இகந்தனர் ஆயினும் நிலைபெயர்ந்து**
**நாள்இடைப் படாமை வருவர் நமர்எனப்**
**பயம்தரு கொள்கையின் நயம்தலை திரியாது**

**நின்வாய் இன்மொழி நன்வா யாக**
**வருவர் ஆயினோ நன்றே வாராது**
**அவணவர் காதலர் ஆயினும் இவண்நம்**
**பசலை மாய்தல் எளிதுமன் தில்ல**
**சென்ற தேஎத்துச் செய்வினை முற்றி**

**மறுதரல் உள்ளத்தர் எனினும்**
**குறுகுபெரு நசையொடு தூதுவரப் பெறினே.**

*தோழீ! நீ வாழ்க!*

*'யா மரத்தினது ஒளியுடைய தளிரிலே அரக்குப் பொடியினைத் தூவினாற்போல, நின் மேனியிடத்தே அழகிய பசலைபரக்க, வருத்தம் பெரிதாக உடையவளாகி, நின் காதலரான அவர்மாட்டுப் பழிச்சொற்களைக் கொண்டு*

தருதலையும் நீ விரும்புகின்றனை! அவ்விடத்தே நின்னுடைய துன்பத்தின் மிகுதியைச் சென்று எவரேனும் அவருக்கு உரைப்பின், அச் சொற்களைக் கேட்டு அவரால் தாங்கி யிருத்தலும், இயலுமோ? செய்யப்படும் பொருள் முற்றுப் பெறாதேயாயினும். இன்பப் பயன் அழியுமாறு, அப் பொருளையே மேலாகக்கொண்டு, அவர் அங்கே தாழ்த்துவிடுபவரும் அல்லர் காண்!

வேனிற் காலத்திலே, கோடைக் காற்றினாலே குருத்து இற்று உதிர்ந்துபோயின வருத்தத்தினைச் சொல்லமாட்டாதாய்த், துளையினையுடைய வெண்மையான தலைப்பக்கம் கூம்பு தலுற்று வற்றிப்போயிருக்கும் இளம் பனையினைப்போலத், தம் கைகளை உயர்த்து எடுத்தனவாக, யானைகளின் பெருங் கூட்டம் மேகத்தை நோக்கிக் கதறிக்கொண்டிருக்கின்ற மலைப்பகுதி யினையும் கடந்து, தொலைவாகச் சென்றவர் நம் காதலர். எனும், தாம் சொல்லிச்சென்ற நாளின் எல்லை கடந்து நாட்கள் இடைப்பட்டுப் போகாமல், நம்மவரான அவர் வந்து சேர்பவரும் ஆவர்.

இவ்வாறெல்லாம் பயனை விளக்கும் கொள்கையுடையை யாகி, இனிமை திரியாது சொல்லுகின்ற நின்னுடைய வாயின் இனிதான மொழிகள், நல்ல உண்மையாகவே ஆகுக. நீ கூறியபடியே அவர் வருவாராயின் அதுவும் நல்லதே யாகும். அல்லாமல்-

வாராதவராக, எம் காதலர், அவர் சென்றிருக்கும் அவ்விடத்தவரே யாயினும், அவர் சென்றுள்ள நாட்டிடத்தே செய்தற்கு மேற்கொண்ட செயலினை முடித்துக் கொண்ட வராகி, மீண்டு வருவதற்கான உள்ளத்தையும் உடையவர் என்றாலும் அங்ஙனம் வந்தடைதல் விரைவில் வந்தடையும் என்னும் பெரிதான விருப்பத்துடனே, அவரிடமிருந்து தூதாவது வரப்பெற்றனமாயின், இவ்விடத்து நம் பசலை மறைந் தொழிதலும் எளிதாகுமே!

**சொற்பொருள்:** 1. யாஅ - யாமரம். விதிர்த்தன்ன - சிதறினாற்போன்ற 4. தலைத்தருதல் - கொண்டுவிடல் 6. எவ்வம் - துன்பம். 7. வயங்குதல் - முற்றுதல் பயன் இன்பப் பயன். 8. கோடை - கோடைக்காற்று; மேற்காற்று 10. தூம்பு - தொளை. திரங்கிய - வற்றிய. 12. வானம் - மேகம். 16. நம்வாய்ஆக - நல்ல உண்மையே ஆகுக. 21. மறுதரல் - மீண்டுவரல் 22. குறுகுதல் - மீண்டுவந்து சேர்தல்.

**விளக்கம்:** *தலைவியின் ஆகத்துப் படர்ந்த பசலையும் அவள் மேனியின் வாட்டமும் கண்ட ஊரவர், அவளை அந்நிலைக்கு உள்ளாக்கிய கொடுமைக்குக் காரணமாயினது குறித்துப் பிரிந்துசென்ற அவளின் காதலனைப் பழிக்கத் தொடங்குவர். இதுபற்றியே, 'பழி தலைத்தருதல் வேண்டுதி' என்றனளாம். 'தாங்கல் ஒல்லுமோ? பயம் கெடத் தூக்கி நீடலர், நின் எவ்வம் பெருமை உரைப்பின்' என்றது, அவன் தலைவி மாட்டுக் கொண்டுள்ள காதன்மிகுதியை உரைத்து, அது மேலும் செவ்விதமாக இயலவே, அவன் பொருள்தேடிச் சென் றுள்ளனன் எனக் கூறியதாம். மேகத்தை அழைப்பன போல வானத்தே கையுயர்த்து நிற்கும் யானைக் கூட்டங்களின் நிலைக்குக், கோடைக்காற்றால் குருத்தொடிந்து சருச்சரையுடன் துளைபட்டு நிற்கும் மொட்டையான வெளிற்றுப் பனை மரங்களை உவமை கூறிய நயத்தினை அறிந்து நுகர்க.*

*தோழியின் ஆறுதலுரைகள் தன்னைத் தேற்றும் வகையினஆகாவென்பவள், 'தூது வரப்பெறின் பசலை மாய்தல் எளிது' என்றனள்.*

## 334. இப்பொழுதே செலுத்துக!

**பாடியவர்:** *மதுரைக் கூத்தனார்; மதுரைக் கந்தரத்தனார் எனவும், மதுரைக் கோடரத்தனார் எனவும் பாடங்கள்;* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.*

*(வேந்தனுக்குப் படைத்துணையாகச் சென்று பாசறை யிடத்தே தங்கியிருக்கிறான் தலைவன். அவன் மேற்கொண்ட வினையும் முடிந்தது. பகைவரும் பணிந்து திறைசெலுத்த முன் வந்தனர். அவன் திரும்புவதாகக் குறிப்பிட்டிருந்த கார்காலமும் தொடங்கிவிட்டது. எனவே, தன் காதலியைக் காண்பதற்கான ஆர்வம் மிகுதியாக எழ, அவன், தன் பாகனிடத்தே சொல்லுவதாக அமைந்த செய்யுள் இது.)*

**ஓடா நல்லேற்று உரிவை தைஇய**
**ஆடுகொள் முரசம் இழுமென முழங்க**
**நாடுதிறை கொண்டனம்ஆயின் பாக!**
**பாடுஇமிழ் கடலின் எழுந்த சும்மையொடு**
**பெருங்களிற்றுத் தடக்கை புரையக் கால்வீழ்த்து**

**இரும்பிடித் தொழுதியின் ஈண்டுவன குழீஇ**
**வணங்கிறை மகளிர் அயர்ந்தனர் ஆடும்**
**கழங்குறழ் ஆலியொடு கதழுறை சிதறிப்**

**பெயல்தொடங் கின்றால் வானம் வானின்
வயங்குசிறை அன்னத்து நிரைபறை கடுப்ப**

**நால்குடன் பூண்ட கால்நவில் புரவிக்
கொடிஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது
இனமயில் அகவும் கார்கொள் வியன்புனத்து
நோன்சூட்டு ஆழி ஈர்நிலம் துமிப்ப
ஈண்டே காணக் கடவுமதி பூங்கேழ்ப்**

**பொலிவன அமர்த்த உண்கண்
ஒலிபல் கூந்தல் ஆய்சிறு நுதலே!**

*பாகனே! மேகங்கள் ஒலிமுழங்கும் கடலிடத்தே நீரினை முகந்து எழுந்ததான ஆரவாரத்துடனே, கருமையான பிடியானைகளின் கூட்டத்தைப் போன்று சேர்ந்து, வானில் திரண்டுள்ளன. பெரிய களிற்றின் பருத்த கையினைப்போலப் பெயலும் காலூன்றிவிட்டது. வளைந்த முன்னங்கையினை உடைய மகளிர் விருப்பமுடன் விளையாடுகின்ற கழங்கினைப் போன்று விளங்கும் பனிக்கட்டிகளோடு, விரையத் துளிகளைச் சிதறி, மழை பெய்வதனையும் தொடங்கிவிட்டது.*

*புறங்கொடுத்து ஓடாது, எதிரேற்று வெற்றிகொள்ளும் நல்ல வீரமிக்க கொல்லேற்றினது தோலினாலே போர்க்கப் பெற்ற, வெற்றிகொள்ளும் முரசமானது, 'இழும்' என்னும் ஒலியுடன் முழக்கம் செய்யப் பகைவர் நாட்டின் திறைப் பொருளையும் நாம் கைக்கொண்டனம். ஆயின்-*

*வானத்தினிடத்தே விளங்கும் சிறகினை யுடைய அன்னங்கள் வரிசையாகப் பறந்துசெல்லுதலைப் போலக் காற்றைப்போற் செல்வது எனக் கூறப்பெறும் வேகத்தை யுடைய, நான்கு குதிரைகளை ஒருங்கே பூட்டிய கொடுஞ்சியை யுடைய நெடிய நம் தேரானது, செல்லும் விரைவு மிகுதியைக் கைவிடாது, கூட்டமான மயில்கள் அகவிக்கொண்டிருக்கும் கார்காலத்துக் கவினைக்கொண்ட பரந்த முல்லைநிலத்தே, வலிமையான வட்டையினையுடைய உருள்களை ஈரமான நிலத்தினைக் கிழித்துச் செல்லுமாறு-*

*அழகிய நிறத்தாற் பொலிவுற்றனவாய் அமர்த்த மையுண்ட கண்களையும், தழைத்த பலவாகிய கூந்தலையும், அழகிய சிறுத்த நெற்றியினையும் உடைய தம் தலைவியைச் சென்று காணும்பொருட்டாக*

*இப்போதே நின் தேரினைச் செலுத்துவாயாக!*

**சொற்பொருள்:** 1. ஓடா - புறமுதுகிட்டு ஓடாத வெற்றி யினையுடைய. நல்லேறு - நல்ல வன்மையுடைய கொல்லேறு. உரிவை - தோல். தைஇய - போர்த்த. 2 ஆடுகொள் - வெற்றி கொண்ட. 3. நாடு - பகைவர் நாடு; திறைகொண்டன மாயின் - திறைப்பொருளைக் கைக்கொண்டனமாயின். 4. சும்மை - பேரொலி. 6. தொழுதி - கூட்டம். 7. வணங்கு இறை - வளைவான முன்னங்கை அயர்ந்தனர் விருப்பம் உடையவராக: அமர்ந்தனர் எனவும் பாடம். 8. கதழ் உறை - விரைவான நீர்த்துளிகள் 9. பெயல் - மழை பொழிதல். 10. வயங்கு - விளங்கும். நிறை பறை - வரிசையாகப் பறத்தலையுடைய. 11. நால்கு - நான்கு; பெயர்த் திரிசொல். கால் நவில் வேகத்தால் காற்றினைப் போன்றது எனச் சொல்லப் படும். தவிராது - தளராது. 14 நோன் சூட்டு ஆழி - வலிமையான வட்டையினையுடைய தேர்ச் சக்கரங்கள் 15. கடவுமதி - செலுத்துவாயாக. பூங்கேழ் - அழகிய நிறத்தினைக் கொண்ட. 16. அமர்த்த - மாறுபட்ட, 17. ஒலித்தல் - தழைத்தல்.

**விளக்கம்:** 'நாடு திறை கொண்டனமாயின்' என்றதனால் தலைவன் அரசர் குடியினன் ஆகவோ, படைத்தலைவனாகவோ விளங்கியவன் என்க. அன்னத்து நிரைபறை என்றமையால், நான்கும் வெண்ணிறப் புரவிகளாதலும் பெறப்படும். இதனாற் பண்டை நாளில் தேர்கள் நான்கு குதிரைகள் பூட்டியும் செலுத்தப்பெற்றன என்பதனையும் அறியலாம். நாடு திறை கொண்டனமாயின்' என்னில், பகைவர் நாட்டையே திறையாகக் கைப்பற்றிக் கொண்டனமாயின்' எனவும், 'பகைவர் நாட்டி டத்துத் திறையினைப் பெற்றன மாயின் எனவும் பொருள் கொள்ளலாம்.

விரைந்து செல்லலை விரும்புகின்ற தலைவனின் உள்ளம், குதிரைகளைப் பற்றிய குறிப்பானும், தேருருள் நிலத்தைக் கிழித்துச் செல்லச் செலுத்துக என்பதனாலும் பெறப்படும். சிறுநுதல் சிறுத்த நுதலினளான தலைவியைக் குறித்ததாம்.

## 335. உடன்கொண்டு சென்றால்!

**பாடியவர்:** மதுரைத் தத்தங் கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறிச் செலவு அழுங்கியது. **சிறப்பு:** ஆடுகொள் முரசின் அடு போர்ச் செழியனின் மாடமூதூராகிய மதுரைப் பேரூர்.

(தலைமகன் தன்னுடைய தலைவியினிடத்தே மிகுதியான காதலன்பு கொண்டவன். எனினும், பொருளிலார்க்கு இவ்வுலக மில்லை' என்ற நியதியை உணர்ந்த அவனுடைய ஆண்மை, அவனை வேற்றுநாடு சென்று பொருள் தேடி வருதலிற் செலுத்து

*கின்றது. உள்ளம் பொருளார்வத்தாலும் பெருங்காதலாலும் அலமற, அவன் முடிவிற் காதலையே பெரிதாகக் கொண்டு தன் செலவினை நிறுத்திவிடுகின்றான். அவன் தன் உள்ளத்திற்குச் சொல்லுவதாக அமைந்த செய்யுள் இது.)*

**இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்
அருள்நன்கு உடையர் ஆயினும், ஈதல்
பொருள் இல்லோர்க்கு அஃது இயையாது ஆகுதல்
யானும் அறிவென் மன்னே யானைதன்
கொன்மருப்பு ஒடியக் குத்திச் சினஞ்சிறந்து**

**இன்னா வேனில் இன்றுணை ஆர
முளிசினை மராஅத்துப் பொளிபிளந்து ஊட்ட
புலம்புவீற் றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்
அரிய அல்லமன் நமக்கே-விரித்தார்
ஆடுகொள் முரசின் அடுபோர்ச் செழியன்**

**மாட மூதூர் மதிற்புறம் தழீஇ
நீடுவெயில் உழந்த குறியிறைக் கணைக்கால்
தொடைஅமை பன்மலர்த் தோடு பொதிந்து யாத்த
குடைஓ ரன்ன கோள்அமை எருத்திற்
பாளை பற்றிழிந்து ஒழியப் புறம்சேர்பு**

**வாள்வடித் தன்ன வயிறுடைப் பொதிய
நாளுறத் தோன்றிய நயவரு வனப்பின்
ஆரத்து அன்ன அணிகிளர் புதுப்பூ
வாருறு கவரியின் வண்டுண விரிய
முத்தின் அன்ன வெள்வீ தாஅய்**

**அலகின் அன்ன அரிநிறத்து ஆலி
நகைநனி வளர்க்குஞ் சிறப்பின் தகைமிகப்
பூவொடு வளர்ந்த மூவாப் பசுங்காய்
நீரினும் இனிய ஆகிக் கூர்எயிற்று
அமிழ்தம் ஊறும் செவ்வாய்**

**ஒண்தொடிக் குறுமகட் கொண்டனம் செலினே!**

*வறுமையினாலே உள்ளமும் இருண்டுபோன இரவலரின் துயரினைப்போக்கும் அருளினை மிகுதியையும் உடையவரே என்றாலும், கைப்பொருள் இல்லாதவர்களுக்கு, ஈதலாகிய அந்த அருளின் தன்மையும் இயலாததாகும். இதனை யானும் அறிவேன். ஆயினும், என்னை?*

*இதழ் விரிந்த மலர்களாலே தொடுக்கப்பெற்ற தாரினையும், வெற்றி பொருந்திய முரசத்தினையும் உடையவன், வெல்லும்*

போராற்றலையுடைய செழியன், அவனுக்கு உரியது மாடங்கள் பொருந்திய மூதூரான மதுரைப் பேரூர். அப்பேரூரின் மதிற்புறத்தினைத் தழுவியவாக, நெடிதான வெயிலினிடத்தே வாட்டமுற்றனவையாக, குறுகலான இறைகளையும் திறண்ட அடியினையும் உடையவான கமுகமரங்கள் விளங்கும். தொடுத்தல் அமைந்த பல மலர்களின் இதழ்களைப் பொதிந்து கட்டியமைத்த குடையினைப்போன்று விளங்கும், காய்த்தலைப் பொருந்திய அம்மரங்களின் எருத்துக்கள். அவ்வெருத்துக் களிடத்துப் பாளையும் தம் பிடிப்பு நீங்கிக் கழித்துபோக, வாளை வடித்துவைத்தாற் போலத் தோன்றும் வயிற்றினையுடைய பொதிகள் தோன்றும். அப்பொதிகளிடத்தே, பருவம் அடைந்தவிடத்துத் தோன்றிய விருப்பம் வருதலையுடைய அழகினைக்கொண்ட,ஆரத்தைப் போன்று அழகுடன் விளங்கும் புதுப்பூக்கள் காணப்படும். நீட்சி பொருந்திய கவரியினைப்போல, வண்டுகள் தேனுண்ணும்படியாக, அப்பூக்கள் இதழ் விரிதலையும்பெறும், முத்துக்களைப்போலும் வெண்மை யுடைய அப்பூக்கள் பரந்து, பல கறையினைப் போன்ற ஒள்ளிய நிறத்தையுடைய ஆலங்கட்டியைப்போல, மகிழ்ச்சியை மிகுதியும் உண்டாக்குகின்ற சிறப்புடன் அழகுமிகுந்து தோன்றும். அப்பூவொடு வளர்ந்த முதிராத இளங்காயினது நீரினுங் காட்டில் இனிமை உடையதாகிக், கூரிய பற்களிடையே அமுதம் ஊறுகின்ற சிவந்த வாயினை உடையவள் நம் தலைவி. ஒளிபொருந்திய வளைகளைஉடைய, அந்த இளமை உடையவளையும் நம்முடன் அழைத்துக்கொண்டு நாம் சென்றோமானால்-?

களிற்றியானையானது சினம் மிகுதியுடையதாகித், தன்னுடைய கொல்லும் வன்மையுடைய கொம்பும் ஒடியுமாறு, பட்ட கிளைகளையுடைய யாமரத்தினைக் குத்தி அதன் பட்டையைக் கிழித்து, கொடுமையான வேனிற்காலத்தே தன் இனிய துணையான பிடியானது உண்ணும்படியாக ஊட்டிக் கொண்டிருக்கும். அங்ஙனம் வருத்தம் குடிகொண்டிருக்கும், நிலமும் பிளந்துபோய்க் கிடக்கும், வெம்மையினையுடைய சுரநெறியும் நமக்குக் கடத்தற்கு அரிதானது அல்லாததாகும்.

**சொற்பொருள்:** 1. இருள்படு நெஞ்சம் - மயக்கத்தால் இருண்டுபோயுள்ள நெஞ்சம்; இது வறுமைத் துயரத்தால் நேர்ந்தது. 5. கொன்மருப்பு - கொலை செய்யும் வலிமையுடைய கொம்பு. 6. இன்னா வேனில் - வருத்தத்தையுடைய வேனில். இன்துணை - இனிதான துணை; அது அதன் பிடியானையாகும் 7. மராஅத்து - மராமரத்து. 'யாஅத்து எனவும் பாடம். பொளி -

*பட்டை. 8. புலம்பு - வருத்தம். வீற்றிருந்த - குடி கொண்டிருந்த. நிலம்பகு - நிலம் வெடிப்புண்டு போன. 10. ஆடுகொள் முரசு - வெற்றிகொள்ளும் முரசம். செழியன் - பாண்டியன்; செழியன்' எனப் பெயருடைய ஒரு பாண்டியனுமாம். 11. மாடமூதூர் - மாடங்களைக்கொண்ட பழைமையான ஊர்; மதுரைக்கு நான்மாடக்கூடல் என்ற பெயரும், அது நான்கு மாடங்களை கொண்டமையும் ஆகிய செய்திகளையொட்டி மாடமூதூர் என்றனர். 12. நீடுவெயில் - நெடிதாகிய வெயில். குறி இறை - குறுகலான இறைகள்; பாக்கு மரத்தில் இவை விளங்குதலைக் காணலாம். 13. கணைக்கால் - திரட்சிகொண்ட அடிமரம். 14. கோள் அமை எருத்து - காய்த்தல் அமைந்த கழுத்துப்புறம். 21. அரிநிறம் - செவ்வரி பொருந்திய நிறமும் ஆம். அலகு - பலகறை. 23. மூவாப் பசுங்காய் - முற்றாத இளங்காய். 25. அமிழ்தம் - வாயூறல் 26. குறுமகள் - இளமை உடையவள்; தலைவியைக் குறித்தது.*

**விளக்கம்:** *வறுமை காரணமாக உள்ளமும் ஒளிகுன்றி இருண்டுபோகும் என்று கூறுகின்ற சிறப்பினை, 'இருள்படு நெஞ்சத்து இடும்பை' என்பதனால் அறிக. அத்தகையவரின் இடும்பையினைத் தீர்க்கும் அருளினை உடையவராதலே சிறப்பாகும். அதனை நன்கு அறிந்தும், இளையோளான தன் காதலியைப் பிரிதற்கு அவனுடைய காதல் நெஞ்சம் இசைய மறுக்கிறது. அவளும் உடன் வந்தால், அவன் எத்தகைய கொடுமையினையும் தாங்குதற்கு இசைகின்றனன். கமுகின் இளங்காயினுள்ளே இருக்கின்ற நீர் மிக்க சுவையுடைய தாகும். 'அதனினும் இனிது அவள் வாயின் ஊறல்' எனக் கூறுவது, அவனுடைய காதல் மிகுதியை உணர்த்தும். கமுகின் வருணனை மிகவும் நயமாக அமைந்துள்ளதனையும் அறிந்து இன்புறுக.*

*யானை, பிடிக்கு மராமரத்துப் பட்டையைப் பிளந்து ஊட்டும், வருத்தம் மிகுந்த, நிலமும் வெடிப்புண்டுபோன சுரநெறி யென்றது, அதன்கண் அவள் செல்லுதற்கு ஆகா மென்மையுடையவள் எனக் காட்டி, அவன் தன் செலவினைக் கைவிட்டதனையும் உணர்த்துவதாம்.*

## 336. உடைக என் வளையே!

**பாடியவர்:** *பாவைக் கொட்டிலார்.* **திணை:** *மருதம்.* **துறை:** *நயப்புப் பரத்தை இற்பரத்தைக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.* **சிறப்பு:** *வல்லத்து, ஆரியரைச் சோழர் வென்றது.*

*(பழந்தமிழகத்துத் தலைவர்கள் தம்முடைய இல்லத் தலைவியருடன் மட்டுமே கூடி வாழ்ந்தவர் அன்று. பரத்தைமை*

உடையவராகவும் அவர்களுட் சிலர் வாழ்ந்தனர். ஒருவனுக்கு இற்பரத்தையாக ஒருத்தியும், காதற் பரத்தையாக ஒருத்தியும், ஆக இருவர் இருந்தனர். அவ்விருவருள் ஒரு சமயம் இற்பரத்தை யானவள் காதற்பரத்தையின் அழகினைக் குறைகூறியவளாகிப் பழித்தனளாம். அதனைக் கேட்டுச் சினங்கொண்ட அந்தக் காதற்பரத்தை, அந்த இற்பரத்தைக்குத் தோழியராயினோர் கேட்கும்படியாக இவ்வாறு கூறுகின்றனளாம். இத்துறை அமைய விளங்குவது இச் செய்யுள்.)

**குழற்காற் சேம்பின் கொழுமடல் அகலிலைப்**
**பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த**
**உண்ணாப் பிணவின் உயக்கஞ் சொலிய**
**நாளிரை தழீஇய எழுந்த நீர்நாய்**
**வாளையொடு உழப்பத் துறை கலுழ்ந் தமையின்**

**தெண்கட் டேறல் மாந்தி மகளிர்**
**நுண்செயல் அம்குடம் இழீஇப் பண்பின்**
**மகிழ்நன் பரத்தைமை பாடி அவிழிணர்க்**
**காஞ்சி நீழற் குரவை அயரும்**
**தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்**

**தேர்தர வந்த நேரிழை மகளிர்**
**ஏசுப என்பவென் நலனே அதுவே**
**பாகன் நெடிதுயிர் வாழ்தல் காய்சினக்**
**கொல்களிற்று யானை நல்கல் மாறே**
**தாமும் பிறரும் உளர்போற் சேறல்**

**முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்**
**யானவண் வாராமாறே வரினே வானிடைச்**
**சுடரொடு திரிதரும் நெருஞ்சி போல**
**என்னொடு திரியான் ஆயின், வென்வேல்**
**மாரி யம்பின் மழைத்தோற் சோழர்**

**வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை**
**ஆரியர் படையின் உடைகவென்**
**நேரிறை முன்கை வீங்கிய வளையே!**

குழல் பொருந்திய தண்டினையுடைய சேம்பினது, கொழுமையான மடலிடத்தேயுள்ள அகன்ற இலைகளுடன் கூடிய, பாசிபடர்ந்திருக்கும் நீர்ப்பரப்பிலே, தன் குட்டியுடன் தங்கியிருந்தது, பசியால் வருத்தமுற்ற பெட்டை நீர்நாய் ஒன்று. அதன் வருத்தத்தைப் போக்குவதற்குத், தன்னுடைய அந்நாளைக்கான இரையினைத் தேடுவதற்காக எழுந்த அதன்

ஆணான நீர்நாயானது, வாளைமீனைப் பற்றிக்கொண்டு போரிட்டது. அதனால், நீர்த்துறை கலங்கல் உற்றது. அதனால், துறைக்கு நீர் மொண்டுபோவதற்கு வந்த மகளிர்கள், நுண்ணிய தொழில்நலம் பொருந்திய அழகிய தம் குடங்களை நீர் மொள்ளாது கீழே வைத்தனர். தெளிந்த கள்ளினைக் குடித்தவ ராகத், தம் கணவன்மாரின் பண்பற்ற பரத்தைமை உறவுகளைக் குறித்துப் பழித்துப் பாடியவராக, விரிந்த பூங்கொத்துக்களை யுடைய காஞ்சிமரத்து நிழலிலே, குரவைக் கூத்து ஆடிக்கொண்டும் இருந்தனர். அத்தகைய இனிதான பெரிய பொய்கைத் துறையினைப் பொருந்திய ஊரையுடையவன் நம் தலைவன், தேர் கொண்டுவர வந்து சேர்ந்த, நேரிய அணிகளை யுடைய அவனுடைய மகளிர் என்னுடைய நலனைச் சுட்டி ஏசுகின்றனர் என்பார்கள்!

'மிக்க சினத்தினையுடையதும், கொல்லும் தன்மையினை உடையதுமான, களிற்றியானையானது, கொல்லாது அருள் செய்தலினாலேயே, அதனைச் செலுத்தும் பாகன் நெடுங்காலம் உயிர் வாழ்கின்றான்' என்பது போன்றதே அவருடைய செயலும் ஆகும்.

அப் பெண்களும், அவர்களுடன் சேர்ந்த பிறரும், தாம் அழகு உடையவர்போலச் சொல்லுதல், முழவுகள் ஒலிக்கும் துணங்கைக் கூத்து ஆடிக் களிக்கின்ற விழாவினிடத்தே, யானும் அவ்விடத்து வாராதிருந்தமையினால் ஆகியதே யாகும்.

அவ்விடத்து யானும்வந்தால் ஞாயிற்றின் போக்கோடு சுழன்று திரியும் நெருஞ்சிப் பூவினைப்போல, அவனை என்னைச் சுற்றியே திரியுமாறு செய்வேன். அங்ஙனம் செய்யேன் என்றால்-

வெற்றி பொருந்திய வேலினையும், மழைபோல மிகுந்த அம்பினையும், மேகத்தைப் போன்ற தோற்கிடுகினையும் உடைய சோழர்களது, வில்வீரர்கள் திரண்டுள்ள அரணினையுடைய வல்லத்தின் புறத்தேயுள்ள காவற்காட்டினிடத்தே வந்தடைந்த ஆரியர்களின் படையினைப்போல, என்னுடைய நேரிய சந்தினைக்கொண்ட முன்கையிலே செறிந்துள்ள இவ்வளைகள், சிதைந்து ஒழிந்துபோவன ஆகுக.

**சொற்பொருள்:** *1. குழற்கால் சேம்பு - உட்டுளை கொண்ட தண்டினையுடைய நீர்ச்சேம்பு. 2. பாசிப்பரப்பு - பாசி படர்ந்திருக்கும் நீர்ப்பரப்பு. 3. பிணவு - பெட்டை நாய். உயக்கம் சொலிய - வருத்தத்தைப் போக்க. 5. சுலுழ்தல் - கலங்குதல். 6. தெண்கள் - தேறல் தெளிந்த கள்ளாகிய தேறல். 7. நுண்செயல் - நுண்ணிய வேலைப்பாடு; குடங்களின் மேற்புறத்தே*

அமைந்துள்ள வண்ணக் கைவேலைகள். 10. துறை கேழ் ஊரன் - துறையினைப் பொருந்திய ஊருக்கு உரியதலைவன். 12. நலன் - அழகு நலன். 14. நல்கல் - அருளுதல். 15. உளர்போல் - நலனுள்ளவர் போல். 16. துணங்கை தூங்கும் - துணங்கைக் கூத்து அயரும். 17. சுடர் - ஞாயிறு. நெருஞ்சி - நெருஞ்சிப் பூ 19. திரியேன் - திரியச்செய்வேன். 20. மழைத்தோல் - மேகநிறத்தையுடைய தோற்கிடுகு. 21. குறும்பு - அரண். மிளை - காவற்காடு 23. இறை - சந்து. வீங்கிய - செறிவுற்றுள்ள.

**விளக்கம்:** நீர்த் துறையிலே பெண்கள் தம் கணவன் மாரைப்பற்றிப் பேசுதல் அன்றும் உளதான வழக்கமே என்பதனை, 'மகிழ்நன் பரத்தைமை பாடிக் காஞ்சி நீழற் குரவை அயரும் மகளிர்' என வருவதனால் அறிக. மகளிரும் மதுவருந்தும் வழக்கம் உடையவராக இருந்தமை, 'மகளிர் தெண்கள் தேறல் மாந்தி' என்பதனால் பெறப்படும்.

'தேர்தர வந்த நேரிழை மகளிர் என்றதனால், பாகனால் கொண்டு தரப்பட்ட இற்பரத்தையர் என்பதும், தானோ தலைவனாற் கண்டு காதலித்துக் கூடுதலைப் பெற்றவள் என் பதும் கூறி, அவளினும் தானே தலைவனிடத்து உரிமை மிகுதி உடைமையினையும் வலியுறுத்துகின்றனள்.

தன்னைப் பழித்த அவர்களைத் தான் வாளாவிட்டிருத்தல், காய்சினக் களிற்றியானை அருளுதலால் பாகன் நெடிது வாழ்தல் போலத், தான் கொண்ட இரக்கத்தினாலேயே என்றும் கூறுவாள், அதுவே, 'பாகன் நெடிதுயிர் வாழ்தல் காய்சினக் கொல்களிற்றியானை நல்கல் மாறே' என்றனள். இதனால், அவரினும் தான் உயர்வுடைமையும் கூறினளாம்.

'யான் துணங்கை தூங்கும் விழவின்கண் வரின், சுடரொடு திரிதரு "நெருஞ்சிபோல என்னோடு திரியேன்' என்றது, அப்பரத்தையர் போலத் துணங்கைக் கூத்திற்குத் தான் செல்லாதிருந்தது, தான் தலைவனின்பாற் கொண்ட கற்புத் திண்மையினாலேயே என்பதனைக் கூறியதாம்.

'வல்லத்துப் புறமிளை ஆரியர் படையின் உடைக' என்ற செய்தி, ஆரியர் படையினர் வல்லத்துக் களத்திலே சோழர்க்கு ஆற்றாது சிதறுண்டு தோற்றோடியதனை உரைப்பதாகும். வல்லம் சோழநாட்டு ஊர்; தஞ்சை மாவட்டத்தே இருப்பது; வடாற்காட்டிலும் வல்லம் உளது.

'மகளிர் மகழிநன் பரத்தைமை பாடிக் காஞ்சி நீழற் குரவையயரும் தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்' எனத் தலைவனைக் குறித்தது, அவன் காதல்கொண்ட தலைவி

ஒருத்தியுடன் மட்டுமே கூடிவாழாததும் தன்னுடன் தொடர்பு கொண்டும் பிறரையும் நாடித் திரிதலான செயலையுடைய பரத்தமை ஒழுக்கத்தினன் எனவும் உணர்த்தியதாம்.

**மேற்கோள்:** 'மனையோள் ஒத்தலில் தன்னோ ரன்னோர் மிகைபடக் குறித்த கொள்கைக் கண்ணும் என்ற 'புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும் என்னுஞ் சூத்திரப் பகுதிக்கு இச்செய்யுளைக் காட்டி, 'இதனுள் யானவண் வாரா மாறே' எனத், தான் மனையோளைப்போல் இல்லுறைதல் கூறி, ஆண்டுச் செல்லிற் சுடரொடு திரியும் நெருஞ்சிபோல, ஏனை மகளிரை யான் செல்வுழிச் செல்லும் சேடியர்போலத் திரியும்படி பண்ணிக் கொள்வல்' எனக் கூறியவாறு காண்க என்பர் நச்சினார்க்கினியர்.

இதனுள், 'மாரி யம்பின் மழைத்தோற் சோழர்' என்பதனைக் காட்டி, 'உவமை யுயர்ச்சியானே உவமிக்கப்படும் பொருட்குச் சிறப்பு எய்துவித்தவாறு கண்டுகொள்க' என, 'உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை' என்னும் உவமவியற் சூத்திரத்து, உவமம் உயர்ந்ததாக வேண்டும் என்றற்குக் காட்டிக் கூறுவர் பேராசிரியர்.

## 337. முன்னர் மீண்டனையே!

**பாடியவர்:** பாலை பாடிய பெருங்கடுங்கோ. **திணை:** பாலை. **துறை:** முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்து வந்த தலைமகன், பின்னும் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

(ஒரு தலைமகன், முன் ஒரு காலத்தே, தன் தலைவியைப் பிரிந்து, பொருள் தேடிவருதலின் பொருட்டுச் சென்று, அது காலை அவளைப் பிரிந்திருக்க மாட்டாது பெரிதும் வருத்தமுற்றவன், மீண்டும், அவன் உள்ளத்தே பொருள் வேட்கை எழ, அவன், தன் நெஞ்சுடன் கூறிக்கொள்வதாக அமைந்த செய்யுள் இது.)

**'சாரல் யாஅத்து உயர்சினை குழைத்த**
**மாரி ஈர்ந்தளிர் அன்ன மேனிப்**
**பேர்அமர் மழைக்கண் புலம்புகொண்டு ஒழிய**
**ஈங்குப்பிரிந்து உறைதல் இனிதன்று ஆகலின்**
**அவணதாகப் பொருள் என்று உமணர்**

**கணநிரை அன்ன பல்காற் குறும்பொறைத்**
**தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலைப்**
**படையுடைக் கையர் வருதிறம் நோக்கி**

**'உண்ணா மருங்குல் இன்னோன் கையது**
**பொன்னா குதலும் உண்டு' எனக் கொன்னே**

**தடிந்துடன் வீழ்த்த கடுங்கண் மழவர்**
**திறன்இல் சிதாஅர் வறுமை நோக்கிச்**
**செங்கோல் அம்பினர் கைந்நொடியாப் பெயரக்**
**கொடிவிடு குருதித் தூங்குகுடர் கறீஇ**
**வரிமரல் இயவின் ஒருநரி ஏற்றை**

**வெண்பரல் இமைக்கும் கண்பறி கவலைக்**
**கள்ளி நீழற் கதறுபு வதிய**
**மழைகண் மாறிய வெங்காட்டு ஆர்இடை**
**எமியம் கழிதந் தோயே - பனிஇருள்**
**பெருங்கலி வானம் தலைஇய**

**இருங்குளிர் வாடையொடு வருந்துவள் எனவே.**

*நெஞ்சமே!*

*மலைச்சாரலிடத்தே விளங்கும் யாமரத்தின் கண்ணே, அதன் உச்சிக் கிளைகளிலே, மாரிக்காலத்திலே துளிர்த்த தண்மையான தளிரையொத்த மேனியினை உடையவள் தம் தலைவி. அவளின் பெரிதாக அமர்த்த குளிர்ச்சியான கண்கள் வருத்தங்கொண்டு, தம் அழகு கெடுமாறு, இவ்விடத்தேயாய், நம்மைப்பிரிந்து அவள் தனித்து இருக்கும்படியாக, யாம் செல்லுதல் இனியதன்று, ஆதலால், நீ கருதும் பொருள் அவ்விடத்தே யாகுக! (அதனை அடைதலை யாம் விரும்போம் என்பது கருத்து) எனவும்,*

*உப்புவாணிகரின் பொதிகளைச் சுமந்துசெல்லும் கழுதைகளைப் போன்று, குறும்பாறைகள் வரிசைப்படக் கிடக்கும் இடத்தினூடே, பலகாலும் தூதுமேற்கொண்டு செல்லுதலையுடைய பார்ப்பானானவன், தன் மடியிலே வெள்ளிய ஓலைச்சுருளுடன் வருகின்றனன். அவன் வருகின்றதனை மழவர்கள் நோக்குவர். 'உண்ணாமையினாலே வாடிய விலாவினையுடைய இவன் கையிலேயுள்ளது பொன்னாக இருத்தலும் உளதாம்' என்று அவர்கள் கருதுவர்; கருதி, வீணாக அவனை அப்போதே கொன்றும் வீழ்த்துவர். கையில் படையினையுடைய கையினரான, கொடுமையினை யுடைய அம் மழவர்கள், உடுப்பதற்கான தகுதியற்ற அப் பார்ப்பானுடைய சிதைந்த ஆடையின் வறுமையினைக் கண்டதும், சிவந்த கோலாகிய அம்பினையுடையவராகத், தம் கைவிரல்களை நொடித்தபடியே, பெயர்ந்தும் செல்வர்.*

*நீள ஒழுகிய குருதியுடன் தொங்கிக்கிடந்த அப் பார்ப்பானின் குடரினைக் கடித்துத் தின்றபடியே, வரிகளைக் கொண்ட மரலினையுடைய நெறியிடத்ததான ஓர் ஆண் நரியானது, வெண்மையான பரற்கற்கள் மின்னிக்கொண்டிருக்கும், கண்களைப்பறிக்கும் கவர்த்த நெறியின்கண்ணே, கள்ளி மரத்து நிழலின் கீழே? கூக்குரலிட்டதாகத் தங்கியிருக்கும்.*

*மழை பெய்யாது ஒழிந்த, வெம்மை மிகுந்ததான, அத்தகைய காட்டுவழியாகிய, கடத்தற்கு அரிதான இடத்திலே, முன்பொருகால்-*

*'நடுக்கத்தை விளைவிக்கும் இரவுப்பொழுதிலே, பெருத்த ஆரவாரத்தைக் கொண்ட மேகங்கள் திரண்டு மழைபொழிய, அதனால் மிக்க குளிரோடு கூடிய வாடையும் வந்து வீசுதலால் நம் காதலி நம்மை நினைந்து வருந்துவாள் அல்லளோ? என்று கூறினாயாக, எம்மைத் தனியேவிட்டு நீ திரும்பிவிட்டனை அல்லையோ? (நின் உறுதியை நம்பி, இனியும் யாம் அவளைப் பிரிதற்குத் துணியோம் என்பது கருத்து)*

**சொற்பொருள்:** *1. சாரல் - மலைச்சாரல். யா அத்து - யா மரத்து. குழைத்த - துளிர்த்த. 2. மாரி ஈர்ந்தளிர் - மாரிக் காலத்திலே தழைக்கின்ற தண்ணிய தளிர். 3 புலம்பு - வருத்தம். 3. ஒழிய - அழகு கெட; இது, கண்கள் நீர் சொரிதலால் வந்துறுவதாம். 5. உமணர் - உப்பு வாணிகர். 6. கண நிரை - பொதி; சுமக்கும் கழுதை; நிரைகள் குறும் பொறை - குறும்பாறைகள். 7.தூது ஒய் பார்ப்பான் - தூது செல்லும் இயல்புடைய பார்ப்பான். 8. படை - ஆயுதம் கொலைக் கருவி; வில்லும் அம்புமாம். வருதிறம் - வரும் தகைமை. 11. தடிந்து - கொன்று, கடுங்கண் - கொடுமை. 12. திறனில் சிதாஅர் - உடுக்கும் தகுதியற்ற சிதைந்த கந்தலுடை. 16. இமைக்கும் - மின்னும். கவலை - கவர்த்த நெறி. 18. கண்மாறிய - பெய்யாது போகிய 20. பெருங்கலி வானம் - பெருத்த ஆரவாரத்தையுடைய மேகம்; 'திரண்ட மேகங்கள் இடிமுழக்கம் உடையவாய்' என்பது பொருள்.*

**விளக்கம்:** *இதனால், 'தலைவியைப் பிரிந்து செல்லுதற்கு மனமின்றி, அவன் தான் செல்லுதலைக் கைவிட்டனன்' என்று கொள்ளுக. 'பொருள் அவணதாக' எனவும், 'வாடையொடு வருந்துவள்' எனவும் கூறி, 'என்னைத் தனியே கை விட்டு நீ அன்றைக்கு மீண்டாயல்லவோ' என்றனன், தன் உள்ளத்து உறுதியற்ற தன்மையினையும் கூறினான். கைப் பொருள் அற்ற பார்ப்பானையும் கொன்ற மழவர், பொருளுடன் வரும் தன்னைத் தவறாது கொல்லுவர் என்ற கருத்தினைப் புலப்படுத்திக்,*

*காட்டுவழியின் கடுமையினையும் கொடுமையினையும் கூறுபவன், அதனை நினையாது தன் காதலியை நினைந்த, தன் மனத்தின் காதல் பெருக்கினையும் உரைத்தனன்.*

*'பார்ப்பனர் தூது செல்லும் தொழிலுடையவர்' என்ற செய்தி இதன்கண் உரைக்கப்பெற்றமை காண்க. 'வெள் ளோலை' தூதுக்குரிய செய்தி எழுதப்பெற்ற ஓலைச் சுருள் ஆகும்.*

## 338. தூது இடையின்றிச் செல்க!

**பாடியவர்:** *மதுரைக் கணக்காயனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *அல்லகுறிப்பட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *மூவேந்தரும் சிறப்பிக்கப்பெற்ற தன்மை.*

*(தன்னுடைய காதலிய்யைச் சந்திப்பதற்காகக் குறிக்கப்பட்ட இடத்திலே, சந்தித்துக் கூடி மகிழ்கின்ற பெருவிருப்பத்துடன் வந்தனன் தலைவன் ஒருவன். அவனுடைய ஆர்வம் அன்று நிறைவேறவில்லை. அவளைக் காணாமல், அவன் வறிதே திரும்ப வேண்டியதுமாயிற்று. அப்படித் திரும்புகின்றவன் அவளை அடைதற்கு இயலாத தன் நிலைக்கு நொந்து கூறுகின்ற தன்மையில் அமைந்தது இச்செய்யுள்.)*

**குன்றோங்கு வைப்பின் நாடுமீக் கூறும்**
**மறம்கெழு தானை அரச ருள்ளும்**
**அறம்கடைப் பிடித்த செங்கோ லுடன் அமர்**
**மறம்சாய்த்து எழுந்த வலன்உயர் திணிதோள்**
**பலர்புகழ் திருவின் பசும்பூட் பாண்டியன்**

**அணங்குடைய உயர்நிலைப் பொறுப்பின் கவாஅன்**
**சினையொண் காந்தள் நாறும் நறுநுதல்**
**துணைஈர் ஓதி மாஅ யோள்வயின்**
**நுண்கோல் அவிர்தொடி வண்புறஞ் சுற்ற**
**முயங்கல் இயையாது ஆயினும் என்றும்**

**வயவுஉறு நெஞ்சத்து உயவுத்துணை யாக**
**ஒன்னார் தேஎம் பாழ்பட நூறும்**
**துன்னருந் துப்பின் வென்வேற் பொறையன்**
**அகலிருங் கானத்துக் கொல்லி போலத்**
**தவாஅ லியரோ நட்பே அவள்வயின்**

**அறாஅ லியரோ தூதே - பொறாஅர்**
**விண்பொரக் கழித்த திண்பிடி ஒள்வாள்**
**புனிற்றான் தரவின் இளையர் பெருமகன்**

**தொகுபோர்ச் சோழன் பொருள்மலி பாக்கத்து**
**வழங்கல் ஆனாப் பெருந்துறை**

**முழங்குஇரு முந்நீர்த் திரையினும் பலவே!**

*நெஞ்சமே! மலைகளை உடையதாக விளங்குவது இவ்வுலகம். இதன்கண், நாடெல்லாம் மிகுதியாகப் புகழ்ந்து கூறுகின்ற, வீரஞ்செறிந்த தானையினையுடைய அரசர்கள் சிலராவர். அவருள்ளும்,அறத்தினையே வழுவாது மேற் கொண்ட செங்கோன்மையினை உடையவர் பாண்டியர். அவருள், பகைவருடன் நிகழ்த்திய போரின்கண்ணே, அவரது தறுகண்மையை அழித்து, அதனால் பூரித்த திண்மையான தோள்களை உடையவன், பலரும் புகழ்ந்து போற்றும் திருவினை யுடையோனாகிய பசும்பூட் பாண்டியன் ஆவன். அவனுக்கு உரியது, தெய்வத்தையுடைய உயர்ந்த நிலைபேற்றினை யுடையதான பொதியமலை யாகும்.*

*அப் பொதியிலின் பக்கமலைக் கண்ணே விளங்கும், கிளைத்த ஒளியுடைய காந்தட் பூக்களைப்போல மணம் கமழும் நல்ல நெற்றியினையும், அதனோடொத்த நீண்ட கூந்தலையும், மாமை நிறத்தினையும் உடையவள் நம் தலைவி. அவளது, நுண்மையான கோற்றொழிலினையுடைய விளங்கும் வளைகள், நம்முடைய வளமைபொருந்திய முதுகினைச் சுற்றிக் கொள்ளுமாறு அவளை அணைத்து இன்புறல் என்பது நமக்குக் கிட்டா தாயினும்-*

*பகைவரது நாடுகள் பாழ்பட்டுப் போகுமாறு அழித்து வெற்றிகொள்ளுபவனும், பகைவரால் நெருங்குதற்கும் அரிதான வலிமையினையுடையவனும், வெற்றிவேலினை உடையோனு மான, சேரனுக்கு உரிய, அகன்ற இருள்கொண்ட காட்டினை யுடைய கொல்லிமலையினைப்போல, எஞ்ஞான்றும் அவள் பால் வேட்கை கொண்டிருக்கும் எம் நெஞ்சத்திற்கு ஓர் உசாத்துணையாக, அவளது நட்பேனும் இனி நிலைபெறுவதாக!*

*பகைவர் விண்ணுலகினைப் பெறுமாறு போக்கிய, திண்மையான பிடியினைக்கொண்ட ஒளிபொருந்திய வாளினை உடையவன்; ஈன்ற அணிமையினையுடைய பசுக்களைக் கவர்ந்து வரும் வீரர்களுக்குத் தலைவனாக விளங்குபவன்; திரண்ட போரினை மேற்கொண்டு அதன்கண் வெற்றியும் பெறுபவனான சோழன். அவனுக்குரிய, பொருள்கள் நிறைந்த பாக்கத்தின் கண்ணே வழங்குதலினின்றும் அமையாதிருக்கின்ற, முழங்கும் பெருங்கடலின் பெருந்துறையிடத்து அலைகளினும் பலவாக, அவள்மாட்டு யாம் விடுக்கும் தூதும் இனி ஒழிவின்றிச் சென்று கொண்டிருப்பதாக!*

**சொற்பொருள்:** *1. குன்று - மலை; ஓங்குதல் - உயர முடையவாய் அமைந்திருத்தல். வைப்பு - உலகம். மீக்கூறும் - மிகுதியாகப் போற்றிப் பேசும். 3. கடைப்பிடித்த - மேற்கொண்ட செங்கோல் - செங்கோன்மை வழுவாத ஆட்சி 4. சாய்த்து - அழித்து. எழுந்த - பூரித்து எழுந்த. வலன் உயர் - வெற்றியாற் சிறப்புற்ற. திணிதோள் - திண்மையான தோள்கள். 5. திரு - செல்வம் . 6. அணங்கு - தெய்வம். உயர்நிலை - உயர்வுடன் நிலைபெற்ற தன்மை. பொருப்பு - மலை; இங்கே பொதியிலைக் குறித்தது. 7. சினை - கிளை. 8. மாஅ யோள் - மழை நிறத்தினள்; திருமகள் போல்வாளும் ஆம். ஓதி - கூந்தல். 9. வண்புறம் - வளவிய முதுகுப்புறம். 10. முயங்கல் - தழுவுதல். 11. வயவுறு வேட்கை - உறுதலையுடைய. உயவுத்துணை - உசாத் துணை. 12. நூறல் அழித்து - வெற்றி கொள்ளுதல். 13. துன்னரும் துப்பு - நெருங்கற்கும் அரிதான வலிமை. 14. அகல் இரும் கானம் - அகற்சியினையுடைய மரச்செறிவினாலே இருள்கொண்ட காடு. 15. தவா அலியர் - கெடாது நிலைபெறுமாக. 18. புனிற்றுஆ ஈன்ற - தன் அணிமையினையுடைய பசுக்கள். தரவின் - கவர்ந்து தருதலையுடைய. இளையர் - வீரர்: ஏவலரும் ஆம். 19. தொகு போர் - தொகையான போர் அடுத்தடுத்து விளையும் போர். பாக்கம் - கடற்கரையூர்; புகாரின் பட்டனப்பாக்கம் எனலும் ஆம். 21. முந்நீர் - கடல்.*

**விளக்கம்:** *'அணங்குடை உயர்நிலைப் பொறுப்பின் கவாஅன் சினையொண் காந்தள்' எளிதிற்பெற இயலாவாறு போன்று, 'அவள் கரங்களால் தழுவப்பெற்று உயர்தலும் எமக்கு இன்று வாயாவாயிற்று' என்றனன். இதனால் தலைவன் அல்லகுறிப்பட்டவன் என்பதும். தலைவியின் குடிச்சிறப்பும், அவளை அடைதற்கான அருமையும் அறியப் பெற்றனம்.*

*அவள், இவன் நெஞ்சத்துக்கு உயவுத் துணையாவது, அவளைத் தன் மனத்துள் இடையறாது நினைத்தலை உடையவனாகி, அவ்வளவிலே அவளைத் தன் நெஞ்சத்து நிறைந்தவளாகக்கொண்டு அவன் அமைதல். 'கொல்லிபோல' என்றது அதுவும் அடைவதற்கு எளிதாயதன்றி நெஞ்சினால் நினைந்து போற்றும் உயர்நிலையுள்ளதாகவே விளங்குதலினால்.*

*இடையறாத தூதுக்குப் பாக்கத்துறையிடத்து வழங்கும் இடையறாத அலைகளைக் கூறியது, தூதும் சென்று சென்று வறிதே மீளுகின்ற செயலினை உடைமையினாலே யாகும்.*

*இச் செய்யுளின்கண் மூவேந்தரது சிறப்பும் ஒருசேரக் கூறப்பட்டமை அறிந்து இன்புறுக. பாண்டியர் சேரர்*

*மலைகளும், சோழரின் பொருள்மலி பாக்கமும் கூறப்பெற்றன வென்பதும் காண்க.*

## 339. உறவி போன்றனம்!

**பாடியவர்:** *நரைமுடி நெட்டையர்: சிறைமுடி நெட்டையார் எனவும் பாடம்.* **திணை:** *பாலை.* **துறை:** *போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(அற்சிரக் காலத்தே, வேந்துவினை முடித்தலின் பொருட்டாகத் தலைவியைப் பிரிந்து செல்லவேண்டிய நிலையிலே இருந்தனன் ஒரு தலைவன். அவன், தன்தலைவியிடத்து மிகுதியான காதலன்பு கொண்டவன். ஆண்மையும் காதலும் அலைமோத அவன் உள்ளம் படுகின்ற துயரத்தினைக் கூறுவதாக அமைந்த செய்யுள் இதுவாகும்.)*

**வீங்குவிசைப் பிணித்த விரைபரி நெடுந்தேர்**
**நோன்கதிர் சுமந்த ஆழிஆழ் மருங்கிற்**
**பாம்புஎன முடுகுநீர் ஓடக் கூம்பிப்**
**பற்றுவிடு விரலின் பயறுகாய் ஊழ்ப்ப**
**அற்சிரம் நின்றன்றாற் பொழுதே முற்பட**

**ஆள்வினைக்கு எழுந்த அசைவில் உள்ளத்து**
**ஆண்மை வாங்கக் காமம் தட்பக்**
**கவைபடு நெஞ்சம் கட்கண் அகைய**
**இருதலைக் கொள்ளி இடைநின்று வருந்தி**
**ஒருதலைப் படாஅ உறவி போன்றனம்**

**நோம்கொல்? அளியள் தானே - யாக்கைக்கு**
**உயிர்இயைந் தன்ன நட்பின் அவ்வுயிர்**
**வாழ்தல் அன்ன காதல்**
**சாதல் அன்ன பிரிவுஅரி யோளே.**

*மிக்க விரைவுடனே விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற நெடிய தேரின், வலிய ஆரக்கால்களைக் கொண்ட உருள்கள் அகழ்ந்து செல்லும் இடங்களிலே, பாம்பு செல்வதுபோல வேகமாக நீர் ஓடிக்கொண்டிருக்கவும், குவிந்து பற்றுநீங்கின விரல்களைப்போன்றவாகப் பயற்றுச் செடிகளிற் காய்கள் முற்றியவையாக விளங்கவும் அமைந்த, பனிப் பருவமாகப் பொழுதும் அமைந்துள்ளது.*

*ஆள்வினை குறித்து எழுந்த தளர்வற்ற உள்ளத்தின் ஆண்மையானது, முற்படச் செல்லுமாறு நம்மை இழுக்கின்றது. காமமானது செல்லவிடாது தடுக்கின்றது. இவ்வாறு,*

இரண்டுக்குமாகக் கவறுபட்டுள்ள எம் நெஞ்சமே! இருபுறக் கணுக்களினும் நெருப்புப்பற்றி எரிய, இருதலைக் கொள்ளி யினையுடைய அதன் இடைப்பகுதிக்கண் நின்று வருத்த முற்றதாகி, ஒருபக்கமும் செல்லுதற்கும் இயலாது தடுமாற்றம் அடைந்திருக்கும் ஓர் எறும்பினைப்போன்ற நிலையிலேயே, யாமும் இருக்கின்றோம்.

உடலுக்கு உயிர் பொருந்தியிருப்பது போன்றதாக அமைந்துள்ள நட்பினையும், அதனால் அவ்வுயிர் வாழ்வு பெறுதலைப் போன்றதாக அமைந்த காதலையும், அவ்வுயிர் சாதலைப் போன்றதாக விளங்கும் பிரிவினையும் உடைய அருமையினை உடையவள் அவள். அவள், நம் செயலுக்கு நொந்தவளாகி வருந்துவாளோ? அவள் மிகவும் இரங்கத்தக்கவள்தாம்!

**சொற்பொருள்:** 1. வீங்குவிசை - மிகுதியான விரைவு பிணித்த. பூட்டிய விரைபரி - விரையச் செல்லும் குதிரைகள். 2. நோன்கதிர் - வலிமையான ஆரைக் கால்கள். ஆழி - உருள்: சக்கரம். ஆழ்மருங்கு அகழ்ந்து செல்லும் சுவடு. இதனால், நிலம் ஈரமான தன்மையும் மழையுடைமையும் உணர்த்தினர். 4. ஊழ்ப்ப - முற்ற; கைவிரல்களைக் குவித்துப் பின் விரல்களின் பற்றினைச் சற்றே நீங்கினாற்போலப் பயற்றின் முற்றிய காய்க்குலைகள் விளங்குவதனைக் 'கூப்பிப் பற்றுவிடு விரலிற் பயறுகாய் ஊழ்ப்ப' என்றனர். 7. தட்ப - தடை செய்ய. 8. கவைபடல் - பிளவுபடல். கட்கண் - கணுக்களிடத்து; கட்கண் அகைய என்றதனால், 'இருதலைக் கொள்ளி' உட்டுளையுடைய மூங்கில் என்பதும், இடைநின்று என்றது. 'உள்ளே இருந்து' என்பதும் உணர்தல் வேண்டும். 10. உறவி - எறும்பு.

**விளக்கம்:** 'வீங்குவிசைப் பிணித்த விரைபரி நெடுந் தேர்' எனத் தலைவன் ஊர்ந்து செல்லும் தேரினைக் குறித்தமையால், அவனுடைய குடியுர்வும், அவன் செல்லும் வினை வேந்துவினை என்பதும், ஆள்வினை என்பதும் பெற்றனம். 'அசைவில் உள்ளம்' எனலே, அவன் தன் வினையிடத்தே தளர்தலற்ற உள்ளவுறுதி உடையவனாதலும், அவன் பிரிந்து செல்லற்கே இறுதியில் துணிந்தனன் என்றலும் உணரப்படும்.

அவனது உள்ளத்து நிலைக்கு, 'கட்கண் அகைய இருதலைக் கொள்ளி யிடைநின்று வருந்தி ஒருதலைப்படாஅ உறவியின்' நிலைமை, மிகவும் சிறந்த உவமையாதலைக் கருதி இன்புறுக.

காதல், உயிர் வாழ்தல் அன்னது; பிரிதல், உயிர் காதல் அன்னது. யாக்கைக்கு உயிரியைந்தன்ன நட்பு இப்படி

அமைந்தது. இதன் செறிவினை நன்கு சிந்தித்துக் காதற் செல்வியின் சிறந்த இயல்பினை அறிக.

உயிர் வாழ்தலே உடலுக்கு உயிர்ப்பும் இயக்கமும் நிலைப்பும் தருவதாம்; அது சாதலோடு அவ்வுடல் அனைத்தையும் இழந்து அழிந்து போய்விடும். இங்ஙனமே, காதலியருடன் கூடியிருத்தலும், காதலித்தாரைப் பிரிதலும் ஆம். 'உடம்பொடு உயிரிடை என்ன, மற்றன்ன மடந்தையொடு எம்மிடை நட்பு' என்ற குறளும், 'வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை; சாதல் அதற்கன்னள் நீங்குமிடத்து' என்ற குறளும் இக்கருத்துக் களையே வலியுறுத்திக் கூறுவதனை அறிந்து இன்புறுக.

## 340. சாந்து அணிகுவம்!

**பாடியவர்:** நக்கீரனார். **திணை:** நெய்தல், **துறை:** பகற்குறிக் கண் தோழி தலைமகற்குச் சொல்லியது, **சிறப்பு:** திரையன் என்பவனுக்கு உரியதான பவத்திரி என்னும் ஊரின் சிறப்பு.

(நெய்தல்நிலத்துத் தலைவன் ஒருவன், தன் உளங்கவர்ந்த தலைவி ஒருத்தியுடன், பகற்குறியிடத்தே கூடியவனாக நாளும் இன்புற்று வருகின்றான். அவனுடைய உறவுக்குத் தலைவியின் ஆருயிர்த் தோழியும் துணையாக விளங்குகின்றனள். பகலிற் கானற்சோலையில் கூடியிருந்து, இரவு நெருங்கவும், அவன் தன்னூருக்குச் செல்லுதலையும் வழக்கமாகக் கொண்டிருந்தான். இந்நிலையில், அவர்களைப் 'பிரிதலற்ற மண உறவில் பிணைத்தலை' விரும்புகின்றாள் அத்தோழி. அவனைப் பிரிந்து தலைவி இரவிலே கொள்ளுகின்ற துன்பத்தினைக் கூறி, அன்று அவர்கள் பாக்கத்திலேயே தங்கிச் செல்லுமாறு அவனிடத்துக் கூறுகின்றாள். அவன் தங்குவதற்கு இசையாது, விரைவில் வேட்டுவந்து மணந்துகொள்வான் என்பதே இக் கூற்றின் உட்குறிப்பு ஆகும்.)

**பன்னாள் எவ்வம் தீரப் பகல்வந்து**
**புன்னைஅம் பொதும்பின் இன்னிழற் கழிப்பி**
**மாலை மால்கொள நோக்கிப் பண்ஆய்ந்து**
**வளவன் வண்தேர் இயக்க நீயும்**
**செலவுவிருப் புறுதல் ஒழிகதில் அம்ம -**

**'செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்**
**பல்பூங் கானற் பவத்திரி அனவிவள்**
**நல்லெழில் இளநலம் தொலைய ஒல்லெனக்**
**கழியே ஓதம் மல்கின்ற வழியே**
**வள்ளெயிற்று அரவொடு வயமீன் கொட்கும்**

**சென்றோர் மன்ற மான்றன்று பொழுது' என**
**நின்திறத்து அவலம் வீட இன்றிவண்**
**சேம்பின் எவனோ - பூக்கேழ் புலம்ப -**
**பசுமீன் நொடுத்த வெந்நெல் மாஅத்**
**தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே**

**வடவர் தந்த வான்கேழ் வட்டம்**
**குடபுல உறுப்பின் கூட்டுபு நிகழ்த்திய**
**வண்டிமிர் நறுஞ்சாந்து அணிகுவம் திண்திமில்**
**எல்லுத்தொழின் மடுத்த வல்வினைப் பரதவர்**
**கூர்உளிக் கடுவிசை மாட்டலின் பாய்புடன்**

**கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை**
**தண்கடல் அசைவளி எறிதொறும் வினைவிட்டு**
**முன்றில் தாழைத் தூங்கும்**
**தெண்கடற் பரப்பினெம் உறைவின் ஊர்க்கே.**

*நெய்தற்பூக்கள் பொருந்தியிருக்கும் கடற்கரைக்கு உரிய தலைவனே!*

*பொன்னாற் செய்த பூண்களை உடையோனாகிய திரையன் என்பவன், என்றும் கெடாத நல்ல புகழினை உடையவன். பல்வேறு பூக்களையும் கொண்ட கானற்சோலையினிடத்து அவனுக்கு உரிய பவத்திரி என்னும் ஊராகும். அவ்வூரைப் போன்று நலன் நிரம்பியவள் எம் தலைவியாகிய இவள்.*

*'வழியிடையேயுள்ள கழிகள் ஒல்லென்னும் ஒலியுடனே நீர் பெருகப் பெற்றுள்ளன; கூரிய பற்களையுடைய பாம்பினோடு சுறாமீன்களும் திரியப்பெறுகின்றனவாயின; பொழுதும் ஒருதலையாக மயங்கிவிட்டது; இங்ஙனமாகவும் நம் தலைவர் சென்றனரே?' என்று கூறியவளாக, நின் திறத்துத் துயரங் கொள்வாள் இவள். இதனால், இவளுடைய நல்லழகு வாய்ந்த இளமைச்செவ்வியும் நீங்கிப்போவதாகும். அது நேராது, இவள் துயர் நீங்கும்படியாக-*

*திண்மையான படகுகளுடன் பகலிற் கடற்மேற்சென்று மீன்பிடிக்கும் தொழிலினை மேற்கொண்டு வலிய செயலினைச் செய்பவர் பரதவர்கள்; அவர்கள் அங்ஙனம் சென்றக்கால்-*

*கடுமையான காற்றானது மிக்க விசையுடனே வந்து மோதுதலினாலும், கொலைத் தொழிலினை உடைய சுறாமீன்கள் ஒருங்கே பாய்ந்து கிழித்தலினாலும், வளைந்த முடிகளைக் கொண்ட நெடிதான சிதைவுற்ற வலைகள், குளிர்ந்த கடற்காற்று வீசுந்தோறும், மனைமுற்றங்களிலேயே தாழை*

*மரங்களிற் கிடந்து அசைந்துகொண்டிருக்கும். தெளிந்த கடற்பரப்பினை உடைய, அத்தகையதான, தங்குதற்கு இனிய, எம்முடைய ஊர்க்கு, இன்று இங்கேயே தங்கிச் செல்லுமாறு, நீ வந்தால் என்னவோ?*

*பசுமையான மீனுக்கு விலைமாறிய வெண்ணெல்லின் மாவினைத் தயிரிட்டுப் பிசைந்து ஆக்கிய கூழினை, நினக்கு உண்ணுதற்கு உரியதாக யாம் தருவோம். வடநாட்டவர் கொண்டுதந்த வெண்ணிறம் அமைந்த வட்டக்கல்லிலே. குடமலையாகிய பொதியிலின் சந்தனக் கட்டையினைத் தேய்த்துப் பிற மணப்பொருள்களையும் கூட்டி உண்டாக்கிய வண்டுகள் ஆரவாரிக்கும் மணச்சாந்தினையும் நினக்கு அணி விப்போம்.*

*பல நாளும், நின் வருத்தம் நீங்கப் பகற்பொழுதிலே வந்து, புன்னை மரங்களையுடைய அழகிய சோலையின் இனிதான நிழலில் பொழுதைக் கழித்துக்கொண்டு, மாலைப் பொழுது வந்து சேர, அதனை நோக்கியதும், நின் பாகன் குதிரைகளைப் பூட்டுதலை ஆராய்ந்தவனாக வளவிய நின் தேரினைச் செலுத்த, நீயும் மீண்டு நின்னூர்க்குச் செல்லுதலை விரும்புதலை இனியேனும் கைவிடுவாயாக!*

**சொற்பொருள்:** *1. எவ்வம் - காமநோயால் வந்துற்ற துன்பம். 2. பொதும்பு - சோலை; கழிப்பி - கழித்து. 3. மாலை மால்கொள மாலைப்பொழுதும் மயக்கங்கொண்டு வந்ததாக. பண் ஆய்ந்து - பூட்டுதலை ஆராய்ந்து; பண்ணல் - பூட்டல். 4. வண்டேர் - வளவிய தேர்; வளப்பம் பொலிவும் உறுதிப் பாடும். 6. செல்லா நல்லிசை - கெடாத நல்லபுகழ், திரையன் - குறுநில வேந்தருள் ஒருவன். 8. இளநலம் - இளமைச் செவ்வி; இளமையின் புதுப்பொலிவால் அமைந்த அழகு. 10. வள் எயிறு - கூரிய பற்கள். வயமீன் - வலிமையுடைய மீன்; சுறாமீன். கொட்குதல் - திரிதல். 11. மான்றின்று - மயக்கம் கொண்டது. 12. வீட - கழிய; நீங்க. 14. பசுமீன் - பசியமீன்; புதிதாகப் பிடித்துவந்த மீன். 15. மிதவை - கூழ். ஆர்த்துவம் நினக்கே - நினக்கு யாம் உண்பிப்போம்; 'மாவார்குநவே' எனவும் பாடம். அதற்கு. நின் குதிரைகள் உண்பதாக என்று பொருள். 17. குடபுல உறுப்பில் - மேற்கு மலையாகிய பொதியிலினின்றும் பெற்ற சந்தனத்தில். 19. எல் - பகற்பொழுது. 20. கூர்வளி - கடுங்காற்று; புயற்காற்று. 21. கோட்சுறா - கொல்லும் தன்மையுடைய கொடிய சுறாமீன். 24. உறைவின் ஊர் - தங்குதற்கு இனிதாயிருக்கும் ஊர்.*

**விளக்கம்:** செலவு விருப்புறுதல் ஒழிகதில்' என்றது, அவனை இரவுக்குத் தங்கிபோமாறு விரும்பியதாம். அது அவனால் ஏலாதாகவே, அதனால் தன் காதலி உறுகின்ற துயருக்கு இரங்கி, அவன், அவளை மணந்து பிரிவாயது வாழ்தலைத் தன்னுள் நாடுவான்' என்று அறிதல் வேண்டும்.

'பசுமீன் நொடுத்த வெண்ணெல்மாத் தயிர்மிதி மிதவை ஆர்த்துவம்' என்றது, கடலிற் சென்றார் திரும்பியதும், புது மீனை நெல்லுக்கு மாற்றி வந்துள்ளதும் உணர்த்தினதாம். இதனால், தலைவியின் தகப்பனும் தமையன்மாரும் இல்லிலே உள்ள குறிப்பும் பெறலால், அவன் இரவில் தங்கிச் செல்லல் முற்றவும் இயலாதென்பதனை மேலும் வலியுறுத்தியதுமாம்.

'வடவர் தந்த வான்கேழ் வட்டம்' வடபுலத்தார் கொணர்ந்த வெண்ணிற வட்டக்கல்; இது சந்தனம் அறைப் பதற்கு உகந்தது. 'வடமலைப் பிறந்த வான் கேழ்வட்டத்தைத் தென்மலைப் பிறந்த சந்தனம் மறுக' எனச் சிலப்பதிகாரம் உரைப்பதும் காண்க

**மேற்கோள்:** 'இதனுள், தனக்கும் புரவிக்குக் கொடுப்பன கூறித் தடுத்தவாறு காண்க' என, இச் செய்யுளை, 'நாற்றமும் தோற்றமும்' என்னும் தொல்காப்பியக் களவியற் சூத்திர உரைக்கண், 'வேளாண் பெருநெறி வேண்டிய விடத்து' என்னும் பகுதிக்குக் காட்டி உரைப்பர், நச்சினார்க்கினியர்.

## 341. உய்யும் தன்மை இல்லை!

**பாடியவர்:** ஆவூர் மூலங்கிழார். **திணை:** பாலை. **துறை:** பிரிவின்கண் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(தலைமகனைப் பிரிந்து, அந்தப் பிரிவின் வேதனைக்கு ஆற்றாதவளாகப் பெரிதும் வாட்டமுற்று மெலிந்து, துயருற்றிருக்கின்றனள் ஒரு தலைமகள். அவள்பாள் அன்புடைய தோழிக்கு அவளுடைய வருத்தமும் வாட்டமும் பெரிதும் கவலையைத் தருகின்றன. அவன் குறித்தபடியே வருவான்; அதுவரை ஆற்றியிருப்பாயாக' என்று கூறித், தலைமகளுக்குத் தேறுதல் கூறுகின்றனள் அவள். அப்போது, தலைமகள், தன்னுடைய நிலையினைத் தெளிவுபடுத்துவாளாகத் தன் தோழிக்குக் கூறுகின்ற முறையிலே அமைந்தது இச்செய்யுள்.)

**உய்தகை இன்றால் - தோழி - பைபயக்**
**கோங்கும் கொய்குழை உற்றன குயிலும்**
**தேம்பாய் மாஅத்து ஓங்குசினை விளிக்கும்**

**நாடுஆர் காவிரிக் கோடுதோய் மலிர்நிறைக்**
**கழைஅழி நீத்தம் சாஅய வழிநாள்**

**மழைகழிந் தன்ன மாக்கால் மயங்குஅறல்**
**பதவுமேயல் அருந்து துளங்குஇமில் நல்லேறு**
**மதவுடை நாகொடு அசைவீடப் பருகி**
**குறுங்காற் காஞ்சிக் கோதை மெல்லிணர்ப்**
**பொன்தகை நுண்தாது உறைப்பத் தொக்குஉடன்**

**குப்பை வார்மணல் எக்கர்த் துஞ்சும்**
**யாணர் வேனிலமன் இது-**
**மாண்நலம் நுகரும் துணையுடை யோர்க்கே.**

*தோழி!*

*கோங்க மரங்களும் மெல்ல மெல்லக் கொய்யப்படும் இளந்தளிர்களைப் பெற்றுள்ளன. தேன் வழிகின்ற மாமரத்தின் உயரமான கிளையிலே இருந்தபடியாகக் குயிலும் கூவுகின்றது.*

*நாடெல்லாம் நீர்வளத்தினை நிறைக்கும் காவிரியின் கரையினைத் தொட்டுக்கொண்டு சென்ற பெருவெள்ளத்தின் ஓடக்கோலும் மறையும் அளவுக்கு விளங்கிய நீர்ப்பெருக்கம் வற்றிப்போகிய பிற்றை நாளிலே*

*மழை பெய்து கழிந்தாற் போலப் பெரிய வாய்க்கால்களிலே தங்கிய கலங்கலான நீரினை, அறுகம் புல்லாகிய உணவினை அருந்திவரும் அசையும் திமிலினைக் கொண்ட நல்ல எருதும், வலியுடைய தன் நாவினாலே தன் தளர்ச்சி போகும் படியாகக் குடித்துவிட்டுக், குறுகிய அடியினையுடைய காஞ்சிமரத்தின் மாலைபோன்ற மெல்லிய பூங்கொத்துக்களினின்றும் பொன்னின் தன்மையுடைய பூந்தாதுகள் தன்மீது உதிர்ந்து கொண்டிருக்கும்படியாக, ஒருங்கு தொகுதிப்பட்டுக் கூடிய நெடிதான மணல்மேட்டினிடத்தே கிடந்து உறங்கிக் கொண்டிருக்கும்.*

*இத்தகைய இந்தக் காலமானது, மாட்சியுடைய இன்ப நலத்தினை நுகருகின்ற துணையாயினோரைப் பக்கலிலே கொண்டிருப்போர்க்குப் புதுமகிழ்வு தருகின்ற வேனிற் பருவம் ஆகும். அதனால், நாம் அடைந்தது என்னவோ? (யாதும் இல்லையே? அதனால்) இனி, நாம் உயர்ந்து இருப்பதற்கான ஒருவகையே நமக்கு இல்லையாகும்!*

**சொற்பொருள்:** *1. உய்தகை - உய்ந்திருக்கும் தன்மை; பிழைத் திருக்கும் நிலை. 2. கொய்குழை - கொய்யப்படும் தளிர்; இளந்தளிர். 3. தேம்பாய் மா - தேன் சொரியும் மாமரம்; மா*

பூத்துக் குலுங்கி அப்பூக்களினின்றும் தேன் வழிகின்றது என்பது கருத்து. விளிக்கும் - கூப்பிடும்; கூவும். 4. நாடார் காவிரி - நாடுகளை உண்பிக்கும் காவிரியும் ஆம். கோடு - கரை மலிர்நிறை - மிக்க நிறைவு; இது மிக்க வெள்ளப் பெருக்கினை உணர்த்துவதாம். 5. கழை - ஓடக்கோல். மாக்கால் - பெரிய வாய்க்கால். 6. மயங்கு அறல் - கலங்கிய அறல்பட்ட நீர். 7. பதவு - அறுகம் புல். இமில் - தமில். 8. அசை வீட - தளர்ச்சி நீங்க. 9. கோதை - மாலைபோன்ற. 10. பொற்றகை - பொன்னைப் போன்ற 11. எக்கர் - மணல்மேடு 12. யாணர் வேனில் - புது வருவாயினை உடைய இளவேனில்; புதுவருவாய் - காதலர்க்குக் கிடைக்கும் புதுப்புதுத் தகையவான இன்பநலம்.

**விளக்கம்:** இளவேனிலின் வருகையின்கண் மாமரம் பூத்தலும், அதன்கண் குயிலிருந்து விளித்தலும் இயல்பாம். அதனைக் குயிலும் தேம்பாய் மாஅத் தோங்குசினை விளிக்கும்' என நயமுடன் கூறினர்.

'பதவு மேயல் அருந்து துளங்கிமில் நல்லேறும் மதவு நடை நாகொடு அசை வீடப் பருகி' எனவும் 8, 9வது அடிகள் வழங்கும், அப்போது, நல்ல ஏறும், வலிமையான நடையுடைய தன் இளம்பசுவுடன் கூடித் தம் தளர்வு நீங்க இரண்டும் நீர் பருகி' என்று பொருள் கொள்க. 'நல்லெறு தழீஇ நாகு பெயர் காலை' என்று ஐங்குறு நூற்றுத் தொடரும், இக் கருத்தினை வலியுறுத்தும். அதனைக் காண்பவள் தன் நிலைக்கு ஏங்கி வருத்தமுற்றவளாகி நொந்தனள் என்க.

யாணர் வேனில் இன்பத்தைக் காதலர்க்கு அளிக்கும் வேனிற் பருவம். 'குப்பை வார்மணல் எக்கர்த் துஞ்சும் என்றதனால், இது நெய்தற்கண் பாலை என்று உணர்க.

## 342. போற்றுவாய் நெஞ்சமே!

**பாடியவர்:** மதுரைக் கணக்காயனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** அல்லகுறிப்பட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** பாண்டியரின் ஆண்மை.

(தன் மனங்கவர்ந்த காதலியைக் கண்டு கூடிமகிழும் விருப்பத்துடன் வந்து, ஆனாற் குறித்த இடத்திலே அவளை அடையப் பெறாதவனாகிச் சோர்வுற்றுத் திரும்புகின்றான் ஒரு தலைவன். அப்படித் திரும்புங்கால் அவன், தன் நெஞ்சோடு சொல்லி வருந்துகின்ற முறையிலே அமைந்தது இச் செய்யுள்.)

**ஒறுப்ப ஓவலை நிறுப்ப நில்லலை**
**புணர்ந்தோர் போலப் போற்றுமதி நினக்குயான்**

**கிளைஞன் அல்லனோ - நெஞ்சே - தெனாஅது**
**வெல்போர்க் கவுரியர் நல்நாட்டு உள்ளதை**
**மண்கொள் புற்றத்து அருப்புஉழை திறப்பின்**
**ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்**
**ஏவல் இளையர் தலைவன் மேவார்**
**அறுங்குறும்பு எறிந்த ஆற்றலொடு பருந்துபடப்**
**பல்செருக் கடந்த செல்லுறழ் தடக்கை**
**கெடாஅ நல்இசைத் தென்னன் தொடாஅ**
**நீர்இழி மருங்கில் கல்லளைக் கரந்தஅவ்**
**வரையர மகளிரின் அரியள்**
**அவ்வரி அல்குல் அணையாக் காலே!**

நெஞ்சமே!

மண்ணினால் ஆகிய புற்றினை உடையதான காட்டரணின் இடத்தினை உடைத்துத் திறத்தலோடு, அவற்றுள் விளங்கும் பகைவரது பசுமந்தைகளைக் கவர்ந்து கொண்டும் செல்லுகின்ற. கள்வர்களின் முதல்வனாக மூதூரினிடத்தே விளங்குபவனும், ஏவலாளரான இளையர்கள் பலருக்கும் தலைவனாகவும், தன்னொடும் ஒத்துப்போகாதவரின் அரியசிற்றரண்களை இழித்த வலிமை உடையவனாகவும் பருந்துக் கூட்டங்கள் வட்டமிட்டு வருமாறு பல போர்களிலே பகைவரைக் கொன்று வெற்றிபெற்றவனாகவும் இடியுடனும் மாறுபாடு கொள்ளும் பெரிதான கையினை உடையவனாகவும், என்றும் கெடாத நல்ல புகழினை உடையவனாகவும் விளங்குபவன் தென்னவனாகிய பாண்டியன் ஆவான்.

தென்திசைக் கண்ணதாகிய, வெல்லும் போராற்றலுடைய அத்தகைய பாண்டியனது நல்ல நாட்டினிடத்தே உள்ளதாகிய, தோண்டப்படாத நீரான அருவிகள் வீழுகின்ற மலைப்பகுதியில், அதனைச் சார்ந்துள்ள மலைக்குகையிலே மறைந்துள்ள வரையர மகளிரைப்போல, அடைதற்கு அரியவளாக இருப்பவள், அழகிய வரிகளையுடைய அல்குலினைக் கொண்டவளான நம் தலைவியும் ஆவள்.

அவளை யாம் அணையப் பெறாதவிடத்து, நின்னை யாம் ஒறுத்தேமாயினும், நீ அவளை நினைதலைக் கைவிடுவாய் அல்லை! 'அவள்பாற் செல்லேல்' என நின்னை நிறுத்தினே மாயினும், நீ எம்மிடத்துக் கூடிநிற்பாயும் அல்லை! நினக்கு யான் உறவுடையேன் அல்லனோ? (அதனைக் கருதியாயினும்) ஒன்றிக்கலந்த நட்பினரைப் போலவேனும் எனக்குத் துணை நின்று நீ இதுகாலை உதவுவாயாக!

**சொற்பொருள்:** 1. ஒறுத்தல் - வன்சொற் கூறித் தடுத்தல்; நிறுத்தல் - தடுத்து நிறுத்த முயலுதல். 2. புணர்ந்தோர் - கலந்த நட்பினர். 3. கிளைஞன் - உறவினன். 4. கவுரியர் - பாண்டியர். 5. அருப்பு - காட்டரண். உழை - இடத்து. 7. மேவார் - பொருந்தாதோர்; பகைவர்; 8. குறும்பு - சிற்றரண். எறிதல் - அழித்தல். 9. செரு - போர்; செல் உறழ் தடக்கை - இடியுடன் மாறுபடும் பெரிய கை; அடிபட்டவர் மீளார் என்பது கருத்து. செல் - மேகம் ஆம்; அப்போது மேகத்தோடு மாறுபடும் பெரிய கை என்க; இது வள்ளன்மை மிகவுடைமையைக் குறிப்பதாகும். அடுத்துவரும், 'கெடாஅ நல்லிசை' என்றதற்கு, இப்படிப் பெருங் கொடையாண்மை கொண்டவன் என்றலே சிறப்பாக அமையும். 10. தொடாஅ நீர் - தோண்டப் பெறாத நீர் மழை நீர் என்பது கருத்து. 11. நீரிழி மருங்கிற் கல்லளை - அருவிக்கண்ணதாகிய மலைக்குகை என்க. வரையர மகளிர் - மலையுறு தெய்வங்கள்.

**விளக்கம்:** 'தலைவி அடைதற்கு அரியவள்' எறு கூறுவான், 'பாண்டியரின் பல்வேறு பேராற்றல்களையும் கூறி, அவருக்கு உரியதான மலையிடத்து அருவிக்கரை மலைக்குகையுள் மறைந்திருக்கும் வரையர மகளிரைப்போல அடைதற்கு அரியவள்' என்றனன். 'நிரையிதழ் குவளைக் கடிவீ தொடினும் வரையர மகளிர் இருக்கை காணினும், உயிர் செல வெம்பிப் பனித்தலும் உரியிர்' என்று உரைக்கும் மலைபடுகடாம் (189, 191) இவர் காட்சியே காண்பார்க்கு உயிர்க்கிறுதி விளைக்கும் தன்மையுடைத்து என்று கூறும். இதனால், அவரை அடைய இயலாத தன்மை நன்குபுலனாகும்.

குறும்பு அரண். 'கொடுவில் எயினர் குறும்பில்') பெரும்பாண். 129) என உரைத்தலும் காண்க.

நெஞ்சத்தை, 'அவளை நினையாதிருக்குமாறு கூறிக் கடிந்து கொண்டும் பயனில்லை; தன் வயமாக நிறுத்தற்கு முயன்றும் இயலுமாறில்லை' என்பான், 'ஒறுப்ப ஓவலை; நிறுப்ப நில்லலை' என்றனன். இது அவனுடைய வேட்கையின் மிகுதியினை உரைப்பதாகும். அதனைத் தடுக்கமாட்டாது அவன் கொண்ட பெரிதான கலக்கத்தினையும் காட்டுவதாகும்.

மேலும், தலைவி இற்செறிக்கப்பட்டதனையும், அவள் மனையின் கடிகாவல் உடைமையும், இதனால் உய்த்து உணரவும் படும். இதனால் அவளை மணம்வேட்டு வருதலைப்பற்றிய நினைவிலே அவனுள்ளம் செல்லும் என்பதும் அறிதல் வேண்டும்.

## 343. நினைந்தனை தகுமோ?

**பாடியவர்:** *மதுரை மருதன் இளநாகனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் இடைச்சுரத்து மீளக்கருதிய நெஞ்சினைக் கழறிப் போயது.*

*(ஒரு தலைவன் தன் காதல் மனைவியோடு கழிபேரின் பத்தே திளைத்திருந்தவன். பொருளார்வம் முனைந்து எழுதலினாலே, பிரிதற்கு இயலாத அவளையும் பிரியத் துணிவுகொண்டான். அவளைப் பிரிந்து, கொடிய பாலைவழியினும் நெடுந்தொலைவு சென்று விட்டவன், இடையே தன் நெஞ்சத்துக் காதலியின் நினைவு மிகுதியாக எழ, அப்போது தன் நெஞ்சுடன் கூறி, அதனைத் தகைந்து மேற்செல்லுவதாக அமைந்தது இந்தச் செய்யுள் ஆகும்.)*

**வாங்குஅமை புரையும் வீங்குஇறைப் பணைத்தோள்**
**சில்சுணங்கு அணிந்த பல்பூண் மென்முலை**
**நல்லெழில் ஆகம் புல்லுதல் நயந்து**
**மரம்கோள் உமண்மகன் பெயரும் பருதிப்**
**புன்தலை சிதைத்த வன்தலை நடுகல்**

**கண்ணி வாடிய மண்ணா மருங்குல்**
**கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்துஅவ்**
**ஆறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்கும்**
**கண்பொரி கவலைய கானத்து ஆங்கண்**
**நனந்தலை யாஅத்து அம்தளிர்ப் பெருஞ்சினை**

**இல்போல் நீழல் செல்வெயில் ஒழிமார்**
**நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்**
**புறம்நிறை பண்டத்து பொறை அசாஅக் களைந்த**
**பெயர்படை கொள்ளார்க்கு உயவுத்துணைஆகி**
**உயர்ந்த ஆள்வினை புரிந்தோய் பெயர்ந்துநின்று**

**உள்ளினை - வாழிஎன் நெஞ்சே - கள்ளின்**
**மகிழின் மகிழ்ந்த அரிமதர் மழைக்கண்**
**சின்மொழிப் பொலிந்த துவர்வாய்ப்**
**பன்மாண் பேதையின் பிரிந்த நீயே.**

*என்னுடைய நெஞ்சமே! நீ வாழ்வாயாக*

*கள்ளுண்ணலினாலே கொள்ளுகின்ற மகிழ்வினுங் காட்டில் மகிழ்ச்சி கொள்ளுவதற்கு ஏதுவாக விளங்கியவள்.*

*செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ச்சியான கண்களை உடையவள்; சிலவாகிய மொழிகளால் பொலிவுற்ற பவளம்*

போன்ற வாயினை உடையவள்; மற்றும் பலவித மாண்புகளையும் உடையவள்; பேதைமை கொண்டோளான எம் தலைவி. அவளைப் பிரிந்தும் நீ வந்தனை! (அந்த அளவிற்குத் துணிவு உடையையாக இருந்தனை என்பது கருத்து)

உப்பு வாணிகம் செய்வோண் கொண்டுசெல்லுகின்ற வண்டியின், மரத்தினைக்கொண்ட உருள்களிடத்தே விளங்கும் பொலிவற்ற பூணானது சிதைத்தலினாலே, வன்னிலத்தேயுள்ள நடுகல்லின் வாடிப்போன கண்ணியும் நீராட்டப்பெறாத இடமும் கொண்ட பகுதியிலே, கூர்மையான உளியினாலே செதுக்கப்பெற்ற எழுத்துக்கள் மறைந்து போயிருக்கும். அவ் வழியிடைச் செல்லுகின்ற புதியரான வழிப்போக்கர்களுக்கு, அப்படிச் சிதைந்துபோன எழுத்துக்கள் வேறாகப் பொருள்தந்து விளங்கும் இடங்கள் பொரிந்து கிடக்கும் கவர்த்த நெறிகளை யுடைய காட்டுப் பகுதியாகிய அவ்விடத்தே-

பரந்த தலைப்புறத்தையுடைய யாமரத்தின் அழகிய தளிர்களைக் கொண்ட பெரிய கிளைகளின் நீழல் இல்லின்கண் இருப்பதுபோல இருக்கும். தாம் வெயிலிடத்தே வந்த வெம்மை நீங்குவதற்கு, நீண்ட செவிகளையும் குறுகிய கால்களையும் உடைய ஆண்கழுதைகளின் முதுகிடத்தே நிறைத்துள்ள பண்டத்துச் சுமையினாலாகிய தளர்வினைப் போக்கியவராகி, அந் நிழலினின்றும் மீண்டு புறப்படாதிருக்கும் வணிகர்க்குப், பேச்சுத் துணையாக அமைந்து, உயர்ந்த ஆள்வினையினைச் செய்தாயும் நீயே! (ஆயினும், இப்போது),

வளைந்த மூங்கிலைப்போன்றிருக்கும் பூரித்த இறையினை யுடைய பெருத்த தோள்களையும், சிலவாகிய தேமல்களை அணிந்த பல பூண்களையுடைய மென்மையான முலைகளையும் உடைய, தலைவியின் நல்லழகுமிக்க மார்பினைத் தழுவுதலை விரும்பி, நின் உறுதியினின்றும் பிறழ்ந்தாயாக, நின்று நினைந்தனையே இது நினக்குத் தகுதியுடையதாகுமோ? (ஆகாது காண் என்பது, கருத்து)

**சொற்பொருள்:** 1. வாங்கு அமை - வளைவான மூங்கில். இறைசந்து. பணைத்தோள் - பூரிப்பான தோள்கள். 2. பூண் - ஆபரணம் பூணுதற்கு உரிய அணிகள். 3. அகம் மார்பு. 4. பருதி உருள். 5 புன்றலை - பொலிவற்ற பக்கம்; பூண். 6. மண்ணா- கழுவாத. 7. குயின்ற - தொளைத்த; செதுக்கிய. 8. பயம் படுக்கும் - பொருளினவாக விளங்கும். 9. கண் பொரி - இடங்கள் பொரிந்துபோன. 10. நனந்தலை - பரந்த தலைப்புறத்தையுடைய; பரந்த இடத்தின்கண் உள்ள எனலும் ஆம்.13. புறநிறைப் பண்டம்

- கழுதை முதுகின் இருபுறமுமாகத் தூக்கியுள்ள நிறைவான பொருட் பொதிகள். அசாஅக் களைந்த - தளர்வினைப் போக்கிய. 15. ஆள்வினை - முயற்சி. 18. துவர்வாய் - பவளம் போன்ற வாய்; செவ்வாய் எனவும் பாடம். 19. பிரிந்த - பிரிந்துவந்த; பெயர்ந்த எனவும் பாடம்.

**விளக்கம்:** 'வீழ்ந்தாரின் பெயரும் பீடும் பொறித்த நடுகல்லிலே, வண்டிச் சக்கரத்துப் பூண் உராய்தலால், அதன் கண் செதுக்கிய எழுத்துக்கள் சிதைந்து போக, அது வழிச் செல்வார்க்கு வேறுபொருள்பட விளங்கும் காடு' என்றனர். இதனால் காட்டுவழியின் கொடுமை புலப்படும். 'வேறு பயம் படுக்கும்' என்பதற்கு, அந் நடுகல்லிற் கண்ட எழுத்துக்கள், வீழ்ந்தாரின் பெயரையும் பீட்டையும் உணர்த்துதலின்றி, வழியிடை நேரக்கூடும் கொடுமையினை உணர்த்துவதாக விளங்கும்' எனலும் பொருத்தமானதாகும்.

வணிகர்க்கு உயவுத்துணையாயிருந்த ஆள்வினையினைப் பற்றிக் கூறினான், அத்தகைய நிலையில் தொடர்பற்றோர்க்குத் துணையாக அமைந்த தான், தன் காதன் மனையாளுக்குத் துணையின்றித் தனித்து வாடவிட்டு வந்த நிலையினை நினைந்தவனாக என்க.

'கள்ளின் மகிழின் மகிழ்ந்த அரிமதர் மழைக்கண், சின் மொழிப் பொலிந்த துவர்வாய்ப் பன்மாண் பேதை' என்றதனை நன்கு சிந்திக்க வேண்டும். இது, அவளை அவன் தேற்றித் தெளிவித்துப் பிரியும் காலத்தே, அவள் நின்றிருந்த நிலையினை நினைந்ததும் ஆம். கள்ளுண்டு மகிழ்ந்தாரின் கண்கள் சிவப்புற்றுக் கலங்குதல்போலத், தன் காதலனின் பிரிவினுக்கு ஆற்றாது அவள் கண்கலங்க நின்றதனையும், பேச்சும் எழாதாளாகிச் சின்மொழி பயிற்றியதனையும் எண்ணியவனாக அவன் வருந்தினான் என்க.

## 344. நகைமுகம் பெறுவேம்!

**பாடியவர்:** மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்; அம்மள்ளனார் எனவும் பாடம். **திணை:** முல்லை. **துறை:** வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகர்க்குச் சொல்லியது.

(அன்புறு தலைவியைப் பிரிந்தவனாக வேற்று நாட்டிற்குப் பணிமேற்கொண்டு சென்றிருந்தான் தலைவன் ஒருவன். அவன் சென்ற வினை முடியும்வரையும் அவனுள்ளம் அதன் மேற் செல்லுதலால், அவள் பிரிவு அவனைப் பெரிதும் வாட்டவில்லை. ஆனால், வினை நிறைவுற்றதும், அவன் நினைவெல்லாம்

அவளிடத்தேயே சென்றது. அவளுடைய வாட்டமும் துயரமும் அவன் கண்ணெதிரே தோன்றுகின்றன. தன் தேர்ப் பாகனை விளித்துத் தேரினை விரைவாகச் செலுத்துவதற்கு அவன் கூறுவது என்னும், துறையமைந்த செய்யுள் இது வாகும்.)

**வளமழை பொழிந்த வால்நிறக் களரி**
**உளர்தரு தண்வளி உறுதொறும் நிலவெனத்**
**தொகுமுகை விரிந்த முடக்காற் பிடவின்**
**வைஏர் வால்எயிற்று ஒள்நுதல் மகளிர்**
**கைமாண் தோளி கடுப்பப் பையென**

**மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்**
**எல்லிடை அறாஅ அளவை வல்லே**
**கழல்ஒளி நாவின் தெண்மணி கறங்க**
**நிழல்ஒலிப் பன்ன நிமிர்பரிப் புரவி**
**வயக்குஉறு கொடிஞ்சி பொலிய வள்பு ஆய்ந்து**

**இயக்குமதி - வாழியோ கையுடை வலவ!**
**பயப்புறு படர் அட வருந்திய**
**நயப்புஇன் காதலி நகைமுகம் பெறவே.**

தேரை நடத்துதலிலே கைவன்மையுடைய பாகனே! வெண்ணிறம் பொருந்திய களர்நிலத்தையுடைய காட்டிலே வளமான மழையும் பொழிந்தது. வளைந்த அடிப்புறத்தினை யுடைய பிடாமரத்தின், தொகுதிப்பட்டு விளங்கிய அரும்புகள் வீசும் குளிர்ந்தகாற்று தம்பால் மோதுந்தோறும், இதழ் விரிந்து, நிலவொளி என்னுமாறுபோல ஒளியுடன் விளங்கி கொண்டு மிருக்கும், கூரிய அழகான வெண்மையான பற்களையும் ஒளிதங்கிய நெற்றியினையும் உடைய மகளிர்களின், ஒழுங்கு மாட்சிமைப்பட்டு விளங்கும் 'தோளி' என்னும் ஆடலைப்போல, மெல்லென, மயிலினங்கள் தோள்பெயர்த்து ஆடலுமாயின, மரங்கள் செறிந்த காட்டின் இயல்பும் இங்ஙனம் ஆகியது.

அதனால், பசலை படர்தலால் உற்ற துன்பம் வருத்த வருந்தியிருக்கும், விரும்புதற்கு இனியவளான நம் காதலியின், நகையோடும் கூடிய முகத்தினை, யாம் பெறுதல் வேண்டும்.

ஆகவே, இருள் இடைப்படா முன்பாகவே, கழல் ஒலிபோல முழக்கும் நாவினையுடைய தெளிந்த மணிகள் ஒலி முழங்க, நிழலின் தழைத்தலை யொத்த நிமிர்ந்து செல்லும் குதிரைகளைக் கடிவாளத்தை ஆய்ந்து செலுத்தினாயாக, விளக்கமுறும் தேர்மொட்டு அழகுடன் விளங்குமாறு, தேரினை நீயும் விரைந்து செலுத்துவாயாக.

**சொற்பொருள்:** *1. வால்நிறக் களரி - வெண்ணிறம் உடையதான களர்பட்டு விளங்கிய நிலப்பகுதி; இது கோடையின் வெம்மையினாலே ஆயது என்க. 2. உளர்தரு - வீசுதலைக் கொண்ட. தண்வளி - குளிர்ந்த காற்று; மழை பெய்தலாற் காற்றும் குளிர்ந்தது என்க. 3. தொகுமுகை - தொகுதிப் பட்டு விளங்கும் அரும்புகள். 5. தோளி - தோள்களை இயக்கி மகளிர் ஆடுகின்ற ஆட்டவகையினைக் குறிப்பது . 6. மரம் பயில் - மரங்கள் செறிந்துள்ள. 8. கழல் ஒலி நா - கழலின் ஒலிபோல ஒலி எழுப்புகின்ற மணியின் நாக்கு; 'சுழல் ஒலி நா' எனவும் பாடம், சுழற்சிகொண்டு ஒலிமுழக்கும் நா என்பது பொருள். 10. வள்பு - கடிவாளம். 11. கையுடை வலவன் - தேர் செலுத்தும் தொழில்வல்ல பாகன். 13. நயப் பின் - விரும்புதற்கினிய எனலும் ஆம்.*

**விளக்கம்:** *' வளமழை பொழிந்த வானிறக் களரி உளர் தரு தண்வளி உறுதொறும் நிலவெனத்' தோன்றிற்று எனவும், 'தொகுமுகை விரிந்த முடக்காற் பிடவின் வையேர் வாலெயிற்று ஒண்ணுதல் மகளிர்' எனவும் கூட்டிப் பொருள் கொள்ளலும் ஆம். பிடவு முகை அவிழக் கார்காலத் தொடக்கம் வந்தது என அறிந்து, தலைவனின் வரவைத் தலைவி விரும்பி நலிவாள் என்பதனை, 'வான் பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகைய... நிற்றுறந் தமைகுவரல்லர்' எனத் தோழி வற்புறுத்தும் ஐங்குறுநூற்றுச் செய்யுளானும் அறியலாம்.*

*தோள் நோக்கி ஆடும் ஆட்டம் 'தோளி' எனப்பட்டது. திருவாசகத்துள் வரும் 'திருத்தோணாக்கம்' என்பதும், இத் தகையவொரு ஆடன்மரபினைக் கூறும். மயிலின் ஆடலுக்கு இவ்வாடலை உவமைகூறிய நயத்தினை அறிந்து இன்புறுக.*

*'நிழல் ஒலிப்பன்ன நிமிர்பரிப் புரவி நிழல் தழைத்தலை யொத்த நிமிர்ந்து செல்லும் குதிரை; நிழல் தழைத்தலை யொத்த என்பது, குதிரையின் நிறத்தினைக் குறித்தது என்றும் கூறுவர்.*

*'நகை முகம் பெறவே என்றதனால், பிரிவுத்துயரினால், அவள் நகையிழந்து வாட்டமுற்றவளாயிருப்பாள் எனப் பசப்புறு படரட வருந்திய அவளுடைய தன்மையைக் கூறியதும் அறிக.*

## 345. காடு கவின் பெறுக!

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை** பாலை. **துறை:** தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

*(தலைமகன் ஒருவனும், அவனுடைய உளங்கலந்த காதலியொருத்தியும்இன்புற வாழ்ந்து வருகின்றனர். அந்நாளிலே*

*தலைமகன் வினைமேற் கொண்டு தலைவியைப் பிரிந்து வேற்று நாடு செல்ல வேண்டியதாகின்றது. அதனை உணர்ந்த அவள், தானும் உடன் வருவதாகப் பிடிவாதம் செய்கின்றாள். அவளுடைய மனநிலையினை அறிந்த அவனும், 'சில நாட்கள் சென்றபின் யாம் செல்வோம்' எனக் கூறி, அவளையும் உடனழைத்துப் போவதுபோலக் காட்டித் தேற்றுகின்றான். ஆனால், வினையின் முதன்மை காரணமாக, அவன் அவளைத் தனித்திருக்கவிட்டுப் பிரிந்து சென்றுவிடுகின்றான். அப்போது, அவன் செயலைக் குறித்துத் தலைவி தன் தோழிக்குச் சொல்லுகின்ற தன்மையிலே அமைந்தது இச்செய்யுள்.)*

**'விசும்புதளி பொழிந்து வெம்மை நீங்கித்**
**தண்பதம் படுதல் செல்கெனப் பன்மாண்**
**நாம்செல விழைந்தன மாக 'ஓங்குபுகழ்க்**
**கான்அமர் செல்வி அருளலின் வெண்கால்**
**பல்படைப் புரவி எய்திய தொல்லிசை**

**நுணங்குநுண் பனுவற் புலவன் பாடிய**
**இனமழை தவழும் ஏழிற் குன்றத்துக்**
**கருங்கால் வேங்கைச் செம்பூம் பிணையல்**
**ஐதுஏந்து அல்குல் யாம் அணிந்து உவக்கும்**
**சின்னாள் கழிக! என்று முன்னாள்**

**நம்மொடு பொய்த்தனர் ஆயினும் தம்மொடு**
**திருந்துவேல் இளையர் சுரும்புண மலைமார்**
**மாமுறி ஈன்று மரக்கொம்பு அகைப்ப**
**உறைகழிந்து உலந்த பின்றைப் பொறைய**
**சிறுவெள் அருவித் துவலையின் மலர்ந்த**

**கருங்கால் நுணவின் பெருஞ்சினை வான்பூச்**
**செம்மணற் சிறுநெறி கம்மென வரிப்பக்**
**காடுகவின் பெறுக - தோழி - ஆடுவளிக்கு**
**ஒல்குநிலை இற்றி ஒருதனி நெடுவீழ்**
**கல்கண் சீக்கும் அத்தம்**

**அல்குவெயில் நீழல் அசைந்தனர் செலவே.**

*தோழி!*

*வானம் மழையினைப் பொழிந்து, அதனால் காட்டின் வெம்மையும் நீங்கிப்போய்க், குளிர்ச்சியான நிலைமையினையும் அது அடைந்துள்ளமையினால், செல்வீராக எனக் கூறிய வராக நாம் பலவாறான மாட்சியுடனும், அவனுடன் செல்வ தற்கு விரும்பி யிருந்தோம். அவ்வனையும் வேண்டினோம். அது காலை-*

'உயரிய புகழ் வாய்ந்தவள் கானமர் செல்வியாகிய கொற்றவை; அவள் அருள் செய்தலினாலே, வெண்மையான கால்களையும், பலவான படைகளையும் உடைய குதிரைகளை அடைந்தனன், பழையதான புகழினை உடையோனாகிய, மிகநுண்மையான செறிவுடன் கூடிய செய்யுட்களைச் செய்வோனாகிய புலவன் ஒருவன் அப் புலவனால் பாடப்பெற்ற சிறப்பினைக்கொண்டது ஏழிற்குன்றம்; மேகக் கூட்டங்கள் படிகின்ற அந்த ஏழிற்குன்றத்துள்ள கரிய அடியினைக்கொண்ட வேங்கைமரத்தினது சிவந்த பூக்களாலே தொடுத்த பிணையலை, அழகிதாக உயர்ந்த நின் அல்குலிடத்தே அணிந்து மகிழ்வோம்; சில நாட்கள் செல்வதாக, என்றுகூறி முன் காலத்து நம்முடன் பொய்ம்மை கூறி, இப்போது பிரிந்து சென்றவர் நம் தலைவர், ஆயினும்-

அசையும் காற்றிற்குத் தளர்கின்ற தன்மையுடைய இற்றி மரத்தின் ஒன்றாகத் தனித்த நெடிய விழுதானது; பாறை யிடத்தைத் துடைத்திருக்கும் காட்டு வழியிலே பொருந்திய வெயிலினாலே, நிழலிடத்துத் தங்கியவராக நம் காதலர் செல்லுவதற்கு உதவியாகவும்,

தம்முடனே, வரும் திருந்திய வேலினை ஏந்தியோரான வீரரும், வண்டுகள் உண்ணுமாறு அணிந்து கொள்ளுதற்குத் தக்கதாகவும்,

சிறந்த தளிர்களை ஈன்றவாக மரக்கொம்புகள் தளைத் திருக்கும்படி மழையும் பெய்து நீங்கி, வானமும் வறண்ட பின்பு, குன்றிடத்தவாகிய சிறிதான வெள்ளிய அருவிகளின் நீர்த்துவலையினாலே மலர்ச்சி பெற்ற, கருத்த அடியினையுடைய நுணாமரத்தின் பெருத்த கிளைகளிற் பூத்த வெண்மையான பூக்கள், சிவப்பான மணலையுடைய சிறிதான வழியிடங்களில் எல்லாம், 'கம்'மென மணம் நிறைத்து அழகு செய்யக்காடும் அழகுபெற்று விளங்குமாக!

**சொற்பொருள்:** 1. தளி - மழை. 2. தண்பதம் - நிலம் குளிர்ந்த தன்மை. 4. கானமர் செல்வி - காடுகிழாள் கொற்றவை. 5. படை - சேணம். இசை - புகழ் 6. நுணங்கு நுண் பனுவல் - மிக நுண்ணிய கருத்துக்களைக் கொண்ட திட்பமான நூல். 7. இனமழை - மேகத்திரள். 9. இது ஏந்து - அழகிதாக உயர்ந்த. 12. மலைமார் - அணிதலின் பொருட்டாக. 13. முறி - தளிர் 14. உறை - மழை. 15. துவலை - அருவியின் மென்துளிகள். 16. நுணவு - நுணாமரம். வரிப்ப - அழகு செய்ய. 19. ஒல்குநிலை - தளரும் தன்மை. 20. சீக்கும் - துடைக்கும்.

**விளக்கம்:** *'கானமர் செல்வி அருளலின்.....புரவி எய்திய... பனுவற் புலவன்' என்றதனால், காளியின் அருள் பெற்றபுலவர் ஒருவரைப்பற்றிய செய்தி அறியப்படுகின்றது. நாம் செல விழைந்தனமாக......சின்னாள் கழிக என்று முன்னாள் பொய்த்தனர்; ஆயினும் காடு கவின் பெறுக' என அவன் அருளற்றவனாகத் தன்னைப் பிரிந்துசெல்லினும், தான் அவன்பால் அன்புடையவள் என்பது தோன்றத் தலைவி உரைப்பதனை அறிந்து இன்புறுக.*

## 346. நகையும் நன்றே!

**பாடியவர்:** *நக்கீரர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *தோழி தலைமகற்கு வாயின்மறுத்தது.* **சிறப்பு:** *பழையன் மாறனுடனே கிள்ளிவளவன் நடத்திய போரின் செய்தி; அதனாற் கோதைமார்பன் கொண்ட மகிழ்ச்சி.*

*(தலைமகன் பரத்தைமை கொண்டோனாக இருந்தான். ஒருசமயம், அவன் தன் வீட்டுக்குவந்து. அங்கேதலைவியின் உற வினையும் விழைகின்றான். அப்போது, நேராகத் தலைவியிடம் செல்வதற்கு நாணிய அவன், தன் தலைவியின் தோழியின் உதவியினை நாடுகின்றான். அவள், அவனுக்கு உதவமறுத்து, அவனுடைய ஒழுக்கத்தைப் பழித்து உரைப்பது இச் செய்யுளின் துறையாகும்.)*

**நகைநன்று அம்ம தானே - இறைமிசை**
**மாரிச் சுதையின் ஈர்ம்புறத்து அன்ன**
**கூரல் கொக்கின் குறும்பறைச் சேவல்**
**வெள்ளி வெண்தோடு அன்ன கயல்குறித்துக்**
**கள்ளார் உவகைக் கலிமகிழ் உழவர்**

**காஞ்சிஅம் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை**
**மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து.**
**பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி**
**வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை**
**மீதுஅழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்**

**பார்வல் இருக்கும் பயம்கேழ் ஊர-**
**யாம்அது பேணின்றோ இலமே - நீ நின்**
**பண்ணமை நல்யாழ்ப் பாணனொடு விசிபிணி**
**மண்ணார் முழவின் கண்ணதிர்ந்து இயம்ப**
**மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி**

**எம்மனை வாரா யாகி முன்னாள்**

**நும்மனைச் சேர்ந்த ஞான்றை அம்மனைக்**
**குறுந்தொடி மடந்தை உவந்தனள் - நெடுந்தேர்**
**இழையணி யானைப் பழையன் மாறன்**
**மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்**

**வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த**
**கிள்ளி வளவன் நல் அமர் சாஅய்க்**
**கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி**
**ஏதின் மன்னர் ஊர்கொளக்**
**கோதை மார்பன் உவகையிற் பெரிதே.**

*குறுகப் பறக்கும் இயல்பினையுடைய கொக்குச் சேவலானது, மாரிக் காலத்திலே, இறைப்பின் மேலிடத்துச் சுதை பூசியுள்ள குளிர்ந்த இடத்தைப் போலத்தோன்றும், இறகினை உடையது. அது, வெள்ளியாலே ஆகிய வெண்மையான இதழினைப்போல விளங்கும் கயல்மீனைப் பெற நினைக்கும்.*

*கள்ளினை உண்ட உவகையினாலே ஆரவாரித்து மகிழ்பவர் உழவர்கள். காஞ்சிமரத்தின் குறிய கட்டைகளைக் குத்தி, இனிய சுவையினை உடைய மெல்லிய தண்டினைக் கொண்ட சிறந்த கரும்புக் கழிகளைப் பலவாக வைத்து அடைத்து, நெற் பயிரினையுடைய பெரிய வயலின் பசிய பள்ளங்களிலே நீரைத்தேக்கி, வலிய இடத்தினையுடைய வளைந்த அணையினை வருத்த முற்று உழவர்கள் அமைப்பர். அதன் மேலிருந்தபடியாக*

*வழியும் விரைந்த நீரினை நோக்கியபடியே, மெல்ல மெல்ல நடந்தபடியாகக், கொக்குச்சேவல் கயலை எதிர்நோக்கி இருக்கும். அத்தகைய பயன் பொருந்திய ஊருக்கு உரியவனே!*

*நீ, நின் பாணனோடும் கூடியவனாக, இமுத்துக் கட்டுதலை யுடைய மார்ச்சனையமைந்த முழவின் கண்கள் அதிர்ந்து முழங்கிக்கொண்டிருக்க, நினக்கு மகிழ்ச்சி கொள்ளுதற்குரிய உரிமைச் சுற்றத்துடனே கள்ளுண்டு களித்தனை. எம் மனையிடத்து வாராயும் ஆயினை. இங்ஙனமாகி, நின் மனையாகிய பரத்தையின் இல்லினையும் சேர்ந்தனை. அப்போது-*

*அம் மனையிடத்தேயுள்ள குறிய வளையணிந்த இளையோ ளான நின் பரத்தையானவள், நெடிய தேரினையும் இழை யணிந்த யானையினையும் உடைய பழையன் மாறன் என்பானை, மாடங்கள் மலிந்த தெருக்களைக்கொண்ட கூடலாகிய அவ்விடத்தே, வெள்ளம்போன்ற பெரும்படையுடன் வேற்றுப் புலத்தே போரிடக் கருதி வந்து தங்கியிருந்த கிள்ளிவளவன் என்பான், நல்ல போரினிடத்தே அழித்துக், கடிய செலவினை*

யுடைய குதிரைகளுடன் யானைகளும் பலவாகப் பற்றிக் கொண்டு, பகைமன்னரின் ஊரினையும் தன்வசப்படுத்திக் கொள்ள, அதனையறிந்த கோதை மார்பன் கொண்ட மகிழ்வினும் பெரிதாக உவப்படைந்தனள் அல்லளோ?

யாமோ, அந்த உவகையினைக் கருதியவரும் அல்லேம். அங்ஙனமாகவும், நீ வந்து, தலைவியை விழைவது நன்கு நகைப்பதற்கே உரிய நிலையாகும்.

**சொற்பொருள்:** 1. நகை நன்று - நகையும் நன்றாக உள்ளது. இறை - இறைப்பு. 2. சுதையின் - சுண்ணாம்பு பூசப் பெற்ற 3. கூரல் - இறையினையுடைய. குறும்பறை - குறுகப் பறத்தலையுடைய. 4. வெண்தோடு - வெள்ளிய இதழ். குறித்து கருதி; கயலைப் பற்றி உண்ணுதலைக் குறித்ததாக. 5. கலிமகிழ் - மிக்க மகிழ்வு. 6. குறுந்தறி - குறுகிய கட்டைகள். குத்தி - அடித்து ஊன்றி. 7. நன்பல மிடைந்து - மிகப் பலவற்றை வைத்து அடைத்து. 8. பெருஞ்செய் நெல்லின் - நெல்லின் பெருஞ்செய் எனக் கூட்டிப் பொருள்கொள்ளுக. பாசவல் பொத்தி - பசிய பள்ளங்களை அடைத்துத் தேக்கி. 9. வருந்திக் கொண்ட - வருத்தமுடன் அமைத்துக் கொண்ட. கொடுஞ்சிறை - வளைவான அணை. 11. பார்வல் இருக்கும் - பதுங்கிப் பார்த்தபடியே இருக்கும். 13. விசிபிணி இழித்துக் கட்டிய. 15. மகிழ்துணைச் சுற்றம் - உரிமைச் சுற்றம். 14. மண்ணார் முழவு - மார்ச்சனை கொண்ட முழவு. மட்டு - கள். 18. குறுந்தொடி மடந்தை - குறுகிய தொடியுடையவளாகிய பரத்தை. 22. சாஅய் அழித்து. 24. ஏதின் மன்னர் - பகை மன்னர்.

**விளக்கம்:** 'கொக்குச் சேவல் கயம் குறித்துக் கொடுஞ் சிறை மீது அழி கடுநீர் நோக்கிப் பார்வலிருக்கும்' என்றது, தலைவன் தன் உளங்கொண்ட இளையாளாய பரத்தையை அடைதலை விரும்பித் தக்க பொழுதினைப் பார்த்தவனாக இருந்தான் என்றதாம்.

தலைவனின் செயலினாலே தலைவி அழிவுற்று வருந்துதலையும், அதற்கு இரங்காது அவனைப் பெற்றமைக்கு மகிழ்தலையும் மேற்கொண்ட பரத்தையின் நிலைக்குக், கிள்ளி வளவனாலே அழிவுற்ற பழையன் மாறனின் நிலைக்கு மகிழ்ந்த கோதை மார்பனின் தன்மையைக் கூறினார். இதனால், அப் பரத்தைமீது தனக்குள்ள பகைமையினையும் உரைத்தனளாம்.

தலைவனை இவ்வாறு தோழி பழித்துக் கழிப்பக், கற்புடையாளாகிய தலைவி தலைவன்மீது அன்பு உடையவ ளாதலால், அவனுக்குப் பரிந்தவளாகித் தன் ஊடலும் நீங்கியவளாவாள் என்று கொள்ளுக.

**மேற்கோள்:** இச்செய்யுளை மேற்கோளாகக் காட்டி, 'பரத்தையர் மனைக்கண் தங்கிவந்து அகநகர் புகுதாது புறத்திருந்த தலைவனை, மிகக் கழறிச் சில மொழிகளைக் கூறி, இதனானே தலைவி மனத்தின்கண் ஊடல் நீங்கும் தன்மை உளதாக்கிக் கூட்டும்' என்று உரைத்துப், 'பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த' எனும் கற்பியற் சூத்தி ரத்துப், 'பிழைத்து வந்திருந்த கிழவனை நோக்கி, இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்' என்னும் பகுதிக்கண் நச்சினர்க்கினியர் எடுத்துக்காட்டுவர்.

## 347. செய்வினை வாய்ப்பதாக!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. **சிறப்பு:** சேரலாதன் மேற்கடலிடத்தே பகைவரை வென்று அவரது காவன் மரமாகிய கடம்பினை அறுத்து முரசு இயற்றினான் என்பது.

*(தலைமகன் தலைவியைப் பிரிந்து வேற்று நாட்டிற்குச் சென்றிருந்தனன், தலைவியின் அழகு கெடப் பசலையும் படர்ந்து வருத்துதலாயிற்று. அதனால், ஊரிலும் அம்பலும் அலரும் மிகுதியாயிற்று. அப்போது, தோழி அவளைத் தேற்றுவாளாகத் தலைமகனைப்பற்றிப் பழியுரை சில கூற, அதனைப் பொறுக்க மாட்டாத தலைவி, இங்ஙனம் தோழிக்குக் கூறுகின்றனள். கற்பின் தகைமையினை நன்கு புலப்படுத்துவது இச்செய்யுள் ஆகும்.)*

**தோளும் தொல்கவின் தொலைய நாளும்**
**நலங்கவர் பசலை நல்கின்று நலியச்**
**சால்பெருந் தானைச் சேர லாதன்**
**மால் கடல் ஓட்டிக் கடம்பு அறுத்து இயற்றிய**
**பண்ணமை முரசின் கண் அதிர்ந்தன்ன**

**கவ்வை தூற்றும் வெவ்வாய்ச் சேரி**
**அம்பல் மூதூர் அலர்நமக்கு ஒழியச்**
**சென்றனர் ஆயினும் செய்வினை அவர்க்கே**
**வாய்க்கதில் - வாழி தோழி - வாயாது**
**மழைகரந்து ஒளித்த கழைதிரங்கு அடுக்கத்து**

**ஒண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் குவவுஅடி**
**வெண்கோட்டு யானை முழக்கிசை வெரீஇக்**
**கன்றொழித்து ஓடிய புன்தலை மடப்பிடி**
**கைதலை வைத்த மையல் விதுப்பொடு**
**கெடுமகப் பெண்டிரின் தேரும்**

**நெடுமர மருங்கின் மலைஇறந் தோரே!**

தோழியே! நீ வாழ்க!

என் தோள்களும் தம் பழைய அழகனைத்தும் கெட்டவாயின. அழகினைக் கவர்ந்துகொள்ளும் பசலையும் நாளுக்கு நாள், நம்பால் அருளில்லாததாகி நம்மைப் படர்ந்து நலியச் செய்கின்றது. நாம் இங்ஙனமாக-

நிறைந்த பெரும் படையினை உடையவன் சேரலாதன். அவன், பெரிதான கடலிடத்துப் பகைவரை ஓட்டினான். அவரது காவன் மரமாகிய கடம்பினை வெட்டி, அதனால் பண்ணுதல் அமைந்த வெற்றி முரசினையும் செய்வித்துக் கொண்டான். அந்த முரசின் கண் அதிர்வதைப் போன்ற தன்மையுடனே, நம் மூதூரினிடத்தே கொடிய வாயினை உடையவரான பெண்டிரது அம்பலும் அலரும் எழுந்து பழி தூற்றுவதாயிற்று. இவையெல்லாம் நமக்காக வைத்தவாரக அவரும் நம்மைப் பிரிந்து சென்றனர். ஆயினும்-

மழை பெய்தலற்று மறைந்து ஒளித்துக் கொண்டமையினாலே, மூங்கில்களும் வாடிப்போயுள்ள பக்கமலையிடத்தே, ஒளியுடைய நிறத்தைக் கொண்ட வலிமையுள்ள புலியானது பாய்ந்ததாக, திரண்ட அடியினையும் வெள்ளிய கோட்டினையும் உடைய யானையானது முழக்கமிடும். அந்த முழக்கத்தைக் கேட்டுத் தன் கன்றினையும் கைவிட்டு ஓடியது புல்லென்ற தலையினையுடைய அதன் பிடி யானை. தலைமீது கையினை வைத்துக்கொண்ட மயக்கமுற்ற விரைவுடனே, தம் மகவினைக் காணாது வருந்திய மகளிர் தேடித் திரிவதுபோல, அந்தப் பிடியும் தன் கன்றினைப் பின்னர்த் தேடித் திரிந்து கொண்டிருக்கும், நீண்ட மரங்களைக் கொண்ட சாரலையுடைய அத்தகைய மலைவழியினையும் கடந்து சென்றுள்ளனர் அவர். அதனால்-

அவருக்கு, அவர் செய்யக் கருதிச் சென்ற வினையானது நன்கு கைகூடுவதாக.

**சொற்பொருள்:** 2. நன்கு இன்று நலிய - அருள்தலற்றுப் படர்ந்து வருத்த. 8. சால் பெருந்தானை - நிறைந்த பெரும் படை: நிறைவு படையுறுப்புக்கள் அனைத்தும் பொருந்திய தன்மை. 4. மரல்கடல் - பெருங்கடல். 5. பண்ணமை முரசு - பண்ணுதல் அமைந்த வெற்றி முரசம். 6. கவ்வை தூற்றல் - பழிதூற்றல். 9. வாய்க்கதில் - வாய்க்குமாக; தில், விழைவுப் பொருளில் வந்தது. 11. ஒண்கேழ் வயப்புலி - ஒள்ளிய நிறத்தையுடைய வலியுள்ள புலி. குவவடி - திரண்ட அடி. 12. முழக்கிசை - முழங்கும் ஒலி. 13. புன்றலை - புல்லென்ற தலையினையுடைய. 15. கெடுமகப் பெண்டிர் - மகவைக் கெட்டுப் போக்கிய தாய்மார்.

**விளக்கம்:** *தோளும் தொல்கவின் தொலையவும். நாளும் பசலையும் நலியவும், கவ்வை தூற்றும் வெவ்வாய்ச் சேரி அம்பல்மூதூர் அலர் நமக்கு ஒழியச் சென்றனர் அவர்; ஆயினும் செய்வினைஅவர்க்கே வாய்க்கதில்' என்று கூறும் தலைவியின் கற்புச் செவ்வியினை அறிந்து இன்புறுக. பழியாலும் தனித்து வாழச்செய்த கொடுமையாலும், அவர்க்கு ஏதம் எதுவும் நேருதல் கூடுமோ என்று அஞ்சுபவள், அங்ஙனமன்றி அவர் செய்வினை வாய்க்குமாக எனவும் வாழ்த்துகின்றாள். அவன் கடந்து சென்ற வழியின் கொடுமையினைக் கூறுவாள், 'வயப்புலி பாயக் களிறு முழங்கக் கன்று ஒழித்து ஓடிய பிடி, பின் அதனைத் தேரும்' என்றனள்.*

## 348. நிலையா நன்மொழி!

'**பாடியவர்:** *மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது; தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது எனவும் பாடம்.*

*(பகற்போதில் தன் களவுக் காதலனைச் சந்திக்கும் விருப்பத்துடன் குறியிடத்தில் தன் தோழியுடனே கூடியவளாக வந்திருக்கின்றனள் தலைவி ஒருத்தி. அவ்வேளை, தலைமகனும் வந்து சிறைப்புறத்தானாகத், தோழி அவனைக் குறித்துப் பழிகூறத் தலைவிக்கு அதனைக் கேட்கப் பொறுக்கவில்லை. அவள் சொல்வதாக அமைந்த செய்யுள் இது.)*

**என்ஆ வதுகொல் தானே - முன்றில்**
**தேன்தேர் சுவைய திரள் அரை மாஅத்துக்**
**கோடைக்கு ஊழ்த்த கமழ்நறுந் தீங்கனிப்**
**பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை அளைஇ**
**இறாலொடு கலந்த வண்டுமூசு அரியல்**

**நெடுங்கண் ஆடுஅமைப் பழுநிக் கடுந்திறல்**
**பாப்புக்கடுப்பு அன்ன தோப்பி வான்கோட்டுக்**
**கடவுள்ஓங்கு வரைக்கு ஓக்கிக் குறவர்**
**முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி**
**அடுக்கல் ஏனல் இரும்புனம் மறந்துழி**

**யானை வவ்வின தினை என நோனாது**
**இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇச்**
**சிலை ஆய்ந்து திரிதரும் நாடன்**
**நிலையா நல்மொழி தேறிய நெஞ்சே?**

வீட்டு முற்றத்திலேயுள்ள, திரண்ட அடியினையுடைய மாமரத்தின், தேனென்று சொல்லத்தக்க சுவையுடைய, கோடைக்காலத்தே முதிர்ந்த,மணங்கமழும் இனிய கனிக ளுடனே, பிசினைக்கொண்ட பலாமரத்தினது ஒளிபொருந்திய சுளைகளை விரவித் தேனோடும் கூட்டிக் கலந்தது, வண்டு மொய்க்கும் அரியல் என்பது. நீண்ட கணுவிடையுள்ள அசையும் மூங்கிலினின்றும் வெட்டிக் கொணர்ந்த குழாயில், அந்த அரியல் நெடுங்காலம் இருந்து முதிர்ச்சியும் அடைந்தது. கடுமையான வேகத்தையுடைய பாம்பின் வெருட்சியைப் போன்ற தோப்பி என்னும் கள்ளும் ஆகியது. அதனை, உயர்ந்த முடியினையுடைய கடவுள் உறையும் மலைக்குப் படைத்துப், பின்னர்த் தளிரினாலான தழையுடையணிந்த மகளிர் உண்பிக்கக், குறவர்கள் உண்டனராயினர். அதனாற் பக்கமலையிடத்துப் பெரிய தினைப்புனங்களைக் காவல் செய்வதனையும் மறந்தவராயினர்.

காவலர் காவல் மறந்தனராகவே, யானைகள் தினைப் புனத்தைக் கவர்ந்து உண்டன. அதனைப் பொறாது இளையரும் முதியருமாகிய சுற்றமெல்லாம் ஒன்று கூடினர். வில்லை ஆராய்ந்து கைக்கொண்டவராக, அந்த யானைகளைத் தேடி மலைப்புறமெல்லாம் திரிவராயினர். அத்தகைய நாட்டை யுடையவன் தலைவன். அவனுடைய, உறுதியற்ற, நன்மை தருவது போன்று சொல்லப்பெற்ற சொற்களை மெய்யானவை என்று தெளிந்து மேற்கொண்ட நெஞ்சமே! இனி என்னென்ன நமக்கு நிகழுமோ? (அறியாது யானும் கலங்குகின்றேனே!

**சொற்பொருள்:** 1. முன்றில் - வீட்டின் முற்றம். 3. கோடைக்கு ஊழ்த்த கோடைக்காலத்தே தோன்றிமுதிர்ந்த; இதனைக் கோடை மாங்காய் என்பர்; காலத்துக் காய்ப்பதிலும் சுவைமிகுதி கொண்டிருப்பது இது. 4. பயிர்ப்பு உறு - பிசினைப் பொருந்திய எதிர்ச்சுளை - ஒளியுடைய சுளை; பலாச் சுளைகளின் பொன்னிறச் செவ்வியைக் குறித்ததாம். 5. இறால் - தேன். அரியல் மாங்கனியும் பலாக்கனியும் தேனும் கூட்டிக் கலந்த கலவை. 6. ஆடமை - அசையும்மூங்கில். நெடுங்கண் - கணுக்களுக்கு இடையே நெடிதாக விளங்கும் தன்மை. 7. கடுப்பு - வெருட்சி : சீற்றத்து வேகம் தோப்பி - தோப்பிக்கள். வான் கோடு - உயர்ந்த மலைமுடி. 9. முறித்தழை மகளிர் - தளிராலான தழையுடை அணிந்த குறக்குடிப் பெண்கள். 11. நோனாது பொறாது. 14. நிலையா நன் மொழி - நன்மொழி நிலையையாதுபோய்ப் பொய்ப்படுதல்; வார்த்தை பிறழ்தல். தேறிய - தெளிந்த.

**விளக்கம்:** 'தேன் தேர் சுவை' என்றது, தேனின் சுவையோ எனச் சுவையின் இனிமையைக் கருதச்செய்யும் இனிதான சுவை. அந்நாளைய தோப்பிக்கள் எப்படிச் செய்யப்பட்டதென்ற செய்முறையினை அறிக. மாங்கனியும் பலாச்சுளையும் தேனும் ஒன்றுகூட்டிப் பிசைந்து, மூங்கிற் குழாய்களிலே நெடுநாள் அடைத்துவைத்து முதிர்ந்தபின், அது புளித்ததோப்பிக்கள் ஆகின்றது. அதனை உண்டவர் கொள்ளும் வெறிக்குப் பாம்பின் சீற்றத்தை ஒப்பாகக் கூறினர்.

'காக்கும் கடமைபூண்ட குன்றவர். அத்தகைய கள்ளினை மாந்திவிட்டுக் கடமையினின்றும் நழுவிப்போகப், புனத்தை யானை மேய்ந்து அழித்துவிட, அதன்பின், அதனைத் தேடி வில்லுடன் காடெல்லாம் திரியும் நாடன்' என்று தலைவனைக் குறித்தனள், இது. 'அவனும் தன்னை முறையாக மணத்தலை மறந்து, காமத்தால் கட்டழிந்து. தன் உறுதிமொழிகளையும் பொய்த்துத், தனக்கு அலராலும் பசலையாலும் அழிவினை நேரச் செய்கின்றனன்; தன் நலனழிவிற்குப் பின்னர்த்தான் அவன் தன் கடமையை உணர்வான்போலும்' என்று குறிப்பாக அறிவுறுத்தி யதாம். இதனால், விரைவில் தலைவியை மணந்து கூடுதலில் அவன் மனம் செல்லும் எனத் தெளிதல் வேண்டும்.

'வான்கோட்டுக் கடவுள்' என்றது, குன்றவர் கடவுளான முருகனைக் குறித்ததும் ஆம். 'காவலர் மயங்கியவழி யானை புனத்தை மேய்ந்தாற்போலத், தலைவன் வரைந்து கொள்ளாது காலம் கடக்கும் போது, பசலையால் அழகு கெட்டும், அலரால் வேதனையுற்றும் அழிவள்' என்பதனையும் புலப்படுத்தினாள் ஆம்.

## 349. எதற்கோ நினைந்தனர்?

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** நன்னனுக்கு உரித்தாயிருந்த ஏழிற் குன்றத்தின் தன்மை.

*(தன்னுடைய அன்புறு தலைவியைப் பிரிந்து, பொருள் தேடிவருகின்ற விருப்பினனாகக், காடுபலவும் கடந்து, வேற்று நாடு சென்றுள்ளனன் தலைவன். அவனுடைய பிரிவினாலே வாட்டமுற்றுத், தன் அழகும் குன்றியவளாக நலிந்திருக்கும் தலைவி, அவனுடைய பிரிவினை நினைந்து மனம் வருந்தியவளாக இப்படிக் கூறுகின்றனள். இந்தத் துறையமைய விளங்குவது செய்யுள்.)*

**அரம்போழ் அவ்வளை செறிந்த முன்கை**
**வரைந்துதாம் பிணித்த தொல்கவின் தொலைய**
**எவன்ஆய்ந் தனர்கொல் - தோழி! ஞெமன்ன்**
**தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி**
**உலைந்த ஒக்கல் பாடுநர் செலினே**

**உரன்மலி உள்ளமொடு முனைபா ழாக**
**அருங்குறும்பு எறிந்த பெருங்கல வெறுக்கை**
**சூழாது சுரக்கும் நன்னன் நல்நாட்டு**
**ஏழிற் குன்றத்துக் கவாஅன் கேழ்கொளத்**
**திருந்துஅரை நிவந்த கருங்கால் வேங்கை**

**எரிமருள் கவளம் மாந்திக் களிறுதன்**
**வருநுதல் வைத்த வலிதேம்பு தடக்கை**
**கல்லூர் பாம்பின் தோன்றும்**
**சொல்பெயர் தேஎத்த சுரன்இறந் தோரே.**

*தோழி! பொருள்களின் நிறையினைத் தெரிதற்கு உதவும் துலாக்கோலை ஒத்தன குற்றமற்ற செம்மையான சொற்கள். அவற்றை உடையவன் நன்னன் என்பவன். வறுமையினால் அழிந்த சுற்றத்துடனே கூடியவராகப், பாடுந் தொழிலுடையோர் சென்றனராயின், ஊக்கமிகுந்த உள்ளத்தோடு பகைவரின் போர்முனை பாழாகும் படி வெற்றிகொண்டு, அவருடைய அரிதான அரணையும் அழித்துக் கொண்டுவந்த, பெரிதான அணிகள் முதலான செல்வங்களை, எதனையும் ஆராயாது வாரி வழங்கி உதவுபவன் அவன். அவனுடைய நன்மைபொருந்திய நாட்டிடத்தேயுள்ள, ஏழிற்குன்றத்தின் மலைச்சாரலில்-*

*நிறம் பொருந்தச் செவ்விதான அடிமரம் உயர்ந்துள்ள கரிய அடியினை உடைய வேங்கை மரத்தின், தீயைப் போலச் செந்நிறத்தைக் கொண்டு விளங்கும்பூக்களை உண்டு, களிறானது, தன் வரிகள் பொருந்திய நெற்றியிடத்தேயாக வைத்துள்ள வலிமை குன்றிய பெரிய கையானது, குன்றிடத்தே ஊர்கின்ற பாம்பினைப் போலத் தோற்றம் அளிக்கும். அத்தகைய மொழி வேறுபட்ட நாட்டிடத்த தான, சுரநெறியினையும்கடந்து சென்றவர் நம் காதலர்.*

*அங்ஙனம் சென்ற அவர்-*

*அரத்தால் பிளந்து. ஆக்கப்பெற்ற அழகிய வளைகள் செறிந்த எம் முன்கையினைத், தாம் எம்மை வரைந்து கொண்டவராகப் பற்றிக்கொண்டு தலையளிசெய்த, அந்தப் பழைய எம் அழகெல்லாம் தொலைந்துபோகுமாறு, எதனைத் தான் அமைவது குறித்துக் கருதினாரோ? அதனை யான் அறியேனே?)*

**சொற்பொருள்:** 2. வரைந்து - தன் தலைவி அவளே எனக் குறித்து. 3. ஆய்ந்தனர் - கருதினர். ஞெமன்ன - தெரிகோல் - துலாக்கோல். 5. உலைந்த அழிவடைந்த. 6. உரன் - ஊக்கம். முனை - பகைவரின் போர் முனை. 7. பெருங்கல வெறுக்கை - பெரிதும் மதிப்புடைய அணிகள் முதலான செல்வம் 8. சூழாது - ஆராயாது; பாடுவார் தகுதியையோ, அல்லது பொருளை அடைதற்குத் தான் மேற் கொண்ட முயற்சிகளையோ கருதாது. 11. எரி மருள் கவளம் - தீயையொத்த உணவு : வேங்கையின் செந்நிறப் பூக்களாகிய கவளம் என்க. 14. சொல் பெயர் தேயம் - மொழி வேறுபட்ட நாடு; பிறமொழி வழங்கும் நாடு.

**விளக்கம்:** சொல் பெயர் தேஎம் ' என்றது, நன்னனின் ஏழிற்குன்றத்துக்கும் அப்பாலுள்ள நாடு என்க. 'வளைசெறிந்த முன்கை வரைந்து தாம் பிணித்த தொல்கவின் தொலைய' என்றனள், புரிவின் மெலிவினாலே முன்கைவளைகள் தம் செறிவு நீங்கித் தளர்ந்து சோர்கின்ற தன் மையை நினைந்தனளாக. நன்னன் வாய்மையுடையான் என்பதனைக் கூறுவார், 'ஞெமன்ன் தெரிகோல் அன்ன செயிர் தீர் செம்மொழி' என்றனர். இது, தலைவன் தன் வாய்மொழி பிழைத்துத் தன்னைப் பிரிந்ததை நினைந்து நொந்தவளாகிக் கூறியதாம். நன்னனின் வள்ளன் மையைக் கூறினாள், ஏதிலாரான பிறர்க்கு வழங்கி மகிழும் அவனைப் போலாது, உரிமையுடைய எமக்கும் அருளாது தலைவர் சென்றனரே என்ற குறிப்பினாலாம். வேங்கைப் பூக்களை மாந்திக் களிறு தன் நெற்றியின்மீது கைவைத்து இருத்தலைக் கூறியது, அது மதச் செருக்குற்று அலையும் தன்மையுடைய காடு என்றதாம். களிற்றின் நுதல் கல்லுக்கும், தடவும் அதன்கை பாம்புக்கும் உவமைத்தோன்றக் கல்லூர் பாம்பின் தோன்றும் என்றனள்' வேங்கையைத்தன் பகையான புலியென அஞ்சி ஒதுங்கும் இயல்புடைய களிறு, அதன் பூக்களை உண்டதென்றது, வேறு உணவு கிடைக்காமையால் என்றுஅறிக. மேலும், வேங்கை பூத்தல் வரைந்து கோடற்கு உரிய காலமாதலால், அதனை நினைந்ததும் ஆம். இதனால், இந்தப் பிரிவு வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தது எனவும் உணர்க.

## 350. எம் சிறிய ஊர்!

**பாடியவர்:** சேந்தன் கண்ணனார். **திணை:** நெய்தல். **துறை:** பகற்குறி வந்து நீங்கும் தலைமகற்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** கொற்கைப் பேரூர்.

*(நெய்தல் நிலத்துத் தலைவன் ஒருவன், அந் நிலத்துத் தலைமகள் ஒருத்தியைக் கண்டு காதலித்துக் களவிற்கூடி இன்புற்று வருகின்றான். அவர்கள் கூட்டம், பகற்போதிலே கானற் சோலையிடத்தே நிகழ்கின்றது. தலைவியின் ஆருயிர்த்தோழியும் தலைவியின் காதலுக்குத் துணை நிற்கின்றாள். நெடிது இந்தக் கள்ள உறவினைச் செல்லவிடாது, மணவினையினை விரைய நிகழ்விக்க விரும்புகின்றாள் அவள் அந்த எண்ணந் தோன்றப் பகற்குறி வந்து நீங்கும் தலை மகனிடத்தே, இங்ஙனம் கூறுகின்றனள்.)*

**கழியே, சிறுகுரல் நெய்தலொடு காவிகூம்ப**
**எறிதிரை ஓதம் தரல்ஆ னாதே**
**துறையே, மருங்கின் போகிய மாக்கவை மருப்பின்**
**இருஞ்சேற்றுஈர் அளை அலவன் நிவப்ப**
**வழங்குநர் இன்மையின் பாடுஆன் றன்றே;**

**கொடுநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி**
**வடிமணி நெடுந்தேர் பூண ஏவாது**
**ஏந்துஎழில் மழைக்கண் இவள்குறை யாகச்**
**சேர்ந்தனை சென்மோ - பெருநீர்ச் சேர்ப்ப!-**
**இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி**

**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்**
**ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்**
**கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்**
**குவவுமணல் நெடுங்கோட்டு ஆங்கண்**
**உவக்காண் தோன்றும்எம் சிறுநல் ஊரே!**

**கடற்கரை நாட்டிற்கு உரிய தலைவனே!**

*கழியிடத்தே விளங்கும் சிறுத்த பூங்கொத்துக்களையுடைய நெய்தலுடனே, செங்கழுநீர்ப்பூவும் தம்முடைய இதழ்கள் குவியப் பெற்றுள்ளன. வந்து மோதுகின்ற அலைகள் அமைதலற்ற நிலையிலே, கடலோதமும் நிலையாக விளங்கு கின்றது. துறையிடத்தே, பக்கத்தே நீண்ட பெரிய கவர்த்த கோட்டினையுடைய கருஞ்சேற்றிலுள்ள ஈரமான வளையி லிருக்கும் நண்டும் மேலே வந்துவிட்டது. இப்படியாகக் கடற்றுறையும் செல்வோர் இல்லாமையினாலே ஒலியடங்கிய தாயிற்று.*

*விளங்கும் பெரிதான கடற்பரப்பிலே, கொல்லுந் தகை யினையுடைய சுறாமீன்களை ஒதுக்கியவராக, வலம்புரியின் முத்தினை எடுப்பதற்காகக் கடலுள் மூழ்கிய, பெரிய படகினை உடையயோரான பரதவர்கள், ஒலியினைத் தம்பால் உடைய*

சங்குகள் கல்லென ஆரவாரிக்க, ஆரவாரத்தையுடைய கொற்கைப்பட்டினத்தோர் தம்மை எதிர்கொண்டு வரவேற்கு மாறு, படகுகளிலே வந்து கரையிறங்குவர். மணல் திரண்டு கிடக்கும் நெடிய கரையான அவ்விடத்தே, எம் முடைய சிறிய நல்ல ஊரானது, அதோ தோன்றுவதனைப் பாராய்!

வளைந்த நுகத்திலே பூட்டியிருக்கப் பெற்றிருக்கின்ற திரண்ட மணியினையுடைய குதிரைகளை, நெடிய தேரிலே பூட்டும்படியாகப் பாகனை ஏவுதல்வேண்டா. உயரிய எழில் கொண்ட குளிர்ச்சியான கண்களையுடைய இவளின் பொருட்டாக, இன்றிரவு எம் ஊரிலே தங்கியிருந்து செல்வாயாக!

**சொற்பொருள்:** 1. குரல் - கொத்து, தினைக் கதிரைப் போல விளங்குவது எனலால் குரல் என்றனர் போலும்! காவி - செங்கழுநீர்ப்பூ; செங்குவளை எனவும் கூறுவர். 2. எறிதிரை - கரை யிடத்தே மோதுகின்ற அலைகள். ஓதம் - கடற்கரையிடத்தான நீர்க்கசிவு. 4. இருஞ்சேறு - கரிய சேறு. அளை - வளை. நிவப்ப - வளையினின்றும் மேலே எழ. 5. பாடு ஆன்றின்று - ஒலி அடங்கியதாய் உள்ளது. 6. கொடுநுகம் - வளைந்த நுகம். கணைக்கால் - திரட்சியுள்ள கால். அத்திரி -கோவேறு கழுதை. 7. வடிமணி - வடித்தலையுடைய மணி. 8. இவள் குறையாக - இவள் பொருட்டாக. 10. எறி சுறா - கொல்லுந் தன்மையுடைய சுறாமீன். 12. ஒலிதலைப் பணிலம் - ஒலிமுழக்கும் தன்மையுடைய சங்கினம். 14. கோடு - கரை.

**விளக்கம்:** நெய்தலும் காவியும் கூம்புதலும், துறை ஓதம் தரலானாத தன்மையுடைமையும், அவலன் நிவப்ப வென்றலும், துறை பாடான்றமைந்த தன்மையும், பகற் போது கழிந்து, மாலையும் மயங்குவதை உணர்த்துவனவாம். 'அத்திரி தேர் பூண ஏவாது' என்றமை, அந்நாளிலே கோவேறு கழுதைகளையும் தேர்களிற் பூட்டிச் செலுத்தும் மரபு நிலவிற்று என்பதனைக் காட்டுவதாம்.

தம்முடைய குடிப்பெருமையினைக் கூறுவாள், 'இலங்கிரும் பரப்பின்....கொற்கை எதிர் கொள இழிதரும்' என்று கூறினள். 'வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்' என்றது, அந்நாளிலே கொற்கைத்துறையில் பரதவர் முத்தும் சங்கும் கடலுள் மூழ்கி எடுத்த செயலாற்றலையும், 'ஒலி தலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக் கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்' என்றது, அவருடைய அரிய தொழிற்பாட்டைக் கொற்கைப் பேரூர் ஆர்வமுடன் வரவேற்றுப் போற்றிய சிறப்பினையும் குறிப்பதாம்.

## 351. எழுது சுவர் நினைந்தாள்!

**பாடியவர்:** *பொருந்தில் இளங்கீரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருண்முற்றி மறுத்தராநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தலைவன் ஒருவன் பொருள்தேடி வருதலின் பொருட்டாகத் தன்னுடைய ஆருயிர்க் காதலியைப் பிரிந்து வேற்று நாட்டிற்குச் சென்றிருந்தனன். செய்வதற்குக் கருதிய வினை முற்றுப்பெற்று, அவன் மீண்டும் தன்னுடைய ஊரினை நோக்கியவனாக வந்துகொண்டும் இருக்கின்றான். அப்போது அவன் மனம், தன் பிரிவினை நினைந்து ஏங்கியிருக்கும் தன் தலைவியின் நினைவிலே செல்ல, அவன், தன் நெஞ்சுடன் கூறிக்கொள்வதாக அமைந்த செய்யுள் இது.)*

**வேற்றுநாட்டு உறையுள் விருப்புறப் பேணி**
**பெறல்அருங் கேளிர் பின்வந்து விடுப்ப**
**பொருள் அகப் படுத்த புகல்மலி நெஞ்சமொடு**
**குறைவினை முடித்த நிறைவின் இயக்கம்**
**அறிவுறூஉம் கொல்லோ தானே - கதிர்தெற**

**கழலிலை உகுத்த கால்பொரு தாழ்சினை**
**அழல் அகைந் தன்ன அம்குழைப் பொதும்பில்**
**புழல்வீ இருப்பைப் புன்காட்டு அத்தம்**
**மறுதரல் உள்ளமொடு குறுகத் தோற்றிய**
**செய்குறி ஆழி வைகல்தோறு எண்ணி**

**எழுதுசுவர் நினைந்த அழுதுவார் மழைக்கண்**
**விலங்குவீழ் அரிப்பனி பொலங்குழைத் தெறிப்ப**
**திருந்திழை முன்கை அணல் அசைத்து ஊன்றி**
**இருந்துஅணை மீது பொருந்துவீக் கிடக்கை**
**வருந்துதோள் பூசல் களையும் மருந்தென**

**உள்ளுதொரு படூஉம் பல்லி**
**புள்ளுத்தொழுது உறைவி செவிமுத லானே?**

*நெஞ்சமே! வேற்று நாட்டிலே தங்குதலை விருப்பமுடன் மேற்கொண்டனை. பெறுதற்கரிய சுற்றத்தினர் பின்வந்து விடைதந்து அனுப்ப வந்தனை! பொருளினை ஈட்டிக்கொண்ட விருப்பம் மிகுந்த நெஞ்சத்துடனே, குறைப்பட்ட செயலினை முடித்த நிறைவினாலே உண்டாகிய இயக்கத்தினையும் பெற்றுள்ளனை!*

*ஞாயிற்றுக் கதிர்கள் வெதுப்புதலால், கழன்ற இலைகளை உதிர்த்த, காற்றுப் பொருந்திய தாழ்ந்த கிளைகளிலே, நெருப்புக்*

கொழுந்துவிட்டு எரிந்தாற்போல விளங்கிய அழகிய தளிர்களை யுடைய மரச்செறிவிலே, உட்டுளைகொண்ட பூக்களையுடைய பொலிவற்ற இருப்பைமரக் காட்டின் வழியூடே, மீண்டும் நம்மூர் செல்லும் நினைவுடன் அடைந் திருக்கின்றனை.

தோற்றிய செய்குறியாகிய வட்டத்தினை நாள்தோறும் எண்ணியவளாக, அவற்றை எழுதிய சுவரினை நினைந்தாளாக, அழுது சொரியும் அவளின் குளிர்ந்த கண்களிலிருந்து விலகி விழுகின்ற நீர்த்துளிகள்,அவளுடைய பொற்குழைகளின் மீதே தெறித்துவிழுந்து கொண்டிருக்கும். திருந்திய அணியினை யுடைய முன்கையினைத் தன் கவுளில் பொருந்தவைத்து, மலரணை மீது இருந்தவளாக, வருத்தமுறும் தன் தோள்களின் வருத்தத்தைப் போக்கும் மருந்து என எம்மையே நினைவாள். அங்ஙனம் அவள் நினையுந்தோறும், ஒலிக்கின்ற பல்லியானது, புள் நிமித்தத்தினைப் பரவியிருக்கும் அவளுடைய காதி னிடத்தே, எம் வரவினையும் அறிவுறுத்துமோ?

**சொற்பொருள்:** 1. உறையுள் - தங்கியிருத்தல், பேணி மேற்கொண்டு 2. பெறலருங் கேளிர் - பெறுதற்கரிய சுற்றத்தினர். விடுப்ப வழியனுப்ப, 3. அகப்படுத்த - தேடிக் கைக்கொள்ள. புகல் விருப்பம். 4. குறைவினை - குறை யாகிய செய்வினை. 6. கழல் இலை - கழன்று வீழும் இலைகள். 7. அகைந்தன்ன - கொழுந்து விட்ட எரிந்தாற்போன்ற. 9. மறுதரல் - மீண்டு வரல். 10. செய்குறி ஆழி - செய்யுங் குறியாகிய ஆழி என்க. 11. சுவர் நினைத்த சுவரினை நினைந்த; சுவரில்விளங்கும் வட்டங்களின் மிகுதியை நினைந்த; நனைந்த எனவும் பாடம். 12. விலங்கி -குறுக்காக விடுபட்டு, அரிப்பனி - மெல்லிய கண்ணீர்த் துளிகள். 13. அணல் - கவுள்; கன்னம். 15. தோட்பூசல் - தோளின் நலிதலாகிய காமநோய்.

**விளக்கம்:** 'தோள் நலிவுக்கு மருந்தாகத் தலைவனின் அணைப்பினை என்று பெறுவோம்?' எனக் கவலையுற்றுப் புள் நிமித்தத்தை வேண்டியிருக்கும் தலைவிக்குக் கேட்குமாறு, ஒலிக்கும் பல்லியின் செயல், தான் திரும்பி வந்து கொண்டிருப் பதான செய்தியினை அவளுக்கு அறிவுறுத்துமோ?' என எண்ணுகின்றான் அவன். 'கழலிலை புகுத்த கால்பொரு தாழ் சினை அழல் அகைந்தன்ன அங்குழைப் பொதும்பில், புழல்வீ இருப்பைப் புன்கூன் அத்தம், மறுதரல் உள்ளமொடு குறுக' என்றது, கோடை நீங்கிக் கார்காலத் தொடக்கமும் வந்துற் றதனைக் கூறியதாம் அதனால், தான் திரும்புங்காலம் வந்த தெனத் தலைவி தன்னை எதிர்நோக்கியவளாக ஏக்கமுற்றிருப் பாள் எனக் கருதுகின்றான் அவன்.

செய்குறி ஆழி வைகல்தோறும் எண்ணி' என்றது,தன் கணவன் பிரிந்த நாளினை, நாளுக்கு ஒரு பொட்டாகச் சுவரி லிட்டு, அதனை எண்ணி எண்ணி ஏக்கமுறும் தன்மையினைக் கூறியதாம். 'நாளொற்றித் தேய்ந்த விரல்' என்ற குறளின் கருத்தையும் நினைக்கவும்.

'உள்ளுதொறு படூஉம் பல்லி, புள்ளுத்தொழு துறைவிசெவி முதலானே... அறிவுறுங் கொல்லோ' என்றதனைக் கவனிக்க, அந்நாளிலும், புள்நிமித்தம் நோக்கலும், பல்லி சொல்லுதலை நன்மை என்று கருதுதலும் ஆகிய பழக்கங்கள் இருந்தன என, இவை காட்டும்.

## 352. வதுவை நாளினும் இனியன்!

**பாடியவர்:** *அஞ்சியத்தை மகள் நாகையார்; அஞ்சிலாந்தை மகள் நாகையார் எனவும், அஞ்சலாந்தை மகனார் எனவும் பாடம்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *வரைந்து எய்திய பின்றை, மணமனைக்கட் சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது வரைவு மலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லிய தூஉம் ஆம்.* **சிறப்பு:** *அதியமான் நெடுமான் அஞ்சியின் புகழினைப் பாடுகின்ற பாணரின் தன்மை.*

*(களவிலே முதற்கண் உறவாடி வந்த காதலன். தன்னை வரைந்து வந்தானாகத்,தன் பெற்றோரும் சுற்றமும்தன்னை அவனுக்குத் தருதற்கு இசைந்ததனால், மணவினையும் நிகழப் போகும் சமயத்தில், அந்த மகிழ்விலே திளைத்துக் கொண்டிருக் கின்றாள் தலைவி. அப்போது, அம் மனைக்கண் வந்த தன் தோழியிடம் அவள் தனக்குக் களவுக் காலத்தே உதவிய தகைமையினை நினைந்தாளாக, இங்ஙனம் கூறுகின்றனள் தலைவி. அல்லது-*

*வரைவுக்குத் தமரும் உடன்பட்ட செய்தியைக் தன்னிடத்தே வந்து கூறிய தன் தோழிக்குத் தலைவி கூறியதாகவும் கொள்ளலாம்.)*

**'முடவுமுதிர் பலவின் குடம்மருள் பெரும்பழம்**
**பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்**
**பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்**
**ஆடுமயில் முன்னது ஆகக் கோடியர்**
**விழவுகொள் மூதூர் விறலி பின்றை**

**முழவன் போல அகப்படத் தழீஇ**
**இன்துணைப் பயிரும் குன்ற நாடன்**
**குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்**

**கெடுநா மொழியலன் அன்பினன் என நீ**
**வல்ல கூறி வாய்வதின் புணர்த்தோய்**

**நல்ல காண் இனிக் - காதல் அம்தோழீஇ!-**
**கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி**
**நல்லிசை நிறுத்த நயம்வரு பனுவல்**
**தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்**
**எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்**

**புதுவதுபுனைந்த திறத்தினும்**
**வதுவை நாளினும்இனியனால் எமக்கே.**

அன்புமிக்க அழகிய தோழியே! ஆராய்ந்தால், நீதான் எத்துணை நல்லவள்.

பல சுற்றங்கட்குத் தலைவனாகிய அறியாமைகொண்ட ஆண் குரங்கு ஒன்று, வளைதல் மிகுந்த பலாமரத்தின் குடத்தினைப்போல விளங்கிய பெரிய பழத்தினைத் தன்பால் பொருந்தத் தழுவிக்கொண்டதாகித், தன் இனிய துணையான பெண் குரங்கினை அழைக்கும். அந்தக் காட்சி, மிகவும் ஒலி முழங்கும் அருவியினையுடைய கற்பாறைப் பக்கத்தே, ஆடுகின்ற மயிலொன்று தனக்கு முன்னே நிற்பதாகவும் நிகழ்ந்தது. அது, கூத்தர் விழாக் கொண்டாடும் பழைமையான ஊரினிடத்தே, விறலியின் பிறகே நிற்கின்ற முழவு இயம்பு வோனைப்போலத் தோற்றும், அத்தகைய நாட்டையுடையவன் நம் தலைவன்.

'அவன் நற்குடிப் பிறந்த பண்பினையும் உடையவன். தன்னுடன் கூடினாரைப் பிரியாத அன்பினையும் உடையவன். நாவால் கெடுதலான சொற்களைக் கூறுபவன் அல்லன். நம் பால் அன்புகொண்டவன்." என வெல்லாம் நீ வலிமையுடன் அவனைப்பற்றி என்பாற்கூறிப், பொருத்தமுற என்னையும் கூட்டிவைத்தனை.

கடிய வேகத்தையுடைய குதிரைகள் பூண்ட நெடிய தேரினை உடையவன் அஞ்சி. அவனுடைய தொன்மையான புகழை நிலைநிறுத்தியவனான, புகழ்சான்ற பாண்மகனானவன், வல்லிசைகளை வரையறுத்த இனிமைமிக்க இசைநூலின்கண், எண்ணு முறையெல்லாம் வழுவாது நிலைபெறுத்தி இயற்றிய பண்களினுள்ளும்,புதுப்புதுத் திறன்களைக் காட்டியவனாகப் புனைந்த அத்திறத்தினைக் காட்டினும், என் காதலன், இவ் வதுவைநாளினும், எமக்கு இனியனாகவே உள்ளனன்!

**சொற்பொருள்:** 1. முடிவுமுதிர் - வளைவு மிகுந்த முடவு முதல் எனவும் பாடம்; பொருள், வளைந்த அடிமரத்தை

யுடையது என்பதாம். 2. பல்கிளை - தலைவன் பல சுற்றங்களுக்கும் தலைவனாக உள்ள; கல்லாக் கடுவன் - இளமையுள்ளகடுவனும் ஆம். 4. கோடியர் - கூத்தர். 5. விறலி - ஆடு மகள். 6. முழவன் - முழவு இயம்புவோன். அகப்படத் தழீஇ - பொருந்தத் தழுவிக்கொண்டு. இன்றுணைப் பயிரும் - இனிதான தன் துணையினை அழைக்கும். 9. கெடு நாமொழியலன் - நாவாற் கேடானவற்றைக் கூறுவானல்லன். 10. வல்லகூறி - வலியுறுத்திக் கூறி; சிறப்பித்துக் கூறியும் ஆம். 11. காணில் - ஆராய்ந்தால். 13. நயவரு பனுவல் - இனிமை வருதலையுடைய நூல்; இசை நூல். 14. உரை சால் புகழ்மிக்க. 15. எண்ணுமுறை நிறுத்த - அலகிடுதலின் முறைக்குப் பொருந்த; நிலை பொறுத்திய எனலும் ஆம் 16. புதுவது புனைந்த திறம் - புதுமைதோன்ற அவன் கைவண்ணங் காட்டிய திறமை. 17. வதுவை - நாளினும் தலைநாட் களவிற் புணர்ச்சி பெற்ற அந்நாளினும் காட்டில், மணநாளினும்.

**விளக்கம்:** கடுவன் பலாப்பழத்தைத் தழுவிக்கொண்டதாக, அருவியொலி இசைக்க ஆடும் மயிலினைக்கொண்ட பாறை மருங்கிலே, விறலி பின்றை விளங்கும் முழவனைப் போலத் தோற்றியது என்க. அது,அதனைத் தான் உண்ண முனையாது இன்துணைப் பயிர்தல், அதன் காதற்பெருக்கினை உணர்த்துவ தாம். பல்கிளைத் தலைவனாகிய அது, அக் கிளைகளை எல்லாம் அழையாது, தன் இன்துணையினை அழைத்தது, அவற்றினும் துணையின்பாற்கொண்ட அன்பின் மிகுதிபற்றியாம். அத்தகைய தன்மையினையுடைய நாடன் எனவே, தலைவனும் தலைவிபாற் பேரன்பும் பெருங்காதலும் உடையவன் என்பதும் கூறினர்.

'குடி நன்கு உடையவன்' என்றது, நற்குடிப் பிறத்தலினாலே ஒருவன் பால் படிக்கின்ற நல்லியல்புகள் பலவற்றையும் அவனும் உடையன் என்றதாம். இதனால், குடிச்சிறப்பு அக்காலத்துப் பெரிதும் போற்றிக் கொள்ளப்பட்ட தென்பதும் புலனாகும்.

கெடுநா மொழியலன் நாவாற் கேடாயின கூறுதல் இல்லாதவன் என்க. சொற்கள் பொய்ப்பட்டு அழியுமாறு பொய்ம்மை புகல்வான் அல்லன் எனவும் கூறலாம்.

'நல்லிசை நிறுத்த நயவரு பனுவல் தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்' என வருவன, அந் நாளில் இசைத் துறை நுட்பங்களை வகுத்துக்கூறும் தமிழ் நூல்கள் தமிழகத்து நிரம்ப நிலவியதனை வலியுறுத்தும்.

**உள்ளுறை:** பல்கிளைத் தலைவனாகிய கடுவன் பலாப் பழத்தினை அகப்படுத்துத் தன் இனிய துணையைப் பயிரும் நாடன் என்றது, அங்ஙனமே தலைவனும் தன் காதலிபாற் பேரன்பு கொண்டவன் என்பதனை உணர்த்துவதாம்.

**மேற்கோள்:** *'தலைவனது பண்பினைத் தோழி கூறிய வாற்றால், தான் நிறுத்திக் கூறுதற்கண்ணும்' என்று உரைத்தவராக, இச்செய்யுளை, 'அவனறிவாற்ற வறியுமாகலின்' என்னும் தலைவிகூற்றில், நிறுத்தற்கண்ணும் என்னும் பகுதியிற் காட்டுவர், இளம்பூரணனார்.*

## 353. நினைவாய் அல்லையோ!

**பாடியவர்:** *மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார்; அம்மள்ளனார் எனவும் பாடம்* **திணை:** *பாலை.* **துறை:** *முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் பொருண்முற்றி வந்திருந்த காலத்து, மீண்டும் பொருள் கடாவின நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தன் அன்புறு மனைவியுடனே கூடியவனாக வாழ்ந்தனன் தலைவன் ஒருவன். அவன், பொருள் வேட்கையினனாக, முன்பொரு சமயத்துத் தன் மனைவியைப் பிரிந்துசென்று, பொருள் தேடிவந்து, பின்னர் அவளோடு இன்புற்றிருப்பவன். மீளவும், அவனுள்ளத்தே பொருளார்வம் எழ, அவன், முன்னர்ப் பிரிவினாலே தான் அடைந்த துயரினை எண்ணியவனாக, இவ்வாறு தனக்குள் கூறிக்கொள்ளுகின்றான்.)*

**ஆள்வினைப் பிரிதலும் உண்டோ? பிரியினும்
கேளினி - வாழிய நெஞ்சே! நாளும்
கனவுக்கழிந்த தனைய வாகி நனவின்
நாளது செலவும் மூப்பினது வரவும்
அரிதுபெறு சிறப்பின் காமத்து இயற்கையும்**

**இந்நிலை அறியாய் ஆயினும் செந்நிலை
அமைஆடு அங்கழை தீண்டிக் கல்லென
ஞெமைஇலை உதிர்த்த எரிவாய்க் கோடை
நெடுவெண் களரி நீறுமுகந்து சுழலக்
கடுவெயில் திருகிய வேனில்வெங் காட்டு**

**உயங்குநடை மடப்பிணை தழீஇய வயங்குபொறி
அறுகோட்டு எழிற்கலை அறுகயம் நோக்கித்
தெண்ணீர் வேட்ட சிறுமையின் தழைமறந்து
உண்ணீர் இன்மையின் ஒல்குவன தளர
மரம்நிழல் அற்ற இயவின் சுரனிறந்து**

**உள்ளுவை அல்லையோ மற்றே - உள்ளிய
விருந்துஒழிவு அறியாப் பெருந்தண் பந்தர்
வருந்தி வருநர் ஓம்பித் தண்ணெனத்**

**தாதுதுகள் உதிர்த்த தாழைஅம் கூந்தல்**
**வீழ்இதழ் அலரி மெல்லகம் சேர்த்தி**

**மகிழ்அணி முறுவல் மாண்ட சேக்கை**
**நம்மொடு நன்மொழி நவிலும்**
**பொம்மல் ஓதிப் புனையிழை குணனே?**

*நெஞ்சமே! நீ வாழ்வாயாக!*

*பொருள் ஈட்டிவருவதற்காக மேற்கொள்ளுகின்ற முயற்சிப் பொருட்டாக, இனி நம்தலைவியைப் பிரிந்து போர்தல் என்பதும் உளதாமோ? அங்ஙனம் உளதாகிப் பிரிவாயாயினும், இனி யான் கூறுவதனைக் கேட்பாயாக.*

*நாளும் பொருளீட்டிவரல் என்கிற கனவுகளிலேயே ஈடு பட்டுள்ள அத்தன்மையையே உடையை ஆயினாய். நனவிலே நாட்கள் சென்று கொண்டிருப்பதனையும், மூப்பு நாளுக்கு நாள் வந்து கொண்டிருப்பதனையும் அரிதாகப் பெறுதற்குரிய சிறப்பினையுடையதான காமத்தினது இயல்பினையும், இந்நிலையிலே நீ அறியமாட்டாய். ஆயினும்,இதனைக்கேள்;*

*செவ்விதான நிலையிலேயுள்ள மூங்கிலின் அசைகின்ற தண்டினைத் தாக்கிக், கல்லெனும் ஒலியுடனே ஞெமை மரத்தின் இலைகளை வெப்பமிக்க கோடைக்காற்று உதிர்க்கும். நீண்ட வெண்மையான களர் நிலத்தின் புழுதியையும் முகந்து கொண்டதாக அது சுழன்றடிக்கும். கடுமையான வெயிலும் முறுகிய அவ் வேனிற்காலத்திலே, வெப்பம் மிகவுடையதான காட்டிலே, வருத்தமுற்ற நடையினையுடையதான தன் புள்ளிகளையும், அறல்பட்ட கொம்பினையும் உடைய அழகிய கலைமானானது, தெளிந்த நீரினை உண்ணற்கு விரும்பிய விருப்பத்தினாலே, தழை தின்னலையும் மறந்ததாகி, நீரற்றுக் கிடக்கின்ற கயத்தினை நோக்கியதாக, அங்கு உண்ணுதற்கான நீர் இல்லாததனைக் கண்டதும் மெலிந்து தளர்ச்சி கொள்ளும். மரங்களும் நிழலற்றுப்போய் விளங்கும், அத்தகைய வழியினையுடைய சுரத்தினைக் கடந்து-*

*எண்ணிய விருந்தினர் ஒழிதலைக் கண்டறியாத பெரிதான குளிர்ந்த பந்தரின் கண்ணே வழியிடையே வருத்தமுற்றவராக வருவாரைப் பேணுபவளும், குளிர்ச்சியாகத் தாழையின் தாதாகிய துகளை அப்பிய கூந்தலின் மெல்லிய பின்னலிலே விரும்பப்படும் பூவிதழ்களை வைத்துப் பின்னியவளாக, மகிழ்ச்சியின் அணியாகத் தோன்றுகின்ற முறுவலுடனே, மாண்புற்ற பள்ளியினிடத்தே, நம்முடனிருந்து, நம்முடன் நன்மை விளைக்கும் காதன்மொழிகளைப் பேசுகின்ற பொலிவு பெற்ற*

கூந்தலையுடையவளும், புனையும் அணிகளை உடையவளுமான நம் தலைவியின் குணங்களை நினைவுகொண்டு மயங்குவாய் அல்லையோ? (மயங்காதிருக்கும் துணிவுண்டாயின் செல்க என்பது கருத்து.)

**சொற்பொருள்:** 1. ஆள்வினை - முயற்சி. 6. செந்நிலை - செவ்வியநிலை: மூங்கில் நேராக உயர்ந்து நின்ற தன்மையைக் குறித்தது. 8. எரிவாய்க் கோடை - வெப்பமிக்க கோடை. 9. களர் - களர்நிலம். நீறு - துகள்; புழுதி சுழல - சுழன்று வீச; காற்றுச் சுழித்தடித்தது என்றது இது. 10. திருகிய - முறுகிய. 11. உயங்குநடை வருந்தி தளர்ந்த நடை. வயங்கு பொறி - விளங்கும் புள்ளிகள். 15. இயவு - காட்டுவழி. இறந்து - கடந்து.

**விளக்கம்:** 'நாளும் கனவுக் கழிந்தனைய வாகி' என்றது, நனவிலே பிரிதலால் உளதாம் பெருந்துயரத்தினைக் கருதாது, பொருள்தேடி வருதலையும், அதனாற் செய்யலாம் வாழ்வு நலன்களையும் பற்றிய கனவுகளிலே ஈடுபட்டிருக்கின்ற தன் உள்ளத்து நிலையினைக் குறித்தாம். அதனைக் கைவிட்டு கனவின் நிகழ்ச்சிகளைக் கருதக் கூறுபவன் 'நாளது செலவும் மூப்பினது வரவும், அரிதுபெறு சிறப்பின் காமத்து இயற்கையும், இந்நிலை அறியாய்' என்றனன். பொருளார்வத்தைக் கனவுக்கு ஒப்பிட்டு, வாழ்வின் மெய்ம்மையை நனவுக்கு இணையாகக் கூறுகின்ற நயத்தினை உணர்க. 'துய்த்தற்கு உரித்தான இளமைப் பருவத்தே, அரிதாகப் பெறுகின்ற சிறப்பினையுடைய காமத்தின் இயற்கையினைக் கருதாமலும், நாட்கள் அதனைப் பெறாது கழிதலை எண்ணாமலும், மூப்பின் வருகையால் அதனைத் துய்த்தற்கு ஏலாதென்பதை உணராமலும் மயங்குகின்றனை' என்பவன், பொருளார்வக் கனவிலே மூழ்கியிருக்கும் நீ இவற்றை அறியமாட்டாய் என்பானாக, 'இந்நிலை அறியாய்' என்கின்றனன். பிரிவினாலே வந்துறும் கொடுமையைக் குறிப்பதுபோலச், 'செந்நிலை அமையோடு அம்கழை தீண்டிக் கல்லென ஞெமையிலை உதிர்த்த எரிவாய்க் கோடை' எனக், கோடையால் அவை கழன்று அழிதலைக் கூறினன். தன்னைப் பொருளார்வம் அலைக்கத் தன் பிரிவுச் செயலால் தன் தலைவியின் அழகுநலன் அழிய நேரும் என்பது கருத்தாகும்.

'பிணை தழீஇய எழிற்கலை' அறுகயம் நோக்கித் தழைமறந்து, உண்ணீர் இன்மையின் ஒல்குவன தளர' என்றது, காட்டின் கடுமையைக் கூறியதுடன், அவ்விடத்து துன்பத்தின் கண்ணும் பிரியாது துணையைப் பேணும் கலையின் காதற் செவ்வியினையும் கூறியதாம். அது, தானும் அவ்வாறே தலைவியைப் பேணும் காதலன்பு கொண்டவன் என்றற்கு.

*துன்பமிக்க காட்டைக் கடந்து செல்வுழி, 'உள்ளிய விருந்து ஒழிவறியா.... புனையிழை குணனே... உள்ளுவை அல்லையோ? என்றது, 'அதுகாலை, நீ அவ்வின்பத்தை நினைந்து மீளக் கருதுவாய் அல்லையோ?' என, முன்னர்த் தன் உள்ளம் கொண்ட நினைவினைச் சுட்டிக் கூறினதாம்.*

*இதனால், அவன் தன் போக்கினை நிறுத்திக் கொண்டனன் என்பதும் அறியப்படும். 'உள்ளிய விருந்தொழிவு அறியாப் பெருந்தண் பந்தர் வருந்தி வருநர் ஓம்பி' என்பது, அவன் பொருள்முற்றி வந்த வளமான வாழ்வினையுடையவன் என்பதனைக் காட்டுவதாம்.*

## 354. பசப்பு எங்கே தங்கும்?

**பாடியவர்:** *மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிய தலைமகற்கு உழையர் சொல்லியது.*

*(வேந்து வினைமுடித்து வெற்றிச் செருக்குடன் தன் வீடு நோக்கி வந்து கொண்டிருக்கின்ற தலைமகனிடத்தே, அவனுடன் தாமும் திரும்பி வந்து கொண்டிருப்போரான அவன் தோழர்கள், அவன் மீளவும் வீடு செல்வதனால் அவன் தலைவியின் துயரம் நீங்குவதைக் குறிப்பாராகச் சொல்லுகின்ற தன்மை அமைந்தது இச் செய்யுள்.)*

**மதவலி யானை மறலிய பாசறை**
**இடிஉமிழ் முரசம் பொருகளத்து இயம்ப**
**வென்றுகொடி எடுத்தனன் வேந்தனும் கன்றொடு**
**கறவைப் பல்லினம் புறவுதொறு உகளக்**
**குழல்வாய் வைத்தனர் கோவலர் வல்விரைந்து**

**இளையர் ஏகுவனர் பரிய விரியுளைக்**
**கடுநடைக் புரவி வழிவாய் ஓட**
**வலவன் வள்புவலி உறுப்பப் புலவர்**
**புகழ்குறி கொண்ட பொலந்தார் அகலத்துத்**
**தண்கமழ் சாந்தம் நுண்துகள் அணிய**

**வென்றிகொள் உவகையொடு புகுதல் வேண்டின்**
**யாண்டுஉறை வதுகொல் தானே... மாண்ட**
**போதுஉறழ் கொண்ட உண்கண்**
**தீதிலாட்டி திருநுதற் பசப்பே?**

*தலைவனே! வலிமையுள்ள யானைகள் மதமுடையவாய்ப் போரினை விரும்பி மாறுபட்டுக்கொண்டிருப்பது நம் அரசனின் பாசறை. இடிபோன்று முழங்கும் வெற்றிமுரசம் போர்க்களத்தே*

ஒலிக்கும்படியாக. நம் வேந்தனும் பகைவரைவென்று வெற்றிக் கொடியினையும் உயர்த்தனன்.

பலவாகிய கறவை மாடுகள் தத்தம் கன்றுகளோடும் கூடியவையாகக் காடெல்லாம் தாவிக்கொண்டு வருகின்றன. அவற்றை முறைப்படுத்துவாராகக் கோவலர்களும் தம் வாய்க் கண்ணே குழலினை வைத்து ஊதுவ்ாராயினர். நின் ஏவலர்கள் மிக விரைந்து செல்வாராக முற்படச் செல்லு கின்றனர். விரிந்த பிடரி மயிரினையும் கடுமையான செலவினையும் உடைய குதிரைகள் வழியினை மேற்கொண்டு ஓடிக்கொண்டிருக்க, நின் தேர்ப்பாகனும் அவற்றைக் கடிவாளத்தினை வலிந்து பிடித்துச் செலுத்துகின்றனன். புலவர்களின் புகழ்ச்சிக்கு உரிய விழுப்புண்களைக் கொண்ட நின்னுடைய அழகிய தாரணிந்த மார்பிடத்தே, குளிர்ந்த மணம் கமழும் சாந்தினோடு, நுண்மையான மணப்பொடிகளும் அழகு செய்கின்றன. வெற்றி கொண்ட மகிழ்ச்சியுடனே நீ நின் மனைக்கண் புகுதலையும் விரும்பினாய், ஆயின்,

மாட்சிகொண்ட நீலமலரின் இதழோடு மாறுபட்டமை யுண்ட கண்ணினளான தீதற்றவளாகிய நின் தலைவியின் அழகிய நெற்றியிடத்தைக் கைக்கொண்டிருந்த பசலையானது, இனி எங்குச் சென்று தங்கி வாழுமோ? (அதனை உரைப்பாயாக.)

**சொற்பொருள்:** 1. மதவலியானை - மதமும் வலிமையும் கொண்ட போர்க்களிறுகள். மறலிய - மாறுபாடு கொண்டுள்ள. 2. இடியுமிழ் - இடியின் குரலொத்து முழங்கும். 4. கறவை - பாற்பசு புறவு - காடு. 5. வல்விரைந்து - மிக விரைந்து. 6. உளை - பிடரி மயிர். 8. வள்பு வார். வலியுறுப்ப வலிந்து பற்றிச் செலுத்த; குதிரைகள் கடிதாக ஓடுதலால் வாரை வலிந்துபற்றி அவற்றைச் செலுத்த வேண்டியதாயிற்று. புகழ் குறிக்கெண்ட - புகழ்தலைக் குறியாகக் கொண்ட; புகழ்தற்கான விழுப்புண் பெற்று விளங்கும் எனலும் ஆம். 9. பொலம் - பொன்; அழகைக் குறித்தது. அகலம் - மார்பு. 13. போது - நீலமலரின் இதழ். 14. தீதிலாட்டி - குற்றமற்ற கற்பினள்; இதன் எதிர்ச்சொல்,'தீவினையாட்டி' என வழங்கும்.

**விளக்கம்:** 'மதவலி யானை மறலிய பாசறை' எனவே, வேந்தனின் படையாண்மை மிகுதியும் உரைத்ததாயிற்று. 'இடி உமிழ் முரசம் பொருகளத்து இயம்ப, வென்றுகொடி எடுத்தனன் எனவே, மேற்கொண்ட வேந்துவினை நிறைவு எய்தியதும் உரைத்தாயிற்று.

'கறவைப் பல்லினம் புறவுதொறு உகள' என்றலின், நிறையாகப் பகைவரது பசுநிரை கைக்கொண்டமை உணர்த்தப்

பெற்றது. இதனால் தலைவனும் திரும்புவானாயினன் என்பதனைப் பின்வரும் அடிகள் உணர்த்துகின்றன.

'புலவர் புகழ் குறிகொண்ட பொலந்தார் அகலம்' எனப், புலவர் போற்றும் புகழ்க்கு உரியதான விழுப்புண் பெற்ற சிறப்பினையும் உரைத்தனர். இதனால், தலைவனின் பேராண்மையும் உணர்த்தப் பெற்றது.

வெற்றி வீரனான இவன் தன் மனையிடத்துப் புகுதலை விரும்பிய போது, இவனில்லாத பிரிவால் இவன் தலைவியின் நெற்றியிடத்தைக் கவர்ந்துகொண்டு தங்கியிருந்த பசலை இனி எங்குச் சென்று வாழுமோ?' என்று உரைக்கின்ற நயத்தினை அறிந்து இன்புறுக. அவள் பசலை நீங்கும்; அவள் இன்பத்திலே திளைப்பாள் என்பதும் இதனால் கூறப்பெற்றது.

## 355. புலந்தேமாய் வருவோம்!

**பாடியவர்:** தங்கால் பொற்கொல்லனார். தங்கால் முடக் கொற்றனார் எனவும், தங்கால் முடக்கோவனார் எனவும் வழங்கப்படும். **திணை:** பாலை. **துறை:** பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

*(தலைவன் ஒருவன், வாழ்க்கைக்குப் பொருள் வேண்டு மென்கின்ற நியதியை உணர்ந்து,அதனைச் சென்று தேடி வரும் உள்ளத்தினன் ஆகி, அதற்கான ஏற்பாடுகளிலேயும் முனை கின்றான். நின்னைப் பிரியேன்' என்று பலகாலும் கூறித் தெளி வித்த தலைவியிடம், 'பிரிகின்றேன்' என்று சொல்லுவதற்கு இயலாதவனாகத் தலைவியின் தோழியிடத்தே செய்தியை அறிவிக்கின்றான். அவள், அதனைத் தலைவிக்கு அறிவிக்க, அவள் உள்ளம் குமுறுகின்றவளாக இங்ஙனம் உரைக்கின்றனள்.*

**மாவும் வண்தளிர் ஈன்றன குயிலும்
இன்தீம் பல்குரல் கொம்பர் நுவலும்
மூதிலை ஒழித்த போதுஅவிழ் பெருஞ்சினை
வல்லோன் தைவரும் வள்ளுயிர்ப் பாலை
நரம்புஆர்த் தன்ன வண்டினம் முரலும்**

**துணிகயம் துன்னிய தூமணல் எக்கர்த்
தாதுஉகு தண்பொழில் அல்கிக் காதலர்
செழுமனை மறக்கும் செவ்விவேனில்
தானே வந்தன்று ஆயின் ஆனாது
இலங்குவளை நெகிழ்ந்த எவ்வம் காட்டிப்**

**புலந்தனம் வருகம் சென்மோ - தோழி!
'யாமே எமியம் ஆக நீயே**

**பொன்நயந்து அருள்இலை யாகி**
**இன்னை ஆகுதல் ஒத்தன்றால்' எனவே**

தோழி! மாமரங்களும் வளமையான தளிர்களை ஈன்றுள்ளன. குயில்களும் அவற்றின் கொம்புகளிலிருந்து மிக இனிதான குரலிற் பலகாற் கூவுகின்றன. முதிர்ந்த இலைகளைக் கழித்து, மலர்கள் இதழ்விரிந்து நிறைந்திருக்கும் பெருங் கிளைகளில், யாழிசைத்தலிலே வல்லான் ஒருவன் தடவி இசைக்கும் நரம்பினின்றும் இனிய இசைகொண்ட பாலைப்பண் எழுந்து ஒலித்தலைப்போல, வண்டினங்கள் முரலுகின்றன. தெளிந்த நீர்நிலையைச் சார்ந்த, பூந்தாதுகள் உதிர்ந்து கொண்டிருக்கும் குளிர்ச்சியான சோலையிலேயுள்ள, தூய்மையான மணல்மேட்டினிடத்துத் தங்கியிருந்து, காதலர்க ளாயினோர் தம்முடைய செழுமையான வீட்டினையும் மறந்திருக்கின்ற செவ்வியினை உடையதான, இளவேனிற் காலமும் வந்துள்ளது. ஆயின்-

விளங்கும் வளைகள் இடையறாது கழன்றுவீழும் நம் துன்பத்தை அவனுக்கு விளங்கக் காட்டி, 'யாமே எமக்குத் துணையாக, நீயோ பொருளினை விரும்பி அருளற்றனை யாயினை. இத் தன்மையினை உடையையாதல் நின் தகுதிக்கு ஒத்ததன்று' எனக் கூறி, அவனை வெறுத்தேமாக வருவோம். போவோம்; எழுவாயாக!

**சொற்பொருள்:** 1. வண்டளிர் - வளவிய தளிர். 3. மூதிலை - முதிர்ந்த இலை. 4. வள்ளளுயிர்ப் பாலை - இனிதாக இசைத்தலையுடைய பாலைப்பண். 11. புலத்தல் - வெறுத்தல்.

**விளக்கம்:** "இளவேனில் வந்தது என்பதனைக் கூறி, அதன் செவ்வி காதலரைத் தாதுகு தண்பொழில் அல்கிச் செழுமனை மறப்பிக்கும் தன்மையது என்பதனையும் காட்டி, அத்தகைய வேளையில், வளை நெகிழ்ந்த தன் துயரமும் புலப்படுத்திய வளாக, 'யாமே எமியும் ஆக; நீயே பொன் நயந்து அருளிலை யாகிய இன்னையாகுதல் ஒத்தன்று' எனப் புலந்து வருவோம்' என்று உரைக்கின்றனள். அவளுடைய மனக்குமுறல் இதனாற் புலனாகும். 'நீயே பொன் நயந்து' என்றதனால், அவர்களிடத்து இயல்பாக அமைந்திருந்த வளமும் உணரப்படும்.

## 356. நின் குறிப்பு யாதோ?

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம். **துறை:** பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறை நயப்பக்

கூறியது. **சிறப்பு:** நன்னன் பறம்பின் சிறப்பு; சோழர் மருகனான வல்லம் கிழவோனைப் பற்றிய செய்தி.

*(தலைமகன் ஒருவன் தன் தலைவியை விட்டுப் பரத்தையொருத்திபால் காமுற்றுத் திரிந்தனன். பின்னர்த் திரும்பி வந்து தன் தலைவியின் உறவை நாட, அவளோ ஊடி ஒதுங்குகின்றனள், அப்போது, தோழி அவனுக்கு அருளும்படியாகத் தலைவியின் உள்ளத்திலே பழைய நிகழ்ச்சிகளை நினைவுபடுத்தியவளாக, இவ்வாறு கூறுகின்றனள்.)*

**மேல்துறைக் கொளீஇய கழாலின் கீழ்த்துறை**
**உகுவார் அருந்தப் பகுவாய் யாமை**
**கம்புள் இயவன் ஆக விசிபிணித்**
**தெண்கண் கிணையின் பிறழும் ஊரன்**
**இடைநெடுந் தெருவிற் கதுமெனக் கண்டென்**

**பொற்றொடி முன்கை பற்றின னாக**
**'அன்னாய்! என்றனென் அவன்கைவிட் டனனே**
**தொன்னசை சாலாமை நன்னன் பறம்பில்**
**சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய**
**கற்போல் நாவினே னாகி மற்றது**

**செப்பலென் மன்னால் யாய்க்கே நல்தேர்க்**
**கடும்பகட்டு யானைச் சோழர் மருகன்**
**நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்**
**நல்லடி உள்ளா னாகவும் ஒல்லார்**
**கதுவ முயறலும் முயல்ப அதா அன்று**

**ஒலிபல் கூந்தல் நம்வயின் அருளாது**
**கொன்றனன் ஆயினும் கொலைபழுது அன்றே**
**அருவி ஆம்பல் கலித்த முன்துறை**
**நன்னன் ஆஅய் பிரம்பு அன்ன**
**மின்னீர் ஓதி! - என்னைநின் குறிப்பே?**

*அருவிநீர் வீழ்ந்து கொண்டிருக்கும் நீர்த்துறையின் முன் பக்கத்தே, ஆம்பற்பூக்கள் தழைத்திருக்கும் நன்னனது அழகிய பிரம்பு மலையினைப் போன்று? ஒளி மின்னுகின்ற கருமையான கூந்தலை உடையவளே!*

*மேற்றுறையிடத்தே, கள்ளினைக்கொண்ட கலங்களைக் கழுவுதலினால், கீழ்த்துறையிலே ஒழுகிவரும் நீரினை அருந்தப் பிளந்த வாயினையுடைய யாமையானது, சம்பங்கோழி இயக்கும் வாச்சியக்காரனாக விளங்க, இறுகப் பிணித்த தெளிந்த கண்ணினையுடைய கிணைப்பறையினைப் போலப் பிறழ்ந்து கொண்டிருக்கும் ஊரினையுடையவன் நம் தலைவன்.*

நெடுந்தெருவின் இடையே கதுமென என்னைக் கண்டு, என்னுடைய பொன்வளை விளங்கும் முன்னங்கையினையும் பற்றினனாக, 'அன்னாய்! என்று யானும் கூவினேன். அந் நிலையே பழமையாக வருகின்ற தன் விருப்பத்தினைக் காத்தலற்றவனாக, அவன், என் கையினை விட்டும் விட்டனன்.

நன்னன் பிரம்பிலே, சிறிய பணையினைச் செய்வோன் அரக்கோடுஞ் சேர்த்து அமைத்த சாணைக் கல்லினைப்போல, மீண்டும் எழுதலற்ற நாவினையுடைவள், ஆகினேன். என் குரல் கேட்டு வந்த யாய்க்கு, அதனை யான் கூறினேனும் அல்லேன்!

நல்ல தேனினையும் கடுமையான களிறுகளையும் உடையவர் சோழர்கள். அவர்களது வழியினனாகிய, நீண்ட கதிர்களைக் கொண்ட நெற்பயிர் விளங்கும் வல்லத்தின் உரிமையுடையவன் நம் தலைவன். அவன் நல்ல அடியினையே நினையான் எனினும், பகைவரைக் கைப்பற்றுதற்கு முயற்சி கொள்ளுகின்றவன் ஆவான்! அங்ஙனமன்றியும், தழைத்த பலவாகிய கூந்தலை உடையாய்!அருள் செய்தலின்றி, நம்மை வருத்தி, அவன் சாகும்படியே செய்தனனாயினும். அந்தக் கொலையும் நம்மளவில் பழுதுபட்டது அல்லவே! ஆகலின், நின் குறிப்பு என்னையோ? அதனை உரைப்பாயாக!

**சொற்பொருள்:** 1. கொளீஇய கழாலில் - கொண்டிருந்த கலங்களைக் கழுவுதலால். 2. உகுவார் - சிந்தும் கலங்களின் ஒழுக்கு. 3. கம்புள் - சம்பங்கோழி. இயவன் - இயக்குபவன் வாத்தியக்காரன். 5. கதுமென - விரைய. 8. தொன்னசை - பழையதான விருப்பம்; பல நாளும் தொடர்ந்து கொண்டிருந்த ஆராவிருப்பமும் ஆம். 9. காரோடன் - பணைசெய்வோன். பயின் அரக்கு. 12. சோழர் மருகன் - சோழர் வழிவந்தோன். 14. நல்லடி - நல்ல அடிகள்; 'நல்லளி' எனவும் பாடம்; நல்ல அருளிச் செய்தலை உடையன் என்பது அப்போது பொருளாகும். 15. கதுவ - பற்ற. 16. ஒலிபல் கூந்தல் - தழைத்த பலவாகிய கூந்தல் 17. பழுது - குற்றம். 19. பிரம்பு - பிரம்பு என்னும் பெயரையுடைய மலை; பறம்பு எனவும் பாடம்.

**விளக்கம்:** நீரோடையின் மேற்புறத்தே மதுக்கலங்களைக் கழுவக், கீழ்த்துறைக்கண் மதுக்கலங்களோடு வருகின்ற நீரைக் குடித்த ஆமையானது பிறழ்தலும், சம்பங்கோழி அதனைத் தள்ளுதலும், கிணைப்பறை பிறழ்தலையும் இயக்குவானையும் போலத் தோற்றியதென்க. இது, புதுநீர் விழவிற்கண்ட பரத்தையுடனே காமுற்று மயங்கிக்கிடந்த தலைவன்,பாணன் இயக்கியபடியெல்லாம் அங்கே துய்த்துக் கிடந்தவனாக, அந்த நலந்தோற்ற வந்தனன் என்பது உள்ளுறையாக உரைத்ததாம்.

காரோடன் அரக்கோடு சேர்த்த கல்லானது, பின்னர் அதனின்றும் பெயராததுபோலவே, தலைவியும் வன்மை யமைந்த நாவினளாகி நிகழ்ந்ததனைத் தாய்க்கு உரையாளாய், அவன்பால் தானும் காதலுற்றாளாக, அதனை மறைத்தனள் என்பதனால், அவள் உள்ளத்தே நிலவும் காதலைத் தான் அறிந்ததனைக் கூறி, அவளைத் தெளிவிக்க முயலுகின்றாள் தோழி.

'நல்லடி உள்ளானாகவும் ஒன்னார் கதுவ் முயறலும் முயல்வ' என்றது, தலைவியின் தாளினைப்பற்றி வேண்டிக் கொள்ளுதற்கு அவன் நினையானாயினும், பகைவரைக் கைப்பற்ற வல்லவன் என, அவனது ஆண்மையினையும் அவனுடைய ஆற்றலினையும் உரைத்ததுமாம். 'அருளாது கொன்றனன்' என்றது, அருள் செய்தலில்லாது, நம் ஆர்வத்தையும் எழிலையும் அழித்தனன் எனினும் ஆம். அது பழுது அன்று ஆயது, அவன் வந்து அப்போது இரந்து நிற்றலால் என்க. நல்லடி நன்மையும் ஆம்.

## 357. நினையாது இருப்பார் அல்லர்!

**பாடியவர்:** எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார். **திணை:** பாலை **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. **சிறப்பு:** உம்பற்காடு பற்றிய செய்தி.

தலைவன் ஒருவன், தன்னுடைய தலைவியைப் பிரிந்தவனாகப் பொருள்தேடி வருகின்றதன் பொருட்டாக, வேற்று நாட்டிற்குச் சென்றுள்ளனன். அவனைப் பிரிந்து வாழும் தனிமை வாழ்வினாலே, அவள் கொண்ட வேதனை நாளுக்கு நாள் மிகுதியாயிற்று. உள்ளத்தின் இடையறாத நலிவினாலே உடல் நலமும் சிதையத் தொடங்கிற்று. அவளுடைய நிலைக்கு இரங்கிய அவளுடைய தோழி, தலைவனின் தளராத அன்புடைமையைக் கூறித், தலைவிக்கு ஆறுதல்கூற முற்படுகின்றனள். இத் துறையிலே அமைந்த செய்யுள் இது.)

**கொடுமுள் ஈங்கைச் சூரலொடு மிடைந்த**
**வான்முகை இறும்பின் வயவொடு வதிந்த**
**உண்ணாப் பிணவின் உயக்கம் தீரிய**
**தடமருப்பு யானை வலம்படத் தொலைச்சி**
**வியலறை சிவப்ப வாங்கி முணங்கு நிமிர்ந்து**

**புலவுப்புலி புரண்ட புல்சாய் சிறுநெறி**
**பயில்இருங் கானத்து வழங்கல் செல்லாது**
**பெருங்களிற்று இனநிரை கைதொடூஉப் பெயரும்**

**தீஞ்சுளைப் பலவின் தொழுதி உம்பற்**
**பெருங்காடு இறந்தனர் ஆயினும் யாழநின்**

**திருந்திழைப் பணைத்தோள் வருந்த நீடி**
**உள்ளாது அமைதலோ இலரே நல்குவர்**
**மிகுபெயல் நிலைஇய தீநீர்ப் பொய்கை**
**அடைஇறந்து அவிழ்ந்த தண்கமழ் நீலம்**
**காலொடு துயல்வந் தன்னநின்**

**ஆய்இதழ் மழைக்கண் அமர்த்த நோக்கே.**

*தோழி! வளைவான முட்களையுடையது ஈங்கைச் செடி. அது பிரப்பங்கொடியுடன் பின்னிக் கிடக்கும். வெண்மையான அரும்புகள் விளங்கும் குறுங்காடு அத் தன்மைத்து. அதனிடத்துச் சூல் முதிர்ச்சியுள்ள பெண்புலி ஒன்று தளர்ந்து உணவற்றுக் கிடக்க, அதன் துயரினைத் தீர்ப்பதற்கு எழுந்தது அதனுடைய ஆண். பெரிதான கோட்டினையுடைய யானை யொன்றை வலப்புறம் வீழுமாறு அது கொன்றது. அகன்ற பாறைகள் எம்மருங்கும் செந்நிறங் கொள்ளும்படியாக, அந்த யானையின் ஊனைக் கவ்வி இழுத்தவாறு கொணர்ந்து, தன் துணையை உண்பித்தது. அதன்பின்னர்ப் புலால் நாற்றமுடைய அது, மூரித்து நிமிர்ந்ததாகப் புற்களிடையே கிடந்து புரள, அதனாற் புற்கள் சாய்ந்து கிடக்கும் கள் மிகுதியுள்ளது காடு, பெரிய களிற்றின் கூட்டமாகிய நிரையும் அவ்விடத்தே இயங்குதலைப் பொருந்தாதாய் ஒன்றன் கையால் மற்றொன்றைத் தொட்டவாறு விழிப்புடன் செல்லும். இனிய சுளைகளை யுடைய பலாமரத்தின் கூட்டத்தையுடைய, அத்தகைய, பெரிதான உம்பற்காட்டினை நம் தலைவர் கடந்து சென்றவராயினும்-*

*நின்னுடைய திருத்தமுற அணிந்த அணிகளையுடைய பெருத்த தோள்கள் வருந்தி அழகிழந்து போமாறு காலத்தை நீட்டிப்பவர் அல்லர்.*

*மிகுதியான மழையினாலே நிலைபெற்ற பெருக்கத்தினை யுடைய பொய்கையினிடத்தே, இலைகளைவிட்டு மேலாக எழுந்து மலர்ந்துள்ள தண்மையான மணம் வீசும் நீலப் பூவானது காற்றினாலே அசைந்தாற்போன்ற, நின்னுடைய அழகிய இதழ் பொருந்திய குளிர்ச்சியான கண்களின் அமர்த்த நோக்கினை, அருளுண்டாக நினையாது அமைந்திருத்தலும் அவர் இலராவர்.*

**சொற்பொருள்:** *1. கொடுமுள் - வளைந்தமுள். ஈங்கை - ஈங்கைச் செடி; இசங்கு என்பர் நெல்லை வட்டத்தினர். சூரல் -*

பிரம்பு. 2. வான் முகை - வெண்மையான பூவரும்புகள். 3. பிணவு - புலியின் பெண். உயக்கம் - வருத்தம். 4. தொலைச்சி - கொன்று 5. வியல் அறை - அகன்ற பாறையிடங்கள். முணங்கு நிமிர்தல் - மூரி நிமிர்தல்; உழைத்துக் களைத்தபின் உடலை உதறிக் களைப்பாற்றும் தன்மை. 6. புலவுப் புலி - புலால் நாற்றத்தைக் கொண்ட புலி. 8. கை தொடூஉப் பெயரும் - ஒன்றையொன்று கைகோர்த்தவாறு செல்லும்; கை கொடூஉப் பெயரும் எனவும் பாடம். 9. பலவின் தொழுதி - பலாமரத்தின் செறிவு உம்பற் பெருங்காடு - ஒரு காட்டின் பெயர். 12 நல்கு வர - அருள் உண்டாகுதலைப் பொருந்த; நல்குவர் எனவும் பாடம்; அருள் செய்வர் என்பது பொருள். 13. தீ நீர் - இனிய நீர். 14. அடை இறந்து அவிழ்ந்த தண் கமழ் நீலம் பூக்கள் - இலையினைக் கடந்தவை யாக நீர் மட்டத்திற்கு மேலே உயர்ந்து எழுந்து குளிர் மணத்துடன் மலர்ந்துள்ள தன்மையைக் குறித்தது. 15. கால் - காற்று. துயல்வருதல் - அசைந்தாடுதல். 16. அமர்த்த நோக்கு - அமரிய பார்வை.

**விளக்கம்:** உம்பற் பெருங்காட்டின் தன்மையினைக் கூறுவதனை நன்கு சிந்திக்கவும். பெண்புலியின் பசிபோக்க விரும்பிய ஆண்புலி, யானையைக் கொன்று, அதன் ஊனைப் பாறையிடமெல்லாம் சிவக்க இழுத்துச் சென்று, தன் துணைக்கு ஊட்டியபின் மூரித்து நிமிர்ந்து புரண்டதால் புற்கள் சாய்ந்து கிடக்கின்ற நெறி என்றனர். கொடுமைக் குணம் உடைய தாயினும், அந்த ஆண்புலிக்கும் தன் துணையின்பால் அமைந் துள்ள அன்பின் மிகுதி இதனாற் கூறப் பெற்றது. அங்ஙனமாக, அருளாளராகிய நம் காதலர் நம்மை வருந்தி வாடவிட்டு அமைவாரோ என்பதும் உணர்த்தினள் என்க. 'பெருங்களிற்று இன நிரையும் அச்சத்தால் கைதொடூஉப் பெயரும்' எனவே, வழியிடையின் ஏதத்து மிகுதியும் கூறப்பட்டது. அதனைக் கடந்துசென்றவர் எனவே, அவனுடைய ஆண்மை மிகுதியும் உரைத்தனள்.

கண்ணிற்கு 'மிகுபெயல் நிலைஇய தீ நீர்ப் பொய்கை. அடையிறந் தவிழ்ந்த நீலம் காலொடு துயல்வந்த நிலை' உவமை கூறப் பெற்றது. இது, தலைவியின் கண்கலங்கி நின்ற வருத்தத்தின் மிகுதியை உணர்த்துவதாகும்.

## 358. எதனால் என்பேன்?

**பாடியவர்:** மதுரை மருதனிள நாகனார்; மதுரை மருதங்கண்ணனார் பாடியது எனவும் பாடம். **திணை:** குறிஞ்சி. **துறை:** பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

*(தலைவன் ஒருவனும், தலைவி ஒருத்தியும், தம்முள் கண்டு காதலித்துப், பகற்போதிலே சந்தித்து உறவாடி இன்புற்று வருகின்ற காலத்தில், ஒருநாள், தலைவி தன் தோழியுடன் குறித்த இடத்திலே தலைவனின் வருகைக்காகக் காத்திருக்கின்றாள். அப்போது, தலைவன் வந்து ஒருபுறமாக நிற்பதை அறிந்த தோழி, அவர்களின் களவினை அன்னையும் அறிந்தனள் எனச் சொல்வாளாக இப்படிக் கூறுகின்றாள். இதன் நோக்கம், தலைவனைக் களவொழுக்கத்தை நீடித்து மேற்கொள்ளக் கருதுவதனின்றும் மாற்றி, வரைந்து மணந்து கொள்ளுதலிற் செலுத்துவதாகும்.)*

**நீலத்து அன்ன நிறம்கிளர் எருத்தின்**
**காமர் பீலி ஆய்மயில் தோகை**
**இன்தீம் குரல துவன்றி மென்சீர்**
**ஆடுதகை எழில்நலம் கடுப்பக் கூடி**
**கண்ணேர் இதழ தண்நறுங் குவளைக்**

**குறுந்தொடர் அடைச்சிய நறும்பல் கூழை**
**நீடுநீர் நெடுஞ்சுனை ஆயமொடு ஆடாய்**
**உயங்கிய மனத்தை யாகிப் புலம்புகொண்டு**
**இன்னை ஆகிய நின்நிறம் நோக்கி**
**அன்னை வினவினள் ஆயின், அன்னோ!**

**என்னென உரைக்கோ யானே - துன்னிய**
**பெருவரை இழிதரும் நெடுவெள் அருவி**
**ஓடை யானை உயர்மிசை எடுத்த**
**ஆடுகொடி கடுப்பத் தோன்றும்**
**கோடுயர் வெற்பன் உறீஇய நோயே?**

**தோழி!**

*நீலமணியினைப்போன்று நிறம் ஒளிர்கின்ற கழுத்தினையும், அழகிய பீலியாகிய சிறந்த தோகையினையும் உடையன மயில்கள். அவை, இனிமைமிக்க குரலினவாகத் தம்முள் நெருங்கின. மெல்லிய தாள அறுதியுடனே ஆடல்பயிலும் ஆடல் மகளிரின் தன்மையைக் கொண்டவாய், அழகுச் சிறப்புடன் அவை ஆடலும் பயில்வ வாயின.*

*கண்ணை யொத்த இதழ்களையுடைய குவளை மலரின், குறுகிய மாலையினைச் செருகியிருக்கும் நறுமணத்தையுடைய பலவாகிய கூந்தல் பரந்து ஆடுமாறு, ஆழ்ந்த நீரினையுடைய நெடிய சுனையிடத்தே, நின் ஆயமகளிருடன் கூடியவளாக, அம் மயில்களைப்போல நீயும் ஆடாய் ஆயினை! வருத்தமுற்ற மனத்தையும் கொண்டவள் ஆயினை! தனிமையினைக்*

கொண்டவளாகி, இத்தன்மையாக வெளிறிப் போயிருக்கும் நின்னுடைய உடல் வேறுபாட்டை பார்த்து, அன்னையும், அதன் காரணத்தைக் கேட்டனளாயின், என்ன சொல்வேன்?

பெரிய மலையிலே பொருந்தி வழிந்தொழுகும் நீண்ட வெள்ளிய அருவியானது, நெற்றிப் பட்டத்தையுடைய யானையின் மேலாக அமர்ந்து மிக உயரத்தே எடுக்கப் பெற்றுள்ள, அசையும் வெண்துகிற் கொடியினைப்போலத் தோன்றும், சிகரம் உயர்ந்த மலை நாட்டிற்கு உரியவன் நம் தலைவன், அவன் நம்மை அடையுமாறு செய்வித்த இந்நோயினை, அந்தோ, யான் என்னவென்று அன்னைக்கு எடுத்து இயம்புவேன்?

**சொற்பொருள்:** *1. நீலம் - நீலமணி, எருத்து - கழுத்து. 2. காமர் - அழகிய. 2. இன் தீங்குரல் - இனிமை மிக்க குரல். குவன்றி - நெருங்கி. சீர் - தாள அறுதி. 6. குறுந் தொடர் - குறுகக்கட்டிய மாலைகள். அடைச்சிய - செருகிய. கூழை - கூந்தல். 8. உயக்கம் - வருத்தம். புலம்பு - தனிமை. 13. ஓடை யானை - ஓடையினை யுடைய யானை: ஓடை நெற்றிப்பட்டம். 15. கோடு உயர் வெற்பு - முடிகள் உயரமாக அமைந்திருப்ப தான மலை.*

**விளக்கம்:** மகளிர் ஆயத்தாருடன் கூடிச் சுனையிடத்தே ஆடி மகிழுகின்ற' எழிலுக்கு ஒப்பாக, மயிலினம் தோகை விரித்து ஆடுதலைக் கூறினர். தோகை இன்றீங்குரல எனக் கூறியது, "சுனையாடி மகிழும் மகளிரும் தம்முட் பேசிய வராக ஆரவாரத்துடன் நீராடுவர் என்பதாம். 'நின்னிறம் நோக்கி அன்னை வினவினளாயின் என்னென உரைக்கோ? யானே? எனத் தோழி கூறுவதைக் கவனிக்கவும்! 'நின் உருவத்தோற்றம் மாறுபடுவதை அன்னை அறிந்து கேட்டால் யான் அவளுக்கு யாது கூறுவேன்? ஆதலின், என் பொருட்டாவது நீ வருந்தாதிரு' எனக் கூறுவாள்போலத் தலைவியின் பிரிவுத்துயரினைத் தலைவனுக்குப் புலப்படுத்துகின்றனள் அவள். மலைவீழ் அருவி, யானை மேலாக உயர்த்துள்ள அசையும் வெண்கொடிக்கு உவமையாக உரைக்கப்படுவதனையும் அறிந்து இன்புறுக.

## 359. ஏன் செயலிழந்தனை?

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.* **சிறப்பு:** *வானவரம்பனுக்கு உரித்தான வெளியத்தின் வளமை; கள்வர் கோமான் புல்லிக்கு உரியதான வேங்கடமலையின் தன்மை.*

*(தலைவன் ஒருவன் தன் அன்புறு தலைவியைப் பிரிந்தவனாகப் பொருளீட்டி வருதலைக் குறித்து வேற்று நாட்டிற்குச் சென்றுள்ளனன். அவள், அவனை நினைந்து நினைந்து நாளும் வருத்தமுற்று வாடி நலிகின்றாள். அவளுடைய வாட்டத்தினைக் கண்டனள் அவளுடைய ஆருயிர்த் தோழி. தலைவியின் வருத்தத்தை மாற்றுவாளாக இவ்வாறு கூறுகின்றனள்.)*

**பனிவார் உண்கணும் பசந்த தோளும்**
**நனிபிறர் அறியச் சாஅய நாளும்**
**கரந்தனம் உறையும் நம்பண்பு அறியார்**
**நீடினர் மன்னோ காதலர்' எனநீ**
**எவன்கை யற்றனை? - இகுளை!-அவரே**

**வான வரம்பன் வெளியத்து அன்னநம்**
**மாணலம் தம்மொடு கொண்டனர் - முனாஅது**
**அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்**
**பெருங்கல் மீமிசை இயம்எழுந் தாங்கு**
**வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை**

**சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்**
**பொய்யா நல்லிசை மாவண் புல்லி**
**கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்**
**முதைச்சுவல் மூழ்கிய கான்சுடு குரூஉப்புகை**
**அருவித் துவலையொடு மயங்கும்**

**பெருவரை அத்தம் இயங்கி யோரே!**

*தோழி! "கண்ணீர் ஒழுகும் மையுண்ட கண்களும், பசலை படர்ந்த தோள்களும், நாளுக்கு நாள் வாடுதலுற்றுப், பிறர் நின் நோயை அறியும்படியாக மிகினும், நாடோறும் அவற்றை மறைத்து வாழும் நம் பண்பினை நம் காதலர் அறியாராயினர் மீண்டு வருதலில் காலமும் தாழ்த்தினா என்று, நீ ஏனோ செயலிழந்தவள் ஆயினை"*

*முன்பக்கத்தேயுள்ள அரிய சுரத்தின் கவர்த்த நெறிகளில் தங்கிய கூத்தரது வாத்திய ஒலியானது, பெருமலையின் மேலிடத்தே எதிரொலித்து எழும், அதுபோலவே, தன்னால் விரும்பப்படும் பிடியினைக் கெட்டுப்போக்கிய நெடியகால்களை யுடைய களிற்றியானை யானது. தெய்வங்கள் விரும்பித்தங்கும் மலையடுக்கத்தே இடியோடு மாறுட்டதாக முழங்கிக் கொண்டிருக்கும். அத்தகைய மலைநாட்டை யுடையவன், பெரு வண்மையும், பொய்த்தல் அற்ற நல்ல புகழும் உடையோனாகிய புல்லி என்பவன். அவனது, கவைத்த கதிர்களையுடைய வரகின் புதிய பசுந்தாள்களையுடைய பழங்கொல்லையாகிய மேட்டு*

நிலத்தை சுற்றியுள்ள காட்டைச், சுடுவதனால் விளங்கும் புகை எழும். அப் புகை அவனுடைய மலையிடத்தே வீழும் அருவியின் துவலையோடு விரவித் தோன்றும், பெருமலை பொருந்திய அத்தகைய காட்டு வழியே சென்றோர் நம் தலைவர்.

அவர், வானவரம்பனது 'வெளியம்' என்னும் ஊரினைப் போன்றதான நம்முடைய மாண்புற்ற நலத்தையெல்லாம் தம்முடனே கொண்டு சென்றுவிட்டனரே! "(இனி அவர் மீண்டும் வராதபோது அந் நலம் எங்ஙனம் என்னை வந்து அடையும்? என்பது கருத்து.)

**சொற்பொருள்:** 1. பனிவார் உண்கண் - துளிகள் வழியும் மையுண்ட கண்கள். 2. சாஅய - வாட்டமுற்ற. 3. கரந்தனம் உறையும் - மறைத்தேமாக வாழும். 5. கையறுதல் - செயலற்றுச் சோர்தல்; இகுளை - தோழி 6. வானவரம்பன் - சேரன்; புகழின் உயர்ச்சிக்கு வானத்தையே எல்லையாக உடையவன் என்பது பொருள். 7. முனாஅது - முற்பக்கத்து. 8. அசைஇய - தயங்கிய கோடியர்; கூத்தர் 9. இயம் - வாச்சியம்; அதன் ஒலியைக் குறித்தது. 10. வீழ் பிடி - விரும்பப்படும் பிடி 11. சூர் புகல் - அச்ச முடைத்தாகச் சொல்லத்தக்க; சூரர மகளிர் வாழ்தலையுடைய. 14. முதைச்சுவல - பழை கொல்லை. குரூ உப்புகை - நிறம் விளங்கும் புகை. 15. துவலை - சிறுதுளி; தூவானம் என்பர்.

**விளக்கம்:** துயரத்தின் மிகுதியால் நீர்வடியும் கண்ணினளாகவும், பசந்த தோளினளாகவும் நாளுக்குநாள் வாட்ட முற்றும், அதனைப் பிறர் அறியின் தலைவனைப் பழிப்பார்களே என்ற எண்ணத்தால் பிறர் அறியாதபடி மறைத்தவளாக வாழ்கின்ற தலைவியின் கற்புச்செவ்வியை அறிக. காதலன் உடன் இல்லாது போயினும், இப்படி அவனுக்குப் பழி ஏற்படாதவாறு கரந்தொழுகும் பண்பினைக்கூட அவன் அறிந்தானில்லையே என நோகின்றவள், கரந்தனம் உறையும் நம் பண்பு அறியார் நீடினர்' என்கின்றனள். இதனால், தம் வாட்டத்தின் எல்லைக்கண்ணும், தம் தலைவனுக்குப் பழி நேராது காக்கும் தமிழ்ப் பெண்மையின் செவ்வியை அறிந்து போற்றுக.

பிரிவினால் நலன் அழிந்தவாளை, மாணலம் தம்மொடு கொண்டனர்' எனத், தலைவன் பிரிவினால் தான் ஆற்றியிருக்க நினையினும், இயலாத தன் உள்ளத்தைச் சொல்லிய தகைமையினை அறிந்து உணர்க.

கூத்தரின் வாச்சிய முழக்கத்து எதிரொலி பெருமலை யுச்சிகளினும் எதிரொலிப்பதுபோல, வானத்து இடிமுழக்கமும், பிடிகெடுத்த களிற்றி பிளிற்றொலியும் மாறுமாறு எழுந்தன

என்க. களிற்றின் அந்தத் தேட்டம் தலைவனின் உள்ளத்தும் தலைவியின் நினைவை எழுப்பும் என்றனள்.

வரகுப் பயிரினை அறுத்தபின்னர், அதன் தாள்களைத் தீயிட்டுக் கொளுத்துவது இன்றும் நம் நாட்டின் மரபாகும். இந்த மரபு பழையதாகவே வருகின்ற பயிர்முறை என்பதனைக், 'கான்சுடு குரூஉப்புகை' என்ற வாசகம் நன்கு உணர்த்தும்.

'கான்சுடு குரூஉப்புகை அருவித் துவலையொடு மயங்கும்' என்றதனாலும், 'யானை மழைமாறு முழங்கும்' என்றதனாலும், தலைவன் திருப்பி வருதற்கான கார்காலமும் தொடங்கிற்று என்பதனை உணர்த்தினள்.

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது' என்பதினும், 'பிரிவிடை ஆற்றுவாளாய தோழிக்குத் தன் ஆற்றாமையைத் தலைவி சொல்லுவதாகக் கொள்ளுதல், இச் செய்யுளின் அமைதிக்கு மிகவும் பொருத்தமாக விளங்கும். இதனை நன்கு ஆராய்ந்து கொள்ளுக.

## 360. பெயரின் வருந்துவள்!

**பாடியவர்:** மதுரைக் கண்ணத்தனார். **திணை:** நெய்தல். **துறை:** பகற்குறிவந்த தலைமகற்குத் தோழி பகற்குறி மறுத்து, இரவுக்குறி நேர்த்தது. **சிறப்பு:** கடற்கரைக்கண் அந்திவானக் காட்சி இருபெருந் தெய்வத்து உருவுடன் இயைந்த தோற்றம் போல இருந்ததென்பது.

*(கடற்கரைப் பகுதித் தலைமகன் ஒருவன், அப்பகுதித் தலைவி ஒருத்தியைக் கண்டு காதலித்துப், பகற்குறியிடத்தே அவளுடன் கூடிக், களவு வாழ்வினனாக இன்புற்று வருகின்றான். மாலையில். அவன் தேரேறித் தன்னூர்க்குச் செல்லுவதும் வழக்கமாக அமைந்திருந்தது. அந்தக் களவு உறவினை நீட்டிக்க விரும்பாது, அவன் உள்ளத்தைத் தலைவியை வரைந்து மணந்து கொள்வதிலே செலுத்த விரும்புகின்றாள், அந்தத் தலைவியின் தோழி. ஒரு நாள் மாலை, அவன் ஊருக்குச் செல்லுவதற்குப் புறப்படும்போது, அவனிடம், இரவில் வருமாறு சொல்பவளாக, அதன் இயலாமையையும் அவனுக்கு நுட்பமாகப் புலப்படுத்துகின்றாள் அவள்)*

**பல்பூந் தண்பொழில் பகல்உடன் கழிப்பி**
**ஒருகால் ஊர்திப் பருதிஅம் செல்வன்**
**குடவயின் மாமலை மறையக் கொடுங்கழித்**
**தண்சேற்று அடைஇய கணைக்கால் நெய்தல்**
**நுண்தாது உண்டு வண்டினம் துறப்ப**

**வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**
**உருவுடன் இயைந்த தோற்றம் போல**
**அந்தி வானமொடு கடலணி கொளாஅ**
**வந்த மாலை பெயரின் மற்றிவள்**
**பெரும்புலம் பினளே தெய்ய அதனால்**

**பாணி பிழையா மாண்வினைக் கலிமா**
**துஞ்சு ஊர் யாமத்துத் தெவிட்டல் ஓம்பி**
**நெடுந்தேர் அகல நீக்கிப் பையெனக்**
**குன்றுஇழி களிற்றின் குவவுமணல் நந்தி**
**இரவின் வம்மோ - உரவுநீர்ச் சேர்ப்ப! -**

**இனமீன் அருந்து நாரையொடு பனைமிசை**
**அன்றில் சேக்கும் முன்றிற் பொன்னென**
**நன்மலர் நறுவீ தாஅம்**
**புன்னை நறும்பொழில் செய்தநம் குறியே**
**வலிய கடற்கரைக்கு உரியவனான, சேர்ப்பனே!**

*பலவாகிய பூக்களையுடைய குளிர்ச்சியான பொழிலினிடத்தே பகற்போதெல்லாம் தலைவியுடனே கூடியிருந்து கழித்தனை. ஒற்றைச் சக்கரத்தினைக் கொண்ட தேரினையுடையவன் ஞாயிறாகிய அழகிய செல்வன், அவன் மேற்றிசைக் கண்ணதாகிய பெரிய மலையிற்சென்று மறைந்தனன். வளைந்த கழியிலேயுள்ள தண்ணிய சேற்றிலே செறிந்துள்ள திரண்ட தண்டினையுடைய நெய்தற்பூவின் நுண்ணிய தாதினை உண்ட வண்டினங்களும் அதனைவிட்டு நீங்கின. அஞ்சத்தகும், மிக்க வலிமையினையுடைய இரண்டு பெருந் தெய்வங்களான சிவமும் சக்தியும், ஓர் உருவத்தே உடன் பொருந்திச் சிவசக்தியாக விளங்குகின்ற தோற்றத்தைப் போல, அந்திச் செவ்வானத்துடன் நீலக்கடலும் இணைந்து அழகு கொண்டது, இங்ஙனமாக வந்த மாலைக் காலத்திலே, நீயும் நீங்கிச் சென்றனையானால், இவள் பெரிதும் தனிமை கொண்டவளாகி வருந்துவாள்.*

*அதனால், தாளத்தையொத்து நடத்தலினின்றும் பிழைபடாத மாண்புற்ற, செல்லுந் தொழிலிலே வல்ல செருக்குடைய குதிரையானது, ஊர் துயிலும் யாமத்தினும் கனைத்தலைப் பாதுகாத்து, நெடிய நின் தேரினைச் சேய்மையிடத்தேயே நீக்கி நிறுத்தி, மெல்லெனக் குன்றிடத்திருந்து இறங்கிச் செல்லும் களிற்றியானையினைப் போலத் திரண்ட மணல்மேட்டினைக் கடந்து வருக.*

*மீனினங்களை அருந்தும் நாரையொடு பனைமரத்தின் மேல் அன்றில்களும் தங்கியிருக்கும் மனையின் முற்றத்திலே*

பொன்னென்னும்படியாக நல்ல மரமாகிய நறும்பூக்கள் உதிர்ந்து பரவும் புன்னைமரங்களுள் நறிய பொழிலிடத்தே, செய்த நம்முடைய குறியிடத்திற்கு, இரவின்கண், நீயும் வருவாயாக.

**சொற்பொருள்:** *1 . கழிப்பி - கழித்து. 2 ஒருகால் ஊர்தி ஒற்றைச் சக்கரத்தையுடைய தேர். 3. குடவயின் மாமலை - மேற்றிசைக்கண் உள்ள பெருமலை. 4. அடைஇய - அடைந் திருந்த. கணைக்கால் நெய்தல் - திரண்ட தண்டினை யுடைய நெய்தல். 6. வெருவரு கடுந்திறல் - அச்சம்வரத்தக்க கடிய திறல். இருபெருந்தெய்வம் - சிவமும் சக்தியுமாகிய தெய்வம்; சிவனும் திருமாலும் எனவும் கூறுவர். 10. புலம் பினள் - தனிமை கொள்வாள். தெய்ய - அசை. 11. பாணி - தாளத்துடன் ஒத்துச் செல்லல் குதிரையின் ஓட்டத்தில் இந்தத் தாள அமைதியைக் காணலாம். 12. தெவிட்டல் - ஒலித்தல்; குதிரையின் கனைப்பு - ஒலியைக் குறித்தது. கலிமா - செருக்கிய குதிரை. 15. உரவு நீர் - வலிமையுள்ள நீர்; கடல் நீரைக் குறித்தது. 17. சேக்கும் - தங்கும்.*

**விளக்கம்:** *மாலைக் காலத்துச் செக்கர் வானமும் நீலக்கடலும் அடிவானத்து ஒருங்கே இணைந்திருக்கும் காட்சியைச் செம்மேனியனான சிவபிரானும், நீலமேனியின் ளான அம்மையும் உருவால் ஒன்றாகிப் பொருந்தியிருக்கும் தன்மை போலிருந்தது என்கின்ற நயத்தினை அறிந்து இன்புறுக.*

*"துஞ்சுவூர் யாமத்துத் தெவிட்டல் ஓம்பி' என்றது, இரவிற் குதிரை கனைப்பதனால், துஞ்சும் ஊர் துயிலெழ, அதனால் இவர் களவும் வெளிப்பட்டு விடுவதாகும் என்பதனாலாம். அது இயலாதாகவே, இரவுக்குறி நேர்வதும் இயலாதாகும் என்பதனை உணர்த்தினாள்.*

*'அன்றில் பனைமிசைச் சேக்கும் முன்றில்' எனவே, அது இரவிற் குரலெடுத்து வீட்டவரை எழுப்பிவிட்லும் நேரலாம் என்றனளாம்.*

*இதனால், தலைவன் இரவுக் குறியினை நாடாது, தலைவியின் துயரைத் தீர்ப்பதனைக் கருதியவனாக, அவளை விரைந்து மணந்து கொள்வதிலேயே முனைவான் என்க.*

## 361. மருளி நெஞ்சே!

**பாடியவர்:** *எயினந்தை மகனார் இளங்கீரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தன் காதல் மனைவியைப் பிரிந்து. பொருள் வேட்கையுற்ற நெஞ்சமானது தூண்டிச் செலுத்த, சுரம்பல கடந்து பொருள் தேடி வருதலின் பொருட்டாகச் சென்று கொண்டிருக்கின்றான் தலைவன் ஒருவன். இடையே, அவளுடைய நினைவு தலை தூக்குகின்றது. அவன் உள்ளத்தே அந்த நினைவும் அவளைப் பிரிந்த வருத்தமும் ஆகிய இரண்டும் நிறைந்து விடுகின்றன. அப்போது அவன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது இது.*

**தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண்**
**மாஇதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன**
**திருமுகத்து அலமரும் பெருமதர் மழைக்கண்**
**அணிவளை முன்கை ஆயிதழ் மடந்தை**
**வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும்**

**கவவுப்புலந்து உரையும் கழிபெருங் காமத்து**
**இன்புறு நுகர்ச்சியிற் சிறந்ததொன்று இல்லென**
**அன்பால் மொழிந்த என்மொழி கொள்ளாய்**
**பொருள்புரி வுண்ட மருளி நெஞ்சே!-**
**கரியாப் பூவின் பெரியோர் ஆர**

**அழலெழு தித்தியம் மடுத்த யாமை**
**நிழலுடை நெடுங்கயம் புகல்வேட் டாஅங்கு**
**உள்ளுதல் ஓம்புமதி இனிநீ முள்ளெயிற்றுச்**
**சின்மொழி அரிவை தோளே - பன்மலை**
**வெவ்வறை மருங்கின் வியன்சுரம்**

**எவ்வம் கூர இறந்தனம் யாமே!**

*தூய மலராகிய தாமரைப் பூவின் இடத்தே, கரிய இதழ்களைக்கொண்ட குவளை மலர்கள் இரண்டினைப் பிணைத்து வைத்தாற்போலத், தன் அழகிய முகத்திடத்தே, சுழலும் பெரிதான மதர்த்த குளிர்ந்த கண்களை உடையவள் நம் காதலி. அழகான வளையல்கள் அவளுடைய முன் கையிணிடத்தே விளங்கும். அழகான இதழ்களை உடைய மடந்தை அவள். 'அவளுடைய வாரணிந்த முலைமுற்றத்தே கொள்ளும் அணைப்பிலே, ஒரு நூலிடை வெளியேற்படினும், ஊடல் கொண்டு ஒதுங்கும் மிகப் பெரிய காமத்தினோடுங்கூடிய இன்பந் துய்க்கும் நுகர்ச்சியினுங் காட்டில் சிறந்தது பிறிதொன்றும் இல்லை!' என்று, அன்புடனே யான் அன்று கூறிய என்னுடைய சொல்லினை ஏற்றுக் கொள்ளாயாயினை! பொருளினை விரும்பி இங்ஙனம் வந்த மயக்கத்தினையுடைய நெஞ்சமே!*

*பல மலைகளையும் வெம்மையான பாறைகளையும் கொண்ட அகன்ற சுரத்தினைத் துன்பம்கொண்டு கடந்தும் யாம் வந்துள்ளனம். இப்போது-*

கரிந்து போகாத பூக்களைச் சூடியிருக்கும் பெரியோரான தேவர்கள் உண்ணுதற் பொருட்டாகச், செந்தீ ஓங்கிய வேள்விக்குண்டத்தின் கண்ணே இடப்பெற்ற யாமையானது, தான் முன்பிருந்த நிழலுடைய நெடிய பொய்கைக்கண் சென்றுவிடலை விரும்பினாற்போல-

முள்போன்ற பற்களையும், சிலவாய சொற்களையும் உடைய நம் தலைவியின் தோள்களைத் தழுவுதலைப்பற்றி, இனி, நீயும் நினைத்தலைச் செய்யாதிருப்பாயாக.

**சொற்பொருள்:** 1. அம்கண் - அழகிய இடத்தே. 2. மாஇதழ்க் குவளை - கரிய இதழ்களையுடைய குவளை. 3. அலமரும் - சுழலும்; கருவிழிகளின் சுழற்சியைக் குறித்தது. பெருமதர் - பெரிய மதர்த்த; பெரிதும் மதர்த்த எனலும் ஆம். 6. விலங்கினும் - போழினும்; ஊடறுத்துச் செல்வதாயினும்; அந்த இடைவெளி நேரினும். 6. கவவு - தழுவுதல். புலந்து - ஊடி; வெறுத்து. 7. இன்புறு நுகர்ச்சி - இன்பத்தை அடைதலாகிய நுகர்ச்சி. 9. புரிவு - விருப்பம், மருளி நெஞ்சு - மயங்கிய நெஞ்சு. 10. கரியா - வாடுதலற்ற. பெரியோர் யாகத்து அவிர்ப்பாகம் பெறும் தேவர்கள். 11. தித்தியம் - யாக குண்டம். மடுத்த - இடப்பெற்ற. 15. வெவ்வறை - வெப்பமிக்க பாறையிடங்கள். வியன்சுரம் - அகன்ற நெடிய சுரம்.

**விளக்கம்:** முகம் தாமரைப் பூவிற்கும், கண்கள் குவளை மலருக்கும் உவமையாகக் கொள்ளப்பட்டுத், 'தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண் மாயிதழ்க் குவளை மலர் பிணைந்தன்ன' எனக் கூறப்படும் நயத்தினை அறிந்து இன்புறுக. நூலிடை ஊடே வெளியேற்படினும், அந்தத் தழுவலிலே மனம் பொருந்தாது ஊடி ஒதுங்கும் கழிபெருங் காமத்தின் தன்மை யினை மிகவும் சுவைபடக்கூறுவார், 'இன்புறு நுகர்ச்சியிற் சிறந்தது ஒன்று இல்லை' எனவும் கூறினர் கரியாப் பூவின் பெரியோர் - தேவர்கள்; இவர்களிட்டுள்ள மாலைகள் வாடுதலற்று விளங்குவன என்பது வழக்கு. தேவர்க்கு யாமையும் வேள்வியுணவாகக் கொடுக்கப்பெற்ற செய்தி, 'அழலெழு தித்தியம் அடுத்த யாமை' என்பதனாற் புலனாவது அறிக.

## 362. நிலங்கொண்ட நிலாக்கதிர்

**பாடியவர்:** வெள்ளி வீதியார். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

(களவிற்கூடித் தம்முள் இன்புற்றுவரும் காதலர் இருவர் தம்முடைய காதற்பெருக்கினால் முற்றவும் தம் வயமிழந்தவராக

இருக்கின்றனர். ஒருநாள் இரவு தலைவனைக் குறித்த இடத்திற் சந்திப்பது கருதிச் சென்றுள்ள தலைவியுடனே, அவளுடைய தோழியும் இருக்கின்றாள். நிலவு எழுந்தும் அவனை வரக் காணோமே என்பவளாக, அவன் வந்து ஒருசார் நிற்பதறிந்த தோழி, தலைவிக்குச் சொல்லுவது போலத் தலைவனுடைய உள்ளத்திலே மணமுயற்சியில் ஈடுபடற்கு முயலுவதற்கான கருத்தினை விதைக்கின்றாள்.)

**பாம்புடை விடர பனிநீர் இட்டுத்துறைத்**
**தேம்கலந்து ஒழுக யாறுநிறைந் தனவே**
**வெண்கோட்டு யானை பொருத புண்கூர்ந்து**
**பைங்கண் வல்லியம் கல்லளைச் செறிய**
**முருக்கரும்பு அன்ன வள்ளுகிர் வயப்பிணவு**

**கடிகொள வழங்கார் ஆறே ஆயிடை**
**எல்லிற்று என்னான் வென்வேல் ஏந்தி**
**நசைதர வந்த நன்ன ராளன்**
**நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்**
**இன்றிப் பொழுதும் யான்வா ழலனே**

**எவன்கொல்? - வாழி தோழி - நம் இடைமுலைச்**
**சுணங்கணி முற்றத்து ஆரம் போலவும்**
**சிலம்புநீடு சோலைச் சிதர்தூங்கு நளிர்ப்பின்**
**இலங்குவெள் அருவி போலவும்**
**நிழல்கொண் டனவால், திங்கள்அம் கதிரே!**

தோழி வாழ்க!

பாம்புகளையுடைய மலைப் பிளப்புக்களினின்றும் பாய்ந்து வருகின்ற குளிர்ந்த நீரானது, ஒடுக்கமான துறைகளின் வழியாகத் தேனுடன் கலந்ததாகி ஒழுகிக்கொண்டிருக்க, அதனால், யாறுகளும் நிறைவுற்றன.

வெண்மையான கொம்புகளையுடைய களிற்றியானை குத்தியதனால், புண்மிகுந்த பசிய கண்களையுடைய புலியானது கற்குகையிற் சென்று பதுங்கியிருக்கும். செம்முருக்கம் பூவினது அரும்புகளைப் போன்ற கூர்மையான நகத்தினையுடைய, வலிமையுள்ள அதன் பெண்புலியானது, அக்குகைவாயிலைக் காத்ததாக இருக்கும். இதனால், அவ் வழியே செல்வார் ஒருவரும் இலராவர்.

அந்நிலைப்பட்ட மலைப்பகுதியிலே, இரவு வந்துற்ற தெனவும் அவன் கருதமாட்டான். வெற்றி வேலை ஏந்தியவனாக, நம்பாற் கொண்ட ஆசையானது மிகுதலால், வந்த நம்மையாளன் நம் தலைவன். அவன், தன் எண்ணம் பழுது

பட்டுப்போக வறிதே மீண்டும் செல்வானாயின், இன்று, இந்த இரவுப் பொழுதும் யான் வாழ்ந்திருக்க ஆற்றேன்.

சுணங்கினால் அணிபெற்ற நம்முடைய முலைகளிடையே, அவற்றின் பரப்பிலே கிடக்கின்ற முத்தாரத்தைப்போலவும், மலையிடத்தேயுள்ள நெடிதான சோலைக்கண்ணே. துளிகள் தூங்கும் குளிர்ச்சியினையுடைய, விளங்கும் வெள்ளிய அருவியினைப் போலவும், திங்களின் அழகிய கதிர்களும் பூமியிற் பரவினவே! யாம் இனிச் செய்வதுதான் என்னையோ?

**சொற்பொருள்:** 1. விடர் - மலைப்பிளப்பு. இட்டுத் துறை - ஒடுக்கமான நீர்த்துறை. ஒடுக்கம் இருபுறமுமாக அடர்ந்துள்ள மரச்செறிவினால். 3. புண்கூர்த்து - புண் மிகுந்து. 4. வல்லியம் - புலி. 5. வயப் பிணவு - வலியபெண் புலி. 6. கடிகொள - காவலை மேற்கொள்ள 7. எல்லின்று - இரவு வந்துற்றது. 9. வறுவியன் பெயரின் எண்ணியது கைகூடாதானாகிப் போவானானால். 13. சிதர் - துளி. தூங்குதல் - வீழ்தல்; சோலையிற் சிதர் தூங்குதல் மழையினால் என்க; அன்றி மலர்த் தேன்களாலும் ஆம்.

**விளக்கம்:** 'யாறு நிறைந்தன' என்றதும், 'வயப்பிணவு கடிகொள வழங்கார் ஆறே' என்றதும், எல்லிற்று' என்றதும், வழியிடையின் ஏதத்தினை உயர்த்துவன. 'ஆயிடைநசைதர வெண்வேல் ஏந்தி வந்த நன்னராளன்' என, அவனுடைய ஆண்மைச் செவ்வியினை உரைத்தனள். 'இன்றிப் பொழுதும் வாழலனே' என்றது, 'அதனால் தலைவியும் வாழ்தலற்றவளாகத், தானும் அவன்மீதுள்ள அன்பினால் உயிர்துறப்பள்' என்றதாம். மலைப்பகுதியிலே நிலவுக் கதிர்கள் பரவுகின்றதனை, முலை முற்றத்திடை முத்தாரங்கிடந்து ஒளிர்வது போலவும், மலையிடத்து இலங்கும் வெள்ளிய அருவிபோலவும் என்று உரைத்தனள். நிலவு வெளிப்படின், இரவுக்குறிச் சேர்க்கை தடைப்படும் என்ற மரபினையும் உணர்த்தினள். இதனால், தலைவனை விரையவந்து மணந்து கொள்ளத் தூண்டினள் என்க. 'கோடு குத்திய புண்மிகுந்து ஆண்புலி குகையிற் சென்று ஒடுங்கப், பெண்புலி காவலிருக்கும் என்றதும், அதற்கு அஞ்சிய வழிப்போக்கர் அவ்வழிச் செல்லார் என்றதும் நினைக்க வேண்டும். இதனால் தலைவிக்குத் தலைவனிடத்து அத்தகைய உழுவலன்பு உள்ளதும் உணர்த்தப்பெற்றது.

## 363. நயந்து வந்தனர்!

**பாடியவர்:** மதுரைப் பொன்செய்கொல்லன் வெண்ணாகனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

*(தலைவன் வினைமேற்கொண்டு பிரிந்து சென்றனனாக. அவ் வருத்தந் தாளாதவளாகித் தலைவி மிகவும் வாட்டமுற்று நலிவுற்றிருக்கின்றனள். அவன் வருவதாகக் குறித்துச் சென்ற காலத்தின வரவு, அந்த வருத்தத்தையும் வாட்டத்தையும் மிகுதியாக்குகின்றது அவ்வேளை,அவளுக்குத் தேறுதல் கூறி வருகின்றனள் தோழி, அப்போது தலைவனும் வினைமுடித்தவ னாக வீடு வந்து சேர்கின்றனன். இந்தக் கருத்தமைய அமைந்த செய்யுள் இது.)*

**நிறைசெலல் இவுளி விரைவுடன் கடைஇ**
**அகலிரு விசும்பிற் பகல்செலக் சென்று**
**மழுகுசுடர் மண்டிலம் மாமலை மறைய**
**பொழுதுகழி மலரிற் புனையிழை! சாஅய்!**
**அணை அணைந்து இனையை ஆகல் சுணையரைப்**

**புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்**
**கல்லதர் மருங்கில் கடுவளி உதிர்ப்ப**
**பொலஞ்செய் காசிற் பொற்பத் தாஅம்**
**அத்தம் நண்ணி அதர்பார்த் திருந்த**
**கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்**

**ஆறுசெல் மாக்கள் அருநிறத்து எறிந்த**
**எஃகுஉறு விழுப்புண் கூர்ந்தோர் எய்திய**
**வளைவாய்ப் பருந்தின் வள்ளுகிர்ச் சேவல்**
**கிளைதரு தெள்விளி கெழுமுடைப் பயிரும்**
**இன்னா வெஞ்சுரம் இறந்தோர் முன்னிய**

**செய்வினை வலத்தர் ஆகி இவணயந்து**
**எய்தவந் தனரே! தோழி மையெழில**
**துணையோர் எதிர்மலர் உண்கண்**
**பிணையோர் நோக்கம் பெருங்கவின் கௌவே.**
**தோழி!**

*திரண்ட அரைவினையும் சிறிய இலையினையும் உடையது நெல்லிமரம். அதன் வடுவற்ற பசிய காய்களைக் கடுங்காற்று உதிர்ப்ப, அவை, கற்களையுடைய நெறிகளிடத்தே, பொன்னாற் செய்யப்பெற்ற காசுகளைப்போல அழகுறப் பரந்துகிடக்கும். கொலையாகிய வெம்மையான கோட்பாட்டினை உடையவர் கொடுந்தொழிலோரான மறவர்கள். அவர்கள், காட்டுப் புறத்தை அடைந்து, ஆறலைப்பதனைக் கருதியவராக, வழிவருவாரைப் பார்த்தவாறு இருப்பர். அவ்வழியே செல்லும் வணிக மாக்களின் அரிய மார்பிலே வேலினால் எறிந்து அவர்களைக் கொல்வர். அவ் வேல்பாய்ந்த பெரும் புண்களை உடையோரை, வளைந்த வாயினையும் கூர்மையான நகத்தினையும் உடைய பருந்தின்*

சேவல் அடைந்து, அவ்விடத்துச் செறிந்ததனை உண்ணுதற் பொருட்டாகத், தன் கிளையினைத் தருகிற்கும் தெளிந்த கூப்பீட்டொலியினைச் செய்யும். இன்னாமையினை உடைய, இத்தகைய கொடிய சுரத்தினைக் கடந்து சென்றவர் நம் தலைவர்.

தாம் செய்யக் கருதிச் சென்ற, செய்தற்குரிய வினையிடத்தே வெற்றியுடையவர் ஆகி, கரிய அழகிய இணையொத்த நீலமலர் மையுண்டாற் போன்ற நின் கண்களின், மான்பிணையினை யொத்த அழகிய பார்வையானது பெரிதும் கவின் கொள்ளுமாறு, இவ்விடத்தே விருப்பமுடன் வந்து சேர்ந்தனர்.

ஆதலின்,

வரிசையாகச் செல்லுதலையுடைய குதிரைகளை விரைவுடனே செலுத்தி, அகன்ற பெரிய வானத்தே பகலும் கழியுமாறு சென்று, மழுங்கிய ஞாயிற்று மண்டிலமானது பெரிய மலையிடத்தே சென்று மறைந்தடர்ப, புனைந்த அணியினை உடையவளான நீயும், பொழுதுபோகிய காலத்து மலரினைப்போல வாட்டமுற்று, நின் பள்ளியினை அணைந்த வளாக, இத்தன்மையினை உடைய ஆகாதே இருப்பாயாக.

**சொற்பொருள்:** 1. நிறைசெலல் - வரிசையுறச் செல்லுதல், எழு குதிரைகள் பூட்டிய தேராதலின், அவை அனைத்தும் ஒரு சீரான வேகத்துடனே செல்லும் தன்மையினை இது குறிக்கும். இவுளி குதிரை. கடைஇ - செலுத்தி. 3. சுடர் மண்டிலம் - ஞாயிற்று மண்டிலம். 4. பொழுது கழி மலரின் - பொழுது கழிந்த மலரினைப் போல, 6. அணை பள்ளி - அணைந்து பொருந்தியிருந்து. கனை - திரட்சியுற்ற. 6. புகரில் - வடுவற்ற 10. கொலை வெம் கொள்கை - கொலை செய்தலாகிய வெவ்விய கோட்பாடு. 11. நிறம் - மார்பு. 12. எஃகு - வேல். விழுப்புண் - சிறந்த புண்; புண், மார்பிடத்து ஆதலின், விழுப்புண் என்றனர். 14. கெழு முடை - பொருந்திய ஊன். 16. வினை வலத்தர் ஆகி - வினையின்கண் வென்றியுடையவர் ஆகி.

**விளக்கம்:** காலையில் மலர்ந்து மாலையிற் பொழுது சாயவும் வாடிச் சோர்ந்து போகும் மலரினைப்போலப், பிரிந்தவர்களுக்குக் கொடியதான மாலையின் வரவினால், தலைவியும் வாட்டமுற்றவளாயினள் என்க. ஆசிரியர், 'பொன் செய் கொல்லர்' என்பதற்கேற்ப, உதிர்ந்து கிடக்கும் நெல்லிக் காய்களின் தோற்றத்தினை, 'பொலம்செய் காசின் பொற்ப' என்று கூறுதலைக் காண்க. 'கண்நோக்கம் கவின் கொள்ள அவர் எய்த வந்தனர்' என்றதால், தலைவி கண்கலங்கி வாடியிருந்ததும் பெறப்படும்.

## 364. நீந்தல் அரிது!

**பாடியவர்:** *மதுரை மருதங்கிழார் மகனார் பெருங் கண்ணனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *பருவம் கண்டுஅழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைவன் ஒருவன் வேந்தனின் படைத்துணையாகத் தன் தலைவியைப் பிரிந்து வேற்று நாடு சென்றுள்ளனன். மீள்வதாகக் குறித்துச் சென்ற கார்காலம் வந்தும் அவனை வரக்காணாது தலைவி புலம்புகின்றனள். அவள், தன் வருத்தத்தைத் தோழியிடத்தே கூறுவதாக அமைந்தது இச் செய்யுள்.)*

**மாதிரம் புதையப் பாஅய்க் கால்வீழ்த்து**
**ஏறுடைப் பெருமழை பொழிந்தென அவல்தோறு**
**ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க**
**ஆய்பொன் அவிர்இழை தூக்கி யன்ன**
**நீடிணர்க் கொன்றை கவிபெறக் காடுன்**

**சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ**
**முல்லை இல்லமொடு மலரக் கல்ல**
**பகுவாய்ப பைஞ்சுனை மாவுண மலிரக்**
**கார்தொடங் கின்றே காலை காதலர்**
**வெஞ்சின வேந்தன் வியன்பெரும் பாசறை**

**வென்றி வேட்கையொடு நம்முசும் உள்ளார்**
**யாதுசெய் வாங்கொல்? - தோழி - நோதகக்**
**கொலைகுறித் தன்ன மாலை**
**துனைதரு போழ்தின் நீத்தலோ அரிதே!**

*தோழி!*

*திசையனைத்தும் மறையப் பரவி மழையும் காலிறங்கிற்று. இடியேற்றினை உடைய பெருமழையும் சொரிந்தது. இதனாற் பள்ளங்கள்தோறும் ஆடுங்களத்தே ஒலிக்கின்ற பறையினைப் போல வரிகளையுடைய தேரையும் ஒலிக்கத் தொடங்கிற்று. சிவந்த பொன்னினாலே ஆகிய விளங்கும் அணிகளைத் தொங்கவிட்டாற் போன்ற, நெடிதான பூங்கொத்துக்களை உடைய கொன்றையும் அழகு பெற்றது. தோன்றிச்செடிகள் சுடர்விளக்குப் போன்ற பூக்களைத் தம்மிடத்தே கொண்டன வாகக் காடெங்கும் புதர்கள்தோறும் விளங்குகின்றன. முல்லையும் இல்லமும் மலர்ந்துள்ளன. விலங்கினம் உண்ணுமாறு நீரால் நிறைந்தது. இங்ஙனம், காலமும் கார் காலமாகத் தொடக்கம் பெற்றுள்ளது.*

வேந்தன் கொடிய சினத்தை உடையவன். அகன்ற பெரிய பாசறை அவனுடையது. வெற்றிகொள்ளும் விருப்பமுடன் நம்மையும் நினையாராக அதனிடத்தே நம் காதலர் இருக்கின்றனர். நாம் வருத்தமுற, நம்மைக் கொல்வதைக் குறிக்கொண்டது போன்ற மாலைக் காலமானது விரைந்து வந்துறுகின்ற காலத்திலே, அதன் கொடுமையைக் கடத்தலோ நமக்கு அரிதாகும்! நாம் யாது செய்வோம்? (எங்ஙனம் ஆற்றியிருப்போம்? என்பது கருத்து.)

**சொற்பொருள்:** 1. மாதிரம் - திசைகள். புதைய - மறைய மேகச்செறிவால் நாற்றிசையும் இருள் கொள்ள என்பது கருத்து. 2. ஏறு - இடியேறு; அவல் - பள்ளம். 3. நுணல் - தேரை. 7. இல்லம் - தேற்றா 8. மலிர - நிறைய. 12. நோதக - வருத்தமுற.

**விளக்கம்:** 'ஏறுடைப் பெருமழை, மாதிரம் புதையப் பாஅய்க் கால்வீழ்த்துப் பொழிந்தது' என்க. 'ஆய்பொன் அவிரிழை தூக்கியன்ன நீடிணர்க் கொன்றை கவின்பெற' என்றதனால், இது சரக்கொன்றை என்க. 'வென்றி வேட்கையொடு நம்மும் உள்ளார்' என்றதனைச் சிந்திக்கவும். 'வென்றி வேட்கை அவருக்கு இருக்கலாம்; எனினும், அத்துடன் நம்மையும் நினைத்துக் கொள்ளல் வேண்டாமோ? நம்மை நினையாராய் வென்றிவேட்கை மட்டுமே உளங் கொண்டவ ராயினரே? என்ற ஏக்கம் புலப்படுதலைக் காண்க. 'பகைவரை வென்று வாகை சூடுவதனைக் கருதும் அவர். நம்மை, நோதகக் கொலைகுறித்தன்ன மாலை துணைதரு போழ்தின், அதனின்றும் காத்தற்கு நினைத்திலரே' என வருந்துவாள், அவரால் கைவிடப்படுதலின், தான்அதனை நீந்தல்அரிது' என்கின்றனள்.

## 365. நினைந்தனை நெஞ்சமே!

**பாடியவர்:** மதுரை மருதன் இளநாகனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் இடைச்சுரத்து நின்று சொல்லியது. **சிறப்பு:** கழுவுள் என்பானுக்குச் சொந்தமான காமூரைப் பற்றிய செய்தி.

(தலைமகன், தன் அன்புறு தலைவியைப் பிரிந்தவனாகப் பொருள் வேட்கையுற்றுக் காட்டுவழியே செல்லுகின்றனன். இடைவழியிலே, அவனுடைய நெஞ்சத்தில் அவளுடைய நினைவு மிகுதியாக எழுந்து அவனை வருத்தத் தொடங்குகின்றது. அப்போது, அவன், தன் நெஞ்சிற்குச் சொல்லுகின்ற முறையிலே அமைந்தது இந்தச் செய்யுள்.)

**அகல்வாய் வானம் ஆலிருள் பரப்ப**
**பகல்ஆற்றுப் படுத்த பையென் தோற்றமொடு**

**சினவல் போகிய புன்கண் மாலை**
**அத்தம் நடுகல் ஆள்என உதைத்த**
**கான யானைக் கதுவாய் வள்ளுகிர்**
**இருப்பனை இதக்கையின் ஒடியும் ஆங்கண்**
**கடுங்கண் ஆடவர் ஏமுயல் கிடக்கை**
**வருநர் இன்மையின் களையுநர்க் காணா**
**என்றூழ் வெஞ்சுரம் தந்த நீயே**
**துயர்செய்து ஆற்றா யாகிப் பெயர்பாங்கு**
**உள்ளினை வாழிய நெஞ்சே வென்வேல்**
**மாவண் கழுவுள் காமூர் ஆங்கண்**
**பூதம் தந்த பொரியரை வேங்கைத்**
**தண்கமழ் புதுமலர் நாறும்**
**அஞ்சில் ஓதி ஆய்மடத் தகையே.**

நெஞ்சமே வாழ்வாயாக!

அகற்சிவாய்ந்த வானத்தே இருள் மிகுதியாகப் பரவுமாறு, ஞாயிற்றினை ஆற்றுப்படுத்தி வைத்த பசுமையான தோற்றத் துடனே, சினத்தினால் மிகுதிபெற்ற துன்பத்தைச் செய்யும் மாலைக்காலத்திலே,

காட்டுவழியிலேயுள்ள நடப்பட்ட கல்லினை ஆள் என்று கருதி உதைத்த யானையின் சிரைவுற்ற வளமான நகமானது, பெரிய பனையினது நுங்கின் தோட்டினைப்போல ஒடியும். அத்தகைய இடத்திலே, வன்கண்மையினையுடைய ஆறலை கள்வரான ஆடவர் அம்பு எய்யும் முயற்சியோடு பதுங்கி யிருப்பர். வழி வருவார் இல்லாமையினாலே, தம் வறுமையினைக் களைபவரைக் காணாது வருத்தமுற்று வாடுவர். அத்தகைய வெப்பமிக்க கொடிய சுரநெறியிலே என்னை அழைத்து வந்தனை.

எனக்குத் துயரினைச் செய்து, அதனாலும் நீ ஆற்றமாட்டாதாய் ஆயினை. வெற்றிவேலினையும் சிறந்த வன்மையினையும் உடைய கழுவுள் என்பானது காமூர் என்னுமிடத்திலே, பூதமானது தந்ததாய பொரிந்த அடி மரத்தினையுடைய வேங்கைமரத்தின், குளிர்ந்த மணத்துடன் கூடிய புதுமலர் போல நாறுகின்ற, அழகிய சிலவாகிய கூந்தலை யுடைய நம் தலைவியின், அழகிய மடப்பமாகிய குணத்தினை, மீளவும் நீ நினைப்பாய் ஆயினையே!

**சொற்பொருள்:** 1. அகல்வாய் வானம் - அகற்சி வாய்ந்த வானம். ஆல்இருள் - மிக்க இருள். 2. பையென் தோற்றமொடு -

*பசிய தோற்றத்துடன். 3. சினவல் - சினம் 5. கதுவாய் - சிரைவுற்ற. 6. இதக்கை - நுங்கின் தோடு. 9. என்றூழ் - வெப்பம். 13. பூதம் தந்த - பூதமானது வழங்கிய.*

**விளக்கம்:** *'நடுகல்லினை ஆளெனக் கருதி உதைத்துக் கால் நகம் பெயர்ந்த யானை வழங்கும் நெறியென்றது, காட்டின் கடுமையைக் குறித்ததாம். 'கடுங்கண் ஆடவர் களையுநர் காணா என்றூழ் வெஞ்சுரம்' என்றது, காட்டின் வெப்பத்தையும், அதன்கண் செல்வார்க்கு நேர்கின்ற துயரத்தினையும் குறிப்பதாம். பூதம் தந்த வேங்கை' எனவே, பூதங்களை வேட்டு வழிபடும் வழக்கமும், அவை உதவுமென்ற கருத்தும் அந்நாளிற் கொள்ளப்பெற்றிருந்த தன்மையினை அறியலாம். காட்டின் வெம்மையைக் கருதாத நெஞ்சம், காதலியின் பிரிவினைக் கருதி வழியிடை வருத்த, இங்ஙனம் உரைத்து, அவன் மீண்டும் தன்வினைமேற் செல்லாயினன் என்று கொள்ளுதல் வேண்டும்.*

## 366. கலுழ்ந்த கண்ணள்!

**பாடியவர்:** *குடவாயிற் கீரத்தனார்.* **திணை:** *மருதம்.* **துறை:** *பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில் வேண்டிய விடத்துத் தோழி சொல்லியது.*

*(தலைமகன் ஒருவன், தன் தலைவியைப் பிரிந்து பரத்தை ஒருத்தியுடன் தொடர்பு கொண்டிருந்தனன். அவன், மீண்டும் தன் தலைவியின் உறவை நாடுகின்றான். அவளிடம் நேரடியாகச் செல்லுவதற்கு நாணி அவன், தோழியின் உதவியை நாட, அவள் இவ்வாறுகூறி அவனுக்குத் தலைவியை இசைவிக்க மறுக்கின்றாள்.)*

**தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய**
**நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்ப்பழித்துக்**
**கள்ளார் களமர் பகடுதளை மாற்றி**
**கடுங்காற்று எறியப் போகிய துரும்புடன்**
**காயற் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்**

**இருநீர்ப் பரப்பின் பனித்துறைப் பரதவர்**
**தீம்பொழி வெள்ளுப்புச் சிதைதலின் சினைஇக்**
**கழனி உழவரொடு மாறுஎதிர்ந்து மயங்கி**
**இருஞ்சேற்று அள்ளல் எறிசெருக் கண்டு**
**நரைமூ தாளர் கைபிணி விடுத்து**

**நனைமுதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்**
**பொலம்பூண் எவ்வி நீழல் அன்ன**
**நலம்பெறு பணைத்தோள் நன்னுதல் அரிவையொடு**

**மணங்கமழ் தண்பொழில் அல்கி நெருநை**
**நீதற் பிழைத்தமை அறிந்து**

**கலுழ்ந்த கண்ணளெம் அணங்கன் னாளே.**

*தலைவனே!*

*தாழ்ந்த கிளைகளையுடைய மருதமரங்கள் தகைமைபெற அழகு செய்திருக்கும், நீராற் சூழ்ந்திருக்கப்பெற்ற அகன்றகள மானது பொலிவுறப், போரினைப் பிரித்துக் கடாவிட்டுப்பின் கள்ளுண்டு வருபவர் களமர்கள். வந்தவர்கள், பகடுகளைப் பூட்டவிழ்த்து விட்டவராகக் கடிய காற்றிலே நெல்லினைத் தூற்றுவர். காற்றுடன் போகிய துரும்பு முழுவதும் சென்று, உப்பளத்திலேயுள்ள சிறிய பாத்திகளில் இடமில்லையாம்படி நிறைக்கும். அதனால், இனிமை மிகுந்த வெண்மையான உப்புங் கெடும். அதனால் பெரிய கடற்பரப்பின் குளிர்ந்த துறையிடத்து உள்ளவரான பரதவர்கள் சினங்கொள்வர். இருசாராரும் தம்முட் கலந்து சேற்றுக்குழம்பினை வாரியிறைத்துப் போரிடுவர். அதனைக் கண்ட நரைத்த முதியோர்கள், அவர்களின் கைபிணித்துச் செய்யும் போரினை விலக்குவர். முற்றிய தேனாகிய கள்ளின் தெளிவினைப் பரதவர்க்கு அளித்து, அவரை அனுப்பி வைப்பர்.*

*அத்தகைய இடமாகிய,*

*பொற்பூண் அணிந்த எவ்வி என்பானுக்கு உரிய நீழல் என்னும் ஊரினைப் போன்ற, நன்மை பொருந்திய பணைத்த தோள்களையுடையவளும், நறிய நெற்றியினை யுடையவளுமான பரத்தையொடு, மணம்கமழும் தண்ணிய பொழிலிலே நேற்றுத் தங்கியிருந்தனை. அங்ஙனம், நீ தனக்குத் தீங்கு செய்தமையினை, அணங்கு போல்வாளாகிய எம் தலைவியும் அறிந்தனள். அதனால், கலங்கியழுத கண்களை உடையவளும் ஆயினள். (அவள் எங்ஙனம் நினக்கு இசைவாள்? என்பது முடிபு.*

**சொற்பொருள்:** *1. தாழ் சினை - தாழ்ந்து கிடக்கும் கிளைகள். 2. போர் அழித்து - போரினை அவிழ்த்துச் சூடடித்து. 3. கள் ஆர் களமர் - கள் உண்ணும் உழவர். 5 சிறு தடி - சிறிய உப்புப் பாத்திகள். 7. தீம்பொழி - இனிமை மிக்க. 9. இருஞ் சேறு - கரிய சேறு.*

**விளக்கம்:** *உப்புப் பாத்திகளில் நெல்லைத் தூற்றுவாரின் தூசு சென்று படிதல் என்றதனால், எவ்வியின் நீழல்நகர் நெல்வளமும் கடல்வளமும் உடைத்தாயிருந்தது என்க. நரைமுதாளர் களமரும் நுளையரும் இட்டசெருவினை விலக்கி,*

*நுளையருக்குக் கள்ளருத்தி, அவர் சினத்தைத் தணிவித்தனர் என்க. நீழல் என்பது, நீடூர்' எனவும் வழங்கும்.*

## 367. மாலையும் இனிது!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள், வற்புறுக்கும் தோழிக்குச் சொல்லியது.*

*(தலைவன் பிரிந்து சென்றிருந்தனனாக. அவனுடைய மனைவி அந்தப் பிரிவின் வேதனையினைத் தாங்க மாட்டாதவளாக வாடி நலிவுற்றிருக்கின்றனள். அவளுடைய கவலையும் வாட்டமும் அவளுடைய தோழிக்கு மிகுந்த மனவேதனையைத் தருகின்றது; அவள் தலைவிக்கு ஆறுதல்கூறி அவளுடைய வாட்டத்தைப் போக்குவதற்கு முயலுகின்றாள். அப்போது, தலைவி, தோழிக்குத் தன்னுடைய நிலைமையினைக் கூறுகிற முறையிலே அமைந்தது இந்தச் செய்யுள்.)*

**இலங்குசுடர் மண்டிலம் புலந்தலைப் பெயர்ந்து**
**பல்கதிர் மழுகிய கல்சேர் அமையத்து**
**அலந்தலை மூதேறு ஆண்குரல்விளிப்ப**
**மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய**
**முனையுழை இருந்த அம்குடிச் சீறூர்க்**

**கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்**
**மிகுபதம் நிறைந்த தொகுகூட்டு ஒருசிறைக்**
**குவியடி வெருகின் பைங்கண் ஏற்றை**
**ஊன்நசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்**
**தளிர்புரை கொடிற்றின் செறிமயிர் எருத்திற்**

**கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ அன்ன**
**நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்**
**புல்லென் மாலையும் இனிது மன்றம்ம-**
**நல்லக வனமுலை அடையப் புல்லுதொறும்**
**உயிர் குழைப் பன்ன சாயற்**

**செயிர்தீர் இன்துணைப் புணர்ந்திசி னோர்க்கே.**

*தோழி!*

*விளங்கும் ஒளியினையுடைய ஞாயிற்று மண்டிலமானது வானிடத்தின்றும் பெயர்ந்து, தன் பலவாகிய கதிர்களும் மழுங்குதலுற்று, மலையினைச் சேருகின்றதான பொழுதிலே,*

*கலக்கமுற்ற கிழட்டு எருதானது, தன் ஆண் குரல் தோன்றக் கூப்பிட, மனையைச் சூழ வளர்ந்திருக்கும் நொச்சியிடத்தே*

மான்கள் சேர்ந்து தங்கியிருக்கக், காட்டரணின் அருகாமையிலே இருந்த அழகிய குடியிருப்பினையுடைய சிற்றூரினிடத்தே, கருத்த அடியினைக்கொண்ட வேங்கைவிளங்கும் சிவந்த மேட்டு நிலத்தே விளைந்த வரகினது, மிக்க தானியம் நிறைந்துள்ள தொகுகூட்டின் ஒரு பக்கத்தே, குவிந்த அடியினையும் பசிய கண்களையுமுடைய காட்டுப்பூனை வருத்தும் பசியினைப் போக்கும்படியாகத், தளிர்போன்ற கன்னத்தினையும் மயிர் செறிந்த கழுத்தினையும், நிமிர்த்தலையிடத்தே முருக்கம் பூவினை யொத்த சூட்டினையும் உடைய, கோழிச் சேவலைப் பற்றும் சமயத்தினை எதிர்பார்த்திருக்கும். பொலிவற்ற அத்தகைய மாலைப்பொழுதும்,

நல்ல மார்பிடத்தேயுள்ள, அழகிய தம்முலைகள் அழுங்கத் தழுவுந்தோறும், உயிர் குழைவதுபோலும் சாயலைக்கொண்ட இனிதான துணைவருடன் கூடியிருப்பவர்கட்கு இனிதாகவே இருக்கும். (ஆயின், நமக்கு இனிதாகாது என்பது கருத்து.

**சொற்பொருள்:** 1. புலம் தலைபெயர்ந்து - வானிடத்தை விட்டு நீங்கியதாகி. 2. மழுகிய - மழுங்கிப் போகிய. 3. அலந்தலை மூதேறு - கலக்கமுற்ற கிழட்டு எருது. ஆண்குரல் - ஆண்மைக் குரல் 4. மாசேர்பு - மான்கள் சேர்ந்து. 5. முனையுழை - காட்டரணின் அருகே: முழையுழை எனவும் பாடம். 7. தொகுகூடு - தொகை பெற்று விளங்கும் தானியக் கூடுகள்; குதிர் என்பர்; சேர் எனவும் கூறுவர். 10. கொடிற்றின் - கன்னத்தினையும். எருத்து - கழுத்து. 11. கவிர்ப்பூ - முருக்கம்பூ. 12. அற்றம் பார்த்தல் - செயலை முடிப்பதற்கான சமயத்தை எதிர்நோக்கி யிருத்தல். 14. நல்லகம் - நல்ல மார்பகம்; நன்மை, மார்பகத்தின் வனப்பினைக் குறித்தது. அடைய - பொருந்த 16. செயிர் - குற்றம்.

**விளக்கம்:** மாலைக் காலத்திலே அலந்தலை மூதேறும் ஆண்குரல் விளிக்கும் என்றதனைச் சிந்திக்கவும் அலந்தலை' என்றது, அதுவும் மாலையின் வரவினாலே துணையினை நாடிக் கலக்கமுற்றுத், தன் ஆண்குரல் தோன்றக் கூப்பிடும் என்றனர். 'மனைவளர் நொச்சி மாசேர்ப்பு வதிய' என்றது, மாலையின் வரவினாலே காட்டு விலங்குகட்கு அஞ்சிய மானினம், பெண்கள் தம்பால் அன்பு காட்டுவர் என்ற உறுதியுடன், மனையை அடுத்த நொச்சி வளர்ந்த இடங்களிலே பதுங்கி யிருக்கும் என்க. 'தொகுகூடு' என்றது, தானியங்களைச் சேமித்து வைக்கும் கூடுபோன்ற சேமிப்பு வசதியினை. இவ்வாறு, தானியங்களைச் சேமித்து வைப்பது இந்நாளினும் வழக்கமாகும். 'வெருகு' காட்டுப்பூனை; இன்றும் தென்னகத்தார் இந்தப் பெயராலேயே இதனை வழங்குவர், உயிர் குழைப்பன்ன சாயல்

*செயிர் தீர் இன்றுணை' என்றது, கலந்த காதற்கேண்மையினர் தம்முள் இன்புறத் தழுவுதலால் அடைகின்ற சிறந்த இன்பச் செவ்வியினைக் குறிப்பதாகும். அதனை அடையப்பெறாதான். வருந்துதலன்றி எங்ஙனம் தேறியிருக்க இயலும் என்பதனையும், இதனால் தோழிக்குத் தலைவி புலப்படுத்தினள் என்க.*

## 368. வழி வழி பெருகியது!

**பாடியவர்:** *மதுரை மருதனிளநாகனார்.* **திணை:** *குறிஞ்சி,* **துறை:** *பகலிலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லு வாளாய்த் தோழி சொல்லியது.* **சிறப்பு:** கொங்கரின் *உள்ளிவிழா.*

*(தலைவனும் தலைவியும் பகற்போதிலே தங்களுக்குள் சந்தித்து உறவாடி வருகின்ற காலம். தலைவனின் உள்ளம் தன் தலைவியின் கூட்டத்தை மட்டுமேதான் நாடித் திரிந்ததேயன்றி, அவளை முறையே மணந்துகூடி வாழ்வதில் செல்லவில்லை அவனுள்ளத்திலே அந்த எண்ணத்தை ஏற்படுத்துவாளாகத் தோழி தலைவியிடஞ் சொல்வது போன்று, தலைவனும் கேட்குமாறு சொல்லிய முறையிலே அமைந்தது இச்செய்யுள்*

**தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம்**
**கரிபுறம் கழீஇய பெரும்பாட்டு ஈரத்துத்**
**தொடுவளர் பைந்தினை நீடுகுரல் காக்கும்**
**ஒண்தொடி மகளிர்க்கு ஊசல் ஆக**
**ஆடுசினை ஒழித்த கோடுஇணர் கஞலிய**

**குறும்பொறை அயலது நெடுந்தாள் வேங்கை**
**மடமயிற் குடுமியின் தோன்றும் நாடன்**
**உயர்வரை மருங்கின் காந்தளம் சோலைக்**
**குரங்குஅறி வாரா மரம்பயில் இறும்பிற்**
**கடிசுனைத் தெளிந்த மணிமருள் தீநீர்**

**பிடிபிணர் களிற்றினை எம்மொடு ஆடிப்**
**பல்நாள் உம்பர்ப் பெயர்ந்து சில்நாள்**
**கழியா மையே வழிவழிப் பெருகி**
**அம்பணை விளைந்த தேக்கட் டேறல்**
**வண்டுபடு கண்ணியர் மகிழும் சீறூர்**

**எவன்கொல் - வாழி, தோழி - கொங்கர்**
**மணியரை யாத்து மறுகின் ஆடும்**
**உள்ளி விழவின் அன்ன**
**அலர்ஆ கின்றது பலர்வாய் பட்டே?**

தோழி வாழ்க!

தன் காலிற் செருப்பணிகின்றவன் கானவன். அவன் சுட்டெரித்த அகன்ற தினைக்கொல்லையிலே, கரிந்துபோன இடங்களை மிக்க பெயலாகிய மழை கழுவிச் செல்லும். அப்படிக் கழுவிச் சென்ற ஈரத்திலே, இதழ்கள் வளர்ந்த பசிய தினைப்பயிர் விளங்கும். அதன் நீண்ட கதிர்களை ஒள்ளிய தொடியணிந்த மகளிர்கள் காத்திருப்பர். அவர்கட்கு ஊசல் ஆடுவதற்கு உதவிய அசையும் கிளைகளை ஒழித்துவிட்ட கொம்பிலே பூங்கொத்துக்கள் செறிவுற்று விளங்கும். அத்தகைய, குறுகிய பொறையின் அயலிடத்ததான, நெடிய அடியினை யுடைய வேங்கை மரமானது, இளைய மயிலின் கொண்டை யினைப் போலத் தோன்றும் நாட்டிற்கு உரியவன் நம் தலைவன்.

உயரிய மலையின் பக்கங்களிலேயுள்ள, காந்தள் மலர்கள் செறிந்த அழகிய சோலைக்கண்ணே, குரங்குகளும் அறிந் திருத்தல் அற்ற நீண்ட மரங்கள் செறிந்த மணியினைப் போன்ற இனிதான நீரிலே, பிடியுடன் கூடிய களிற்றினைப் போல, எம்மோடும் பலநாள் ஆடியவன் அவன். அவன், நம்மைப் பிரிந்து வேற்றுநாடு சென்று சில நாட்கள்கூடக் கழியாததன் முன்பாகவே, அந்தப் பிரிவுச்செய்தி முறையே பெருகலாயிற்று.

அழகிய மூங்கிற் குழாயிடத்தே விளைந்த இனிய தேனாகிய கள்ளின் தேறலை, வண்டுபடியும் கண்ணியினராக உண்டு மகிழ்பவரான நம் சிற்றூராரினிடத்தே, பலர் வாயாலும் அது பேசப்படலுமாயிற்று. கொங்கக் கூத்தர் அரையிலே மணிகளைக் கட்டிக்கொண்டு தெருக்களிலே கூத்தாடும் உள்ளி விழாவினைப் போன்ற ஆரவாரத்துடன், அலரும் எங்கும் எழுகுகின்றது. இஃது என்னையோ?

**சொற்பொருள்:** 1. தொடுதோல் - செருப்பு கானவன் - குறவன்; கானத்து வாழ்வினை உடையவன். சூடுறுவியன் - புனம் சுடுதலைப்பெற்ற அகன்ற தினைப்புனம். 2. பெரும் பாடு - பெருமழை. 3. தோடு - இதழ் ; தினையின் இலைக்குத் தோடு என்று பெயர். 5. கஞலிய - செறிந்த. 9. மரம்பயில் இறும்பு - மரஞ்செறிந்த காடு. 10. கடிசுனை - விளக்கம் பொருந்திய சுனை; காவலையுடைய சுனை எனினும், மணம் நிரம்பிய சுனை எனினும் ஆம்.

**விளக்கம்:** ஒண்டொடி மகளிர்க்கு ஊசல் ஆக ஆடுசினை யொழித்த கோடுஇணர் கஞலிய' என்றது. பெண்கள் ஊசலாடு மாறு விளங்கிய மரக்கிளைகள் மழைவரவினாலே பூத்துக் குலுங்கின என்க. இதனாற் புனம்கதிர் கொய்யப் பெற்றமையும்,

தலைவி இனி இற்செறிக்கப்படுவாள் என்பதனையும் உணர்த்தினளாம். கோடு இணர் கஞலிய வேங்கை மடமயிற் குடுமியின்' தோன்றும் என்றது, வேங்கை மலருங்காலம் என்பதனைக் குறித்ததாம். உம்பற் பெயர்ந்து சின்னாள் கழியாமையே... வழிவழிப் பெருகி அலராகின்றது. என்றது, தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்ததனைக் குறித்ததும் ஆகலாம். அன்றி, இடையிற் சிறிது காலம் வராதிருந்தமையும் ஆகலாம். கொங்கர் என்றது கொங்கு நாட்டினரான மக்களை. உள்ளி விழவில் அரையிலே மணியினைக் கட்டியவராக ஆரவாரத்துடன் தெருக்களில் அவர் ஆடி மகிழ்வர் என்பதும் கூறப்பெற்றது. அம்பணை விளைந்த தேக்கட்டேறல்... மகிழும் சீறூர் எனவே, அவர் வாய் அலரைக் கட்டுப் படுத்த முடியாமையும் கூறினள்.

## 369. காண்பாய் மகளே!

**பாடியவர்:** நக்கீரர் **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய செவிலி சொல்லியது. **சிறப்பு:** சோழரின் படைப் பெருக்கமும்: பேரூர்ச் செழுமையும்.

*(தலைவியொருத்தி ஒருவனைக் கண்டு காதலித்து அவனுடன் களவிலே உறவாடியும் வந்தனள். அவளின் உறவினையறிந்த இல்லத்தினர் அவளை இல்லிலே செறித்துக் காவலும் இட்டனர். அவளுக்கு வேறொருவனை மணவாள னாக்கவும் திட்டமிட்டனர். அவள் உள்ளம் புயலாக மாறிற்று. ஒரு நாள், அவள் தன் உளங்கவர்ந்த காதலனுடனே கூடியவளாக, யாருமறியாமல், வெளியேறிச் சென்றுவிட்டாள். அவள்பால் அன்புடைய செவிலித்தாய், அவளுடைய அந்த உடன் போக்கினை நினைந்து இவ்வாறு புலம்புகின்றனள். இந்தத் துறையிலே அமைந்தது இச் செய்யுள்)*

**கண்டிசின் - மகளே! - கெழீஇ இயைவெனை**
**ஒண்தொடி செறித்த முன்கை ஊழ்கொள்பு**
**மங்கையர் பலபா ராட்டச் செந்தார்க்**
**கிள்ளையும் தீம்பால் உண்ணா மயிலியற்**
**சேயிழை மகளிர் ஆயமும் அயரா**

**தாழியும் மலர்பல அணியா கேழ்கொளக்**
**காழ்புணைந்து இயற்றிய வனப்பமை நோன்சுவர்ப்**
**பாவையும் பலிஎனப் பெறாஅ நோய்பொர**
**இவைகண்டு இனைவதன் தலையும் நினைவிலேன்**
**கொடியோள் முன்னியது உணரேன் 'தொடியோய்!**

**இன்றுநின் ஒலிகுரல் மண்ணல்' என்றதற்கு**
**எற்புலந்து அழிந்தன ளாகித் தற்றகக்**
**கடல்அம் தானைக் கைவண் சோழர்**
**கெடல்அரு நல்லிசை உறந்தை அன்ன**
**நிதியுடை நல்கர்ப் புதுவது புனைந்து**

**தமர்மணன் அயரவும் ஒல்லாள் கவர்முதல்**
**ஓமை நீடிய உலவை நீளிடை**
**மணியணி பலகை மாக்காழ் நெடுவேல்**
**துணிவுடை உள்ளமொடு துதைந்த முன்பின்**
**அறியாத் தேஎத்து அருஞ்சுரம் மடுத்த**

**சிறியோற்கு ஒத்தஎன் பெருமடத் தகுவி**
**சிறப்பும் சீரும் இன்றிச் சீறூர்**
**நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை**
**ஓர்ஆ யாத்த ஒருதூண் முன்றில்**
**ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ**

**மேயினள் கொல்?' என நோவல் யானே.**

*கண்டாயோ, மகளே! அவளுடனே பொருந்தி ஒன்று பட்டிருந்த என்னுடைய நிலைமையினையும் கண்டாயோ?*

*ஒள்ளிய வளையல்களைச் செறிந்த முன்கையினை உடைய மகளிர்கள், முறையாகக் கொண்டு பலவாறாகப் பாராட்டச், சிவந்த இரேகையினையுடைய கிளியும் இனிய பாலினை உண்ணாதாயிற்று. மயில்போன்ற சாயலையுடைய சிவந்த அணிகளணிந்த தோழியரின் கூட்டமும் விளையாடவாயின. பூச்செடிகளைக் கொண்டிருக்கும் தாழிகளும் மலர்கள் பலவாற்றால் அழகுபெற்றில, நிறம் பொருந்த முத்துவடம் முதலியன புனைந்து இயற்றிய அழகமைந்த வலிய சுவரின் கண் விளங்கும் பாவைகளும், பலி என ஏதும் பெறாவாயின. இவற்றைக் கண்டு, நோய் மென்மேலும் வருத்த, யானும் கலங்குவேன். அதன் மேலும்,*

*எண்ணமற்றவாளாகிய யான், கொடி போன்றவளாகிய என் மகள் எண்ணியதனை உணராதவளானேன். 'தொடி யணிந்தவளே! இன்று நின் தழைத்த கூந்தலைப் புனைவேன்' என்றதற்கு, என்னை வெறுத்து நெஞ்சம் அழிந்தவள் ஆயினள் அவள்!*

*தன்னுடைய தகுதிக்கு ஏற்பக் கடல் போன்ற தானை யினையும் கைவண்மையினையும் உடைய சோழர்களது, அழிதலற்ற நல்ல புகழினையுடைய உறையூரைப் போன்ற செல்வ*

வளமுடைய தன் நல்ல வளமனையிற், புத்துடையும் புத்தணியும் ஆகிய பலவும் புனைந்து, தமராவர் மணம் செய்விக்கவும் அவள் மனம் விரும்பாளாயினள்.

கவர்த்த அடியினையுடைய ஓமை மரங்கள் உயரமாக வளர்ந்துள்ள காடாகிய நீண்ட இடத்திலே, மணிகள் பதித்த பரிசையினையும், சிறந்த தண்டினைப் பெற்ற நெடிய வேலினையும், துணிந்த உள்ளத்துடனே மிகுதியான உடல்வலியினையும் உடையவனும், அறியாத தேயத்து அரிய சுரநெறியிலே கொண்டு போகியவனுமான இளையோனுக்கு மனம் பொருந்தியவள் ஆயினளே, என்னுடைய பெரிதான மடப்பமும் தகுதியும் உடைய மகள்!

சீரும் சிறப்பும் இல்லாமல். சிற்றூரிடத்தே, வறுமை யுற்றிருக்கும் பெண்டிரது புல்வேயப் பெற்றுள்ள குடிலாகிய, ஒரு பசுவினையும் கட்டியிருக்கும் ஒற்றைத் துணியினையுடைய முன்றிலைக் கொண்ட, பொருத்தமற்ற வறிய மனையிடத்தே, தன் சிலம்பினைக் கழித்து, அவனுடன் மணம் பொருந்தினளோ என்று கருதி, யான் நோகின்றேனே!

**சொற்பொருள்:** 1. கெழீஇ இயைவெனை - ஒன்றுபட்டு அன்பு பொருந்தியிருந்த என்னை. 3. ஊழ் கொள்பு - முறையாகக் கொண்டு. 3. செந்தார்க் கிள்ளை - சிவந்த ஆரத்தையுடைய கிளி; கிளிகளின் கழுத்தில் விளங்கும் சிவந்த இரேகைகளைக் குறிப்பது இது. 5. அயரா - விளையாட்டு அயர மாட்டா. 6. தாழி - பூச் செடிகள் கொண்ட தாழி. கேழ் கொள்ள - நிறம் கொள்ள. 7. காழ் - புனைந்து - முத்தாரத்தால் ஒப்பனை செய்து; காழ் புணர்ந்து எனவும் பாடம். 8. சுவர்ப் பாவை - சுவரிடத்தே எழுதியுள்ள பாவை; கந்திடத்தே நிலைபெற்ற பாவையினைக் கந்திற்பாவை என்றாற்போலச் சுவரிடத்தே கொண்ட பாவையினைச் 'சுவர்ப்பாவை' என்றனர். 10. கொடியோள் - கொடிபோன்றவள். முன்னியது - எண்ணியது. 11. ஒலிகுரல் - தழைத்த கூந்தல். மண்ணல் - கழுவி ஒப்பனை செய்தல். 15. நிதியுடை - செல்வளம் உடைய, நகர் - பெருமனை. 16 கவர் முதல் ஓமை - கவர்த்த அடிமரத்தையுடைய ஓமை மரம். உலவை - காடு; வெம்மையுடைய காடு என்க; 21. சிறியோன் - இளையோன்; அவளுடைய காதலனைக் குறித்தது. 21. பெருமடத் தகுவி - பெரிதான மடப்பத்தையுடையவளும், தகுதியினை உடையவளுமான மகள்; தலைவியைக் குறித்தது. 22. சிறப்பு - நல்ல மதிப்பு. சீர் - உயர்வான தன்மை. 23. நல்கூர் பெண்டு - வறுமையில் வாட்டமுற்றிருக்கும் பெண்; தலைவனின் தாயைக் குறித்தது.

**விளக்கம்:** தன் மகள் தன் காதலனுடன் உடன்போக்கிற் சென்றுவிட்டதற்கு வருந்துபவள், 'கிள்ளையும் தீம்பால் உண்ணா; மகளிர் ஆயமும் அயரா; தாழியும் மலர் அணியா; சுவர்ப்பாவையும் பலியெனப் பெறாஅ' என, அவள் பிரிவினால் அவையும் துயருற்று வாடிய நிலையினைக் கூறுகின்றனள். இது, 'தலைமகள் தான் பெரிதும் மனம் விரும்பிப் பேணிய அவற்றையும் மறந்து சென்றனள்' என, அவளது காதல் மிகுதியை நினைந்து வருந்தியதாம். "நின் ஒலிகுரல் மண்ணல் என்றதற்கு, எற்புலந்து அழிந்தனளாகிக் கொடியோள் முன்னியது உணரேன்" என்றது, கூந்தலின் ஒப்பனையை என்றும் விரும்பும் தலைவி, அன்று அதற்காக என்னைப் புலந்து அழிந்த அந்தச் செயலையும், யான் அவள் பிரிந்து போவதற்கான நினைவினாற் செய்தது என உணரமறந்தேனே எனத், தன்னை நொந்து கொண்டதாம்.

'நிதியுடைய நன்னகர்ப் புதுவது புனைந்து தமர்மணன் அயரவும் ஒல்லாள்' என்றது, தமர் தரவிசைந்த இளைஞனை மணப்பதற்கு அவள் இசையாது, அறத்தொடு நின்ற செவ்வியைக் குறித்ததாம். திருமணத்தன்று, புதுவது புனைந்திடுகின்ற வழக்கம் அன்றும் உடைமையும், இதனாற் பெறப்படும்.

மணி அணி பலகை - கேடயம்; தோலாற் செய்து கொள்வதைக் கிடுகு என உரைப்பர். தலைவனிடம் உள்ளவை, 'மணியணி பலகை, மாக்காழ் நெடுவேல், துணிவுடை உள்ளம், துதைந்த முன்பு' ஆகியவையே என்க. அவளுடைய செல்வத் தகுதிபற்றிக் 'கடலந்தானைக் கைவண் சோழர் கெடலரு நல்லிசை உறந்தை அன்ன நிதியுடை நன்னகர்' என்றனள். அவளைக் காதலித்தவனின் தகுதியைக் கருதுவாள், 'நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை, ஓர் ஆ யாத்த ஒரு தூண் முன்றில்' என்றனள். மேலும், அவன் தலைவியைத் தன் மனைக்குக் கொண்டுசென்று மணந்துகொள்வானாதலால், அவனுடைய தாயைக் கருதி, இவ்வாறு கூறியதும் ஆகும்.

## 370. ஆடுமகள் போலப் பெயர்தல்!

**பாடியவர்:** அம்மூவனார். **திணை:** நெய்தல். **துறை:** பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

(நெய்தல் நிலத்தைச் சார்ந்த தலைவன் ஒருவனும், தலைவி ஒருத்தியும், தம்முட் கலந்த காதல் அன்பினர் ஆயினர். பகற்போதிற் கானற் சோலைக்கண் களவிலேகூடி இன்புற்றும்

*வந்தனர். தலைவியின் தோழி, அவர்களை விரைந்து மண வாழ்விலே பிணைத்தலை விரும்புகின்றாள். தலைமகன் வந்து ஒருபுறம் இருப்பதனை அறிந்த அவள், தலைவியிடத்தே சொல்லுமாறு போல இவற்றைக் கூறித், தலைவனுக்குக் தம்முடைய இக்கட்டான நிலையினையும், விரைவிலே தலைவியை அவன் முறையோடு மணந்துகொள்ள வேண்டியதன் இன்றியமையாமையினையும் அறிவுறுத்துகின்றாள். இந்த அமைதியுடன் எழுந்தது இச் செய்யுள்.)*

**'வளைவாய்க் கோதையர் வண்டல் தைஇ**
**இளையோர் செல்ப எல்லும் எல்லின்று**
**அகலிலைப் புன்னைப் புகாரில் நீழல்**
**பகலே எம்மொடு ஆடி இரவே**
**காயல் வேய்ந்த தேயா நல்லில்**

**நோயொடு வைகுதி ஆயின் நுந்தை**
**அருங்கடிப் படுவலும்' என்றி; மற்று 'நீ**
**செல்லல்' என்றலும் ஆற்றாய் 'செலினே**
**வாழலென்' என்றி ஆயின் ஞாழல்**
**வண்டுபடத் தழைத்த கண்ணி நெய்தல்**

**தண்ணரும் பைந்தார் துயல்வர அந்திக்**
**கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு**
**நீயே கானல் ஒழிய யானே**
**வெறிகொள் பாவையிற் பொலிந்தஎன் அணிதுறந்து**
**ஆடுமகள் போலப் பெயர்தல்**

**ஆற்றேன் தெய்ய அலர்கவிவ் வூரே!**

தோழி! வளைவான கோதையினை உடைய இள மகளிர்கள், வண்டல் விளையாட்டினை ஆடியபின், வீடு திரும்புதற்கான பகற்போது ஒளிமழுங்கிய மாலைப்போதும் வந்துள்ளது.

அகன்ற இலைகளையுடைய புன்னைமரத்தின், புள்ளியற்ற நீழலினிடத்தே, பகல்வேளையில் எம்முடன் விளையாடிவிட்டு, இரவுப் போதில், காய்ந்த புல்லினாலே வேய்ந்துள்ள வளமை குறையாத நல்ல நம் வீட்டின்கண், இவனைப் பிரிந்த காம நோயுடன் தோன்றினையாயின், நின் தந்தையின் அரிய காவலுக்கு உட்படுத்துவதாகவும் சொல்லுகின்றாய்.

அன்றியும், 'நீ போகாதே' என்று அவன்பாற் சொல்லு தற்கும் ஆற்றாதவளாக உள்ளனை. அவன் சென்றாலோ, 'உயிர் வாழ்ந்திரேன்' என்கின்றனை. அங்ஙனமாயின் -

ஞாழலின் வண்டுமொய்க்கும் புதுமலர்களாற் கட்டிய கண்ணியினைச் சூடியவனாக, நெய்தலின் குளிர்ச்சியான அரிய பசுமையுள்ள மாலை மார்பிடத்திலே கிடந்து அசைந்தாட, அந்திப் போதிலே, கடற்கன்னியானவள் கரையிடத்தே வந்து நின்றாற்போல, நீ இக் கானற் சோலையிடத்தேயே தனித்து நிற்க, யான், வெறியாட்டத்தை மேற்கொண்ட பாவையினைப் போல்வதாகிய என் அழகினைத் துறந்து, ஆடுமகளைப் போல மீண்டு செல்லுதற்கும் இயலாதவளாக உள்ளேன். அதனால், இவ்வூர் அலர் கூறினும் கூறுக!

**சொற்பொருள்:** 1. வளைவாய் - வளைவான. 2. எல்லும் எல்லின்று - பகற்போதும் ஒளிகுறைந்தது. 3. புகரில் நீழல் - புள்ளியற்ற நிழல். 5. காயல் - காய்ந்த புல். தேயா - வளமை குன்றாத. 6. நோய் - காமநோய். 7 கடிப்படுவல் - காவற்படுவேன். 9. ஞாழல் - கொன்றைப்பூ. 10. நெய்தல் - நெய்தற்பூ. 11. துயல்வர - அசைந்தாட . 12. கடல்கெழு செல்வி - கடற் கன்னி. 14. வெறி கொள் பாவை - வெறியாடலை மேற்கொண்ட பெண். அணி - அழகு.

**விளக்கம்:** 'கோதையர் ஆகிய இளையோர்' என்று கூட்டுக; இது, தலைவியுடன், வந்துள்ள ஆயத்தாரைக் குறித்தது. அவரெல்லாம் வீடு திரும்பினர்; ஆகவே, அவளும் திரும்புதல் வேண்டும் என்றனள். 'நல்லில் நோயோடு வைகுதி யாயின் நுந்தை அருங்கடிப்படுவலும் என்றி' என்றது. தலைவி இரவிலும் தலைவனைப் பிரிந்திருக்க ஆற்றாளாகப் படுகின்ற துயரினையும், அதனையறிந்தால் அவைக் காவலுக்கு உட்படுத்தும் அவளுடைய தந்தையின் கடுமையினையும் கூறியதாம். தலைவியின் அணங்கனைய பேரெழிலைக் குறிப்பாள், 'கடல்கெழு செல்வி கரைநின்றாங்கு' என்றனள். இதனாற், கடற்கன்னியை வேட்டு, நெய்தல் மகளிர் வெறியயர்கின்ற வழக்கம் உடையவர் என்பதும் அறிக. 'பெயர்தல் ஆற்றேன்' என்றது. தலைவியின் நலத்திற்கு உறுதுணையாகிய தோழி, அவளது துயரின்கண்ணும் அவளைவிட்டு அகலாது உடனிருக்கும் நட்புச் செவ்வியைப் புலப்படுத்துவதாகும். 'அலர்க இவ்வூர்' எனவே, ஊரலர் எழுவதனையும் குறிப்பிட்டதாம். இதனால், தலைவியை நேசிக்கும் தலைவன் அவளை வரைந்து கொள்ளுதலில் விரைவதற்கு நாட்டங் கொள்பவன்ஆவான் என்க.

## 371. பறவை விழையும் கூந்தல்!

**பாடியவர்:** எயினந்தை மகனார் இளங்கீரனார். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

*(பொருள் வேட்கையின் மிகுதியினாலே, தன்னுடைய அன்புறு காதலியைப் பிரிந்து, வினைமேற் கொண்டவனாகத் தலைவன் வேற்றுநாடு நோக்கிச் செல்லுகின்றவன், இடைச் சுரத்தே தன் காதலியின் நினைவு மிகுதியாக எழத், தன் நெஞ்சிற்குக் கூறியவனாக அமைந்த அரிய செய்யுள் இதுவாகும்)*

**அவ்விளிம்பு உரீஇய விசையமை நோன்சிலை**
**செவ்வாய்ப் பகழிச் செயிர்நோக்கு ஆடவர்**
**கணையிடக் கழிந்ததன் வீழ்துணை உள்ளிக்**
**குறுநெடுந் துணைய மறிபுடை ஆடப்**
**புன்கண் கொண்ட திரிமருப்பு இரலை**

**மேய்பதம் மறுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து**
**நெய்தலம் படுவில் சில்நீர் உண்ணாது**
**எஃகுஉறு மாந்தரின் இனைந்துகண் படுக்கும்**
**பைதற வெம்பிய பாழ்சேர் அத்தம்**
**எமியம் நீந்தும் எம்மினும் பனிவார்ந்து**

**என்ன ஆம்கொல் தாமே 'தெண்நீர்**
**ஆய்சுனை நிகர்மலர் போன்ம்' என நசைஇ**
**வீதேர் பறவை விழையும்**
**போதார் கூந்தல்நம் காதலி கண்ணே?**

*நெஞ்சமே! அழகிய விளிம்பினை உருவி நாணேற்றிக் கொண்ட விசையமைந்த வலிய வில்லையும், அதனிடத்தே குருதியாற் சிவப்புற்ற முனையினையுடைய அம்பினையும் கொண்டவராகச், சினம் தங்கிய பார்வையினராக விளங்குபவர் மறவர்கள். தன் விருப்பமிக்க துணை, அவர்கள் கணையிடலான் இறந்ததனை நினைந்ததாகக், குறுமையும் நெடுமையுங் கொண்ட குட்டிகள் பக்கலில் துள்ளி விளையாடிக் கொண்டிருக்கத், துன்பத்தினைக் கொண்ட, முறுக்கமைந்த கொம்பினையுடைய ஆண்மானானது, மேயும் உணவினையும் வெறுத்துத் துயரத்துடனே, உளநோய் மிகுந்ததாகக், களர் நிலத்தேயுள்ள சிறு குழியிலே கண்ட சிறிதளவான நீரையும் உண்ணாது, அம்பு தைக்கப் பெற்ற மாந்தரைப்போல வருந்திச் சோர்ந்து கண்படுக்கும், பசுமையறக் கொதிப்புற்ற பாழ்பட்ட காட்டுவழியும் இதுவாகும்.*

*இதன்கண், தமியேமாகக் கடந்து செல்லுகின்ற எம்மைக் காட்டினும் -*

*'தெளிந்த நீரினையுடைய அழகிய சுனையிடத்து ஒளி பொருந்த விளங்கும் மலரைப்போலும்' என்னும்படியாகக் கருதித், தேனை உண்ணுதலை விரும்பிப் பூக்களை நாடித்திரியும்*

வண்டுகள் விரும்பிவந்து மொய்க்கும், மலர் நிறைந்த கூந்தலையுடைய நம் காதலியின் கண்கள், நீர் ஒழுக்குற்றதாகி, எத்தகைய பெருந்துன்பத்தை அடைந்திடுமோ?

**சொற்பொருள்:** 1. விளிம்பு - வில்லின் இரு முனைகள். விசை - விரைவு, நோன்மை - வலிமை. 2. செவ்வாய்ப் பகழி - குருதிபடிதலாற் சிவந்த முனையையுடைய அம்பு. செயிர் நோக்கு - சினந்தங்கிய நோக்கு. 4. புடையாட - பக்கலில் விளையாடிக் கொண்டிருக்க. 5. இரலை - ஆண்மான். 6. மேய்பதம் - உண்ணும் உணவு. சிறுமை - வருத்தம். நோய் - துன்பம். 7. நெய்தலம் படுவில் - களர்நிலத்துச் சிறுகுழியில் 8. இனைந்து மிகத் துயருற்று. 9. பைதற - பசுமை அற்றுப்போக. 10 பனிவார்ந்து - கண்ணீரை ஒழுகவிட்டு.

**விளக்கம்:** பாலையிடத்துள்ள மறவர்கள் ஆறலைத்து உண்ணுதலையே வழக்கமாக உடையவர் என்பார், 'செவ்வாய்ப் பகழி' என முன்னமும் அவரால் எய்யப் பெற்றுச் செத்தவரின் குருதியாற் சிவப்புற்றிருக்கும் அம்பு என்றனர். வேட்டை யாடுவோர் ஆண் விலங்குகளை வேட்டையாடுதலையே பெரும்பாலும் கைக்கொள்வர். இங்கே பெண்மானைக் கொன்ற கொடுமையினைக் கூறி, அதன் இறப்பால் உணவும் நீரும் வெறுத்துத் துயருற்ற ஆண்மானையும் கூறினர். இதனால், தலைவனின் உள்ளத்தும், தன்னுடைய பிரிவினாலே உயிர் வெதும்பித் துடிக்கும் தலைவியின் நினைவு எழுதலும், அவளுக்குத் தான் உதவுதல் வேண்டும் என்ற அருள் தோன்றுதலும் இயல்பாகும். "வீதேர் பறவை" என்றது வண்டினை.

'கண் என்ன ஆகுமோ?' எனக் கருதியது, அவன் பிரிந்து வருங் காலத்தே, அவள் கலங்கிய கண்ணினளாக நின்ற நிலையினை நினைந்தும், துயருற்று நீர் சொரிதலுறுவாள் எனக் கருதியும் ஆம், 'எஃகுறு மாந்தரின் இனைந்து கண் படுக்கும்' என்றது, அம்பு தைக்கப் பெற்ற வழிச் செல்வார், துடிதுடித்துச் செத்து வீழ்ந்து கண்மூடிக் கொள்வதனைப் போல, அந்த இரலையும் கண்மூடி உயிர்விடும் என்றதுமாம்.

## 372. அருமை உடையவள்!

**பாடியவர்:** பரணர். **திணை:** குறிஞ்சி. **துறை:** அல்ல குறிப்பட்டுப் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** நன்னனின் பாழிப்பேரூர்; அஞ்சியின் ஆற்றல்.

*(தன்னுடைய உள்ளத்தே கலந்து நோய்செய்த நங்கை நல்லாளைக் கண்டு, கூடி இன்புற்று மகிழுகின்ற ஆர்வத் துடி துடிப்புடனே நாடி வந்தான் காதலன் ஒருவன். அன்று, அவள் அவ்விடத்துக்கு யாது காரணத்தாலோ குறித்தபடி வராமற் போகவே, தன்னூர்க்கு மீண்டும் செல்கின்றனன் அவன். அவனுள்ளத்தே எழுந்த குமுறலைக் கூறுகின்ற முறையிலே அமைந்தது இந்தச் செய்யுள் ஆகும்.)*

**அருந்தெறன் மரபின் கடவுள் காப்பப்**
**பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை**
**அணங்குடை வரைப்பிற் பாழி ஆங்கண்**
**வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த**
**அருங்கல வெறுக்கையின் அரியோள் பண்புநினைந்து**

**வருந்தினம் மாதோ எனினும் அஃது ஒல்லாய்**
**இரும்பணைத் தொடுத்த பலராடு ஊசல்**
**ஊர்ந்திழி கயிற்றின் செலவர வருந்தி**
**நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி**
**கடுமுனை அலைத்த கொடுவில் ஆடவர்**

**ஆடுகொள் பூசலின் பாடுசிறந்து எறியும்**
**பெருந்துடி வள்பின் வீங்குபு நெகிழா**
**மேய்மணி இழந்த பாம்பின் நீநனி**
**தேம்பினை - வாழிஎன் நெஞ்சே! - வேந்தர்**
**கோண்தணி எயிலிற் காப்புச் சிறந்து**

**ஈண்டு அருங் குரையள்நம் அணங்கி யோளே**

*என் நெஞ்சமே! நீ வாழ்வாயாக.*

*பிறரால் தெறுதற்கு அரிய முறைமையினை உடைய கடவுளால் காத்துவரப்படுவது, பெரிய தேன் கூடுகள் தொங்கிக் கொண்டிருக்க விளங்குவது, நாடு முழுமையும் காண்டற்கு உரிய உயர்ச்சியும் அகற்சியும் உடையதாக அமைந்து இருப்பது, அச்சம் பொருந்திய பக்கமலைகளின் இடத்ததான பாழிப் பேரூர். அவ்விடத்தே -*

*வேளிர் குடியினரெனப் பழையதாக வருகின்ற குடியினராகிய மக்கள். தம் நகரினின்றும் கொணர்ந்து மறைத்து வைத்த அரிய அணிகலன்களாகிய செல்வத்தினுங் காட்டில், பெறுதற்கு அருமை உடையவள் நம் காதலியாக அவள். அவளுடைய பண்பினை நினைந்து யாம் வருந்தினேம். எனினும், நீயோ அவளை மறத்தற்குப் பொருந்தாய் ஆயினை!*

பெரிதான மூங்கிற்கொம்பிலே தொடுத்த, பலரிலிருந்து ஆடுகின்ற ஊசலின், ஏறியும் இறங்கியும் ஆடிக்கொண்டிருக்கும் கயிற்றினைப் போன்று, செல்கையினும் திரும்புகையினுமாக உழன்று வருத்தம் உற்றனை!

நீண்ட வழியினைக் கடந்து போதற்கு உரியதான குதிரைமலைக்குத் தலைவன், கூர்மையான வேலினைக் கைக்கொண்டோனான அஞ்சி என்பவன். கடிய பகைப் புலத்தினையும் வருத்துகின்ற கொடிய வில்லினைக் கைக்கொள்பவர் அவனுடைய படைஞர். அவர்கள் தம் பகைவரின் ஆநிரைகளைக் கைப்பற்றுகின்ற போரினிடத்தே மிக்கொலியுடன் அடிக்கப்படுகின்ற பெரிதான உடுக்கையின் கைவாரைப் போன்று, செறிவதும் நெகிழ்வதும் ஆகியும் வருந்தினை! மேய்தலின் பொருட்டாகத் தன் மணியினை உமிழ்ந்து வைத்துப் பின் அதனை இழந்துவிட்டுத் துடிக்கும் நாகப்பாம்பினைப் போல, நீ மிகவும் தேம்புதலுறவும் செய்தனை!

நம்மை வருத்திய காதலியானவள், வேந்தர்களது கைக் கொள்ளுதற்கான முயற்சியினையும் தணித்தற்குரிய வலி பொருந்திய அரணினைப் போலக், காவல் மிகுந்தவளாயினள்! அதனால், ஈண்டு எய்துதற்கு அருமை உடையவள் அல்லவோ?

**சொற்பொருள்:** 1. தெறுதல் - தாக்கி வெல்லுதல்; வெல்லுதற்கு அரிய முறைமையினையுடைய கடவுள் என்றலால். பிற தெய்வங்களை ஏவியும், அதனைப் போக்கி அச் செல்வத்தைக் கொள்ளல் யார்க்கும் அரிது என்று கருதுக. 2. நனந்தலை - அகன்ற இடம். 4. வேண்முதுமாக்கள் - வேளிராகிய தொன்மைக் குடியினர். 7 இரும்பணை - பெரிய மூங்கிற்றண்டு ; பெரிய கிளையெனினும் ஆம். 9. நெடு நெறிக் குதிரை - நெடுவழி நடந்து அடைதற்குரிய குதிரை மலை; இது அஞ்சிக்கு உரியது. 10. கடுமுனை - போரின் முன்னணி. 12. துடி - துடிப்பறை; உடுக்குப் போல்வது. வீங்குதல் - செறிதல். நெகிழ்தல் - தளர்தல். 14 தேம்புதல் - வருத்தமுற்றுத் தளர்தல். 15. கோண்டணி எயில் - பிறர் கொள்ள நினைக்கும் நினைப்பினைத் தணிவிக்கும் வலிமையுடைய எயில்.

**விளக்கம்:** தலைவி இற்செறிக்கப்பட்டுக் காவல் உடையவள் ஆயினதனாற்றான், குறித்த இடத்திற்குப் பலநாளும் வரவில்லை என்று கருதும் காதலன், 'பாழியில் காவலுடன் வேளிர் வைத்த செல்வத்தினும் காட்டில் அடைதற்கு அரியவள்' எனவும், 'கோண்தணி எயிலிற் காப்புச் சிறந்து ஈண்டருங் குரையள்' எனவும் கூறுகின்றனன். இதனால், 'தான் அல்லகுறிப்பட

நேர்ந்தமைக்கு அவள் காரணமன்று' என்று கூறுகின்ற அவனுடைய காதற்செவ்வியை அறிந்து இன்புறலாம்.

'நாடுகாண் நனந்தலை' என்றது, பாழி உயரிய மலையிடத்து, அகன்ற பக்கலிலே இருந்தமையின், அதனிடத்து நின்றார்க்கு நன்னனின் நாடு முழுமையும் காண்பதற்கு உரியதாக விளங்கும் என்றதாம். அன்றி, நாடனைத்தும் கண்டு போற்றுதற்கான சிறப்புடைய, அகற்சிவாய்ந்த இடமும் ஆம். பாழிப் பேரூர்க்கண்ணே தொன்முது வேளிர் ஓம்பிவைத்த பெருஞ் செல்வத்தைப் பற்றியும் அதற்கு அமைத்திருந்த காவலின் மிகுதியைப் பற்றியும் பிற செய்யுட்களும் கூறும்.

'வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த அருங்கல வெருக்கையின் அரியோள்' எனவே, அத்துணைச் செல்வக் குடியினள்; முதுகுடியினள்; காவல் உடைய பெருமனையினள் தலைவி என்பதும் உணரப்படுவதாம்.

அடிக்கடி அவளை நாடி வந்துவந்து காணாதே திரும்புகின்ற அவனுடைய தன்மைக்கு, ஊசலின் ஊர்ந்திழி கயிற்றின் தன்மையினையும், துடியின் வாரானது செறிந்தும் நெகிழ்ந்தும் இயங்கும் இயல்பினையும் கூறிய சிறப்பினை அறிந்து இன்புறுக.

'மேய்மணி யிழந்த பாம்பின் நிலை' யும் தலைவியை அடையப் பெறாது உயிர்சோரத் துடிக்கும் தலைவனின் நிலையும் ஒப்பிட்டுக் காண்க. அவளைக் காணாத அவனுடைய ஏக்க மிகுதி, சீவமணியினை இழந்தபின் உயிர்சோரத் துடிக்கும் பாம்பின் வருத்த மிகுதிக்கு ஒப்பாயிருந்தது என்க.

'கடுமுனை' என்றது, போரின் முன்னணியினை; முன்னணியிற் சிறந்த வீரரே நிற்பராதலின், அதனை ஊடறுத்துச் செல்வது பெரிதும் முயற்சியுடைய செயலாயிருக்கும். 'அதனை அலைத்த கொடுவில் ஆடவர்' எனவே, அவருடைய ஆண்மைச் சிறப்பும் புலனாகும்.

## 373. துயிலும் துறந்தாளோ!

**பாடியவர்:** பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** பிரிந்து போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** ஓரெயில் மன்னனின் நிலைமை.

(தலைவியைப் பிரிந்தவனாகப், பொருளீட்டி வருதல் குறித்த எண்ணம் மேலெழக், காட்டு வழியூடு வேற்றுநாடு நோக்கிச்

*சென்று கொண்டிருக்கின்றான். ஒரு தலைமகன், இடைச் சுரத்தில், அவனுடைய காதல் நெஞ்சத்தில், தலைவியின் நினைவு மிகுதியாகின்றது. அப்போது, இங்ஙனம் கூறி, அவன் தன் செயலுக்கு வருந்துகின்றனன்.)*

**முனைகவர்ந்து கொண்டெனக் கலங்கிப் பீர்எழுந்து**
**மனைபாழ் பட்ட மரைசேர் மன்றத்துப்**
**பணைத்தாள் யானை பரூஉப்புறம் உரிஞ்சச்**
**செதுகாழ் சாய்ந்த முதுகாற் பொதியில்**
**அருஞ்சுரம் நீந்திய வருத்தமொடு கையற்றுப்**

**பெரும்புன் மாலை புலம்புவந்து உறுதர**
**மீளிஉள்ளம் செலவுவலி யுறுப்பத்**
**தாள்கை பூட்டிய தனிநிலை இருக்கையொடு**
**தன்னிலை உள்ளும் நந்நிலை உணராள்**
**இரும்பல் கூந்தல் சேயிழை மடந்தை**

**கனையிருள் நடுநாள் அணையொடு பொருந்தி**
**வெய்துற்றுப் புலக்கும் நெஞ்சமொடு ஐதுஉயிரா**
**ஆயிதழ் மழைக்கண் மல்கநோய் கூர்ந்து**
**பெருந்தோள் நனைக்கும் கலுழ்ந்துவார் அரிப்பனி**
**மெல்விரல் உகிரின் தெறியினள் வென்வேல்**

**அண்ணல் யானை அடுபோர் வேந்தர்**
**ஒருங்குஅகப் படுத்த முரவுவாய் ஞாயில்**
**ஓர்எயில் மன்னன் போலத்**
**துயில்துறந் தனள்கொல்? அளியள் தானே!**

*நெஞ்சமே!*

*போர்முனை கவர்ந்ததாகக் கலக்கமுற்றுப், பீர்க்குப் படர்ந்து, வீடுகளும் பாழ்பட்டுப் போய், மரைமாக்கள் வந்து அடைந்திருக்கின்ற மன்றம் இது. பருத்த தாளினையுடைய யானையானது, தன் பெருத்த முதுகினை உராய்தலினாலே, செதுக்கியமைத்த விட்டமும் சாய்ந்துபோயிருக்கும், முதிய தூண்களையுடைய தாயிருப்பது, இந்தமன்றத்தின் அம்பலம். அதனிடத்தே-*

*அரிய சுரநெறியினை கடந்து வந்த வருத்தத்தினாலே செயலிழந்தவராக, பெரிய புற்கென்ற மாலைக்காலத்திலே, தனிமைத் துயரமும் வந்து அடையத், திண்மையான உள்ளமானது மேற்கொண்டு செல்லுதலை வற்புறுத்தவும் அதற்கு இசையாது, முழந்தாட்களைக் கைகளாற் பூட்டிய தனித்த நிலையிலே இருப்பவர் நாம். தன்னுடைய*

நிலையினையே நினைந்திருக்கின்ற நம் காதலி, நம்முடைய இந்த நிலையினை உணரவே மாட்டாள்.

கரிய பலவாகிய கூந்தலையும் சிவந்த அணிகளையும் உடையவள் அவள்; செறிந்த இருளினையுடைய நள்ளிரவிலே அணையொடு பொருந்தியவளாகக் கொதிப்புற்று நம்மை வெறுக்கும் நெஞ்சத்துடனே மெல்லெனப் பெருமூச்செறிவாள். அழகிய பூவிதழ் போன்ற குளிர்ந்த அவள் கண்களில் நீர்மல்கத் தனிமை நோய் மிகுந்தவளாகத், தன் பெருத்த தோளினை நனைக்கின்ற, கண் கலங்கி வீழும் நீரினைத் தன் மெல்விரல் நகத்தால் வழித்துத் தெறித்தபடியுமிருப்பாள்.

வெற்றி வேலினையும் தலைமைகொண்ட யானையினையும் கொண்ட, அடும் போரினையுடைய வேந்தர்கள் பலரும் ஒருங்கே கூடி வளைத்துக் கொண்டதனாலே, முறிதல் பொருந்திய வாயிலையுடைய ஓர் அரணினுள்ளே அகப்பட்டுக் கலங்கி யிருக்கும் மன்னன் ஒருவனைப்போல, அவள், தன் துயிலையும் அறவேகை விட்டனளோ? அவள் இரங்கத்தக்கவளே!

**சொற்பொருள்:** *1. முனை - போர்முனை. கவர்ந்து கொள்ளல் - அகப்படுத்துக் கொள்ளுதல், பீர் - பீர்க்கு 2. மரை - மரை என்னும் விலங்கு; மானினத்தைச் சார்ந்தது. 3. பணைத்தாள் - பருத்த கால் அடி. பருஉப்புறம் - பெரிய முதுகுப்புறம். 4. காழ் - விட்டம் 6. புலம்பு - தனிமைத் துயரம் 8. மீளி உள்ளம் - திண்மை யுடைய உள்ளம். 11. கனைஇருள் - மிக்க இருள்; அதன் நடுநாள் - நள்ளிரவுவேளை. அணை - மெல்லணை. 12. வெய்துற்று - கொதிப்புற்று . புலக்கும் - வெறுக்கும். 15. தெறியினன் - தெறித்தாளாக. 16. அண்ணல்யானை - தலைமையுடைய யானை. 17. முரவுவாய் ஞாயில் - முறிந்த வாயிலையுடைய அரண்.*

**விளக்கம்:** *தாள் கைபூட்டிய தனிநிலை இருக்கை - முழங்கால்களைக் கைகளாற் கட்டிக் கொண்டபடி இருக்கும் நிலைஇது. நடந்துவந்த களைப்பின் மிகுதியினையும் உணர்த்துவதாம். பிரிவினாலே தான் வருந்தும் வருத்தத்தை நினைப்பாளே அல்லாமல், நாம் இங்ஙனம் வழியின் கொடுமையினாலே வாடியிருக்கும் தளர்ந்த நிலையினை அவள் நினைக்கமாட்டாள் என்கின்றனன்.*

'பெருந்தோள் நனைக்கும் கலுழ்ந்து வார் அரிப்பனி மெல்விரல் உகிரில் தெறியினள்' என்பதனை நினைத்தால், அவளுடைய வருத்தத்தின் மிகுதி நன்கு புலனாகும்.

## 374. விருந்து எதிர் கொள்ள!

**பாடியவர் :** *இடைக்காடனார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *பாசறை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.*

*(வேந்துவினை மேற்கொண்டோனாகித், தன்னுடைய அன்புறு காதலியைப் பிரிந்து, வேற்று நாட்டிலே பாசறைக் கண் தங்கியிருக்கின்றான் தலைவன். அவன் சென்ற முயற்சியிலே வெற்றிபெற்றதும், தன் மனைவியை நினைத்துக் கொண்டவன், தன் வீட்டிற்குச் செல்லும் விருப்பம் மேலேழ இவ்வாறு கூறுகின்றனன். இந்த முறையிலே அமைந்தது இச் செய்யுள்)*

**மாக்கடல் முகந்து மாதிரத்து இருளி**
**மலர்தலை உலகம் புதைய வலன்ஏர்பு**
**பழங்கண் கொண்ட கொ:ழும்பல் கொண்மு**
**போழ்ந்த போலப் பலவுடன் மின்னி**
**தாழ்ந்த போல நனியணி வந்து**

**சோர்ந்த போலச் சொரிவன பயிற்றி**
**இடியும் முழக்கும் இன்றிப் பாணர்**
**வடியுறு நல்யாழ் நரம்புஇசைத் தன்ன**
**இன்குரல் அழிதுளி தலைஇ நன்பல**
**பெயல்பெய்து கழிந்த பூநாறு வைகறைச்**

**செறிமணல் நிவந்த களர்தோன்று இயவில்**
**குறுமோட்டு மூதாய் குறுகுறு ஓடி**
**மணிமண்டு பவளம் போலக் காயா**
**அணிமிகு செம்மல் ஒளிப்பன மறையக்**
**கார்கவின் கொண்ட காமர் காலைச்**

**செல்க தேரே - நல்வலம் பெறுந!**
**பெருந்தோள் நுணுகிய நுசுப்பின்**
**திருந்திழை அரிவை விருந்தெதிர் கொளவே!**

*தேரினைச் செலுத்துதலிலே நல்ல திறன் வாய்ந்த பாகனே!*

*பெருங்கடலிலே முகந்துகொண்டு, திசைகள் எங்கணும் இருண்டு, அகன்ற இடத்தையுடைய உலகம் மறையும்படியாக வலமாக எழுந்து, பொறையால் வருத்தத்தைக் கொண்டன வளவிய பலவான மேகங்கள். வானைப் பிளந்தன போலப் பலவும் ஒருங்கே தோன்ற மின்னலையும் அவை செய்தன. தாழ்ந்து விடுவனபோல ஒன்றுடன் ஒன்று மிக நெருக்க முற்றவையாகவும் வந்தன. சோர்வுற்றனபோலச் சொரிவனவும் ஆயின. இடித் தலும் குமுறலும் இல்லாமற் போய்ப், பாணரின் வடித்தலுற்ற நல்ல யாழின் நரம்பினை இசைத்தாற்போன்ற ஒலியுடனே,*

இனிய குரலோடுங்கூடி, மிக்க துளிகளைப் பொருந்தியவையும் ஆயின. இங்ஙனமாக நல்ல பல பெயல்களைப்பெய்து கழிந்த, பூக்கள் மணங்கமழுகின்ற வைகறைப் போதிலே நம் தேரும் செல்வதாக!

மணல் செறிவுற்று உயர்ந்த களர்பட்டுத் தோன்றுகின்ற காட்டுவழியிலே, குறுகிய வயிற்றினைக்கொண்ட தம்பலப் பூச்சிகள், குறுகக்குறுக ஓடியவையாக, மணியுடனே கூடிய பவளத்தைப்போலக், காயாவின் அழகு மிகுந்த வாடற் பூவிடையே புகுந்து ஒளிந்து மறைவனவாயின. இத்தகைய கார்ப்பருவம் அழகு பெற்றுவிளங்கும், விருப்பம் பொருந்திய காலைப் பொழுதிலே, நம் தேரும் செல்வதாக!

பெரிய தோள்களையும் நுணுகிய இடையினையும் திருத்தமான அணிகளையும் உடையவள் நம் தலைவி. அவள், விருந்தினை எதிர்கொள்ளுமாறு நம் தேரும் விரைந்து செல்லுமாக!

**சொற்பொருள்:** 1. மாக்கடல் - பெருங்கடல், மாதிரம் - திசை. 2. மலர்தலை உலகம் - அகன்ற இடத்தையுடைய உலகம். 3. பழங்கண் - வருத்தம்; அது பொறையினாலே வந்தது, கொழும் பல் கொண்மூ - வளவிய பலவாகிய மேகங்கள். 5. தாழ்ந்தபோல - மேனின்றும் நிலம் நோக்கி இறங்கி வருதலைப்போல. 7.இடியும் முழக்கமும் - இடித்தலும் குமுறலும்.10 பூநாறு வைகறை - பூக்கள் கமழ்கின்ற வைகறை; மண்வாடை கமழும் வைகறையும் ஆம். 12. குறுமோட்டு மூதாய் - குறுகிய வயிற்றினையுடைய தம்பலப் பூச்சி. 14. காயா அணிமிகு செம்மல் - அழகு மிகுந்த காயாவின் வாடற்பூ. 15. காமர் காலை - விருப்பம் பொருந்திய காலை வேளை; காமர் மாலை எனவும் பாடம்.

**விளக்கம்:** நிலம் மழைவரவால் மணம் பெற்றுக் கவினுற்றது போலத், தலைவியும் தன்வரவினால் கவினுறுவாள் என்பதனைக் குறிப்பாகப் புலப்படுத்தும் தலைவன், கார் வரவைக்கூறி நாமும் செல்வோம் என்கின்றனன்.

மழை மாரியாகச் சோவென்ற ஒலியுடனே பெய்யும் பெயலினை, 'வடியுறு நல்யாழ் நரம்பிசைத்தன்ன' எனக் கூறும் நயத்தினையும், வாடிய காயாவின் பூக்களாகிய நீலச் செறிவினுள் குறுகுறு ஓடி மறையும் தம்பலப் பூச்சிகளின் தன்மையை, நீலமணியுடன் கூடிய பவளம் எனக் கூறும் நயத்தினையும் அறிந்து இன்புறுக.

**மேற்கோள்:** 'தலைவன் தான் பெற்ற இன்பத்தைப் பாங்கற்குக் கூறியது' என்பதற்குச், 'செல்க தேரே நல்வலம்

*பெறுந' என்பதனை எடுத்துக் காட்டிக், 'கரணத்தின் அமைந்து' என்னுஞ் சூத்திரத்தின், 'பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்' என்னும் பகுதிக்கண் உரைப்பர் நச்சினார்க்கினியர்.*

## 375. கண்கள் ஆழல!

**பாடியவர்:** *இடையன் சேத்தங்கொற்றனார். இடையன் செங்கொற்றனார் எனவும் பாடம்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *இளம்பெருஞ் சென்னியின் வீரம்.*

*(தலைமகனின் பிரிவுக் காலத்திலே, அந்தப் பெருந்துயரி னாலே, உடல் நலமும் உள்ளத்து நினைவும் வேறுபட்டவ ளாயினாள் தலைமகள். அப்பொழுது அவளின் துயரத்தைக் கண்ட தோழி, அவளுக்கு ஆறுதல் உரைக்க முற்படுகின்றனள். தோழியின் ஆறுதல் மொழிகளைக் கேட்கும் தலைவி, தன் நிலையினைக் கூறுவதாக அமைந்தது இச் செய்யுள்)*

**'சென்று நீடுநர் அல்லர்; அவர்வயின்**
**இனைதல் ஆனாய்' என்றிசின் இகுளை!**
**அம்புதொடை அமைதி காண்மார் வம்பலர்**
**கலனிலர் ஆயினும் கொன்றுபுள் ஊட்டும்**
**கல்லா இளையர் கலித்த கவலைக்**

**கணநரி இனனொடு குழீஇ நிணனருந்தும்**
**நெய்த்தோர் ஆடிய மல்லல் மொசிவிரல்**
**அத்த எருவைச் சேவல் சேர்ந்த**
**அரைசேர் யாத்த வெண்திரள் வினைவிறல்**
**எழாஅத் திணிதோள் சோழர் பெருமகன்**

**விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி**
**குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்**
**செம்புஉறழ் புரிசைப் பாழி நூறி**
**வம்ப வடுகர் பைந்தலை சவட்டிக்**
**கொன்ற யானைக் கோட்டின் தோன்றும்**

**அஞ்சுவரு மரபின் வெஞ்சுரம் இறந்தோர்**
**நோயிலர் பெயர்தல் அறியின்**
**ஆழல மன்னோ தோழி!என் கண்ணே.**

*தோழீ! 'நம்மைப் பிரிந்து சென்று, காலத்தை நீட்டிப்பவர் நம் தலைவர் அல்லர். அதனால், அவர் திறத்து வருந்துதலை நீ ஆற்றியிருப்பாயாக' என்கின்றனை.*

ஆறலைத்தலை அல்லாது, பிறிதொரு வாழ்வு வகை யினையும் கற்றறியாத இளைஞரை உடையது காடு. அவர்கள் அம்பு தொடுத்தலின் அமைதியினைக் காணும் பொருட்டாக, புதியராக அவ்வழியூடே வருபவர், தம்பால் அணிகலன் இல்லாதவராயினுங்கூட. அவர்களைக் கொன்று பறவைகளுக்கு உண்பிக்கும் கொடுமையினர். அத்தகையவராக, அவர் செருக்கித் திரிகின்ற கவர்த்த நெறிகளிலே, கூட்டமான நரிகள் தம் இனத்தோடும் கூடியவையாக, நிணத்தினை உண்டு கொண்டிருக்கும்.

போர்வினையிலே வெற்றிநீங்காத திண்ணிய தோற்களை உடையவனும், சோழர் பெருமானுமான, விளங்கும் புகழினை உலகிலே நிலைபெறுத்தியவன், இளம்பெருஞ் சென்னி என்பவன் ஆவான். அவன், தன் குடிமக்கட்குத் தான் செய்ய வேண்டிய கடமையாதலின், செம்பினை ஒத்த வலிய மதிலையுடைய பாழிப்பேரூரினை அழித்தான்; வம்பராய வடுகரது பசிய தலைகளைத் தறித்தான்; அவ்வமயம், அவனாற் கொல்லப் பெற்ற பகைவருடைய யானைகளின் கொம்பினைப் போல்.

குருதிக்கறை படிந்த வளமான நெருங்கிய விரல்களை யுடைய காட்டுப் பருந்துச் சேவல் தங்கியிருப்பதான அடி திரண்ட யாமரத்தின் வெண்மையான கொம்புகள் தோன்றும்.

அச்சம் வருகின்ற தன்மையினையுடைய, வெப்பமிகுந்த அச்சுரநெறியினைக் கடந்து சென்ற நம் தலைவர் நோயிலராகி மீண்டும் வந்து சேர்தலை அறிவேனாயின், என் கண்களும் அழமாட்டாவே, தோழி!

**சொற்பொருள்:** 5. கலித்த - செருக்கித் திரிகின்ற. 6 கணநரி இனனொடு - கூட்டமான நரிகள் தம் இனத்தோடும்; இனமாவது, நரிகளின் கூட்டத்தை. 7 நெய்த்தோர் ஆடிய - குருதி படிந்த. மல்லல் - நெருங்கிய. 9. வெண்திரள் - வெள்ளிய திரண்ட கொம்பு. 10. திணிதோள் - திண்மையான தோள்கள். 12. குடிக் கடன் - குடிகட்குச் செய்வதான கடன்; அல்லது தான் பிறந்த சோழர்குடிக்கு உரிய கடன் எனினும் ஆம். 13. செம்பு உறழ் புரிசை - செம்பினைப் போன்ற மதில்; மதிலின் உறுதியைக் குறித்தது. பாழி - பாழிப் பேரூர்; நன்னனுக்கு உரியதாயிருந்தது. 14 சவட்டி - தறித்து. 18. ஆழல - அழமாட்டா; ஆழமாட்டா எனினும் ஆம்; துயரத்தால் கண்கள் நீர் சொரிய விழிகள் உள்ளே போனதுபோலத் தோற்றும்; இதனை ஆழ்தல் எனக்கொண்டு அங்ஙனம் 'ஆழல' என்றனள் எனவும் கொள்ளலாம்.

**விளக்கம்:** *'அம்பு தொடை அமைதி காண்மார் வம்பலர் கலனிலர் ஆயினும் கொன்று புள்ளூட்டும் கல்லா இளையர் கலித்த கவலை'* என்பதும், *'கண நரி இனனொடு குழீஇ நிணன் அருந்தும்'* என்றதும், *'நெய்த்தோர் ஆடிய மல்லல் மொசிவிரல் அத்த எருவைச் சேவல்'* என்றதும், காட்டு வழியிலே உளவான ஏதங்களைக் குறித்தன. அவ்வழிச் செல்பவர் தலைவராதலின், அவர் ஏதமின்றிச் செல்ல வேண்டுமே என்ற கவலையினால், தான் கண் கலங்கியதாகத் தலைவி கூறினாள் என்க.

'வினைவிறல் எழாஅத் திணிதோள் சோழர் பெருமகன்' என்பது, 'வின்ளவிறல் எழுஉத் திணிதோள் சோழர் பெருமகன்' எனப் பாடபேதத்துடனும் விளங்கும். இந்தப் பாடத்திற்கு, 'வெற்றி விளைக்கும் கணையமரம் போன்ற திண்மையான தோள்களையுடைய சோழர் பெருமான்' என்று பொருள் கொள்க.

## 376. நலம் தந்து செல்வாய்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *காதற் பரத்தை புலந்து சொல்லியது.* **சிறப்பு:** *அத்தியைக் காவிரி கொண்டு சென்ற செய்தியும்; குட்டுவனின் மாந்தை நகரத்து எழிலும்; கரிகாலனைப் பற்றிய குறிப்பும்.*

*(ஒரு தலைவன் தன்னுடைய காதற் பரத்தையோடு இன்புற்றுச் சிலகாலம் இருந்த பின்னர், அவளைப்பிரிந்து, சேரிப்பரத்தை ஒருத்திபாற் செல்வதற்கு நினைக்கின்றான். அப்பொழுது, அவள் வருத்தமுற்று அவன்பாற் கூறுகின்ற பாங்கிலே அமைந்தது இச்செய்யுள்.)*

**செல்லல் மகிழ்ந! நிற் செய்கடன் உடையென்மன்-**
**கல்லா யானை கடிபுனல் கற்றென**
**மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை**
**ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்துறைக்**
**கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்**

**தண்பதம்கொண்டு தவிர்த்த இன்னிசை**
**ஒண்பொறிப் புனைகழல் சேவடி புரளக்**
**கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று**
**இரும்பொலப் பாண்டில் மணியொடு தெளிப்பப்**
**புனல்நயந்து ஆடும் அத்தி அணிநயந்து**

**காவிரி கொண்டுஒளித் தாங்கு மன்னோ!**
**நும்வயிற் புலத்தல் செல்லேம்; எம்வயின்**
**பசந்தன்று காண்டிசின் நுதலே; அசும்பின்**

**அம்தூம்பு வள்ளை அழற்கொடி மயக்கி**
**வண்தோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்**

**துய்த்தலை முடங்குஇறாத் தெறிக்கும் பொற்புடைக்**
**குரங்குஉளைப் புரவிக் குட்டுவன்**
**மாந்தை அன்னஎன் நலந்தந்து சென்மே!**

*மகிழ்நனே! செல்லல் வேண்டா!*

*பாகனால் பயிற்றப்பெற்று அவன் ஏவலுக்கு அடங்கி நடப்பதனைக் கல்லாத யானையான்து, வெள்ளத்திலே நீர் விளையாடலைத் தானே கற்கத் தொடங்கியதாக, அதனால், மிக்கெழுந்த நீரானது மோதிக்கொண்டிருக்கும், மருதமரங்கள் செறிந்த தோட்டத்தினையும், தழைத்த கதிர்களைக் கொண்ட வயல்களையும் உடையது. கழாஅர் முன்துறை, அவ்விடத்தே, ஆரவாரம் பொருந்திய தன் சுற்றத்தினருடனே கூடியவனாகக் கரிகால் வளவன் புனல்விழாவினைக் கண்டிருந்தான்.*

*அத்தி என்பான் புனல் விழாக் கோலம் கொண்டனன். இனிய இசை தங்கிய ஒள்ளிய பொறிகளையுடைய புனைதற் சிறப்புடைய வீரக்கழல்கள் சிவந்த திருவடிகளிலே கிடந்து புரண்டன. கரிய கச்சினைக் கட்டிய, காண்பதற்கு இனிதான வயிற்றுமணியுடன், பெரிய பொன்னாலான பாண்டில் என்னும் கருவியும் ஒலிசெய்து கொண்டிருந்தன. புனல் விளையாட்டிலே விருப்புடன் ஆடிக்கொண்டிருந்த அத்தியின் அழகினைக் காவிரியும் விரும்பினாள்; அவனைக் கவர்ந்து கொண்டு, தன்னுள் ஒளித்துக் கொண்டாள்.*

*அங்ஙனமே நும்மையும் கவர்ந்து கொண்டனள் பரத்தை ஒருத்தி. அதற்காக, நும்மிடத்தே யாம் வெறுத்தலைச் செய்யோம். ஆயின், எம்மிடத்துப் பசலைநோய் படர்ந்தது. அதனை எம் நுதலிடத்தே காண்பீராக!*

*சேற்றிடத்தேயுள்ள, அழகிய துளையினையுடைய வள்ளைக் கொடியின் ஒள்ளிய கொடியினைப் பின்னுவித்து, வளவிய தோட்டினையுடைய நெல்லின் வளைந்த கதிர்கள் விரியும்படி துய்யினைத் தலையிலேயுடைய இறால்மீன்கள் பாய்கின்ற இடமாக விளங்குவது, அழகு பொருந்திய வளைந்த பிடரிமயிரினையுடைய குதிரைகளை உடையவனான குட்டுவனுக்கு உரிய மாந்தை என்னும் பேரூர். அதனைப் போன்ற என் நலத்தினை என்பால் மீளவும் தந்து, அதன்பின் செல்வீராக. நுமக்குச் செய்யும் கடமைகளை யான் மிகவும் உடையேன். (அதனால், மறவாது தந்து செல்க)*

**சொற்பொருள்:** *1. மகிழ்நன் - தலைவன். செய்கடன் - செய்தற்கு உரிய கடமைகள். 2. கடிபுனல் - மிக்க புனல்; புதுப் புனல்; காவலையுடைய புனலும் ஆம். கற்றென - நீர்விளையாடப் பயின்றுகொண்டிருந்ததாக. 3 மலி புனல் - மிக்கெழுந்த புனல், படப்பை - தோட்டம். 4. ஒலி கதிர் - தழைத்த கதிர். முன் துறை - ஆற்றின் கரையிடத்துள்ள நீராடுதுறை. 5. கரிகால் - கரிகால் வளவன். 6 தண் பதம் கொண்டு - புனல் விழாவிற்கான ஒப்பனைகளை மேற்கொண்டு, 9. பாண்டில் - கஞ்ச தாளம். 10. அணி நயந்து - அழகிலே விருப்புற்று. 12. புலத்தல் - வருந்துதல். 13 அசும்பு - சேறு, 14. அழற்கொடி - ஒள்ளிய கொடி. 15. தோடு - இதழ். வாங்கு பீள் - வளைந்த கதிர். 16. துய்த்தலை - துய்யினையுடைய தலை. 17. குரங்குஉளைப் புரவி - வளைந்த பிடரிமயிரினையுடைய குதிரை.*

**விளக்கம்:** *'கல்லா யானை கடிபுனல் கற்றெனப்.... புனல் நயந்து ஆடும் அத்தி' என்று கொள்ளலும் பொருந்தும். இதனால் கட்டற்று நீர் விளையாட்டிலே ஈடுபட்டிருந்தனன் என்க. அவன் ஆற்று வெள்ளத்தோடு அடித்துச் செல்லப்பட்டதற்கும், இந்தக் கட்டு மீறிய துணிச்சற் போக்கே காரணமென்பதும் இதனால் உய்த்து உணர்தற்கு உரியதாகும்.*

*'கலிகொள் சுற்றம்' என்றது, புனல் விளையாட்டுக் களிப்பின் ஆரவாரத்துடன் திகழ்ந்த அரசச்சுற்றம் என்க. 'சுற்றமொடு கரிகால் காணக் காவிரி அணிநயந்து கொண் டொளித்தனள்' என்றாற்போலத், தன்னுடைய சுற்றமும் பிறரும் காணப், புதியளான பரத்தை ஒருத்தி தலைவனை நயந்து, தன்பால் அகப்படுத்திச் சென்றனள் என்று கொள்க.*

*'அந்தூம்பு வள்ளை அழற்கொடி மயங்கி வண்தோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத் துய்த்தலை முடங்கிறாத் தெறித்தலைப்' போலச், சேரிப் பரத்தையான அவளும், தாழ்விலிருந்து துள்ளித் தலைவனின் உள்ளத்தினைத் தன் இளமைச் செருக்கினாலே கவர்ந்தனள் என்க.*

*'நும் வயிற் புலத்தல் செல்லேம்' என்றது, தான் அவன் பாற் கொண்ட காதலின் உறுதியினை விளங்கக் கூறியதாம். மேலும் தலைவியைப்போலப் புலத்தற்கான உரிமை தன்போற் காதற் பரத்தையர்க்கு இல்லையென்றதும் ஆம்.*

## 377. ஏதிலராகியும் செல்வாரே!

**பாடியவர்:** *மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.*

*(தலைமகன் ஒருவன், முன்பொரு சமயம் பொருளீட்டுதலின் பொருட்டாகத் தலைவியைப் பிரிந்து சென்று, அந்த வேதனையை உணர்ந்தவனாக, அவளுடன் பிரிய நினையாத அன்புடன் கூடி வாழ்ந்தனன். அவன் உள்ளத்திலே மீண்டும் பொருள் வேட்கை எழ, அவன், தன் தலைவியைப் பிரிந்து செல்லுதலைத் துணியாது, தன் நெஞ்சுக்கு இவ்வாறு கூறியவனாக, அந்த எண்ணத்தைக் கைவிடுகின்றான். இந்தப் பாங்கிலே அமைந்த செய்யுள் இதுவாகும்.*

**கோடை நீடலின் வாடுபுலத்து உக்க**
**சிறுபுல் உணவு நெறிபட மறுகி**
**நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த**
**வித்தா வல்சி வீங்குசிலை மறவர்**
**பல்லூழ் புக்குப் பயன்நிரை கவரக்**

**கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து**
**நரைமூ தாளர் அதிர்தலை இறக்கிக்**
**கவைமனத்து இருத்தும் வல்லுவனப்பு அழிய**
**வரிநிறச் சிதலை அரித்தலின் புல்லென்று**
**பெருநலம் சிதைந்த பேஎம்முதிர் பொதியில்**

**இன்னா ஒருசிறைத் தங்கி இன்னகைச்**
**சிறுமென் சாயல் பெருநலம் உள்ளி**
**வம்பலர் ஆகியும் கழிப மன்ற -**
**நசைதர வந்தோர் இரந்தவை**
**இசைபடப் பெய்தல் ஆற்று வோரே!**

*கோடைக்காலமானது நெடிதாயினமையினாலே வறண்டு போய்க் கிடந்த நிலத்திலே, உதிர்ந்த சிறிய புல்லரிசியான உணவினை, நுண்ணிய பலவாகிய எறும்புகள் ஒழுங்குபெறச் சென்று எடுத்துக் கொணர்ந்து, தம் புற்றிலே தொகுத்து வைக்கும். தாம் விதைத்துப் பயிரிட்டு வளர்த்துப் பெறாத அப் புல்லரிசியினைத் தம் உணவாகக் கொள்பவர், பெருத்த வில்லினைக் கைக்கொள்வோரான மறவர்கள்.*

*அவர்கள், பன்முறை, புகுந்து பாற்பசுக் கூட்டங்களைக் கவர்ந்துகொண்டு செல்ல, வளமுடன் அவ்வூரிலிருந்த குடியினரும் அதனைவிட்டுப் போய்விடுவாராயினர். அப்படிக் குடிகள் போகிய, பெரிதும் பாழ்பட்டுக் கிடக்கும் ஊரின் மன்றத்தின் கண்ணே -*

*நரைத்த முடியினையுடைய முதியவர்கள், நடுங்கிக் கொண்டிருக்கும் தம் தலைகளைக் கவிழ்த்தவராகத், தம்முடைய கவர்த்த மனத்தே இருத்துகின்ற வல்லுத்தரையின் அழகு*

கெடுமாறு, வரிகள் பொருந்திய கரையான் அரித்திருக்கும். அதனால், தன்னுடைய பழைய அழகுகெட்டுப், பெரிதான நலமனைத்தும் சிதைந்ததாகி அச்சமிகுந்ததாகப் பொதியிலும் விளங்கும். அதனிடத்து ஒரு பக்கத்தே தங்கியிருந்து,

இனிதாக முறுவலையும் சிறிய மென்சாயலினையும் உடைய தலைவியினது பெருநலத்தினை நினைந்து, அவட்கு ஏதிலர்போல ஆகியும் -

பொருள் வேட்கை கொண்டதனாலே வந்தடைந்தோர் இரந்த செல்வத்தைப் புகழுண்டாகப், பெய்து உவக்கும் செயலைச் செய்கின்ற அருளுடையவர், மேலும் செல்வதற்குத் துணிவார்களோ? (துணியார் ஆதலின், அருள் உள்ளம் உடைய யாமும் பொருள்வயிற் பிரிதலை மேற்கொள்ளோம் என்பது முடிபு.)

**சொற்பொருள்:** 2. சிறு புல் உணவு - சிறிய புல்லரிசியாகிய உணவு. 3. அளைச்செறித்த - புற்றிலே தொகுத்து வைத்த. 4. வித்தா வல்சி - விதையாது பெற்ற உணவு. 5. பயன் நிரை - பாற்பசுக்கள். 6. கொழுங்குடி - வளமான குடியினர். 7. அதிர்தலை - நடுங்கும் தலை. 8. கவைமனத்து - கவறுபட்ட மனத்து; வல்லாடுதலில் இப்படி மனம் கவறுபட்டுச் செல்லல் இயல்பாகும். வல்ல - சூது. 9. சிதலை - கரையான். 10. பேஎம் முதிர் பொதியில் - அச்ச மிகுந்த பொதியிலில்.

**விளக்கம்:** மறவருடைய கொடிய இயல்பினைக் கூறுபவர், எறும்பு, புற்றிற் சேகரித்து வைத்த விதையாது பெறும் உணவினாலே வாழ்ந்து வருபவர் என்றனர். ஆறலை கள்வராகிய அவர், மக்களை மட்டும் வழிப்பறித்து உண்பவர் அன்று; நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த உணவையும் தோண்டிப் பறித்துண்ணும் தன்மையினர் என்றனர்.

கொழுங் குடியினராக வாழ்ந்த ஊரவர், ஆறலை கள்வராகிய அவர் பல்லூழ் புக்குப் பயன்நிரை கவரவே, அவ்வூரை விட்டே போவார் ஆயினர்; அதனால், அவ்வூரும் பாழுற்றது என்றனர்.

'வல்லு வனப்பு அழியச் சிதலை அரித்தலின்' என்றதனால், வல்லு ஆடும் இடம் மரத்தால் அமைந்தது என்பது புலனாகும்.

நரை மூதாளர் மன்றத்துப் பொதியிலில் அமர்ந்து சூதாடும் வழக்கம் உடையவராக இருந்தனர். அந்நாளில் இந்த வழக்கம் இருந்ததுபோலவே, இந்நாளிலும் இருப்பதனை ஊர்ப் பொதுமண்டபங்களிற் காணலாம்.

## 378. தோன்றலான் உள்ளேன்!

**பாடியவர்:** *காவட்டனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.*

*(தலைவனும் தலைவியும் களவிலே உறவாடி இன்புற்று வருகின்ற காலம். அவர்களின் உறவிலே ஐயுற்ற தாய், தலைவியை இற்செறிக்கவும் கருதி, அவளைக் கவனிக்கத் தொடங்கியிருக்கிறாள். இந்த நிலையிலே, இரவு வேளையில் யாரும் அறியாமற் சென்று தன் மனைக்கு அண்மையிலுள்ள குறித்த ஓர் இடத்தில், தலைவி முன்னேற்பாட்டின்படி தன் தோழியுடன் சென்று காத்திருக்கின்றாள். அப்போது, தலைவியின் துயருக்கு வருந்திய தோழியானவள், தலைவனைக் குறித்துப் பழி கூறுவாளாகப் பேச்செடுக்கத், தலைவி, தன்தோழிக்குக் கூறுகின்ற முறையிலே அமைந்தது இச் செய்யுள்.)*

**'நிதியம் துஞ்சும் நிவந்தோங்கு வரைப்பின்
வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள
வங்கூழ் ஆட்டிய அம்குழை வேங்கை
நன்பொன் அன்ன நறுந்தாது உதிரக்
காமர் பீலி ஆய்மயில் தோகை**

**வேறுவேறு இனத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற்று இளந்தகர் பாடுவிறந்து இயல
ஆடுகள வயிரின் இனிய ஆலிப்
பசும்புற மென்சீர் ஒசிய விசும்புஉகந்து
இருங்கண் ஆடுஅமைத் தயங்க இருக்கும்**

**பெருங்கல் நாடன் பிரிந்த புலம்பும்
உடன்ற அன்னை அமரா நோக்கமும்
வடந்தை தூக்கும் வருபனி அற்சிரச்
சுடர்கெழு மண்டிலம் அழுங்க ஞாயிறு
குடகடல் சேரும் படர்கூர் மாலையும்**

**அனைத்தும் அடூஉ நன்று நலிய உஞற்றி
யாங்ஙனம் வாழ்தி?' என்றி - தோழி!-
நீங்கா வஞ்சினம் செய்தநத் துறந்தோர்
உள்ளார் ஆயினும் உளெனே - அவர் நாட்டு
அள்ளிலைப் பலவின் கனிகவர் கைய**

**கல்லா மந்தி கடுவனோடு உகளும்
கடுந்திறல் அணங்கின் நெடும்பெருங் குன்றத்துப்
பாடின் அருவி சூடி
வான்தோய் சிமையம் தோன்ற லானே.**

*தோழி! பெரு நிதியம் நிலைத்திருக்கும் உயர்ந்தோங்கிய மனையகத்தே யுள்ள, மணவாழ்வினரான மகளிரின் கூந்தல் மணம் பொருந்துமாறு, அழகிய தளிர்களையுடைய வேங்கை மரத்தின் நல்ல பொன்னையொத்த நறிய தாது, காற்று அசைத்தால் உதிரும். விருப்பந்தருகின்ற நிறத்தினையுடைய அழகிய தோகையினையுடைய மயிலானது, வேறுவேறு இனத்தவாக வரையிடத்தே வாழ்கின்ற வருடைகளின் இளைய கடாக்களின் கொம்புகள் மோதிச்செய்த ஒலியைக் கேட்டு அச்சங்கொண்டு ஓடும். ஆடுங் களத்தே முழங்கும் கொம்பினைப் போல இனிதாக ஒலித்துக் கொண்டு, வானத்தே எழுந்து பறந்துசென்று, பசுமையான புறத்தினையுடைய மென்மையான அழகிய இடமானது வளையுமாறு, நீண்ட கணுக்களையுடைய அசையும் முங்கிலினிடத்தே, அது தயக்கமுற்றதாகி அமர்ந்திருக்கும். அத்தகைய பெருமலை நாட்டிற்கு உரியவன் தலைவன். அவன், நம்மைப் பிரிந்ததனாலே கொண்ட தனிமையும் -*

*அன்னையின் மாறுபட்ட பொருந்தாத பார்வையும் -*

*வாடைக் காற்றால் அசைக்கப் பெறும் பனிவருதலையுடைய அற்சிரக் காலத்தே, கதிர் நிறைந்த கதிரவன் மண்டிலமும் ஒளிமழுங்க, ஞாயிறு குடகடல் சேருகின்ற துன்பமிக்க மாலைப் பொழுதும் -*

*ஆகிய இவையனைத்தும், தாக்கி நின்று எம்மை வருத்தவும், நீ எங்ஙனம் உயிர் வாழ்கின்றனை?' என, எம்மிடத்தே வினவு கின்றனை.*

*நீங்காமைக்கு உரிய வஞ்சினம் உரைத்த நமக்கு அருள் செய்து, பின், அதனை மறந்து நம்மைப் பிரிந்தோரான அவர் நம்மை நினையாராயினும் -*

*அவர் நாட்டு -*

*நெருங்கிய இலைகளைக்கொண்ட பலாவின் கனியினைக் கவர்ந்த கையுடையதாக, அறியாத மந்தியானது தன் கடுவனோடு துள்ளித் திரிகின்ற, மிக்க வலியமைந்த தெய்வத்தையுடைய நெடிய பெரிய குன்றத்திடத்து, இனிதாகப் பாடி வீழும் அருவியினை அணிந்துகொண்டதாக, வானளாவிய உச்சிமலை காணப்பெறுதலினாலே -*

*யானும் உயிர் வாழ்ந்திருக்கின்றேன் என்பதனை அறிவாயாக.*

**சொற்பொருள்:** *1. நிதியம் - வளமான செல்வம், வரைப்பின் - மனையகத்து, 2. வதுவை மகளிர் - மணங்கொண்ட மங்கல மகளிர், 3. வங்கூழ் - காற்று. 6. வரைவாழ் வருடை - வரையிடத்தே வாழ்கின்ற வருடை; ஒருவகை விலங்கு; 'எண்கால் வருடை' என்பர் பேராசிரியர். 7. தகர் - கடா. 8. வயிர் - கொம்பு. 12. உடன்ற - மாறுபட்ட. அமரா நோக்கம் - பொருந்தாத பார்வை. 13. வடந்தை - வடகாற்று. 15. படர்கூர்மாலை - துன்பம் மிகுந்த மாலை. 16. அடூஉ நின்று - தாக்கி நிலைபெற்று. 20 அள்ளிலைப் பலா - நெருங்கிய இலைகளையுடைய பலாமரம்.*

**விளக்கம்:** *வருடைகள் தம்முள் மோதுகின்ற கொம்பொலிக்கு மயில் அஞ்சிச்சென்று மூங்கிலின்கண் இருக்கும் நாடன் என்றனளாகவே, அங்ஙனமே, தலைவனின் பிரிதலாகிய கொடுமையால் தானும் நடுங்கித் தன் இல்லிலிருந்து வாடியதனைக் கூறினள் என்க.*

*பிரிவின் துயரம் அன்னை ஐயுற்று நோக்குங்கால் மறைத்து வாழ வேண்டிய துயரம், மாலையின் வரவினாலே கொள்ளும் காமவேட்கை மிகுதியினால் ஆகிய துயரம் ஆகிய அனைத்தும், அவனுடைய , 'வான்தோய் சிமையம் தோன்றலான்' ஆற்றியிருக்க இயல்வதாயிற்று என்கின்றாள் தலைவி.*

*'கல்லா மந்தி கடுவனொடு உகளும்' எனவே, அதனைக் காணும் அவனும் தன் நினைவு தோன்ற வாராதிரான் என்பதும், 'கடுந்திரல் அணங்கின் நெடும்பெருங் குன்றத்து' எனவே, 'அவன் சூழினைப் பொய்க்கமாட்டான்' என்பதும் உணரற்பாலதாம்.*

## 379. இரங்குவை அல்லையோ!

**பாடியவர்:** *பாலை பாடிய பெருங்கடுங்கோ.* **திணை:** *பாலை.* **துறை:** *முன்னொரு காலத்துப் பொருண்முற்றி வந்த தலைமகன், பின்னும் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(பொருள் தேடிவருதலின் பொருட்டாக, முன்பொரு முறை தன் தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு சென்று பொருளீட்டி வந்து, அவளுடன் இன்புற்றிருக்கும் தலைவன் தனக்குள் தன் பழைய அநுபவங்களைக் கூறியவனாக, அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டனன். இந்தத் துறையில் அமைந்த செய்யுள் இது.)*

**நந்நயந்து உறைவி தொன்னலம் அழியத்**
**தெருளா மையின் தீதொடு கெழீஇ**
**அருளற நிமிர்ந்த முன்பொடு பொருள்புரிந்து**

ஆள்வினைக்கு எதிரிய மீளி நெஞ்சே!
நினையினை ஆயின் எனவ கேண்மதி!-

விரிதிரை முந்நீர் மண்திணி கிடக்கைப்
பரிதிஅம் செல்வம் பொதுமை இன்றி
நனவின் இயன்றது ஆயினும் கங்குற்
கனவின் அற்று அதன் கழிவே அதனால்
விரவுறு பன்மலர் வண்டுசூழ்பு அடைச்சிச்

சுவல்மிசை அரைஇய நிலைதயங்கு உறுமுடி
ஈண்டுபல் நாற்றம் வேண்டுவயின் உவப்பச்
செய்வுறு விளங்கிழைப் பொலிந்த தோள்சேர்பு
எய்திய கனைதுயில் ஏற்றொறும் திருகி
மெய்புகு வன்ன கைவர் முயக்கின்

மிகுதிகண் டன்றோ இலெனே நீ நின்
பல்பொருள் வேட்கையின் சொல்வரை நீவிச்
செலவுவலி யுறுத்தனை ஆயிற் காலொடு
கனைஎரி நிகழ்ந்த இலையில் அம் காட்டு
உழைப்புறத்து அன்ன புள்ளி நீழல்

அசைஇய பொழுதில் பசைஇய வந்துஇவள்
மறப்புஅரும் பல்குணம் நிறத்துவந்து உறுதர
ஒருதிறம் நினைத்தல் செல்லாய் திரிபுநின்று
உறுபுலி உழந்த வடுமருப்பு ஒருத்தற்குப்
பிடியிடு பூசலின் அடிபடக் குழிந்த

நிரம்பா நீளிடைத் தூங்கி
இரங்குவை அல்லையோ உரங்கெட மெலிந்தே?

*நம்மை விரும்பி வாழ்பவள் தலைவி, அவளுடைய பழைய அழகு கெடுமாறு, அறிவு தெளியப்பெறாததன் காரணமாகத், தீமையுடன் பொருந்தினாய். அருள் அற்று, நிமிர்ந்த வன்மையுடனே பொருளையும் விரும்பினாய். அதனைத் தேடும் முயற்சியினும் முற்பட்டாய், வலிய நெஞ்சமே! சற்றுச் சிந்திப்பாய் ஆயின், யான் கூறும் இவற்றையும் கேட்பாயாக.*

*விரிந்த அலைகளையுடைய கடலினால் சூழப்பட்டிருப்பது மண்செறிந்த இவ்வுலகம். இதன்கண், முற்றவும் பொதுமை என்பதின்றி ஆட்சிச் சக்கரத்தைச் செலுத்தும் சிறந்த செல்வமானது, நனவின் கண்ணேயே வாய்த்தது என்றாலும். அது மறைதல், இரவிற் கனவிற்காண்பன மறைவது போன்ற அத்தன்மையதே யாகும்.*

அதனால், விரவுதல் பொருந்திய பலவகை மலர்களை வண்டினம் மொய்க்கும்படியாகச் சூடிப், பிடரின்மேல் அசைந்து கொண்டிருக்க விளங்கும் நிலையானது தயங்கும் பெரிய கொண்டையின், செறிந்த பலவாகிய நறு மணத்தினை வேண்டுமிடத்துப் பெற்று மகிழும்படியாகச் செய்யப்பெற்ற, விளங்கும் அணிகளால் அழகுற்ற, நம் தலைவியின் தோள்களை அணைந்து, பொருந்திய மிக்க துயிலினை அடையுந்தோறும், திருகி உடலோடு உடல்புகுவது போன்ற கைகளால் கவர்ந்து தழுவிக்கிடக்கின்ற அந்த இன்பத்தினும், மேலான ஒரு பொருளினை யான் கண்டறியேனே.

நீ, நின்னுடைய, பலவகையான பொருள்கள்பாற் கொள்ளும் விருப்பினாலே, என் சொல்லின் எல்லையைக் கடந்து செல்லுதலையும் வலியுறுத்தினை என்றால்-

காற்றினாலே மிக்கெழுந்த தீ பரவியதனால் இலையற்றுப் போயின காட்டிலே, மானடலில் காணப்பெறும் புள்ளி களைப்போலப் புள்ளிபட்டுத் தோன்றும் மரநிழலில் தங்கியிருக்கும் காலத்திலே, இவளது மறத்ததற்கரிய பல்வகைத் தன்மைகளும் நின் நெஞ்சத்தே வந்து பொருந்த, இவளை விரும்பி, ஒரு தன்மைத்தாக நினைத்தலையும் மாட்டாயாய். வேறுபட்டு நின்று. நின் திட்பம் கெட மெலிவுற்று, பெரிய புலியுடனே போரிட்டு வடுப்பட்டு வருந்திய கொம்பினையுடைய களிற்றின் பொருட்டாக, அதன் பிடியானையானது ஆரவாரித்து அடியிட்டுச் செல்லக் குழிந்த இடங்களையுடைய, செல்லத் தொலையாத நெடிய சுரத்தின் இடையே மயங்கி வருத்தமுறுவாயும் அல்லையோ? (அல்லையானால், இவளைப் பிரிந்து செல்லலை நயப்பாய் என்பது கருத்து.)

**சொற்பொருள்:** 1. உறைவி-வாழ்பவளாய தலைவி. 2. தெருளுதல்-அறிவு தெளிதல். 3. நிமிர்ந்த முன்பு-மிக்கெழுந்த வன்மை. 4. ஆள்வினை-செயன் முயற்சி. மீளி நெஞ்சு-வலிய நெஞ்சு.6. மண் திணி கிடக்கை-மண் செறிந்த உலகம். 6.பரிதி அம் செல்வம்-ஆட்சி சக்கரத்தை நடத்தலாகிய செல்வப்பேறு. 9.கழிவு-மறைவு. 11.சுவல்-பிடரி. முடி-கொண்டை; முடித்தலைப் பெற்றிருப்பது முடியாயிற்று. 14.கனைதுயில்-மிக்க துயில். திருகி-பின்னிப் பிணைந்து.17. சொல்வரை நீவி-சொல்லின் எல்லையைக் கடந்து. 20. உழை-பெண்மான் 21.அசை இய-தங்கிய.25. பூசல்-ஆரவாரம்.26.தூங்கி-மெலிவுற்றுத் தங்கி.

**விளக்கம்:** 'வாழ்க்கை நிலையாமையினை உடையது' என்பதனை, 'விரிதிரை முந்நீர் மண்திணி கிடக்கைப் பரிதியம்

செல்வம் பொதுமையின்றி நனவின் இயன்றதாயினும் கங்குல் கனவின் அற்று' என, மிகவும் நயமாகக் கூறியதனை அறிக. இதனாற் பொருட்செல்வத்தினுங் காட்டில் காதற் பேற்றையே பெரிதாகக் கருதும் காதலரின் பண்பும் புலனாகும்.

இடைவழியில், தலைவியின் நினைவு வந்தடைந்த காலத்து, 'ஒரு திறம் நினைத்தல் செல்லாய், உரம்கெட மெலிந்தே, நிரம்பா நீளிடைத் தூங்கி இரங்குவை அல்லையோ' என நெஞ்சம் உடைகின்ற தன்மையைச் சுவையுறக் கூறியதனைக் கண்டு இன்புறுக.

பாலைக் கலியினைப் பாடிய இந்த ஆசிரியர், அதன் கண்ணும், இங்ஙனம் காதலையுடையார்க்குப் பொருட் செல்வத்தினும் கூடியிருக்கும் இன்பப்பேறே சிறப்புடைத்தெனக் கூறும் பகுதிகள் பலவாகும். அவற்றையும் கற்று இன்புறுக.

ஆசிரியர், தாம் அரசராதலின், அதற்கேற்பப் 'பரிதியஞ் செல்வம் பொதுமை இன்றி நனவில் இயன்றதாயினும்' எனக் கூறிய உவமைச் சிறப்பினையும் உணர்ந்து மகிழ்க.

## 380. நீயே கூறுக!

**பாடியவர்:** மதுரை மருதனிளநாகனார். **திணை:** நெய்தல். **துறை:** பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி, தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

(தலைவியிடம் தலைமகனுக்கு அருள் செய்யுமாறு கூறி, அவனுக்காகப் பரிந்து வேண்டுகின்றாள் அவளுடைய தோழி, இந்த முறையில் அமைந்த செய்யுள் இது.)

**தேர்சேண் நீக்கித் தமியன் வந்து, நும்**
**ஊர்யாது? என்ன நணிநணி ஒதுங்கி**
**முன்னாள் போகிய துறைவன் நெருநை**
**அகலிலை நாவல் உண்துறை உதிர்த்த**
**கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்**

**தாழை வேர்அளை வீழ்துணைக்கு இடூஉம்**
**அலவற் காட்டி, 'நற்பாற்று இது' என**
**நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே**
**உதுக்காண் தோன்றும் தேரே இன்றும்**
**நாம்எதிர் கொள்ளா மாயின் தான்அது**

**துணிகுவன் போலாம் நாணுமிக உடையன்**
**வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ?-**
**அம்ம, தோழி! - கூறுமதி நீயே!-**

தோழி! தன் தேரினைத் தொலைவிலேயே நிறுத்திவிட்டுத், தனியனாகவந்து, 'நும் ஊர் யாது?' என்று நாம் கேட்பக், குறுகக் குறுக நடந்து முன்னாளிற் சென்றனன் துறைவன்.

நேற்று, அகன்ற இலைகளையுடைய நாவன் மரமானது நீருண்ணும் துறைக்கண்ணே உதிர்த்த கனியினை, அதன் அழகு கெடுமாறு இழுத்துக்கொண்டு சென்று, தாழையின் வேர்ப்பக்கத்துள்ள அளையிலேயிருக்கும் தான் விரும்பிய தன் துணைக்கு இடுகின்ற நண்டினைக் காட்டி, 'இது நல்ல பான்மையினை உடையது' என்று கூறி, நின்னை நினைந்த நெஞ்சத்தோடு நெடிது பெயர்ந்தும் சென்றனன்.

இன்றும், அதோ பார், அவனுடைய தேர் தோன்றுகின்றது. நாம் அவனை எதிர்கொண்டு ஏற்காமலிருந்தால், நாணம் மிகவும் உடையவனாதலின், அதனை ஒதுக்கித் தானே அதனைச் சொல்லத் துணிகின்றவன் போலும் உள்ளனன்!

அதனால், வெண்மையான மணலையுடைய நெடிய மணல் மேட்டிற் சென்று மறைந்து கொள்வோமோ? என் செய்வா மெனக் கூறுவாயாக!

**சொற்பொருள்:** 2. நணி நணி ஒதுங்கி-குறுகக் குறுக நடந்தவனாகச் சென்று. 4. உண்டுறை-நீர் உண்ணும் துறை. 7. நற்பாற்றிது-இது நல்ல பான்மையினையுடையது.

**விளக்கம்:** 'நாவற் கனியை நண்டு தன் துணைக்கு ஊட்டக் காட்டி, 'நற்பாற்று' என்றவனாக நினைந்த நெஞ்சமொடு" என்றது. தானும் அவ்வாறே தலைவியை மணந்து அவளுடன் கூடி இனிதாக இல்லறம் நிகழ்த்த விரும்பியவன் அவன் என்றதாம்.

'அது துணிகுவன்' என்றது மடலேறுதல் போன்ற முயற்சிகளிலே ஈடுபடுவான்போலும் என்றதாம்.

'வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ?' என்றது, 'அவனுடன் அவ்விடத்துக்கூடி மகிழ்வாயோ?' எனக் குறிப்பால் உணர்த்தியதாம்.

## 381. பாழ்கொண்ட மேனியள்!

**பாடியவர்:** மதுரை இளங்கௌசிகனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** சேரனின் பேராற்றல்.

(தன் அன்புடைய மனைவியைப் பிரிந்து, பொருளார்வம் மிகுதியாக எழுதலால், வேற்று நாடு நோக்கி வழிக்கொண்டான்

*ஒரு தலைவன். இடைச்சுரத்தே சென்று கொண்டிருக்கும் அவனுடைய உள்ளத்திலே, தலைவியின் நினைவு எழுகிறது. அவன், தன் நெஞ்சிற்கு அப்போது சொல்லிக் கொள்ளுகின்ற முறையிலே அமைந்தது இச்செய்யுள்.)*

**ஆளி நன்மான் அணங்குடை ஒருத்தல்**
**மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப**
**ஏந்தல் வெண்கோடு வாங்கிக் குருகருந்தும்**
**அஞ்சுவரத் தகுந ஆங்கண் மஞ்சுதப**
**அழல்கான்று திரிதரும் அலங்குகதிர் மண்டிலம்**

**நிழல்குன்று உண்ட நிரம்பா நீளிடை**
**கற்றுரிக் குடம்பைக் கதநாய் வடுகர்**
**விற்சினம் தணிந்த வெருவரு கவலை**
**குருதி ஆடிய புலவுநாறு இருஞ்சிறை**
**எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி**

**பச்சூன் கொள்ளை சாற்றிப் பறைநிவந்து**
**செக்கர் வானின் விசும்பணி கொள்ளும்**
**அருஞ்சுரம் நீந்திய நம்மினும் பொருந்தார்**
**முனைஅரண் கடந்த வினைவல் தானைத்**
**தேனிமிர் நறுந்தார் வானவன் உடற்றிய**

**ஒன்னாத் தெவ்வர் மன்னெயில் போலப்**
**பெரும்பாழ் கொண்ட மேனியள் நெடிதுயிர்த்து**
**வருந்தும்கொல்? அளியள் தானே! - சுரும்புண**
**நெடுநீர் பயந்த நிரைஇதழ்க் குவளை**
**எதிர்மலர் இணைப்போது அன்னதன்**
**அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே!**

*நெஞ்சமே! ஆளியாகிய நல்ல விளங்கினது வருத்துதலை யுடைய ஏறானது, வலிமையுடைய வேழத்தின் தலைவனானது வருந்துமாறு அதன் நிமிர்ந்த வெண்மையான கொம்பினைப் பறித்து, அதன் குருத்தினைத் தின்னும், அச்சமுண்டாகத் தகுந்த அச் சுரநெறியினிடத்தே, மேகமும் பெய்யா தொழிந்ததாக, எரியினைக் கக்கிச் செல்லும் அசையும் கதிர்களையுடைய ஞாயிறானது, நிழலினை அகழ்ந்து உண்ட, செல்லத் தொலையாத நெடிய இடைவழியே, கன்றின் தோலினாலாகிய கூட்டினையும், சினம் பொருந்திய நாய்களையும் உடைய வடுகர் இருப்பர். அவர்களுடைய வில்லின் சினமும் தணிந்த, அச்சம் வருகின்ற கவர்த்த நெறிகளிலே, குருதியிற் படிந்தபுலால் நாற்றத்தை உடைய பெரிய சிறகினையுடைய எருவைச் சேவலினது கூடிய கிளைகளின் கூட்டமானது, பசுமையான*

ஊனின் மிகுதியை அறிவித்துப் பறந்து எழுந்து செக்கர் வானம் போன்று வானத்தை அழகுசெய்திருக்கும். அத்தகைய அரிய சுரத்தினைக் கடந்துவந்த நம்மைக் காட்டினும்,

பகைவரது போர்முனைக்கண், அரணை வெற்றிகொண்ட, போர்த் தொழிலிலே வல்ல தானையினையும், வண்டுகள் மொய்க்கும் நறிய மலர்மாலையினையும் உடையவன் சேரன். அவன், போரிட்டு அழித்த, அவனுக்கு மாறுபட்ட பகைவரது பெரிதான கோட்டை மதிலைப்போலப், பெரிதும் பாழ்பட்டுப் போயின உடலினளாகி,

வண்டு உண்ண, ஆழ்ந்த நீரிடத்தே தோன்றிய நிரையான இதழ்களையுடைய குவளையினது, எதிர்வைத்த இருமலர் களைப்போல விளங்கிய தன் செவ்வரிபடர்ந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் தெளிந்த நீரைத் தம்மிடத்தே கொள்ள நெடு மூச்செறிந்து வருந்தியிருப்பாளே! அவள் இரங்கத் தக்கவளே!

**சொற்பொருள்:** 1. ஆவி - யாளி என்று கூறப்படும் விலங்கு; சிங்கத்து உருவோடு, யானைபோலத் துதிக்கையும் கொண்டதாக விளங்கியது. 2. நெடுந்தகை - தலைவன். குருகு - குருத்து, 4. மஞ்சுதப - மேகம் பெய்யாது நீங்க. 6. சூன்று - அகழ்ந்து 7. கற்றுரிக்குடம்பை - கன்றின் தோலாலான கூடு. 8. விற்சினம் தணிந்த - வில்லின் சினம் தணிவுற்ற; அதாவது வழிப்போக்கரைக் கொன்றுவிட்ட. 11. பச்சூன் - பசிய ஊன். கொள்ளை - மிகுதி. பறைநிவந்து - எழுந்து பறந்து. 15. உடற்றிய - போரிட்டு அழித்த. 21. கண்பனி கொள்ளல் - அழுது கண் கலங்கியிருத்தல்.

**விளக்கம்:** 'கடத்தற்கரிய நெடிய சுரத்தினை வருத்தத்துடன் கடந்துவரும் தன்னினும், தலைவி தன் பிரிவினால் வருந்தும் வருத்தம் மிகுதியானதோ' என எண்ணுபவன், மீளவும் அங்ஙனம் பிரிந்து போகான் என்க.

'எருவைச் சேவலின் ஈண்டுகிளைத் தொழுதி பச்சூன் கொள்ளை சாற்றிப் பறை நிவந்து செக்கர் வானின் விசும் பணி கொள்ளும்' என்றது, அப்படி அவை பறத்தலால் பலரும் பச்சூன் மிகுதி உள்ளமையினை அறிபவராவர், அதனால் அஞ்சுவர் என்பதனாலாம்.

தலைவியின் உடலழகு கெட்ட நிலைக்கு, 'வீழ்ச்சியுற்ற கோட்டை மதிலைப்போல' என்று உரைக்கின்ற உவமை நயத்தினையும் அறிந்து இன்புறுக.

## 382. தம்முறு விழுமம்!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.*

*(தலைவனும் தலைவியும் தம்முட் கண்டு காதலித்துக் களவு வாழ்விலே ஈடுபட்டும் வருகின்றனர். தினையறுத்தபின் தலைவி இற்செறிக்கப்பட்டதனால் பகற்குறி வாயாதுபோக இரவிக் குறியினை நாடுகின்றனர். இந்த நிலையிலே, தலைவனைத் தலைவியை வரைந்துவந்து மணந்து கொள்ளத் தூண்டுவாளாகத், தோழி, தலைவியிடம் சொல்வாள் போலச் சொல்லியது இது. இதன்கண், அன்னை ஐயுற்று நெடுவேளை வேட்டு வெறியாடலுக்கு முயல்கின்றனள் என்பதனால், இனிச் சந்திப்பு வாய்ப்பது அரிதாதலும் கூடுமென்பதனைப் புலப்படுத்தலும் காண்க)*

**பிறருறு விழுமம் பிறரும் நோப**
**தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்**
**கடம்புகொடி யாத்துக் கண்ணி சூட்டி**
**வேறுபல் குரல ஒருதூக்கு இன்னியம்**
**காடுகெழு நெடுவேட் பாடுகொளைக்கு ஏற்ப**

**அணங்கயர் வியன்களம் பொலியப் பையத்**
**தூங்குதல் புரிந்தனர் நமரென ஆங்கவற்கு**
**அறியக் கூறல் வேண்டும் - தோழி!-**
**அருவி பாய்ந்த கருவிரல் மந்தி**
**செழுங்கோட் பலவின் பழம்புணை யாகச்**

**சாரற் பேரூர் முன்துறை இழிதரும்**
**வறனுறல் அறியாச் சோலை**
**விறன்மலை நாடன் சொல்நயந் தோயே!**

*தோழி! அருவியிடத்தே பாய்ந்த கருவிரலையுடைய மந்தியொன்று, செழுமையாகக் காய்த்தலைக் கொண்ட பலவின் பழத்தினைத் தெப்பமாகக் கொண்டதாக, மலைச் சாரலிலுள்ள நம் பேரூரின் நீர்த்துறையின் முன்பாக வந்தும் இறங்கும். அத்தகைய, வறட்சி அடைதலை அறியாத சோலைகளை யுடைய, வெற்றி பொருந்திய மலைநாட்டின் தலைவன் நின் காதலன். அவனுடைய சொல்லை விரும்பி, அவனை நீயும் ஏற்றுக் கொண்டனை!*

*பிறருக்கு வந்தடையும் துன்பத்தைக் காணின், தாம் ஏதிலரேனும். நல்லவராயின், அந்தப் பிறரும் நோவா நிற்பர். அங்ஙனமன்றித் தாம் அடைகின்ற துன்பத்தை அவர் பெரிதாகக் கொள்ளமாட்டார்.*

கடம்பினிடத்தே கொடியினைக் கட்டி, அதற்குக் கண்ணியும் சூட்டிப் பல்வேறு குரலையுடைய ஒரு தூக்கினையுடைய தாளத்தின் இனிய இசையினை முழக்கியவராக, நம்மவர், காட்டிற் பொருந்திய நெடுவேளாகிய முருகப் பெருமானுக்குப் பாடு கொள்ளுதற்குப் பொருத்தமான வெறியாட்டுச் செய்யும் பரந்த களம் சிறப்புற, மெல்ல வெறியாடுதலை நிகழ்த்தலையும் விரும்பினர். நம் தலைவனைக் காணுமிடத்து, இங்ஙனமென்று, நம் நிலையை அவனுக்கும் அறியும் படியாக நாம் கூறுதல் வேண்டும்.

**சொற்பொருள்:** 1. விழுமம் - துன்பம். நோப - நோதலைக் கொள்வர்; அதாவது, உதவுவர். 2. தமக்கோ தஞ்சம் - தம்மளவில் எளிதாகவே கொள்வர். 3. கடம்பு - கடப்ப மரம். 4. தூக்கு - தாளங்களின் முறைமையினாலே வரும் செந்தூக்கு முதலாகிய தூக்குவகையைக் குறிப்பது. தூக்கு இன்னியம் - தூக்கினைப் பொருந்திய இனிய வாச்சிய ஒலி. 6. நெடுவேள் - முருகன். 5. பாடுகொளை - பாடு கொள்ளல்; வேண்டி வழி படல். 6. அணங்கு அயர்தல் - வெறியாடுதல்.

**விளக்கம்:** 'அருவி பாய்ந்த மந்தி, பலாப் பழத்தைப் புணையாகக் கொண்டு கரைசேரும் நாடன்' எனவே, தலைவனும் தவறாது தான் மேற்கொண்டவற்றுள் வரும் இடைப்பட்ட இடையூறுகளைக் கடந்து இன்புறுவதற்கு உரியவன் என்றனள்.

'நமர் நெடுவேளைக் குறித்த வெறியாடலை மேற் கொண்டனர்' என்றதனால் களவினைத் தம்மவர் அறிந்தன ராதலையும் குறிப்பாகப் புலப்படுத்தினள்.

'பிறருறு விழுமம் பிறரும் நோப தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்' என்றதனால், தாமுற்ற பிரிவினாலும் பிறர் அறிவத னாலும் நேர்ந்த துயரினைத் தலைவனும் மாற்றுதற்கு அருளுடையதனாதல் வேண்டும் என்றனள்.

நெடுவேள் - முருகனைக் குறித்தது. 'நெடிதும் விரும்பப் படுபவன்' என்பது பொருள். 'காடு' என்றது, இங்குக் குறிஞ்சி நிலத்துக் காட்டுப் பகுதியை என்று கொள்ளல் வேண்டும்.

## 383. யாரைப் பெறுகுவை?

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய தாய் சொல்லியது.

*(சீரும் சிறப்புமாகச் சுற்றமும் ஆயமும் பாராட்ட வளர்ந்த தம் மகள், தன் காதலனுடன் கூடி உடன்போக்கிலே சென்றுவிட, அதனை நினைந்து நற்றாய் வருத்தமுற்றுப் புலம்புகின்ற முறையிலே அமைந்தது இச் செய்யுள்.)*

**தற்புரந்து எடுத்த எற்றுறந்து உள்ளான்**
**ஊருஞ் சேரியும் ஓராங்கு அலர்எழக்**
**காடுங் கானமும் அவனோடு துணிந்து**
**நாடுந் தேயமும் நனிபல இறந்த**
**சிறுவன் கண்ணிக்கு ஏர்தே றுவரென**

**வாடினை-வாழியோ, வயலை!-நாள்தொறும்**
**பல்கிளைக் கொடிகொம்பு அலமர மலர்ந்த**
**அல்குல் தலைக்கூட்டு அம்குழை உதவிய**
**வினையமை வரனீர் விழுத்தொடி தத்தக்**
**கமஞ்சூற் பெருநிறை தயங்க முகந்துகொண்டு**

**ஆயமடக் கண்ணன் தாய்முகம் நோக்கிப்**
**பெய்சிலம்பு ஒலிப்பப் பெயர்வனள் வைகலும்**
**ஆரநீர் ஊட்டிப் புரப்போர்**
**யார்மற்றுப் பெறுகுவை அளியை நீயே!**

*வயலைக் கொடியே! நீ வாழ்க! தன்னைப் பெற்று வளர்த்த என்னையும் பிரிந்து நினையாளாயினள். ஊரிடத்தும் சேரியிடத்தும் ஒரு பெற்றியே அலரும் எழுந்தது. காடும் கானமும் அவனுடன் கடந்து செல்லவும் துணிந்தனள். நாடும் தேயமும் மிகப்பல கடந்தும் செல்வாள் ஆயினள். அத்தகைய சிறிய வன்கண்மையினை உடையவட்கு அழகு செய்விக்க நின்னைக் கொய்வர் எனக் கருதி நீ வாடியுள்ளாயோ?*

*நாள்தோறும், பல கிளையாய கொடியாகிய கொம்புகள் பாரம் தாங்காது அலமர, மலர்கள் நிறைந்த அழகிய குழையினை அவளுடைய அல்குலிடத்தே அமையும் தழையுடைக்காக உதவினாய். அந்த அழகிய மடப்பம் தோன்றும் கண்களை உடையவள், சிறந்த வளையல்கள் அசையவும், அரிபெய்த காற்சிலம்புகள் ஒலிக்கவும் தொழிற்பட்ட மூங்கிற்குழாயின் வழியாக வரும் நீரினை, நிறைந்த நீரினைக் கொள்ளும் பெரிய சாலிலே அசையுமாறு முகந்துகொண்டு வந்து. தாயாகிய என் முகத்தினை நோக்கியவாறே, நாடோறும் நினக்கு நீருற்றப் பெயர்வாள் அன்றோ! (அவள், இப்போது சென்று விட்டனள். இனி, அவளைப்போல) நிறைய நினக்கு நீருட்டி நின்னைப் பேணுபவராக யாரினைப் பெறுகுவை? நீ இரங்கத்தக்காய்!*

**சொற்பொருள்:** *2. ஓராங்கு - ஒரு பெற்றியே; ஒரு தன்மைத்தாக. 3. அவனொடு துணிந்து -அவனோடு செல்லத் துணிந்து. 5. சிறு வன்கண்ணி - இளையளாய, வன்கண்மை உடையவள். 7. அலமரல் - சுழலுதல். 9. வினை அமை வரல் நீர் - வினையமைந்த மூங்கிற் குழாய் வழியாக வந்து சொரியும் நீர். 10. கமஞ்சூல் - நிறைசூழ்; நிறைசூலுற்றவரது வயிறு போன்ற பெரிய*

*சால் என்க. 10. தயங்க - அசைய 11. தாய் முகம் நோக்கி - தாயன்பு முகத்தில் விளங்குமாறு நோக்கி; தாயின் முகத்தை நோக்கிய படியும் ஆம். 11. மடக் கண்ணள் - மடப்பம் வெளிப்படும் கண்களையுடையவள்.*

**விளக்கம்:** *'சேரி' என்பது, ஊரின் பகுதியைக் குறிக்கும். மகளைப் பிரிந்த தாய், தலைவியால் நீருற்றி வளர்க்கப்பெற்ற வயலைக் கொடியிடத்திலே சென்று, அவள் பிரிந்து தலைவனுடன் உடன்போக்கிலே சென்ற செய்தியைக் குறித்து, அதனிடத்துக் கூறி இவ்வாறு புலம்புகின்றனள்.*

## 384. விருந்தோம்பும் சிறப்பு!

**பாடியவர்:** *ஒக்கூர் மாசாத்தியார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *வினைமுற்றிய தலைமகன் வரவு கண்டு உழையர் சொல்லியது.*

*(வேந்தனின் ஏவலுக்கு இசைய, அவனுக்குப் படைத் துணையாகத் தன் அன்புத் தலைவியைப் பிரிந்து சென்றிருந் தனன் தலைவன். மேற்கொண்டு சென்ற அரிய செயலையும் வெற்றியுடன் முடித்தவனாக, அவன் வீடு திரும்புதலையும், அதனால் தலைவி கொண்ட மகிழ்வையும், அவனுடைய உழையோர் சொல்லி இன்புறுகின்ற முறையிலே அமைந்தது இந்தச் செய்யுள்.)*

**இருந்த வேந்தன் அருந்தொழில் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஏறியது அறிந்தன்று அல்லது வந்த
ஆறுநனி அறிந்தன்றோ இலெனெ! "தா அய்
முயற்பறழ் உகளும் முல்லையெம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்
மெல்லியல் அரிவை இல்வயின் நிறீஇ
இழிமின்" என்றநின் மொழிமருண் டிசினே!
வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ?**

**மானுரு ஆகநின் மனம்பூட் டினையோ
உரைமதி - வாழியோ வலவ! - எனத்தன்
வரைமருள் மார்பின் அளிப்பனன் முயங்கி
மனைக்கொண்டு புக்கனன் நெடுந்தகை
விருந்தேர் பெற்றனள் திருந்திழை யோளே!**

*"பாகனே! வாழ்வாயாக!!"*

*"பாசறையிடத்து நம்முடன் இருந்த வேந்தன் அரிய போர்த் தொழிலை வெற்றிகொண்டு முடித்தனன். யானும் தலைவியை*

விரும்பிய காதலுடையவன் ஆயினேன். பெரிதான தேரிலே ஏறியதனை அறிந்தேனே அல்லாமல், இங்கு வந்தடைந்த பரிசினை நன்கு அறிந்தவன் அல்லேன். முயற்குட்டிகள் தாவிக் குதித்து மகிழும் முல்லையாகிய அழகிய காட்டிடத்தே, கவர்த்த கதிரினையுடைய வரகினைக் கொண்ட சிறிய ஊரினிடத்தே, மெல்லிய இயலினையுடைய தலைவியின் இல்லத்திடத்தே தேரினை நிறுத்தி, 'இறங்குக' என்று கூறிய நின்னுடைய சொல்லைக் கேட்டு மருட்சியே கொண்டேன்! வானிலே இயங்கும் இயல்பினையுடைய காற்றினையே குதிரை வடிவாகப் பூட்டியிருந்தாயோ? கூறுவாயாக" என்று பாராட்டியவனாகத், தனது குன்றொத்த மார்பிடத்தே அவனைச் செறிப்போனாய் இறுகத் தழுவியவனாகப், பெருந்தகைமையுடைய நம் தலைவன், அவனையும், தன் மனைக்கண் உடன் கொண்டவனாகப் புகுந்தனன்.

திருந்திய அணிகளையுடைய தலைவியும், அன்று ஒரு சிறந்த விருந்தினனைப் பேணும் வாய்ப்பினைப் பெற்றனள்!

**சொற்பொருள்:** 1. அருந்தொழில் - செய்து முடித்தற்கு அருமை உடையதாகிய போர்த் தொழில். 2. புரிந்த காதல் - விரும்பிய காதல். 4 தாஅய் - தாவி. 5. முயற்பறழ் - முயற்குட்டிகள். முல்லையம் புறவு - முல்லையாகிய அழகிய காடு. 9. வளி - காற்று. 10. மான் - குதிரை. 12. வரை மருள் மார்பு - மலையென மயங்கத் தூண்டும் பரந்த திண்ணிய மார்பு. நளிப்ப - செறிய; இறுக. 14. விருந்தேர் பெற்றனள் - விருந்தாகிய ஒரு சிறப்பினை அடைந்தனள்.

**விளக்கம்:** 'புரிந்த காதலொடு பெருந்தேர் யானும் ஏறியதறிந்தன்று அல்லது வந்தவாறு அறிந்தன்றோ இலனே!' என்றதன் அமைதியைக் கருதுக. விரும்பிய காதலொடு தேரேறி யவன் தேரின் இயக்கத்தை மனத்தெண்ணாது தலைவியின் நினைவிலேயே மூழ்கியிருந்தனன் என்பதும் விளங்கும். இதனை, 'இழிமின் என்ற நின் மொழி மருண்டிசினே!' என்ற பின்வரும் தொடரும் வலியுறுத்தும்.

தேர் விரையவந்த சிறப்பிற்குத் தலைவன் தன் பாகனை உவந்து பாராட்டும் சிறப்பினைக் காண்க. 'மானுருவாய் நின் மனம் பூட்டினையோ? வான் வழங்கு இயற்றை வளி பூட்டினையோ? உரைமதி' என்று பாராட்டும் போது, வலவனின் பூரிப்பு எங்ஙனமிருக்கும் என்பதனையும் நினைத்துப் பார்க்கவும்.

நெடுந்தகையாகிய தலைவன், அத்துடனும் அமையாது, வலவனை மார்பிறுகத் தழுவியவனாகத் தன்னுடன் தன் மனையினுள்ளும் அழைத்துச் சென்று, அவனுக்கு விருந் தூட்டியும் உபசரிக்கின்றான்.

*இதனால், அந்நாளில் ஏவலர்க்கும், தலைவர்க்கும் இருந்த உளங்கலந்த உறவின் அமைதியும் நன்கு புலனாகும்.*

**மேற்கோள்:** 'பெருந்தேர் யானும்...... மருண்டிசினே' என்னும் பகுதியை, 'மருட்கை' என்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோளாகப், 'புதுமை, பெருமை' என்னும் சூத்திர உரையிற் காட்டுவர் இளம்பூரணனர்.

இச்செய்யுளைக் காட்டி, 'இதனாற் பாகன் சிறப்புக் கூறியவாறு காண்க' எனக், கரணத்தின் அமைந்து முடிந்த காலை' என்னும் சூத்திரத்துப், 'பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்' என்னும் பகுதிக்கண் நச்சினார்க்கினியர் காட்டினர்.

இதனுள் 'புரிந்த காதலொடு... நின்மனம் பூட்டினையோ உரைமதி வாழியோ, வலவ' என்பதனைக் காட்டி, 'உள்ளம் போல் உற்றுழி உதவிற்று' எனத் தலைவன் கூறியவாறு காண்க' என 'வினைவயிற் பிரிந்தோன்' என்னுஞ் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் உரைப்பர்.

## 385. கொடிது! கொடிது!

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது. **சிறப்பு:** திருமணப் புனைவுகள்.

*(தன் மகள், தான் காதலித்த இளைஞனுடன் கூடி உடன் போக்கிலே சென்றுவிட்டாளாக, அவளை நினைத்து ஏக்கமுற்றுப் புலம்பும் செவிலித்தாயின் கூற்றாக விளங்கும் செய்யுள் இது.)*

**தன்னோ ரன்ன ஆயமும் மயிலியல்**
**என்னோ ரன்ன தாயரும் காணக்**
**கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர்**
**காவிரிப் படப்பை உறந்தை அன்ன**
**பொன்னுடை நெடுநகர் புரையோர் அயர**

**நன்மாண் விழவில் தகரம் மண்ணி**
**யாம்பல புணர்ப்பச் செல்லாள் காம்பொடு**
**நெல்லி நீடிய கல்லறைக் கவாஅன்**
**அத்த ஆலத்து அலந்தலை நெடுவீழ்**
**தித்திக் குறங்கில் திருந்த உரிஞ**

**வளையுடை முன்கை அளைஇக் கிளைய**
**பயிலிரும் பிணையல் பசுங்காழ்க் கோவை**
**அகலமை அல்குல் பற்றிக் கூந்தல்**
**ஆடுமயிற் பீலியின் பொங்க நன்றும்**
**தானமர் துணைவன் ஊக்க ஊங்கி**

**உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்ச்**
**சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ**
**அறியாத் தேஎத்தள் ஆகுதல் கொடிதே!**

*தன்னையொத்த ஆயமகளிரும், மயிலின் சாயலையுடைய என்னையொத்த தாய்மாரும் கண்டு மகிழும்படியாக -*

*கைவன்மையினை உடைய போர்யானைகளையும், கடிதாகச் செல்லும் தேரினையும் உடையவர் சோழர்கள். காவிரிக் கரையிலே அமைந்த உறையூர் அவர்கட்கு உரியது. அதனையொத்த செல்வமிக்க பெருமையிலே மேலோர் அவட்கு வதுவை நிகழ்த்துவர். நல்ல மாண்பு கொண்டதாக விளங்கும் அந்த மணவிழாவிலே. மயிர்ச் சாந்தினை அவட்குப் பூசி மற்றும் பொருத்தமான அணிபலவும் புனைந்து மணஞ் செய்து கொடுக்க. அவள் தன் கணவனுடன் சென்றாளும் அல்லள்.*

*மூங்கிலுடனே நெல்லி மரங்களும் உயரமாக வளர்ந்துள்ள கற்பாறைகளையுடைய பக்க மலையிலே, வழியிடையிலேயுள்ள ஆலமரத்தின் வாடியசைகின்ற நெடிய விழுதானது, தேமல் பொருந்திய தன் தொடையிலே நன்கு உராய்ந்து வருத்தவும், ஆடும்மயிலின் தோகையினைப் போலக் கூந்தலானது பொங்கிப் பரக்கவும், தான் விருப்புற்ற துணைவன் தன்னுடைய வளை பொருந்திய முன் கையினைப் பற்றியும், பல பிரிவினவாய பெரிய மாலையாகிய அழகிய வடங்களைக் கொண்ட மேகலையினை அணிந்த அகற்சியமைந்த அல்குலைப்பற்றி அணைத்தும் பெரிதும் ஊக்கப்படுத்த, ஊசலாடிக் களித்தனன். அதனால் ஊக்கங்கொண்டு, தன் வழி நடை வருத்தத்தையும் நினையாது சென்றனள் அவள். முட்போன்ற கூரிய பற்களையும், பவளம் போன்ற சிவந்த வாயிதழ்களையும் உடைய இளையளான அந்த வன்கண்மை உடையவள், தன் சிலம்புகளைக் கழித்து அறியப்படாத தேயத்தே, அவனுக்கு மனையாளாக ஆகுதல், மிகவும் கொடுமையுடையதாகும்.*

**சொற்பொருள்:** *1. ஆயம் - ஆய மகளிர். 3 கைவல் யானை - கைவன்மையுடைய போர்யானை; கைவன்மை - ஆற்றல். 4. காவிரிப் படப்பை உறந்தை - பூங்காக்கள் பரந்ததோட்டக் கால்களையுடைய உறையூர்; காவிரிக் கரையதான உறையூரும் ஆம். 4. பொன் - செல்வமும் அழகும். புரையோர் - மேலோர். அயர்தல் - மணவிழாக் கொண்டாடுதல். 6. தகரம் - மயிர்ச் சாந்து. 7 காம்பு - மூங்கில். 8. கல்அறை - கற்பாறை. 9. வீழ் - விழுது. 10. தித்தி - தேமல். 11. அளைஇ - பற்றி. 14. பொங்க - பொங்கிப் பரக்க. 15. ஊங்கி - ஊக்கமுற்று. 17. சிறுவன் கண்ணி - வன்கண்மை உடையவளாகிய இளையோள்; சிறுமை. இளமையைக் குறித்தது.*

**விளக்கம்:** *தலைவனுடன் உடன்போக்கிலே சென்றுவிட்ட தலைமகளை நினைந்து, வீட்டில் ஆடம்பரமாகப் பூச்சுப் புனைவுகளுடன் மணம் செய்தற்குரிய அவள், இப்பொழுது காடும் மலையும் வருத்தமுற்றுக் கடந்து சென்று, அறியப்படாத தேயத்தே, அவனை மணந்து கொள்வாள் எனில், அது கொடிது! கொடிது! எனப் பேசுகின்றனர்.*

*தித்தி குறங்கில், ஆலத்து அலந்தலை நெடுவீழ், உரிஞ, அவன் அவளுடைய முன் கை அளைஇ, அல்குல்பற்றி அவளை ஊக்க, அவளும் வழிநடந்த அந்தத் துயரை மறந்து ஊசலிற் களித்தாடினள்; அதன்பின் ஊக்கமுற்றவளாகித் தொடர்ந்து நடந்து செல்பவள் ஆயினள் என்க.*

## 386. நாணினேன் யான்!

**பாடியவர்:** *பரணர்.* **திணை:** *மருதம்.* **துறை:** *தோழிவாயின் மறுத்தது; தலைமகள் தகுதி சொல்லியதூஉம் ஆம்.* **சிறப்பு:** *பாணனும் ஆரியப் பொருநனும் செய்த மற்போர் நிகழ்ச்சிச் செய்தியும், அங்கே கணையன் என்பான் நாணி நின்றதும்.*

*(தலைவன் ஒருவன் பரத்தையர் தொடர்பிலே களித்தானென்று அவனுடைய மனைவி வருந்தி, அவனுடன் ஊடியும் வாழ்ந்து வந்தனள். அவ்வமயம், அவன் மீளவும் தன் இல்லிற்கு வந்து தோழியின் மூலமாகத் தலைவியின் உள்ளத்தை மாற்றிக் கூடுவதற்கு முயலுகின்றான். அப்போது தோழி, அவனுடைய எண்ணத்திற்குத் தான் உதவ மறுத்ததாகவே, அன்றித் தலைமகளின் தகுதியைக் கூறி அவனுக்கு அவள் இசையாள் என்றதாகவோ, அமைந்த செய்யுள் இதுவாகும்.)*

**பொய்கை நீர்நாய்க் புலவுநாறு இரும்போத்து**
**வாளை நாளிரை தேரும் ஊர!**
**நாணினென் பெரும! யானே - பாணன்**
**மல்லடு மார்பின் வலியுறு வருந்தி**
**எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்**

**நிறைத்திரண் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த**
**திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்**
**கணையன் நாணி யாங்கு - மறையினள்**
**மெல்ல வந்து நல்ல கூறி**
**மைஈர் ஓதி மடவோய்! யானும்நின்**

**சேரி யேனே அயலி லாட்டியேன்**
**நுங்கை ஆகுவென் நினக்கெனத் தன்கைத்**
**தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர**

**நுதலும் கூந்தலும் நீவி**
**பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே!'**

பொய்கையிடத்தே வாழும் நீர்நாய்களுள், புலால் நாற்றத்தினையுடைய பெரிய ஆண் நாயானது, வாளைமீன் களைத் தன் நாள் உணவாக ஆராய்ந்து கொள்ளும் ஊரினையுடைய தலைவனே! பெருமானே!

மறைந்தவளாக மெல்ல மெல்ல வந்தாள். நல்ல சொற்கள் பலவும் கூறினாள். 'கரிய பெரிய கூந்தலையுடைய மடவோளே! யானுன் நின் சேரியிடத்தே உள்ளவளே' என்றாள். அயன் மனையிடத்து வாழ்பவள்; நினக்குத் தங்கையாக ஆகுவேன் என்றும் கூறினாள். தன் கையின் மோதிரம் அணிந்த மெல்லிய விரலினாலே, குளிர்ச்சியாக நெற்றியினையும் கூந்தலையும் தடவினாள் பகற்போதிலே இப்படி வந்து சென்ற, ஒள்ளிய நெற்றியுடைய நின் பரத்தையைக் கண்டேம்.

பாணன் என்பான் மற்போர் செய்த மார்பின் வலிமை தாக்கவே வருத்தமுற்று, அவனோடு எதிர்நின்று மற்போர் செய்தலை மேற்கொண்ட ஆரியப் பொருநன் என்பானது, ஆற்றல் நிறைந்த திரண்ட முழவனைய தோள்கள், பாணனின் கையகத்தே சிக்குண்டு சிதைந்தனவாய்த், தன்மை வேறுபட்டு முறிந்து கிடந்தன. அதனை நோக்கி, நல்ல போராற்றல் கொண்ட கணையன் என்பான் நாணித் தலைகவிழ்ந்தாற்போல, அப்போது, யானும் நாணமுற்று நின்றேன் அல்லேனோ?

**சொற்பொருள்:** 2. நாளிரை - அன்றைய உணவு. தேரும் - ஆராயும். 3 பாணன் - பாணன் என்ற பெயருடைய ஒரு மல்லன். 4. வலியுற - வலிமை பொருந்தித் தாக்குதலைச் செய்ய, நிறைத் திரண் முழவுத் தோள் - ஆற்றல் நிறைந்து திரண்டு முழவுபோல விளங்கும் தோள்கள். 'நிறைத்தாள் முழவுத்தோள்' எனவும் பாடம்; அப்போது, தாள்களும் தோள்களும் சிதைவுற்றன என்று கொள்ளுக. 7. திறன் வேறு கிடக்கை - திறன் வேறுபட்டுக் கிடந்த நிலைமை. 12. நுங்கை - தங்கை. 13. தொடுமணி மெல்விரல் - மோதிரமணிந்த மெல்விரல்.

**விளக்கம்:** 'பாணனோடு பொருத ஆரியப் பொருநனின் திறன்வேறு' கிடக்கையினைக் கண்டு, நற்போர்க் கணையன் நாணினான் என்றதைச் சிந்திக்க வேண்டும். ஆரியப் பொருநன் மிகச் செருக்குற்றுத், 'தன்னை வெல்பவர் எவரும் இல' ரெனக் கூறினான் ஆதல் வேண்டும். அதனை நம்பிக் கணையன் அவனுக்குப் பாணனுடன் பொருத ஏற்பாடு செய்தானாதலும் வேண்டும். நற்போர் வல்ல கணையன் தான் நம்பிய ஆரியப் பொருநனின் வலியனைத்தும், பாணனாற் சிதைவுற்றுப் போய்,

அவன் கிடந்த கிடையினைக் கண்டதும், அவனை மல்லனெனத் தான் கொண்டிருந்த எண்ணத்தை நினைந்து, அங்கே நாணமுற்றவனாயின் என்க.

இங்ஙனமே, தலைவனின் சூளுரைகளால், அவன் தலைவியை அன்றிப் பிறரைக் கருதான் என உறுதி கொண்டிருந்த தோழியும், பகற் போதிற் பரத்தை வந்து தங்களுடன் தங்கை உறவு கொண்டாட முற்படவே, தலைவனின் பொய்ம்மையை நினைந்தும், தாம் அன்று அவனுரையை மெய்யெனக் கொண்ட தம் பேதைமையினை நினைந்தும் நாணினள் என்று பொருந்திக் கொள்க.

இதனால், தலைவனுக்கு உறவுடைய பரத்தையர், தலைவியரிடம் தமக்குரிய தங்கை உறவினைக் கூறி வந்து போதலையும் உடையவராயிருந்தனர் எனக் கருதலாம்.

'புலவுநாறும் நீர்நாயின் போத்து, வாளை நாளிரை தேரும் ஊர' என்றது, 'தலைவனும் பரத்தையர் சேரியில் சுற்றியலைந்த அந்தச் செவ்வி தோன்றக் காலையில் தலைவியை நாடி வருகின்றனன்' என்று கூறிப் பழித்ததாம்.

**மேற்கோள்:** இச் செய்யுளை எடுத்துக்காட்டி, "இதனுள் யான் நினக்குத் தோழியாவேன் எனப் பரத்தை நீவிய பேணா ஒழுக்கத்திற்குத் தலைவி நாணியது கண்டு, தான் நாணினே னென்று தலைவனுக்குத் தோழி கூறியவாறு காண்க" எனப், 'பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த' என்னும் கற்பியற் சூத்திரத்துப், பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்' என்னும் பகுதிக்கண் உரைத்தனர் நச்சினார்க்கினியர்.

## 387. இருப்பவர்க்கு உரைமின்!

**பாடியவர்:** மதுரை மருதன் இளநாகனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகளது குறிப்பறிந்து, தோழி தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது.

*(தலைமகன் ஒருவன், தன் தலைவியைப் பிரிந்து வேற்று நாடு சென்று பொருள்தேடி வருதற்கு மிகவும் விரும்பிய உள்ளம் கொண்டனன். அதனைத் தானே தலைவிபாற் கூறுதற்கு மனங்கொள்ளாத அவன், தலைவியின் தோழியிடத்தே சென்று, அவளுடைய உதவியை நாடுகின்றான். அவள், 'அவனுடைய பிரிவினால் துயருற்றுத் தலைவி இறந்தே போவாள்' எனக் கூறி அவனுடைய போக்கைத் தடுத்து விடுகின்ற முறையிலே அமைந்தது இச்செய்யுள்.)*

**திருந்திழை நெகிழ்ந்து பெருந்தோள் சாஅய்**
**அரிமதர் மழைக்கண் கலுழச் செல்வீர்!**
**வருவீர் ஆகுதல் உரைமின் மன்னோ**
**உவருணப் பறைந்த ஊன்தலைச் சிறாஅரொடு**
**அவ்வரி கொன்ற கறைசேர் வள்ளுகிர்ப்**

**பசைவிரற் புலைத்தி நெடிதுபிசைந்து ஊட்டிய**
**பூந்துகில் இமைக்கும் பொலன்காழ் அல்குல்**
**அவ்வரி சிதைய நோக்கி வெவ்வினைப்**
**பயில்ரிற் கிடந்த வேட்டுவிளி வெரீஇ**
**வரிப்புற இதலின் மணிக்கட் பேடை**

**நுண்பொறி அணிந்த எருத்தின் கூர்முட்**
**செங்காற் சேவற் பயிரும் ஆங்கண்**
**வில்லீண்டு அருஞ்சமம் ததைய நூறி**
**நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்**
**நிரைநிலை நடுகற் பொருந்தி இமையாது**

**இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி**
**சிறிய தெற்றுவ தாயிற் பெரிய**
**ஓடை யானை உயர்ந்தோர் ஆயினும்**
**நின்றாங்குப் பெயரும் கானம்**
**சென்றோர் மன்னென இருக்கிற் போர்க்கே.**

*திருத்தமான இவளுடைய அணிகள் நெகிழ்ந்து போகவும், பெருத்த இவளுடைய தோள்கள் மெலிவுற்றுப் போகவும், இவளுடைய செவ்வரி பரந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் கலங்கி நீரொழுகவுமாகச் செல்லுதலைக் குறித்த தலைவரே!*

*உவர்மண் அரித்தலாலே மயிர்கழிந்து போய்த் தோன்றும் ஊன் பொருந்திய தலையினரான சிறுவர்களுடனே, ஆடையின் கறைகளைச் சிதைத்தலாற் கறை பொருந்திய கூர்மையான நகத்தினையும், கஞ்சிப் பசை விளங்கும் விரல்களையும் கொண்டவள். புலைத்தியாகிய ஆடைஒலிப்பவள். அவள், நெடுநேரம் பிசைந்து கஞ்சியூட்டிய அழகிய துகிலானது அமைந்து ஒளிசெய்யும், பொன்வடம் அணிந்த தன் அல்குல் தடத்தினிடத்தேயுள்ள அழகிய இரேகைகள் சிதைவுற்றுப்போக, அதனைப் பார்த்து -*

*ஆறலைத்தலாகிய கொடிய செயலைச் செய்பவரும், பிணக்கம் பொருந்திய காடுகளிலே பதுங்கிக் கிடப்பவருமாகிய வேட்டுவரது கூப்பீட்டொலியைக் கேட்டுப், பிறத்தே வரிகளையுடைய காடையின் நீலமணி போன்ற கண்களை யுடைய பேடையானது அச்சமுற்று, நுண்ணிய புள்ளிகளமைந்த*

கழுத்தினையும், கூர்மையான முள்ளினைப் போன்ற சிவந்த கால்களையும் உடைய தன் சேவலை அழைத்துக் கூப்பிடும், அத்தகைய சுரநெறியிடத்தே -

வில்வீரர் நெருங்கிய அரிய போரிலே, அவர் படையணி அழியும்படியாக அவரைக்கொன்று நல்ல புகழினை நிலைபெறுத்தியவர், நாணத்தினை உடையவரான மறவர்கள் அவர்களது, வரிசையாக நிற்றலையுடைய நடுகற்களிலே பொருந்தியிருந்து, கண்ணிமையாது இரையினை விரும்பிக் கிடந்த முதுமைவாய்ந்த பல்லியானது, சிறிதளவு ஒலித்துத் தடை செய்யுமாயினும், பெரிதான நெற்றிப் பட்டத்தை அணிந்த யானை மேற் செல்லும் உயர்வினையுடைய அரசர்களே யானாலும் அவ்விடத்தினின்றும் மேற்செல்லாது திரும்பிவிடும் கொடுமையுடைய கானத்தின்கண், எம் தலைவர் சென்றுள்ளனர் என்று கூறி, ஆற்றியிருக்கும் வன்மையுடையவர்க்கு, மீண்டு வருதலைப் பற்றிய செய்தியினை உரைப்பீராக! (அன்றி யாம் அஃதாற்றேம் ஆதலின், எமக்கு உரைத்தல் வேண்டா என்பது கருத்து)

**சொற்பொருள்:** 2. கலுழல் - கலங்குதல். 4. உவர் - உவர் மண்; 'புகருண' எனவும் பாடம். ஊன்தலை - புண்ணினாலே ஊன் பொருந்தியிருக்கும் தலை. 5. வரி - ஆடையின் கறையும் ஆம்; அதனைக் கொன்ற என்றது, அதனை மாற்றிட்டுப் போக்கியது ஆம்; அதனால், வள்ளுகிர் கறைப்பட்டது என்க. 7. பூந்துகில் - அழகிய ஆடை; பூவனைய மெல்லிய துகிலும் ஆம். பொலன் காழ் - பொன்வடம். 8. அல்குல் அவ்வரி - அல்குலிடத்தான அழகிய இரேகைகள். திதலைப் புள்ளிகளும் ஆம். 9. அரில் - பிணைந்து கிடக்கும் தூறுகளையுடைய காடு. வேட்டு விளி - வேட்டுவர் பறவைகளைப் பிடிக்கக் கருதிச் செய்யும் கூப்பீட்டு ஒலி. 10. இதல் - காடை. 14. நாணுடை மறவர் - மானம் உடைய மறவர்; களத்தில் வீழ்வதேயன்றிப் புறமுதுகிட்டு ஓடாத மற மானத்தைக் குறித்தது. 17. தெற்றுதல் - தடைப்படுத்தல். 18. ஓடை - நெற்றிப்பட்டம்.

**விளக்கம்:** தலைவியும் தோழியும் கலந்த நட்பினர் ஆதலின், இவ்வாறு தோழி கூறினாள் என்க 'அல்குல் அவ்வரி சிதைய நோக்கிக் கானஞ் சென்றோர்மன்' என்ன இருக்கிற்போர்க்கு, வருவீர் ஆகுதல் உரைமின்' என்றதனால் தாம் பிரிவினை ஆற்றியிருக்க மாட்டாது, ஆவி சோர்தலுறுதலையும் புலப்படுத்தினள்.

'வேட்டு விழிகேட்ட இதலின் பேடை தன் சேவலைப் பயிரும்' என்றது, தன் சேவல் வேட்டுவன் கையிற் சிக்கிவிடக்

கூடாதென்று அச்சமுற்று அழைக்கும் தன்மையை உரைத்ததாம். இதனால், தலைவியும் தலைவனுக்கும் ஊறு நேருமென அஞ்சிக் கலங்குவள் என்றனள்.

'முதுவாய்ப் பல்லி தெற்றுவதாயின் பெரிய ஓடையானை உயர்ந்தோராயினும் ஆங்கு நின்று பெயரும் கானம்' எனவே, பல்லியின் சொல்லுக்குப் பலன் கண்டு மேற்கொள்ளும் வழக்கம் உடைமையினையும் அறிக.

## 388. கேட்டால் என்னையோ?

**பாடியவர்:** ஊட்டியார். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறிச் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தோழி தலைமகட்குச் சொல்லியதும் ஆம்.

(தலைமகளும் தலைமகனும் இரவுக்குறியின்கண் தம்முட்கூடி இன்புற்று வருகின்ற காலத்தே, ஒருநாள், அன்னை தலைவிக்கு அணங்கியதென வெறியாடலுக்கு ஏற்பாடு செய்ய, அது குறித்துத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாக, ஒரு புறம் வந்து நிற்கும் தலைமகனும் கேட்டு மணவினையில் மனஞ் செலுத்துமாறு கூறுகின்றனள். இந்த முறையில் அமைந்த செய்யுள் இது. தோழிக்குத் தலைவி உரைத்ததாகவும் கொள்ளலாம். அதற்கும் விரைவில் வரைந்து கொள்ளுமாறு தலைவனைத் தூண்டுதலே குறிப்பாகும்.)

**அம்ம! வாழி தோழி! - நம்மலை**
**அமையறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்**
**நறுவிரை ஆரம் அறவெறிந்து உழுத**
**உளைக்குரல் சிறுதினை கவர்தலின் கிளையமல்**
**பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஓப்பி**

**ஓங்கிருஞ் சிலம்பின் ஒள்ளிணர் நறுவீ**
**வேங்கையம் கவட்டிடை நிவந்த இதணத்துப்**
**பொன்மருள் நறுந்தாது ஊதும் தும்பி**
**இன்னிசை ஓரா இருந்தன மாக**
**'மையீர் ஓதி மடநல் லீரே!'**

**நொவ்வியிற் பகழி பாய்ந்தெனப் புண்கூர்ந்து**
**எவ்வமொடு வந்த உயர்மருப்பு ஒருத்தல்நும்**
**புனத்துழிப் போகல் உறுமோ மற்று' என**
**சினவுக்கொள் ஞமலி செயிர்த்துப்புடை ஆடச்**
**சொல்லிக் கழிந்த வல்விற் காளை**

**சாந்தார் அகலமும் தகையும் மிகநயந்து**
**ஈங்குநாம் உழக்கும் எவ்வம் உணராள்**

**நன்னர் நெஞ்சமொடு மயங்கி வெறியென**
**அன்னை தந்த முதுவாய் வேலன்**
**'எம்மிறை அணங்கலின் வந்தன்று இந்நோய்**

**தணிமருந்து அறிவல்' என்னும் ஆயின்**
**வினவின் எவனோ மற்றே - கனல்சின**
**மையல் வேழம் மெய்யுளம் போக**
**ஊட்டி யன்ன ஊன்புரள் அம்பொடு**
**காட்டுமான் அடிவழி ஒற்றி**

**வேட்டம் செல்லுமோ நும்மிறை? எனவே.**

*தோழி! வாழ்வாயாக!*

*உயரமான பெரிய மலையிடத்தே, ஒளி பொருந்திய கொத்துக்களில் நறுமலர்களைக் கொண்ட வேங்கை மரத்தின் கவர்த்த கிளைகளிடையே, உயரத்திற் கட்டிய பரணிடத்தே இருந்து, நறுமணம் கொண்ட சந்தன மரங்களை வெட்டி யழித்து, உழுது வித்திய தினைப்பயிரின் துய்யையுடைய சிறு கதிர்களைக் கவர்ந்து போதலையுடைய, மூங்கிலடர்ந்த பெரிய மலைச் சாரலிடத்துக் குருவியினங்களை, நம் மலையிடத்து மூங்கிலை அறுத்து இயற்றிய வெவ்விய ஒலியினை எழுப்பும் தட்டையினாலே ஓட்டியவராகப், பொன்போன்ற வேங்கையின் நறுந்தாதினை ஊதும் தும்பியின் இனிய இசையினைச் செவியுற்றவராக இருந்தனம். அவ்விடத்தே, 'கருமையான நெடிய கூந்தலையுடைய மடப்பம் வாய்ந்த பெண்களே! விரைந்து செல்லும் எம் அம்பு பாய்ந்ததாகப் புண்மிகுந்ததாகிய துன்பத்துடனே, இவ் வழிவந்த உயரிய கொம்புகளையுடைய களிறானது, நும்முடைய புனத்தினிடத்தே போகியிருத்தல் உளதாமோ?' என்று, சினத்தைக் கொண்ட நாய்கள் கறுவுகொண்டவாய்ப் பக்கலிலே ஆடிக்கொண்டிருக்க, நம்பாற் சொல்லிச் சென்றனன் வலிய வில்லையுடைய காளை ஒருவன்.*

*அவனுடைய சாந்தம் பொருந்திய மார்பினையும், தகைமை யினையும் மிகவும் விரும்பியவராக, இங்கே நாம் வருந்துகின்ற வருத்தத்தினை, நம் அன்னை உணராதவள் ஆயினாள்.*

*நமக்கு நன்மை கருதுவதாகிய உள்ளத்துடனே, உண்மை யறியாது மயங்கியவளாக, வெறியாடல் வேண்டுமென, முதுமை வாய்ந்த வேலனையும் அழைத்து வந்தாள்.*

*அவன், 'எம் இறையாகிய முருகப் பெருமான் வருத்துதலி னாலே இந்த நோய் வந்துற்றது. இதனைத் தணிக்கும் மருந்தினை அறிவேன்' என்று சொல்வான் ஆயின், "நும் இறையாகிய முருகப் பெருமான் சினமும் மதமும் கொண்ட வேழத்தின்*

*உடலுள் ஊடுருவிச் செல்லும்படியாகச் செலுத்திய செந்நிறம் பூசினாற் போன்ற ஊன்புரளுகின்ற அம்பினோடு, காட்டு விலங்குகளின் அடிச்சுவடுகளை ஆராய்ந்து தொடர்பவனாக, வேட்டைக்கும் செல்வானோ? என்று. நாம் அவனை வினவினால் என்னவோ?"*

**சொற்பொருள்:** *2. அமை - மூங்கில். தட்டை - தட்டி ஒலியெழுப்பும் வகையிலே மூங்கிலை அறுத்துச் செய்த ஒரு கருவி. 3. நறுவிரை ஆரம் - நறுமணம் வாய்ந்த சந்தனமரம், அறவெறிந்து - முற்றவும் வெட்டி எறிந்து. 4. உளைக்குரல் - துய்யினையுடைய தினைக்கதிர்; 'விளைகுரல்' எனவும் பாடம். கிளை - மூங்கில் . கவடு - கிளைகள் கவறுபட்டுச் செல்லுகின்ற பகுதி. 11. நொவ்வு இயற் பகழி - விரையச் செல்லுதலையுடைய அம்பு.12. ஒருத்தல் - களிற்றுத் தலைவன்.14. செயிர்த்தல் - கறுவிக் கொள்ளல். 18. வெறி - முருகனை வேட்டு வெறியாடல், 23. மையல் வேழம் - மதயானை. 24. ஊட்டி யன்ன - ஊட்டினாற் போன்ற. 25. மான் - விலங்கு. அடிவழி ஒற்றி - தடத்து வழியே ஆராய்ந்து தொடர்ந்து. 26. வேட்டம் - வேட்டை.*

**விளக்கம்:** *'அன்னை ஏற்பாடுசெய்த வெறியாடலுள், வேலன், 'இது தெய்வக்குற்றம் என்றனனாயின்' என்றமையால் தலைவி இற்செறிக்கப்படுவாள் என்பதும், தலைவன் விரைவிலே வரைந்து கோடலில் மனஞ் செலுத்த வேண்டுமென்பதும் பெற்றனம்.*

## 389. பகலும் நீங்கார்!

**பாடியவர்:** *நக்கீரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்கும் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *வானவரம்பனின் நாடு.*

*(தலைமகன், தன்னை வந்து இரந்தோர்க்கு வழங்குவதற்குப் பொருள் வேண்டுமெனக் கருதினான். தலைவியைப் பிரிந்து வெளிநாட்டிற்கும் போயினான். அதனால், தலைவியின் வாட்டம் பெரிதாயிற்று. அவளை ஆற்றுவதற்குத் தோழி ஒரு சமயம் முயல, அப்போது, தலைவி தன் நிலையினைத் தோழிக்கு விளக்கிக் கூறிய முறையிலே அமைந்தது இச்செய்யுள்)*

**அறியாய் - வாழி - தோழி! நெறிகுரல்**
**சாந்தார் கூந்தல் உளரிப் போதணிந்து**
**தேங்கமழ் திருநுதல் திலகம் தைஇயும்**
**பல்லிதழ் எதிர்மலர் கிள்ளி வேறுபட**
**நல்லிள வனமுலை அல்லியொடு அப்பியும்**

**பெருந்தோள் தொய்யில் வரித்தும் சிறுபரட்டு**
**அஞ்செஞ் சீறடிப் பஞ்சி ஊட்டியும்**
**எற்புறந் தந்து நிற்பா ராட்டிப்**
**பல்பூஞ் சேக்கையிற் பகலும் நீங்கார்**
**மனைவயின் இருப்பவர் மன்னே - துனைதந்து**
**இரப்போர் ஏந்துகை நிறையப் புரப்போர்**
**புலம்பில் உள்ளமொடு புதுவதந்து உவக்கும்**
**அரும்பொருள் வேட்டம் எண்ணிக் கறுத்தோர்**
**சிறுபுன் கிளவிச் செல்லல் பாழ்பட**
**நல்லிசை தம்வயின் நிறுமார் வல்வேல்**
**வான வரம்பன் நல்நாட்டு உம்பர்**
**வேனில் நீடிய வெங்கடற்று அடைமுதல்**
**ஆறுசெல் வம்பலர் வேறுபிரிந்து அலறக்**
**கொலைவெம் மையின் நிலைபெயர்ந்து உறையும்**
**பெருங்களிறு தொலைச்சிய இருங்கேழ் ஏற்றை**
**செம்புல மருங்கிற் றன்கால் வாங்கி**
**வலம்படு வென்றியோடு சிலம்பகம் சிலம்பப்**
**படுமழை உருமின் முழங்கும்**
**நெடுமர மருங்கின் மலைஇறந் தோரே!**

*தோழி! என்னுடைய வேதனையை நீ அறியமாட்டாய்.*

*நெறித்த கொத்தாக விளங்கும் சாந்தணிந்த எம் கூந்தலை ஆற்றி, அதனிடத்து மலரை அணிந்து விடுவார். இன்மணம் உடைய அழகிய எம் நெற்றியிலே திலகம் இடுவார். பல இதழ்களையுடைய எதிர்வனப்புள்ள மலர்களைக் கிள்ளி எடுத்து. நிறம் வேறுபட, அவ்வவற்றின் பொடிகளையும் எம் நலம் விளங்கும் இளைய அழகிய முலைகளிடத்தே அப்புவார். பெருத்த எம் தோள்களிலே தொய்யில் வரைவார். சிறுத்த பரட்டினையுடைய, எம்அழகிய சிவந்த சிறிய பாதங்களிலே செம்பஞ்சிக் குழம்பினை ஊட்டுவார். இங்ஙனமெல்லாம் என்னைப் பேணிக்காத்தும், என் தோழியாகிய நின்னைப் பாராட்டிப் பேசியும், பலவாகிய பூக்களைப் பரப்பிய பள்ளியி னின்று, பகற்போதிலும் கூட என்னைப் பிரியாதாராக வீட்டிலேயே இருப்பவர் நம் தலைவர். அவர் -*

*இரப்பவர்களது ஏந்திய கைகள் நிறையுமாறு தந்து புரப்பவராக, வருத்தமற்ற உள்ளத்துடனே விரைந்து புதுப் பொருள்களை ஈட்டிவந்து உவத்தற்கு உரியதான, அரிய பொருளினை ஈட்டிவருதலைக் கருதியவராகப், பகைவரது சிறுமையான புன்சொற்கள் தருகின்ற துன்பம், பாழ்படுமாறும், தம்பால் நல்ல புகழை நிலைபெறுத்துமாறும், அவர் சென்றுள்ளனர்.*

வலியமைந்த வேலினையுடைய வானவரம்பனது நல்ல நாட்டிற்கும் அப்பாலுள்ள, வேனில் நீடிய வெங்காட்டினை அடைந்த விடத்தே, வழிச் செல்வோராகிய புதியவர் வேறாகப் பிரிந்துபோய் அலறுமாறு, கொலைத்தன்மையாகிய வெம்மை யினாலே தன் நிலைபெயர்ந்து தனித்துத் தங்கிய பெருங் களிற்றைக் கொன்ற, பெரிய நிறம் பொருந்திய ஆண் புலியானது, குருதியினாற் சிவப்புற்ற நிலத்திடத்தே தன் கால்களை வளைத்துத் தாவிக் களிற்றை வலத்தே வீழுமாறு வீழ்த்திய தன் வெற்றிச்செருக்கோடு, வெற்பிடமெல்லாம் எதிரொலி செய்ய மழைமேகத்தின் இடி முழக்கத்தைப் போல முழக்கஞ் செய்யும், நெடிய மரங்களையுடைய மலைவழிகளைக் கடந்தும் சென்றனரே! (ஆதலின் யான் வருந்தாது ஆற்றியிருத்தல் கூடுமோ? என்பது குறிப்பு.)

**சொற்பொருள்:** 1. நெறிகுரல் - நெறித்தல் கொண்ட கொத்தான கூந்தல். 2. உளறல் - ஆற்றுதல். 3 தேம்கமழ் - இனிதாக மணம் கமழும். 4. எதிர் மலர் - வெவ்வேறு நிறத்தவாய மலர். 5. அல்லி - பூந்தாது. 7. பஞ்சி - செம்பஞ்சிக் குழம்பு. 8. புறந்தருதல் - பேணிக்காத்தல். 10. துனைதந்து - விரைந்து. 12. புதுவ - புதுவதான பொருள்கள். 13. கறுத்தோர் - பகை கொண்டோர். 14. செல்லல் - துன்பம். 17. வெம் கடம் - வெம்மைமிக்க காடு. 19. நிலை பெயர்தல் - தன்னுடைய கூட்டத்தை அகன்று திரிதல். 21. செம்புலம் - சிவந்த புலம்; புலம் சிவந்தது களிற்றின் குருதி படிதலால் - என்க. 22. சிலம்பகம் - மலையிடம். சிலம்ப - எதிரொலிக்க. 23. படுமழை - மழை பெய்தலைப் பொருந்திய மேகம்.

**விளக்கம்:** "அறியாய் தோழி" என்றது, தலைவன் பாராட்டிய காதலன்புக்க நிகழ்ச்சிகளை; அவை, சாந்தார் கூந்தல் உளருதல் முதலாகப் பகலும் நீங்கார் பல்பூஞ்சேக்கையில் என்பது வரையும் ஆம். அத்தகைய அன்பு பாராட்டிய ஒருவரைப் பிரிந்திருப்பது எங்ஙனம்? பிரியின் அதனை நினைந்து வருந்தாதிருப்பது எங்ஙனம்? தலைவியின் இந்த நிலையினைத் தோழி உணர்வதுபோலவே நாமும் உணர்கின்றோம்.

'நிற் பாராட்டி' என்றது தோழியைத் தலைவன், தங்கள் உறவுக்குத் துணைநின்ற தகைமை குறித்துப் பாராட்டியதனைச் சொல்லியதாம்.

"இரப்போர்க்குக் கைநிறையப் புதுவ தந்து உவக்கும் வண்ணம் பொருள் தேடிவரப் போயினன் தலைவன்" எனவே அவன் தலைவியுடன் வாழ்கின்ற இல்வாழ்விற்கு உரிய வசதிகளை இயல்பாகவே உடையவன் என்பதும் பெற்றனம்.

*'வானவரம்பன் - சேரன்; புகழால் வானத்தையே தனக்கு எல்லையாக உடையவன் என்பது பொருள்.*

*தன்னைப்பிரிந்த துயரத்துடன், தலைவன் கடக்கவிருக்கும் காட்டுவழியின் கொடுந்தன்மையும் தலைவியின் உள்ளத்தே கவலையைத் தந்ததென்பது, 'களிற்றைக் கொன்ற புலி செருக்கித் திரியும் காடு' என்றதனாற் புலனாகும்.*

## 390. நெஞ்சம் ஒழிந்தது!

**பாடியவர்:** *அம்மூவனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தலைமகன் பாங்கற்குச் சொல்லியது; நெஞ்சிற்குச் சொல்லிய தூஉமாம்.*

*(தலைவன் ஒருவன், தான் கண்டு காதலித்த ஒருத்திபால் உள்ளத்தைப் போகவிட்டு. அதனால் வாடி நலிவுற்று ஏங்கியவனும் ஆயினான். அப்போது அவனுடைய பாங்கன் அது குறித்துத் தலைவனை வினவ, அவன், தன் காதலிபற்றிய சந்திப்பின் தன்மையைக் கூறுகின்றனன். இம் முறையிலே அமைந்த செய்யுள் இது.)*

**உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி**
**அதர்படு பூழிய சேட்புலம் படரும்**
**ததர்கோல் உமணர் பதிபோகு நெடுநெறிக்**
**கணநிரை வாழ்க்கைதான் நன்று கொல்லோ**
**வணர்சுரி முச்சி முழுதுமற் புரள**

**ஐதகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**
**பல்குலைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி**
**நெல்லும் உப்பும் நேரே ஊரீர்!**
**கொள்ளீரோ எனச் சேரிதோறும் நுவலும்**
**அவ்வாங்கு உந்தி அமைத்தோ ளாய்! நின்**

**மெய்வாழ் உப்பின் விலைஎய் யாம்எனச்**
**சிறிய விலங்கின மாகப் பெரியதன்**
**அரிவேய் உண்கண் அமர்த்தனள் நோக்கி**
**யாரீ ரோஎம் விலங்கி யீஇரென**
**மூரல் முறுவலள் பேர்வனள் நின்ற**

**சில்நிரை வால்வளைப் பொலிந்த**
**பல்மாண் பேதைக்கு ஒழிந்ததென் நெஞ்சே!**

*பாங்கனே! உவர்நிலத்தே விளைந்த உப்பினை விலை கூறியவராக, வழிகளிலே படுகின்ற புழுதியினையுடைய நெடுந் தொலைவுள்ள இடங்கட்குஞ் செல்லும், செறிந்த கோல்களைக் கொண்ட உமணர்கள் போகும் நெடிய நெறிகளிலே அந்தக்*

கூட்டத்துடன் சேர்ந்து வாழும் வாழ்க்கை நன்மைதருவது போலும்!

வளைந்த சுருட்டை கொண்ட கூந்தலின் முடி முழுவதும் பெரிதும் புரண்டுகொண்டிருக்க, மெல்லிய அகன்ற அல்குலில் அழகுபெறப் புனைந்த பல தளிருடன் கூடிய தழையுடையானது அவள் அசையுமிடத்துத் தானும் அசைந்தாட நடந்து, "ஊரீரே! நெல்லும் உப்பும் நேருக்கு நேரேயாகும்; வாங்கிக் கொள்ளீரோ" என்று சேரிதோறும் கூவி விற்கும் ஒருத்தியைச் கண்டேம். அழகிய வளைந்த உந்தியினையும், மூங்கில் போன்ற தோள்களையும் உடையவளே! நின் மெய்யிடத்தே உளதாகும் உப்பின் விலையினை அறிந்திலமே?" என்று கூறி, யாம் சிறிது அவளைத் தடுத்தும் நிறுத்தினேம்.

பெரிய, அரிபடர்ந்த தன் கண்களால் மாறுபட்டனள் போல எம்மை நோக்கி, 'எம்மைத் தடுப்பீர், நீர் யாவிரோ?' என்று சொல்லி , இளநகையுடையவளாகச் சிறிது பெயர்ந்து நின்றாள் அவள். சிலவாகி நிரைத்த வெண்மையான வளையல்கள் அழகு செய்த, பலவாய மாண்புடைய அப்பேதைமை உடையாளின் பொருட்டு, என் நெஞ்சம் தன் வலிமையினை இழந்துவிட்டதே!

**சொற்பொருள்:** 1. உவர் - உவர் நிலம். கொள்ளை சாற்றி - விலையைக் கூறி. 2. அதர் - வழி. பூழி - புழுதி 3. ததர்கோல் - செறிந்த கோல். 4 சுரி - சுருள் கொண்ட தன்மை. முச்சி - முடி. 7. தொடலை - தொடுக்கப்பெற்ற தழையுடை. ஒல்குதல் - அசைதல். 8. நேரே - நேருக்கு நேராகும்; ஒரு படி நெல்லுக்கு ஒரு படி உப்பு என்றாற்போல.10 அவ்வாங்கு உந்தி - அழகிய வளைந்த உந்தி. அமை - மூங்கில் 11. மெய்வாழ் உப்பு - உடலிடத்துப் பொருந்திய இன்பம். எய்யாம் - யாதென அறிந்திலம். 12. விலங்கினம் - குறுக்கே நின்று தடை செய்தோம். 15. மூரல் முறுவலள் - இளநகை உடையவள். 16. நெஞ்சு ஒழிதல் - நெஞ்சம் தன் வலிமை கெட்டுத் தளர்தல்.

**விளக்கம்:** தலைவியிடத்துப் பெறும் இன்பச் செவ்வியினை 'மெய்வாழ் உப்பு' என்று கூறம் நயத்தினை அறிக, பாங்கற்குத் தலைமகன் சொல்லியதாயின் இவ்வாறும், நெஞ்சிற்குச் சொல்லியதாயின். 'நெஞ்சே பேதைக்கு ஒழிந்தது என்?' எனக் கூட்டியும் பொருள் காண்க.

'கணநிரை வாழ்க்கை நன்று கொல்! என்றதனால், அவரோடு சென்றகாலத்துத் தலைவன் தலைவியைச் சந்தித்தலும் நிகழ்ந்தது என்று கொள்ளுக.

## 391. கண்படாஅ வாகும்!

**பாடியவர்:** *காவன் முல்லைப்பூதனார்; காவன் முல்லைப் பூதத்தனார் எனவும் பாடம்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

*(தலைமகனின் பிரிவுக் காலத்தே, தலைவி வாடி நலிந்தாள். அவளின் வாட்டங்கண்ட தோழி, 'அவன் வருவான்; தேறியிரு' என்று சொல்ல. அவளுக்குத் தலைவி விடை சொல்லுகின்ற முறையிலே அமைந்தது இச் செய்யுள்.)*

**பார்வல் வெருகின் கூர்எயிற்று அன்ன**
**வரிமென் முகைய நுண்கொடி அதிரல்**
**மல்ககல் வட்டியர் கொள்விடம் பெறாஅர்**
**விலைஞர் ஒழித்த தலைவேய் கான்மலர்**
**தேம்பாய் முல்லையொடு ஞாங்கர்ப் போக்கித்**

**தண்ணறுங் கதுப்பிற் புணர்ந்தோர் - புனைந்தவென்**
**பொதிமாண் முச்சி காண்தொறும் பண்டைப்**
**பழவணி உள்ளப் படுமால் - தோழி!**
**இன்றொடு சில்நாள் வரினுஞ் சென்றுநனி**
**படாஅ வாகுமெம் கண்ணே கடாஅ**

**வான்மருப்பு அசைத்தல் செல்லாது யானைதன்**
**வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை**
**குன்றுபுகு பாம்பின் தோன்றும்**
**என்றூழ் வைப்பின் சுரனிறந் தோரே!**

*தோழி! தன் இரையினைப் பார்த்தவாறே இருக்கும் காட்டுப் பூனையின் கூர்மையான பற்களைப் போன்ற, மெல்லிய வரிகளையுடைய அரும்புகளை உடையதாகத் திகழ்வது நுண்மையான காட்டுமல்லிகைக் கொடி. அவ்வரும்புகள் நிறைந்த அகன்ற வட்டியினை உடையவராகிய பூவிற்போர், அவற்றை விற்கும் வேறிடத்தைப் பெறாதவராகக் கொணர்ந்து கொட்டிய, எம் தலையின்கண் சூட்டிய காட்டு மலர்களுடனே, தேனொழுகிக் கொண்டிருக்கும் முல்லை மலர்களையும் அகற்றிவிட்டு, எம் குளிர்ந்த மணமுள்ள கூந்தலிற் கிடந்து துயின்றவர் எம் காதலர்.*

*மதங்கொண்ட களிறானது, தன்னுடைய வெண்மையான கொம்பினை அசைக்கவும், இயலாததாய்த், தன் வாயிடத்தே நிறையுமாறு கொண்ட வலிகுன்றிய பெரிய துதிக்கையானது, மலைக் குகையினுள்ளே நுழையும் பாம்பினைப் போலத் தோன்றும் வெப்பம் மிகுந்த இடங்களைக் கொண்ட சுரநெறியினைக் கடந்தும் அவர் இப்போது சென்றுள்ளனர்.*

அவர் கையாற் புனைந்து அழகு செய்த, பொதிதலால் மாட்சியுற்ற எம் கூந்தல் முடியினைக் காணுந்தோறும், அந்தப் பண்டைப் பொழுதின் பழைய அணியே எம்மால் நினைக்கப்பபடுகின்றது. அதனால்,

சென்று, இன்றோடு சில நாட்களே கழிந்தனவாயினும், எம் கண்கள் சற்றும் துயிலாதனவாகுமே!

**சொற்பொருள்:** 1. பார்வல் - பார்க்கும் வன்மையுடைய! பார்த்தல் இரையை நாடிக் கூர்ந்து நோக்கித் திரிதல். 5. வரிமென் முகைய - வரிகளையும் மென்மையையும் கொண்ட அரும்புகள். அதிரல் - காட்டு மல்லிகை. 3. மல்கு - நிறைந்த - வட்டியர் - வட்டக் கூடையினர்; வாய் அகன்று அகற்சியும் வட்டமும் பொருந்த, ஓலையினால் முடையப்பெறும் கூடை இது. 4. ஒழித்த - முற்றவும் எம் வீட்டிலே கொட்டிச் சென்ற. 5. ஞாங்கர் - புறத்தே. 10. கடாஅம் - மதம் 14. என்றூழ் வைப்பு - வெப்பமிக்க காட்டிடம்.

**விளக்கம்:** காட்டு மல்லிகையின் மென்மையும் வரியும் கொண்ட அரும்புகளை வட்டி நிறையக் கொண்டு அவற்றைக் கொள்வார் அறியாராய், விற்பவர் தம் வீட்டில் கொட்டிச் செல்ல, அவற்றுடன் தேனொழுகும் முல்லையினையும் கூந்தலிற் பொதிந்து அழகு செய்திருப்பாள் தலைவி. மாலைக்காலத்தில், அப்பூக்களைப் புறத்தே ஒதுக்கி, அவள் கூந்தலில் துயின்றவன் தலைவன். அவன் பிரிந்து சென்றதனால், இப்போது புனைந்துள்ள தன் பொதிதல் மாட்சியுற்ற கூந்தல் முடியினைக் காணும் போதெல்லாம்; பண்டைய நாளில், தலைவன் ஒதுக்கித் துயின்ற பழவணியே அவளால் நினைக்கப்படுவதனால், அவள் கண்கள் சற்றும் மூடாவாயின என்று கொள்ளுக.

வட்டி - வாயகன்ற ஓலைக்கூட. இந்நாளினும் மலர் வாணிகர் இக்கூடைகளுடன் விளங்குவதைக் காணலாம்.

மதயானை தன் கொம்பை அசைக்க மாட்டாதாய்ப் பசியால் வலியிழந்து, தன் கையினை வாயிற் புகுத்தி வருந்தி யிருக்கும் வெம்மையுடைய காடு என்க. அதன் வாயிற் புகுத்தி யிருக்கும் அதன் துதிக்கையானது குன்றிடத்தே புகும் பாம்பினைப் போலத் தோன்றும் என்க.

## 392. நலம் தருவேன் நான்!

**பாடியவர்:** மோசீகீரனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. **சிறப்பு:** நன்னனின் பேராண்மை.

*(தலைவன் ஒருவன், தகையுடையாள் ஒருத்தியைக் கண்டு மிகவும் காதல் கொண்டவனானான். பல நாள் அவன் வந்து வந்து அவளை அடைதலை விரும்பியும் இயலாது வறிதே திரும்புவதற்கு நேர்ந்ததேயன்றி, அவள் இசைவும் உறவும் அவனுக்கு வாய்க்கவில்லை. இந்த நிலையிலே, அவன் தலைவியின் தோழிபாற் சென்று தன்குறையைக்கூறி இரந்து நிற்க, அவளும் அவனைக் கண்டு உண்மையுணர்ந்து இரக்க முற்றவளாகத், தலைவியிடம் அவனுக்கு இசையுமாறு கூறுகின்றனள். அந்த முறையோடு அமைந்த செய்யுள் இது.)*

**தாழ்பெருந் தடக்கை தலைஇய கானத்து
வீழ்பிடி கெடுத்த வெண்கோட்டு யானை
உண்குளகு மறுத்த உயக்கத் தன்ன
பண்புடை யாக்கைச் சிதைவுநன்கு அறீஇப்
பின்னிலை முனியா னாகிநன்றும்**

**தாதுசெல் பாவை அன்ன தையல்
மாதர் மெல்லியல் மடநல் லோள்வயின்
தீதின் றாக நீபுணை புகுகென
என்னும் தண்டும் ஆயின் மற்றவன்
அழிதகப் பெயர்தல் நனிஇன் னாதே**

**ஒல்லினி வாழி தோழி! - கல்லெனக்
கணமழை பொழிந்த கான்மடி இரவில்
தினைமேய் யானை இனனிரிந்து ஓடக்
கல்லுயர் கழுதில் சேணோன் எறிந்த
வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென**

**மறப்புலி உரற வாரணம் கதற
நனவுறு கட்சியின் நன்மையில் ஆல
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்
பிரியுநள் ஆகலோ அரிதே அதாஅன்று
உரிதல் பண்பிற் பிரியுநன் ஆயின்**

**வினைதவப் பெயர்ந்த வென்வேல் வேந்தன்
முனைகொல் தானையொடு முன்வந்து இறுப்பத்
தன்வரம்பு ஆகிய மன்னெயில் இருக்கை
ஆற்றா மையிற் பிடித்த வேல்வலித்
தோற்றம் பிழையாத் தொல்புகழ் பெற்ற**

**விழைத்தக ஓங்கிய கழைதுஞ்சு மருங்கிற்
கானமர் நன்னன் போல
யான்ஆ குவல்நின் நலன்தரு வேனே.**

தோழி! வாழ்க! யான் சொல்வதனை மனம் பொருந்திக் கேட்பாயாக;

கல்லென்னும் ஒலியுடனே மேகக்கூட்டங்கள் மழையினைப் பொழிந்த, கானமும் ஒலியடங்கிப் போயிருக்கும் நள்ளிரவு வேளையிலே, தினைப்பயிரை மேய்ந்த யானைக்கூட்டங்களும் நிலைகெட்டவாய் ஓடுமாறு, மலையிடத்தே உயர்ந்த பரணின் மீதிருந்து கானவன் வீசி எறிந்த வலிய விரைவமைந்த கல்லின் கடுமையான ஓசையும் ஒல்லெலன எழுந்தது. அது கேட்டுத் தறுகண்மையினையுடைய புலியும் முழக்கமிட்டது. யானைகள் கதறின. அகற்சிகொண்ட காட்டிடத்தேயுள்ள அழகிய மயிலும் இடியோசையென மயங்கி ஆடத் தொடங்கின. இங்ஙனம், மலையிடத்து விலங்கினம் அனைத்தும் வெருவுகின்ற பெரிய கற்களையுடைய நாட்டிற்கு உரியவன் இத் தலைவன்.

காட்டினிடத்தே, விரும்பப்படும் தன் பிடியானையினை இழந்த, தொங்குதலையுடைய நீண்ட பெருத்த கையினைக் கொண்ட வெண்மையான கோட்டினையுடைய ஆண் யானையானது, உண்ணுதற்கான தழையினையும் உண்ணாது வெறுத்த வாட்டத்தைப் போன்ற தன்மையினையுடைய தன்னுடைய உடலின் சிதைவினை நன்கு அறிந்தும், நம்பால் இரந்து பின்னிற்றலை வெறானாகி நின்றனன் அவன்.

'மிகுதியான பொன்னினாற் செய்த பாவையினைப் போன்ற அழகினையும், விரும்பப்படுகின்ற மென்மைத் தன்மையினையும் உடைய, மடப்பம் வாய்ந்த தலைவியினிடத்தே, தீங்கு எதுவும் இல்லையாகும்படிக்கு நீ புணையாக என் பொருட்டுப் புகுவாயாக' என்று கூறி என்னையும், வேண்டினனாயினன் அவன். அவன் அழிந்து போகுமாறு கைவிட்டுச் செல்லல் நமக்கு மிகவும் துன்பந்தருவதேயாகும்.

ஆயின், அவன் நம்மைவிட்டு அகல்வானோ என்றால், அவன் நம்மைப் பிரிந்தவன் ஆதலே அரிதாகும்.

அஃதன்றியும், தனக்கு உரித்தானதல்லாத பண்பினோடும் கூடிப் பிரிவானாயின்,

போர்ச்செயல் ஒழிய நீங்கிய வெற்றி வேலினையுடைய வேந்தனானவன், போர் முனையினைக் கொன்றுவிடக்கூடிய படையுடனே முற்புறம் வந்து முற்றுகையிடத் தன் எல்லை யாகிய நிலைத்த அரணையுடைய இருக்கையானது எதிர்த்து நிற்க ஆற்றாமையினாலே, விரும்பத் தக்கபடியே ஓங்கிய மூங்கில்கள் செறித்திருக்கும் மலைப்பக்கத்தாகிய காட்டிலே தங்கியிருந்து, தான் கைக்கொண்ட வேலின் வலிமையினது தோற்றம் பிழைபடாத தொன்மையான புகழினை மீண்டும்

பெற்றவன் நன்னன் ஆவான். அவனைப்போல, இழந்த நின்நலத்தினை மீளவும் தருபவளாக அவனைக் கூட்டிவைப்பவளும் யானாக ஆவேன்!

**சொற்பொருள்:** 3 உயக்கம் - வருத்தம். 4. யாக்கைச் சிதைவு - உடலின் அழிவு. 5. பின்னிலை - இரந்து பின்னிற்றலாகிய தன்மை. முனியான் - வெறான். 6. தாது - பொன். தையல் - அழகியவள்; தலைவியைக் குறித்தது. 8. புணை - பொறுப்பு. 9. தண்டுமாயின் - வற்புறுக்கும் ஆயின். 12. கணமழை - மேகக்கூட்டம். 14. கழுது - பரண். சேணோன் - குன்றவன். 15. வல்வாய்க் கவண் - விரைந்து செல்லுதலையுடைய கவண்கல். 20. உரற - முழங்க. 21. வென்வேல் - வெற்றிவேல். வேந்தன் - பகையரசன்; நன்னனை வென்று அரணைக் கைப்பற்றிப் பின் நன்னனால் வெல்லப்பட்டு, அரணை அவனிடம் விட்டு வந்தவன். 22. முனைகொல் தானை - பகைவரது போர் முனையைக் கொன்றழிக்கும் வீரச்செறிவு உடைய படை. 23. வரம்பு - எல்லை; ஆற்றல். 25. வேல்வலித் தோற்றம் - வேலினது வலிமைத் தோற்றம்.

**விளக்கம்:** 'மலையுடன் வெரூஉம் மாகல் வெற்பன்' என்றது, அந்த வெருவுதலுக்குக் காரணமாய் கவணெறிந்த கானவனைப்போல. அவனும் ஆற்றல் உடையவன் என்றதாம். சேணோன் - சேணிடத்து இருப்பவன்; தினைப்புனம் காவல் பூண்ட கானவன். கவண்கல்லின் கடுவெடியும், புலியின் உரறுதலும் வாரணத்தின் கதறுதலும் கேட்டு, இடிமுழக்கம் என மயங்கி, மயில் ஆடும் வெற்பவன் என்க.

இதனால், அவன் தகுதிப்பாடும், பின்னிலை முனியான் என்றதனால் அவனுடைய காதற் பெருக்கும் தன்னை வேண்டிய எளிமையும் சூளும் கூறித் தோழி குறைநயந்தாள் என்க.

பகை வயப்பட்ட அரணிலுள்ளாரை, மீளவும் பழைய படி தான் வென்று சிறப்புறச் செய்த நன்னனைப்போலத், தானும், தலைவிக்கு உதவுவதாகத் தோழி உறுதி கூறுகின்றனள்.

## 393. மறந்து நீடலர்!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. **சிறப்பு:** புல்லியின் நாட்டுச் சிறப்பு.

(தலைவனின் பிரிவுத்துயரினாலே வருந்தி வாட்டமுற்றிருக்கும் தலைவிக்குத், தோழி தலைவன் குறித்தபடி தவறாது வருவான் என்று கூறி அவளைத் தேற்றுகின்ற முறையிலே அமைந்த செய்யுள் இது.

**கோடுயர் பிறங்கற் குன்றுபல நீந்தி**
**வேறுபுலம் படர்ந்த வினைதரல் உள்ளத்து**
**ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய**
**முதைச்சுவற் கலித்த ஈர்இலை நெடுந்தோட்டுக்**
**கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி**

**கவட்டடிப் பொருத பல்சினை உதிர்வை**
**அகன்கண் பாறைச் செவ்வயின் தெறீஇ**
**வரியணி பணைத்தோள் வார்செவித் தன்னையர்**
**பண்ணை வெண்பழத்து அரிசி ஏய்ப்பச்**
**சுழல்மரம் சொலித்த சுளகுஅலை வெண்காழ்**

**தொடிமாண் உலக்கை ஊழின் போக்கி**
**உரல்முகம் காட்டிய சுரைதிறை கொள்ளை**
**ஆங்கண் இருஞ்சுனை நீரொடு முகவாக்**
**களிபடு குழிசிக் கல்லடுப்பு ஏற்றி**
**இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதிற்**

**குடவர் புழுக்கிப் பொங்கவிழ்ப் புன்கம்**
**மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்**
**நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி**
**தேன்தூங்கு உயர்வரை நல்நாட்டு உம்பர்**
**வேங்கடம் இறந்தனர் ஆயினும் ஆண்டவர்**

**நீடலர் - வாழி தோழி! - தோடுகொள்**
**உருகெழு மஞ்ஞை ஒலிசீர் ஏய்ப்பத்**
**தகரம் மண்ணிய தண்ணறு முச்சிப்**
**புகரில் குவளைப் போதொடு தெரிஇதழ்**
**வேனில் அதிரல் வேய்ந்தநின்**
**ஏமுறு புணர்ச்சி இன்துயில் மறந்தே.**

*தோழி! வாழ்க!*

*முடிகள் உயர்ந்த பாறைகளையுடைய குன்றுகள் பலவற்றையும் கடந்து, வேற்று நாட்டினை அடைந்து, பொருள் தேடும் முயற்சியினை உடைய உள்ளத்தவர் நம் தலைவர்.*

*வழியிடைச் செல்லும் புதியராய வழிப்போக்கரது காயும் பசியினைத் தீர்க்கும் பொருட்டாகப். புதுக் கொல்லையிலே தழைத்த ஈரிய இலையின் நெடிய தோட்டினையுடைய கவர்த்த கதிரினைக் கொண்ட வரகின், தட்டையுடன் தொகுத்த பொலியிலே, மாடுகளின் கவர்த்த குளம்பால் துவைக்கப்பட்டு பல கிளைகளினின்றும் உதிர்ந்த வரகினை அகன்ற இடமான பாறையிடத்தே செவ்வையாகத் தெறித்துக் காயவைப்பர், வரிகள் பொருந்திய பணைத்த தோள்களையும் நீண்ட செவிகளையும்*

உடைய தாயர்கள். பண்ணைக்கீரையின் வெண்மையான பழத்தினது அரிசியை ஒப்பத்திரிமரம் தேய்த்த, சுளகினால் கொழிக்கப்பெற்ற வெண்மையான அரிசியைப் பூண் மாட்சிமையுற்ற உலக்கையால் முறைப்படக் குற்றி உரலிற் பெய்து தீட்டுவர். உரற்குழி நிறைந்த அவ்வரிசியை, அங்குள்ள பெருஞ்சுனையின் நீரோடும் முகந்து, களிமண்ணாற் செய்த பானையிலிட்டுக், கல்லடுப்பின் மேல் ஏற்றிக் கொத்துக்கள் நிறைந்த கொன்றையின் நிறைந்த தாதினைப்போல, இடையர் அவிழாகிய சோற்றினை ஆக்குவர். அதனை மதர்த்த நல்லாவின் பாலோடு கூடியிருக்கும், மிக்க புகழுடைய புல்லி என்பவனது தேனிறால் தொங்கும் உயரிய பாறைகளையுடைய நல்ல நாட்டின் அப்பாலுள்ள வேங்கடமலையினைக் கடந்தும் சென்றுள்ளவர் அவர் ஆயினும்-

அழகு பொருந்திய மயிலின், தொகுதிகொண்ட தழைத்த தோகையினைப்போல, மயிர்ச்சாந்து பூசப்பெற்று விளங்கும் தண்ணிய நறிய கூந்தலில், குற்றமில்லாத குவளையின் மலரிதழோடு, விளங்கும் இதழ்களுடன் வேனிலிற் பூக்கும் காட்டுமல்லிகைப் பூவினையும் சூடியுள்ள, நின்னுடைய கூந்தலிடத்தே துயிலும் இன்பம்வாய்ந்த புணர்ச்சியாகிய இனிதான துயலினை மறந்து, அவ்விடத்து அவர் தாழ்த்திருப்பவர் அல்லர்.

**சொற்பொருள்:** 1.கோடு-மலை முடிகள். பிறங்கல்-பாறைகள். 2. வேறுபுலம்-வேற்று நாடு. 3. காய்பசி-காய்தலையுடைய மிக்க பசி. 4. இதைச் சுவல்-காடு திருத்தியமேடான, புதிதான கொல்லை. கலித்த-தழைத்த. 5.பொங்கழி தூற்றாப் பொலி. 6. கவட்டடி-மாடுகளின் கவறுபட்ட குழம்புகள். உதிர்வை-உதிர்ந்த தானியம். 7. தெறீஇ-தெறித்துவைத்து, காயவைத்து என்க. 8. வரியணி பணைத்தோள்-வரியணிந்த பணைத்த தோள்கள்: வரி-இரேகைகள். 9. பண்ணை-ஒருவகைக் கீரை. 10. சுழல் மரம்-மரத்திரிகை, வரகரிசியின் மேல் தோலை நீக்குவதற்கு இதிலிட்டுச் சுழற்றுவர். 11. ஊழில்-முறையோடு. 12.உரல் முகங் காட்டல்-உரலிலிட்டுக் குற்றுதல். சரை-உரலின் குழிவான பாகம். 14. களிபடு குழிசி-களி மண்ணால் வனையப் பெற்ற பானை; மண்சால். 15. கடுக்கை-கொன்றை 16. குடவர் - இடையர். பொங்கு அவிழ் புன்கம்-பொங்கிய அவிழாகிய சோறு. 17. மதர்வை-மதர்த்த. 18. நிரை-ஆநிரை. 21. தோடு. கொள் - இதழ்கொண்ட; மயிலிறகினைக் குறித்தது. 22. தகரம் மயிர்ச்சாந்து. 25. அதிரல்-காட்டு மல்லிகை. 26. ஏமுறு புணர்ச்சி-இன்பம் வாய்ந்த புணர்ச்சி.

**விளக்கம்:** "வேறு புலம் படர்ந்த வினைதரல் உள்ளத்து.... வேங்கடம் இறந்தனராயினும், நின் ஏமுறு புணர்ச்சி இதன் துயில் மறந்து ஆண்டவர் நீடலர்" என்க.

'அறு செல் வம்பலர் காய்பசி தீரிய. பொங்கவிழ் புன்கம்... பாலோடு பகுக்கும்... புல்லி நன்னாடு' என்க. இதன் கண் வரகரிசியைச் சமைக்கும் வகை முறையாகச் சொல்லப் பட்டதும் காண்க.

மேலும், அவர் வருத்தமின்றிச் சென்று திரும்புவர் என்பதும் இதனாற் பெறலாம். புன்கம் பாலொடு பகுக்கும் நாடு, நிரைபல குழீஇய நாடு, தேன் தூங்கு உயர்வரை நன்னாடு, நெடுமொழிப் புல்லியின் நாடு வேங்கட நன்னாடு என்க.

## 394. விருந்தயர வருக!

**பாடியவர்:** நன்பலூர்ச் சிறுமேதாவியார். **திணை:** முல்லை. **துறை:** இரவுக்குறித் தலைமகளை இடத்துய்த்து வந்து, தோழி தலைமகனை வரைவு கடாஅயது.

(தலைவி, தலைவனுடன் இரவுக்குறியிற் சென்று கூடி வருகின்ற களவுக்காலத்திலே, ஒருநாள். அவளைக் குறித்த இடத்திலே சேர்த்துவிட்டு வரும் தோழி, தலைவனைச் சந்தித்து, அவனிடம், விரைவிலே தலைவியை வரைந்துவந்து மணந்து கொள்ளுமாறு கூறுகின்றனள். இந்த முறையிலே அமைந்த செய்யுள் இது.)

**களவும் புளித்தன; விளவும் பழுநின;**
**சிறுதலைத் துருவின் பழுப்புறு விளைதயிர்**
**இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு**
**கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து**
**ஈயல்பெய்து அட்ட இன்புளி வெஞ்சோறு**

**சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக**
**இளையர் அருந்தப் பின்றை, நீயும்**
**இடுமுள் வேலி முடக்காற் பந்தர்ப்**
**புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றிற்**
**புனையிருங் கதுப்பின்நின் மனையோள் அயரப்**

**பாலுடை அடிசில் தொடீஇய ஒருநாள்**
**மாவண் தோன்றல்! வந்தனை சென்மோ -**
**காடுறை இடையன் யாடுதலைப் பெயர்க்கும்**
**மடிவிடு வீளை வெரீஇக் குறுமுயல்**
**மன்ற இரும்புதல் ஒளிக்கும்**

**புன்புல வைப்பினெம் சிறுநல் ஊரே.**

*மிகவும் வள்ளன்மை உடைய தலைவனே!*

*களாவும் காய்த்துப் பழுத்துப் பழங்கள் புளிப்புச் சுவையினை உடையவும் ஆயின. விளா மரங்களும் பழங்களுடன் விளங்குகின்றன.*

*சிறிய தலையுடையவான செம்மறியாட்டினது பழுப்பு நிறம் அமைய முற்றிய தயிரிலே, கொல்லையில் விளைந்த வரகின், குத்துதலாலே மாட்சியுற்ற அரிசியோடு, கார் காலத்து மழைபெய்து நீங்கிய ஈரமான வாயிலையுடைய புற்றினிடத் திருந்து வெளிப்படுகின்ற ஈயலையும் பெய்து சமைத்த இனிதான சூடான புளியஞ்சோற்றினைச், செவலைப் பசுவின் வெண்ணை யானது அதன் வெப்பமான புறத்தே இட்டுக் கிடந்து உருகிக்கொண்டிருக்க , நின் ஏவலாளர் அருந்துவர்.*

*அதன் பின்னர், நீயும் -*

*முள்ளிட்ட வேலிகொண்ட இடத்திலே, வளைந்த கால்களையுடைய பந்தரின் கீழே, புதுக்கலத்தைப்போலச் செம்மண் பூசப்பெற்று விளங்கும் சிறு வீட்டிலே, புனையப் பெற்ற கருமையான கூந்தலையுடைய நின் மனைவியானவள் நினக்கு விருந்து ஊட்டுமாறு, பால்பெய்த சோற்றினை உண்ணுதற்காக, ஒருநாள் வந்து போவாயாக.*

*காட்டு வாழ்க்கையினனான இடையன், தன் யாட்டினங் களைக் கிடைபெயர்க்கும், வாய்மடித்து எழுப்பும் சீழ்க்கை யொலியினைக் கேட்டு அச்சமுற்ற குறுமுயலானது, மன்றத்தின் கண்ணுள்ள பெரிய புதரிலே மறைந்துகொள்ளும் முல்லை நிலத்தின் கண்ணுள்ளது, எம்முடைய சிறிய நல்ல ஊராகும். (அதனிடத்து வந்து போவாயாக என்பது கருத்து)*

**சொற்பொருள்:** *1. களவு - களாம் பழம். விளவு - விளாம் பழம். 2. சிறுதலைத் துரு - சிறுத்த தலையினையுடைய செம்மறியாடு. 3. அவைத்தல் - குற்றுதல். 4. புற்றம் - எறும்புப் புற்று. 5. வெம் சோறு - சூடான சோறு; விருப்பந்தரும் சோறுமாம். 6. சேது ஆன் - சிவந்த பசு. 8. முடக்காற் பந்தர் - வளைந்த கால்களையுடைய பந்தர். 9. செவ்வாய் - செம்மண் பூசிய இடத்தையுடைய. 11. பாலுடை அடிசில் - பாற்சோறு. தொடீஇய - உண்ணும் பொருட்டாக. 13. தலைபெயர்த்தல் - கிடைபெயர்த்தல். 14. வீளை - சீழ்க்கையொலி. 16. புன்புல வைப்பு - முல்லைநிலப் பகுதி.*

**விளக்கம்** : *'களவும் புளித்தன. விளவும் பழுநின என்றது புளிச்சோறு ஆக்குதற்கு அவற்றைப் பயன்படுத்தலாம் என்றதாம். 'களவு வாழ்க்கை எமக்குப் புளித்துப் போயிற்று; மண விழவுக்குத் தகுந்த பொழுதும் கனிந்துள்ளது' என்ற கருத்தும்,*

'களவும் புளித்தன; விளவும் பழுநின' என்ற சொற்களுள் நிலவுதலைக் காண்க.

ஈயல் - எறும்பின் ஆண். மழை வரவினால், உணவுச் சிக்கனத்தின் பொருட்டு, இவற்றை வெளியேற்றி விடுவது எறும்பினத்தின் இயல்பு. இதனையிட்டுப் புளிச்சோறு ஆக்கிய தன்மை, 'ஈயல் பெய்தட்ட இன்புளி வெஞ்சோறு' என்றதனாற் புலனாகும். ஏவலருக்கு இந்தப் புளிச்சோற்றின் மேலே வெண்ணெயிட்டு, அது உருகச் சுவையுடன் அளிப்போம் என்பவள், தலைவனுக்குப் பாற்சோறு அளிப்பதாகக் கூறுவதன் மரபையும் அறிக. 'செவ்வாய்ச் சிற்றில் நின்மனையோள் அயர, ஒரு நாள் வந்தனை சென்மோ' என்றதால், தலைவியை வரைந்து மணந்துகொண்டு, அவள் உண்பிக்க உண்டு வாழ்தலையும் அறிவுறுத்தினள் என்க.

## 395. வந்தால் நன்று!

**பாடியவர்:** எயினந்தை மகனார் இளங்கீரனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடைத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(தலைமகன், பொருள்தேடி வருகின்ற ஆர்வத்தினை உடையவனாகக், காடுபல கடந்து, வேற்று நாட்டிற்குச் சென்றிருந்தனன். அவனுடைய பிரிவினை நினைந்து நினைந்து உடலும் உள்ளமும் சோரத் துயருற்று வாடியிருந்தாள் அவனுடைய மனைவி. அங்ஙனம் இருந்த அவள். தன்னைத் தேற்றினவளாகிய தோழிக்குத் தன்னுடைய நிலையைக் கூறுகின்ற பாங்கிலே அமைந்த செய்யுள் இது.)

**தண்கயம் பயந்த வண்காற் குவளை**
**மாரி மாமலர் பெயர்குஎற் றன்ன**
**நீரொடு நிறைந்து பேரமர் மழைக்கண்**
**பனிவார் எவ்வம் தீர இனிவரின்**
**நன்றுமன் - வாழி தோழி! - தெறுகதிர்**

**ஈரம் நைத்த நீர்அறு நனந்தலை**
**அழல்மேய்ந்து உண்ட நிழன்மாய் இயவின்**
**வறன்மரத்து அன்ன கவைமருப்பு எழிற்கலை**
**இறல்அவிர்ந் தன்ன தேர்நசைஇ ஓடிப்**
**புறம்புவழிப் பட்ட உலமரல் உள்ளமொடு**

**மேய்ப்பிணைப் பயிரும் மெலிந்தழி படர்குரல்**
**அருஞ்சுரம் செல்லுநர் ஆள்செத்து ஓர்க்கும்**
**திருந்தரை ஞெமைய பெரும்புனக் குன்றத்து**
**ஆடுகழை இருவெதிர் நாலும்**
**கோடுகாய் கடற்ற காடிறந் தோரே!**

தோழி வாழ்வாயாக!

ஒறுக்கின்ற ஞாயிற்றின் வெப்பமான கதிர்கள் ஈரத்தை முற்றவும் தொலைத்தமையினாலே நீரற்றுப் போய்க் கிடக்கும் அகன்ற இடத்திலேயுள்ள, அழலானது மேய்ந்து உண்டமையி னாலே நிழலொழிந்துபோய்க் காணப்படுகின்ற வழியினிடத்தே, வற்றிய மரக்கொம்பைப் போன்று விளங்கும் கவறு பட்ட கொம்புகளையுடைய அழகிய கலைமானானது. அறல் விளங்கினாற் போலத் தோன்றிய பேய்த்தேரினைக் கண்டு, நீருண்ணலை விரும்பி ஓடிஓடித் தனிமையுற்றுக் கலங்கிய உள்ளத்துடனே மேயும் தன் பெண்மானைக் கூவியழைக்கும். மெலிந்து மிக்க துன்பத்துடனும் கூடியதாக எழுந்த அந்தக் குரலை ஆட்களின் குரலோவென வழிச்செல்வார் ஆராய்வர்.

அத்தகைய இடமாகிய, திருந்திய அடியைக் கொண்ட ஞெமை மரங்களையுடைய பெரும்புனங்கள் விளங்கும் குன்றினிடத்தே, அசையும் தண்டினைக் கொண்ட பெரிய மூங்கில்கள் ஒலித்துக் கொண்டுமிருக்கும். இமையமும் வெம்பிய மலையிடத்தாகிய அக்காட்டினைக் கடந்து சென்றிருப்பவர் தலைவர். அவர் - குளிர்ந்த குளத்திலே தோன்றிய வளமான கால்களையுடைய குவளையினது மாரிக் காலத்து மலர்ந்த கரிய மலரானது, மழைக்கு எதிரேற்று விளங்கினாற் போன்று நீருடையவாய், நிறைவுற்ற பெரிதும் அமர்த்த குளிர்ந்த நம் கண்களினின்றும் நீர் ஒழுகும் துன்பமானது தீரும்படியாக, இப்பொழுதே வருவாராயின் நன்றாகும். (ஆயின், அவர் வந்திலரே யாம் என் செய்வோம்? என்பது கருத்து.)

**சொற்பொருள்:** 1. வண்கால் குவளை-வளவிய தண்டினை யுடைய குவளைமலர். 2. மாமலர் - கருமலர். 4.பனிவார் எவ்வம் - கண்ணீர் சொரியும் துயரம். 5.தெறுகதிர் - ஒறுக்கும்கதிர். 6.நைத்த - தொலைத்த. 7.அழல் மேய்ந்து உண்ட நிழல்மாய் இயவு - வெப்பம் பரவித் தின்றலால் இலைகளற்று மரங்களின் நிழலும் ஒழிந்து போயின நெறி. 9.தேர் - பேய்த்தேர்; கானல்நீர். 10.உலமரல் உள்ளம் - கலங்கிய உள்ளம். 11.அழிபடர் குரல் - அழியத் தக்கதாக வந்துற்ற துன்பத்தினிடத்திருந்து எழுகின்ற குரல். 12.ஆட்செத்து-ஆட்குரல் என்று கருதி. 15.கடற்ற காடு - மலைப்பகுதியாகிய காடு.

**விளக்கம்** : 'தெறுகதிர்.. கோடு காய் காடு' என்றது, காட்டின் வெம்மை மிகுதியினைக் குறிப்பிட்டதாகும். அவ்வழிச் சென்றோர் எனவே, அவருறும் துயரத்தை உளங்கொண்டு தலைவி வருந்தினள் எனலும் ஆகும். 'இனிவரின் நன்று' எனவே, வராத நாள்வரை தன் வருத்தம் தீராதென்பதையும் உரைத்தனள்.

## 396 - நின்னை விடேன்!

**பாடியவர் :** *பரணர்* **திணை :** *மருதம்,* **துறை :** *காதற் பரத்தை தலைமகற்குச் சொல்லியது.* **சிறப்பு :** *காவிரி அத்தியைக் கவர்ந்த செய்தியும், வஞ்சிநகரின் எழிலும், வடவரையில் விற்பொரித்த சேரரின் செயலாண்மையும், ஆய் எயினன் என்பானின் நட்புக்கு உயிரளித்த செயலும்.*

*(தலைமகன் ஒருவன், தான் மணந்து இல்லறம் நிகழ்த்தி வருகின்ற தன்னுடைய மனைவி இருப்பவும், பரத்தை ஒருத்திபாற் காதலுற்று அவளுடனும் கூடி வாழ்ந்து வருபவனும் ஆனான். அவனுடைய காதற் பரத்தையான அவள், ஒரு சமயம், தலைவன் தன்னைக் கைவிட்டு மீளவும் மனைவியிடத்தே செல்லலுறுவானோ என அஞ்சினள். அவள், அப்போது, தலைவனிடத்தே கூறிய முறையிலே அமைந்த செய்யுள் இதுவாகும்.)*

**தொடுத்தேன் மகிழ்ந! செல்லல்-கொடித்தேர்ப்**
**பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென**
**யாழிசை மறுகின் பாழி ஆங்கண்**
**'அஞ்சல்' என்ற ஆஅய் எயினன்**
**இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்**

**தன்னுயிர் கொடுத்தனன் சொல்லியது அமையாது**
**தெறலருங் கடவுள் முன்னர்ந் தேற்றி**
**மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்து**
**ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்பநின்**
**மார்புதரு கல்லாப் பிறன் ஆயினையே**

**இனியான் விடுக்குவென் அல்லன் மந்தி**
**பனிவார் கண்ணன் பலபுலந்து உறையக்**
**கடுந்திறல் அத்தி ஆடுஆணி நசைஇ**
**நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின்**
**மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ**

**ஆரியர் அலறத் தாக்கிப் பேர்இசைத்**
**தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து**
**வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்**
**வஞ்சி யன்னவென் னலம்தந்து சென்மே!**

*தலைவனே! நின்னைப் பற்றினேன்! செல்லல் வேண்டா! கொடி விளங்கும் தேரினையும், பொன்னாலாகிய பூண்களையும் உடையவன் நன்னன் என்பவன். புன்னாட்டினர் வெகுண்டு அவன்பால் எழுந்தனராக, யாழிசை விளங்கும் தெருக்களை யுடைய அவனது பாழி நகரிடத்தே நின்று, 'அஞ்சேல்' என்று கூறினன் ஆஅய் எயினன் என்பவன். தான், அஞ்சேல் என்று*

*சொல்லியதுடனும் அமையாது, போரிடத்தே வெற்றியொன்றே பெறுகின்ற திண்மையினை யுடைய மிஞிலி என்பவனோடு தாக்கிப்பொருது, தன்னுடைய உயிரையும் கொடுத்தான் அந்த ஆய் எயினன். ஆனால் நீயோ?-*

*தெறுதற்கு அரிய கடவுளின் முன்பாகத் தெளிவித்து, மெல்லிய சந்தினையுடைய என் முன்கையினைப் பற்றிச் சொல்லிய சொற்களைக் கடந்தனை! ஆர்வமுடைய நெஞ்சம் மென்மேலும் சிறப்புக்கொள்ள, நின் மார்பினைத் தழுவுதற்கும் தராதவனாயினை! எனக்கு ஏதிலனும் ஆயினை! இனி, யான் நின்னை விடுப்பவள் அல்லேன்.*

*ஆதிமந்தி என்பவள், நீர் சொரிகின்ற கண்ணினளாகப், பலவற்றையும் வெறுத்தவளாகி வாழ்ந்திருக்க, கடும் திறலுடைய அத்தி என்பவனின் ஆடும் அழகினை விரும்பி, நெடும் நீர்ப்பெருக்குடைய காவிரி என்பாள், அவனைக் கொண்டு மறைத்தாற்போல, நின் மனையோள், நின்னை என்னிடமிருந்து கவர்ந்து கொள்ளலையும் அஞ்சா நிற்பேன்.*

*வெகுண்டு எழுந்து ஆரியவரசர்கள் அலருமாறு சென்று அவர்களைத் தாக்கியழித்துப், பெரும் புகழுடைய தொன்மை யாகி முதிர்ந்த, வடக்கின் கண்ணுள்ள மலையினிடத்தே வளைந்த விற்பொறியினைப் பதித்துக் கொடிய சினம் பொருந்திய ஆரியவேந்தரைப் பிணித்தும் வந்தவன் சேரமன்னன் ஆவான். அவனுக்கு உரித்தான வஞ்சி நகரத்தைப் போன்ற என் அழகினை, என்பால் தந்துவிட்டுச் செல்வாயாக!*

**சொற்பொருள்:** *1.தொடுத்தேன்-பற்றினேன்; அன்றிச்சூள் தொடுத்தேன் எனினும் ஆம். 2.புன்னாடு-புள்ளு நாடு எனவும் பாடம்; மேலைக்கடற்கரை சார்ந்த ஒருநாடு என்பர். 3. பாழி - பாழிப் பேரூர். 5. இகல் அடு கற்பு-பகைவரை வெல்லும் திண்மை; போர் வெல்லும் பயிற்சியுமாம். 7.தெறல் அருங்கடவுள்-தெறு தற்கு அரிய கடவுள். 9. தலைத்தலை சிறப்ப-மென்மேலும் சிறந்து கொண்டே போக. 10.பின்ற ஆதல்-தழுவுதற்கு உரிமையற்ற பிற ஆண்மகன்போல் ஒதுங்கியோன் ஆதல். 13. அத்தி-ஆதிமந்தியின் கணவன் 16. ஆரியர்-ஆரிய மன்னர். 18.பிணித்தோன்-பிணித்துக் கொணர்ந்தோன்; பணித்தோன் எனவும் பாடம்.*

**விளக்கம் :** *மிஞிலியோடு பொருது ஆய்எயினன் தன் உயிர் தந்த ஆண்மை, அவன் 'அஞ்சேல்' என்று சொன்ன வாய்மொழியினைப் பேணுதற் பொருட்டாக என்று கொள்ளுக. 'சொல்லைப் பேணுதற்குத் தன் உயிரையும் இழந்த அவன் போலாது, சொல்லிய சூழினை மறந்து என்னைக் கைவிடவும் நினைந்தனையே?' எனத் தலைவனைக் கேட்கின்றாள் அவள்.*

'தெறலரும் கடவுள் முன்னர்த் தேற்றி' என்றதனால், அவன் சூழ் பொய்த்தவிடத்துக் கடவுள் அவனைத் தண்டிப்பதும் நேரும் என்பதனை நினைவுறுத்தினள். 'ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்ப' என்றது, அவளும் அவனும் இன்புறுதலாகிய ஆர்வம் இருவர் உள்ளத்தும் மென்மேலும் மிக்குப் பெருக என்பதாம். இதனால், அவளுடைய காதலுடைமையும், அவனுடைய கடமை நிலைமையும் கூறினள்.

'காவிரி அணிநசைஇ அத்தியைக் கொண்டொளித் தாங்கு நின் மனையோள் வவ்வலும் அஞ்சுவல்' என்றதனால், மனைவி வவ்வுதலைக் கருதினால், தான் அதனைத் தடுக்க ஏலாத நிலையினை உடமையினையும் உணர்த்தினள்.

'ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத் தொன்று முதிர் வடவரை வணங்கு விற்பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்' ஆகிய சேரமான், சேரன் செங்குட்டுவனோ என்பதனைத் தெளிந்து ஆராய்தல் வேண்டும்.

'நலம் தந்து சென்மே' என்றதனால், அந்தக் கவலையினால், அவள் நலன் அழிந்திருந்த தன்மையும் புலனாகும்.

## 397. படர்தரத் துணிந்தோன்!

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

(மகள் தன்னுடைய காதலுடன் சென்றுவிட்டனளாக, அந்த ஆற்றாமையினாற் புலம்பும் செவிலித்தாய், இங்ஙனம் நொந்து கொள்ளுகின்றாள். அவளுடைய உள்ளத்தே, தலைவிபால் நிலவிய காதலன்பு இதனாற் செவ்வையாகப் புலனாகும்.)

**என்மகள் வெருமடம் யான்பா ராட்டத்
தாய்தன் செம்மல் கண்டுகடன் இறுப்ப
முழுவுமுகம் புலரா விழவுடை வியனகர்
மணனிடை யாகக் கொள்ளான் கல்பகக்
கணமழை துறந்த கான்மயங்கு அழுவம்**

**எளிய வாக ஏந்துகொடி பரந்த
பொறிவரி அல்குல் மா அயோட்கு எனத்
தணிந்த பருவம் செல்லான் படர்தரத்
துணிந்தோன் மன்ற துனைவெங் காளை
கடும்பகட்டு ஒருத்தல் நடுங்கக் குத்திப்**

**போழ்புண் படுத்த பொரியரை ஓமைப்
பெரும்பொளிச் சேயரை நோக்கி ஊன்செத்துக்
கருங்கால் யாத்துப் பருந்துவந்து இறுக்கும்**

**சேண்உயர்ந்து ஓங்கிய வானுயர் நெடுங்கோட்டுக்**
**கோடை வெவ்வளிக்கு உலமரும்**

**புல்லிலை வெதிரே நெல்விளை காடே.**

*என் மகளுடைய பெரிதான மடப்பத்தினை யான் பாராட்டி மகிழவும், நற்றாய் தன்னுடைய தலைமையினை அறிந்து, தான் தன் மகளுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யவுமாக, முழவின் ஒலிகுறையாத விழவினையுடைய அகன்ற மனையிடத்தே, திருமணத்தின் வாயிலாக அவளைக் கொண்டானும் அல்லன்!*

*கற்கள் பிளந்துபோக, மேகக்கூட்டங்கள் பெய்யாது நீங்கிப்போன, உயர்ந்த கொடிகள் பரந்த காடடர்ந்த காட்டு வழி. புள்ளிகளும் இரேகைகளும் பொருந்திய அல்குல் தடத்தினையுடைய மாமை நிறத்தினளுக்கு, நடத்தற்கு எளிதாயிருக்கும் படியாக வெப்பம் தணிவுற்ற பருவத்து உடன் கொண்டு சென்றானும் அல்லன்!*

*கடுமையான தன்மையினையுடைய களற்றியானைத் தலைவன், மரம் அசையுமாறு தன் கோட்டினாற் குத்திப் பிளந்து புண்ணுண்டாகச் செய்த, பொரிகள் பொருந்திய அடியினையுடைய ஓமை மரத்தின் பெரிதும் பட்டையுரிந்து விளங்கிய சிவப்பான அடிமரப்பகுதியினை ஊனென்று கருதி, நெடிதுயர்ந்து ஓங்கிய கரிய அடியினையுடைய யாமரத்தின் கண் இருந்த பருந்தானது வந்து தங்கும் வானளாவிய உயர்ந்த சிமையங்களையுடைய, வெவ்விய கோடைக்காற்றினாலே அலைந்து கலங்கும் புல்லிய இலைகளையுடைய மூங்கிலில் நெல்விளையும் காட்டினிடத்தே -*

*விரைதலையுடைய கடுமையான காளியினைப்போன்ற அவள் காதலன், அவளையும் உடன்கொண்டு செல்லுதற்குத் துணிந்தனனே! (அவன் செயல் பொருத்தமற்றது; பொறுக்க முடியாதது என்பது கருத்து.)*

**சொற்பொருள்:** *2. செம்மல்-தலைமை. கடன்-மணப் பெண்ணுக்குச் செய்யவேண்டிய கடமைகள். 3. முகம் புலரா - ஒலி குன்றாத. வியனகர்-அகன்ற மனை. 4.பக - பிளக்க. 5. கனமழை - கூட்டமாய மேகங்கள். அழுவம் - காடு. 8. படர்தர - உடன் கொண்டு செல்ல. 9.துனைதல் - விரைதல். 11. போழ்தல்-பிளத்தல். 12.பொளிதல்-பட்டையுரிதல். சேயரை-சிவப்பாகத் தோன்றிய அடிமரம். 12. இருக்கும்-தங்கும். 15.கோடை வெவ்வெளி-வெம்மையுடைய கோடைக்காற்று. உலமரும்-அசைந்து வருந்தும். 16.வெதிர்-மூங்கில்.*

**விளக்கம் :** 'என் மகள் பெருமடம் யான் பாராட்ட' என்று செவிலி சொல்வது, அவளுடைய பாதுகாப்பிலே வளர்ந்தவள் தலைவியாதலால். 'கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையே' மடம் என்பது. அதனைத் தலைவி பேணினால், அது செவிலிக்கே பெருமை தருவது ஆகும். ஆகவே, இப்போது அதற்கு வாய்ப்பின்றித் தலைவனுடன் தலைவி போயின ளாதலின் இப்படி நினைந்து நோகின்றான்.

தாய் மணப்பெண்ணுக்குச் செய்யும் கடமைகள் பல மணவிழாவில் உண்டென்பதனைச் "தாய் தன் செம்மல் கண்டு கடன் இறுப்ப' என்ற தொடர் உணர்த்தும்.

'மணனிடையாகக் கொள்ளான்' என்ற சொற்கள் தலைவிக்குச் சிறப்பாக மணம் நிகழத்திக் காண அவர்கள் கொண்டிருந்த ஆசைப்பெருக்கைப் புலப்படுத்துவனவாம்.

'தணிந்த பருவஞ் செல்லான்' என்றது, தலைவி காட்டி னிடத்துச் செல்லலால் அடைகின்ற துயரங்களை எண்ணி வருந்திக், 'கோடையின் வெம்மை தணிந்த பருவத்தாவது கொண்டு சென்றானில்லையே?' என்று நொந்து கொண்டதாம்.

'அவள் சென்றனள்' என்னாது, 'அவன்கொண்டு சென்றனன்' எனக்கூறி வருந்தும் உள்ளத்துச் செல்வியிலே, தலைவிபாற் கொண்ட பெரும் பேரன்பு தோன்றுதலை அறிந்தறிந்து இன்புறுக.

## 398. சிதைகுவது உண்டோ?

**பாடியவர் :** இம்மென் கீரனார். **திணை :** குறிஞ்சி. **துறை:** காமமிக்க கழிபடர் கிளவியால். வரைவிடத்துக்கண், தலைமகள், தலைமகன் வரையினின்றும் போந்த ஆற்றொடு புலந்து சொல்லியது.

(தலைமகன், வரைவிடை வைத்துத் தலைவியைப் பிரிந்து சென்றிருந்தகாலத்தில், அவள் காமவாதையால் மிக்க துயருற்றவளாகி, அவன் வரையினின்றும் வருகின்ற ஆற்றினிடத்துத், தன் மனக்குறையைக் கூறி வருந்துவதாக அமைந்த செய்யுள் இது.)

**'இழைநிலை நெகிழ்ந்த எவ்வம் கூரப்**
**படர்மலி வருத்தமொடு பலபுலந்து அசைஇ**
**மென்தோள் நெகிழச் சாஅய்க் கொன்றை**
**ஊழுறு மலரின் பாழ்பட முற்றிய**
**பசலை மேனி நோக்கி நுதல்பசந்து**

**இன்னேம் ஆகிய எம்மிவண் அருளான்**
**நும்மோன் செய்த கொடுமைக்கு இம்மென்று**
**அலமரல் மழைககண் தெண்பனி மல்க**
**நன்று புறமாறி அகறல் யாழநின்**
**குன்றுகெழு நாடற்கு என்னெனப் படுமோ?**

**கரைபொரு நீத்தம்! உரைஎனக் கழறி**
**நின்னொடு புலத்தல் அஞ்சி அவர்மலைப்**
**பன்மலர் போர்த்து நாணுமிக ஒடுங்கி**
**மறைந்தனை கழியும் நிறறந்து செலுத்தி**
**நயன்அறத் துறத்தல் வல்லி யோரே!**

**நொதும லாளர் அதுகண் ணோடாது**
**அழற்சினை வேங்கை நிழல்தவிர்த்து அசைஇ**
**மாரி புரந்தா நந்தி ஆரியர்**
**பொன்படு நெடுவரை புரையும் எந்தை**
**பல்பூங் கானத்து அல்கி இன்றிவண்**

**சேர்ந்தனை செலினே சிதைகுவது உண்டோ?**
**குயவரி இரும்போத்துப் பொருதபுண் கூர்ந்து**
**உயங்குபிடி தழீஇய மதனழி யானை**
**வாங்கமைக் கழையின் நரலும்அவர்**
**ஓங்குமலை நாட்டின் வருஉ வோயே!**

*பெரிய ஆண்புலியானது தாக்கியதனாற் புண்ணுற்றதாகி வருந்தும் தன் பிடியானது தழுவிக்கொண்டிருக்க, வலிகுன்றிப் போயிருந்த களிற்றியானையானது, வளைந்த மூங்கிலினாற் செய்தமைத்த தூம்பினைப்போல ஒலிக்கின்ற, அவருடைய உயர்ந்த மலைநாட்டினின்றும் வருவோய்!*

*கரையைப் பொருதியவாறே வருகின்ற வெள்ளத்தை உடையோய்!*

*அணிகள் தம் நிலையினின்றும் நெகிழ்ந்து போதற்குக் காரணமாகி பிரிவுத்துன்பம் மிகுதியாக, அவா நினைவே மிகுந்த வருத்தத்துடனே, பலவும் வெறுத்துக் கூறியவளாகத் தங்கியிருந்து, மென்மையான தோள்களும் மெலிவுற்றுப் போக வருந்திக், கொன்றையினது முறையாக மலர்ந்த பூக்களை யொப்பப் பாழ்பட முற்றிவிட்ட பசலை படர்ந்துள்ள உடலினை நோக்கி, 'நெற்றியும் பசலையுறப்பெற்ற இத்தன்மையேமாகிய எமக்கு அருள் செய்யான் ஆயினான் எம் தலைவன்.'*

*'நும்மவனாகிய அவன் செய்த கொடுமைக்குக் கலங்கும் குளிர்ந்த கண்களினின்றும் தெளிந்த நீர் பெருகவும், அறநெறி யினைக் கைவிட்டு நீங்குதல், நின் குன்று பொருந்திய நாட்டினை*

உடையானுக்கு யாதொன்று சொல்லப்படுமோ? சொல்வாயாக எனக் கூறி, நின்னுடன் யான் வெறுத்துக் கொள்ளுதலை நீயும் அஞ்சினாயோ?

அவர் மலையிடத்துள்ள மலர்கள் பலவற்றாலும் நின்னைப் போர்த்து மூடிக்கொண்டனையாய், நாணுற்று மிகவும் ஒடுங்கினையாய், நின்னை மறைத்துக்கொண்டு ஓடிக் கொண்டிருக்கும் நின்னைக் கொணர்ந்து போக்கி, ஏதிலாளராகிய அவர், நீதியின்றிக் கை விடுவதற்கு வன்மை யுடையவர் ஆயினர். அதனை நீ நோக்குதல் செய்யாதி!

நெருப்பையொத்த பூக்கள் நிரம்பிய கிளைகளையுடைய வேங்கையின் நிழலில், நின் செலவினைத் தவிர்ந்து தங்கி, மழை புரத்தலால் பெருக்கமுற்று, ஆரியர்களது பொன் பொருந்திய நீண்ட இமய மலையைப் போன்ற எம் தந்தையது பூக்கள் பலவற்றையுமுடைய காட்டிலே தங்கி, இற்றைப்பொழுது இவ்விடத்தே சேர்ந்தனையாகச் சென்றால், நின் சிறப்புக் கெடுவதும் உளதாகுமோ? (ஆகாதே! அதனால் தங்கிச் செல்க என்பது முடிபு.)

**சொற்பொருள்:** 9. நன்று புறமாறி அகறல்-அறத்தைக் கைவிட்டு நீங்குதல். 12. புலத்தல்-வெறுத்தல். 15.நயனற-நேர்மையின்றி. வல்லியோர்-வண்கண்மையினை உடையவர். 16.நொதுமலாளர்-ஏதிலாளர். 16. அழல்சினை வேங்கை - அழலனைய மலர்கள் செறிந்த கிளைகளையுடைய வேங்கை. 18.புரந்தர - பேணியுதவ. நந்தி-பெருக்கமுற்று. 21.சிதைகுவது-கெடுவது. 22. குயவரி இரும்போத்து-பெரிதான ஆண்புலி. 25. உயங்கு பிடி-வருந்தும் பிடி.

**விளக்கம் :** 'குயவரி இரும்போத்துப் பொருத புண்கூர்ந்து உயங்கு பிடி தழீஇய மதனழி யானை வாங்கமைக் கழையின் நரலும்' என அவன் நாட்டைக் கூறியது, தானும் அப்பிடியினைப் போலவே, அவனுக்குத் துன்பத்தின் கண்ணும் துணைநிற்கும் காதலன்பு உடையவள் என்பதாகும்.

'ஆரியர் பொன்படு நெடுவரை' என்றது, இமயத்தினை. அது புரையும் எந்தை கானம் எனவே, அவளுடைய குடியின் செழுமை உயர்வையுங் குறித்தனள் என்க. "கரைபொரு நீத்தம் உரையெனக்கழறி, நின்னொடு புலத்தல் அஞ்சி, அவர் மலைப் பன்மலர் போர்த்து, நாணுமிக ஒடுங்கி மறைந்தனை கழியும்" என்றது, நும்மோன் செய்த கொடுமைக்கு நீயும் எம் எதிர்ப்பட வருதற்கு நாணினையோ? என்றதாம்.

இதனால், அவன் மீள்வதாகக் குறித்த கார்காலம் வந்ததும், வந்து சேராமையும் உணரப்படுவதாம்.

'நிற்றந்து செலுத்தி நயனறத் துறத்தல் வல்லியாரே' என்றது, 'நின் வருகையொடு அவரும் வருவேமென்றது பொய்த்து, நின்னைமட்டும் தந்து செலுத்தினராக, நயனற எம்மைத் துறத்தல் செய்த வன்கண்மை உடையவர்' என்றதாம்.

'ஆயின் நின்மேற் பகையில்லை' என்பாள். 'எந்தை பல்பூங் கானத்து அல்கி இன்றிவண் சேர்ந்தனை செலினே சிதைகுவது உண்டோ?' என்றனள்.

'அழல் சினை வேங்கை' என்று குறித்தது, வரைந்து கோடற்குக் குறித்த காலத்தின் வரவினை நினைந்து கூறியதாகும்.

## 399. முயங்கலின்றி நீடார்!

**பாடியவர்:** எயினந்தை மகனார் இளங்கீரனார். **திணை:** பாலை. **துறை :** தலைமகன் பிரிவின்கண் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

(தலைமகனின் பிரிவினிடத்தே வாடியிருக்கின்ற தலை மகளைத் தோழி தேற்றுவாளாக அவன் காலம் நீட்டித்திரான் என்று கூறும் முறையிலே அமைந்த செய்யுள் இதுவாகும்.)

**சிமையக்குரல சாந்துஅருந்தி இருளி**
**அமையக் கானம் நாறும் கூந்தல்**
**நந்நுதல் அரிவை! இன்னுறல் ஆகம்**
**பருகு வன்ன காதல் உள்ளமொடு**
**திருகுபு முயங்கல் இன்றியவண் நீடார்-**

**கடற்றடை மருங்கின் கணிச்சியின் குழித்த**
**உடைக்கண் நீடமை ஊறல் உண்ட**
**பாடின் தெண்மணி பயங்கெழு பெருநிரை**
**வாடுபுலம் புக்கெனக் கோடுதுவைத்து அகற்றி**
**ஒல்குநிலைக் கடுக்கை அல்குநிழல் அசைஇப்**

**பல்லான் கோவலர் கல்லாது ஊதும்**
**சிறுவெதிர்ந் தீங்குழற் புலம்புகொள் தெள்விளி**
**மையில் பளிங்கின் அன்ன தோற்றப்**
**பல்கோள் நெல்லிப் பைங்கால் அருந்தி**
**மெல்கிடு மடமரை ஓர்க்கும் அத்தம்**

**காய்கதிர் கடுகிய கவினழி பிறங்கல்**
**வேய்கண் உடைந்த சிமைய**
**வாய்படு மருங்கின் மலைஇறந் தோரே.**

உச்சியிலே பூங்கொத்துக்களை உடையதாயும், மயிர்ச் சாந்து பூசப்பெற்றதாயும், இருட்சியுடையதாயும், இமயமலையிடத்துக்

கானத்தைப் போலும் நறுமணத்தினைக் கமழ்வதாயும் விளங்கும் கூந்தலையும், நல்ல நெற்றியினையும் உடைய பெண்ணே!

கற்கள் விளங்கும் காட்டைச் சார்ந்தவிடத்தே, குந்தாலி யினால் தோண்டிய குழியினிடத்தே, நெடிதுங் கீழேயாக ஊறிவரும் நீரினை உண்ட, இனிய தெளிந்த ஒலியினைக் கொண்ட மணிகளைப் பூண்ட பயன்மிகுந்த பெரிய ஆனிரை யானது வறட்சியுற்ற பாலை நிலத்தே புகுந்ததாக-

ஊது கொம்பினாலே. ஒலியெழுப்பி அவற்றை அவ்விடத்தினின்றும் அகற்றித் தளர்ந்த தன்மையினையுடைய கொன்றையின் குறைவுற்ற நிழலிலே தங்குவிப்பவர், பல ஆனினங்களை உடையவரான ஆயர்கள்.

அவர்கள் அறியாது ஊதும், சிறிதான மூங்கிலாற் செய்யப் பெற்ற குழலானது தனிமைகொண்ட தெளிவான ஒலியினை எழுப்பும், அதனைக் குற்றமற்ற பளிங்கினைப் போன்ற தோற்றத்தையுடைய பலவாகக் காய்த்திருக்கும் நெல்லியின் பசுமையான காய்களை அருந்தி அசையிட்டுக் கொண்டிருக் கின்ற இளைய மரைமான்கள், கூர்ந்து கேட்கும்.

அத்தகைய தன்மையுடைய காட்டிலே, காயும் ஞாயிறு கடுமையுடன் எரித்தலால் அழகொழிந்த பாறைகளையும், மூங்கிலின் கணுக்கள் உடைந்த சிகரங்களையும், இடமகன்ற பக்கங்களையும் உடைய மலையினைக் கடந்து சென்றவர் நம் தலைவர். அவர்-

இனிமை அமைதலையுடைய நின் மார்பினைப் பருகுதல் போன்ற காதல் கொண்ட உள்ளத்துடனே பிணைந்து தழுவுதலை இல்லாதவராகத், தாம் சென்ற அவ்விடத்தேயே காலத்தை நீட்டித்திருப்பவர் அல்லர்.

**சொற்பொருள்:** 1.சிமையம்-தலையின் உச்சிக் கொண்டை. சாந்து-மயிர்ச் சாந்து. 3.இன் உறல் ஆகம்-இனிமை அமைதலை யுடைய மார்பகம். 5. திருகுபு முயங்கல்-பிணைந்து தழுவுதல். 5. கடற்று அடை மருங்கு-காடு சார்ந்த பக்கம். கணிச்சி-குந்தாலி. 7.உடைக் கண்-உடைத்து ஆக்கிய குழி. 9. கோடு-ஊதுகொம்பு. துவைத்தல்-ஒலித்தல். 11.கல்லாது-இசை நெறியினைக் கற்றிராது. 12.வெதிர்ந்த தீங்குழல்-மூங்கிலாற் செய்த இனிய புல்லாங்குழல். 15.மெல்கிடல்-அசையிடல் 16. கடுகிய-கடுமையாகத் தாக்கிய. 18. வாய்படு மருங்கு-இடமகன்ற பக்கமலை.

**விளக்கம் :** ஒருவரையொருவர் பின்னிப் பிணைந்து தழுவிக் கிடக்கின்ற காதலுடையவர்க்கே உரித்தான, அந்த ஒப்பற்ற இன்ப நிலையினையே, 'பருகு வன்ன காதல் உள்ளமொடு ஆகம்

*திருகுபு முயங்கல்' எனக் குறித்தனர். அவள் கூந்தலின் வனப்பு, 'சிமையக் குரல்' எனவும், சாந்தருந்தி எனவும், இருளி எனவும், இமையக் கானம் நாறும் எனவும் கூறப்பட்டது.*

*'கணிச்சியிற் குழித்த உடைக்கண் நீடமை ஊறல்' என்பது, குந்தாலியினாற் பாறைகளை உடைத்துத் தோண்டப் பெற்ற கிணற்றுள், நெடுந்தொலைவான ஆழத்திலே ஊறிக்கிடக்கும் நீரைக் குறித்ததாம். இது, காட்டின் வறட்சியைக் காட்டுவதுடன், மேய்ப்போர் தம் நிரைகளைப் பேணுதற்குக் கொள்ளும் முயற்சிப் பெருக்கையும் காட்டுவதாகும்.*

*'காய்கதிர் கடுகிய கவினழி பிறங்கல் வேய்கண் உடைந்த சிமைய வாய்ப்படு மருங்கின் மலையிறந்தோரான காதலர், பருகுவன்ன காதல் உள்ளமொடு, ஆகம் திருகுபு முயங்கல் இன்றியவண் நீடார்' என்று உரைத்து வற்புறுத்தியதாகக் கொள்ளுக.*

## 400. நன்மை விளைப்பது!

**பாடியவர்:** *உலோச்சனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தலைமகன் வரைந்து எய்திய பின்றைத், தோழி தலைமகளுக்குச் சொல்லியது.*

*(களவு உறவிலே திளைத்த தலைவியும் தலைவனும், இடையிற் பிரிவால் பட்ட துயரமெல்லாம் தீரும் நாள் வந்தது. தலைமகன் தலைவியை வரைந்து வருகின்றனன். தலைவியின் தமரும் இசைகின்றனர். அந்த மகிழ்ச்சியில், தம் கவலையும் ஊரலரும் ஒழிந்ததென்ற களிப்பில், தோழி தலைவியிடத்தே கூறுகின்ற முறையில் அமைந்த செய்யுள் இது.)*

**நகைநன்று அம்ம தானே 'அவனொடு**
**மனைஇறந்து அல்கினும் அல'ரென நயந்து**
**கானல் அல்கிய நம்களவு அகல**
**பல்புரிந்து இயறல் உற்ற நல்வினை**
**நூல்அமை பிறப்பின் நீல உத்திக்**

**கொய்ம்மயிர் எருத்தம் பிணர்படப் பெருகி**
**நெய்ம்மிதி முனைஇய கொழுஞ்சோற்று ஆர்கை**
**நிரலியைந்து ஒன்றிய செலவின் செந்தினைக்**
**குரல்வார்ந் தன்ன குலவுத்தலை நந்நான்கு**
**வீங்குசுவல் மொசியத் தாங்குநுகம் தழீஇப்**

**பூம்பொறிப் பல்படை ஒலிப்பப் பூட்டி**
**மதியுடைய வலவன் ஏவலின் இருதுறைப்**
**புனல்பாய்ந் தன்ன வாமான் திண்தேர்க்**
**கணைகழிந் தன்ன நோன்கால் வண்பரிப்**
**பால்கண்ட டன்ன ஊதை வெண்மணற்**

**கால்கண்ட டன்ன வழிபடப் போகி**
**அயிர்ச்சேற்று அள்ளல் அழுவத்து ஆங்கண்**
**இருள்நீர் இட்டுச்சுரம் நீந்தித் துறைகெழு**
**மெல்லம் புலம்பன் வந்த ஞான்றை**
**பூமலி இருங்கழித் துயல்வரும் அடையோடு**

**நேமி தந்த நெடுநீர் நெய்தல்**
**விளையா இளங்கள் நாறப் பலவுடன்**
**பொதிஅவிழ் தண்மலர் கண்டும் நன்றும்**
**புதுவது ஆகின்று அம்ம-பழவிறல்**
**பாடுஎழுந்து இரங்கும் முந்நீர்**

**நீடிரும் பெண்ணை நம் அழுங்கல் ஊரே!**

தோழி! இல்லத்தினைக் கடந்து சென்று சற்றே தங்கினாலும் அலராகும் என்ற நிலையிலும், அவனுடனே விருப்புற்றுக் கானற்சோலையிலே தங்கிய நம் களவு ஒழுக்கம் நீங்குமாறு, பல தன்மைகளும் புரிந்து இயற்றலுற்ற நல்வினையின் பயனும் வந்து வாய்ப்பதாயிற்று.

அசுவ சாத்திரம் கூறும் இலக்கணம் அமைந்த பிறப் பினையும், நீலமணியாகிய நெற்றிச் சுட்டியினையும், கொய்யப் பெற்ற மயிர்பொருந்திய பிடரியினையும், உடையவும், நெய்பெய்து மிதித்து ஆக்கிய கவளத்தை வெறுத்துக் கொழுமை யான சோற்றை உண்ணுதலையுடையவும், வரிசையாகப் பொருந்தி ஒன்றுபட்டுச் செல்லுதலையுடையவும், செவ்விய தினைக்கதிர் நீண்டு வளைந்தாற்போன்ற வளைந்த தலையினை உடையவும் ஆகிய, நன்றான நான்கு குதிரைகளைத், தாங்கும் நுகமானது பருத்த திமிலிலே பொருந்தியதாகப் பொருந்தியிருக்க, அழகிய பொறிகளையுடைய பலவடங்கள் ஒலிக்குமாறு பூட்டி, தேர் செலுத்தும் அறிவுடைய பாகன் தேரினைச் செலுத்தலினாலே -

தாழ்வான துறையிடத்தே நீர் பாய்ந்துசென்றாலொத்த, திண்மையான தேரிற் பூட்டிய தாவிச்செல்லும் குதிரைகளின் அம்பு பாய்ந்தாற்போன்று விரையச் செல்லும் வலிய கால்களின் செலவு, பாலைக் கண்டாற்போல விளங்கும் காற்றால் திரட்டப்பெற்றுக் கிடக்கும் வெண்மணலிடத்தே, வாய்க்காலைக் கண்டாற்போல வழிபடுமாறு சென்று, நுண்ணிய சேற்றுக் குழம்பின் பரப்பினையுடைய அவ்விடத்து, இருண்ட தன்மையினையுடைய குறுகிய சுரத்தையும் கடந்து, துறைபொருந்திய கடற்கரையினையுடைய நம் தலைவனும் வந்தனன்.

வந்த பொழுதிலே -

பூக்கள் மலர்ந்த அரிய கழியிடத்தே அசைந்து கொண்டிருக்கும் இலைகளோடு, கடல் தந்த நெடிய தன்மை யினையுடைய நெய்தலின் முதிராத இளங்கள் நாறும்படியாகப் பொதியவிழ்ந்த தண்ணிய மலர்களை, ஏனைப் பூக்கள் பலவற்றுடனும் அவன் சூடிவருதலைக் கண்டு-பழைய பெருமையினையுடைய, ஆரவாரம் மிகுதியாக விளங்கும் கடற்கரைக் கண்ணிடத்துள்ள, நீண்ட கரிய பனைமரங்களை யுடைய ஆரவாரங்கொண்ட நம்முடைய ஊரானது, அலரினை விடுத்து, மிகவும் புதிய தன்மையினை உடையதும் ஆகின்றது! இது பெரிதும் நகையினை உடையதாகும்.

**சொற்பொருள்:** 1. நகை நன்று-நகை பெரிது. 2. அல்கினும்-தங்கினும். நயந்து-விரும்பி 3. கானல்-கானற் சோலை. 5. நூல்-புரவிநூல். உத்தி-நெற்றிச் சுட்டி. 6.எருத்தம்-பிடரி. 7. முனைஇய-வெறுத்த. குவவுத்தலை-வளைந்த தலை. 11.பல்படை-பலவடுக்கான மணியாரங்கள். 12. மதியுடைய வலவன்-குதிரை செலுத்தும் திறன் அறிந்தோனாகிய பாகன். 15. ஊதை-காற்று. 20. அடை-இலை. 21.நேமி-கடல். 24.பழவிறற்பாடு-பழைய பெருமையுள்ள ஆரவாரம். இரங்கும்-ஒலிக்கும்.

**விளக்கம் :** 'மனையிறந்து அவனொடு அல்கினும் அலரெனக் கூறும் அழுங்கல் ஊரானது, மெல்லம் புலம்பன் வந்த ஞான்றை நன்றும் புதுவதாகின்றம்ம!' எனத் தம் ஊரவரின் இருகாலத்துத் தன்மையுனையும் ஒப்பிட்டு, அவரின் இயல்புக்கு, 'நகை நன்று அம்ம!' என நகையும் கொள்ளுகின்றனள் தோழி. இது, அக் காலத்துச் சமூகம் உண்மைக் காதலொடு நிகழும் களவு உறவினையும் பழிதரும் செயலாகவே கொண்டிருந்த தென்பதும், மணவினை குறித்து அவன் வரவே, அந்தப் பழியை மறந்து அவனைப் புகழ்ந்து பாராட்டிய தெனவும் காட்டுவதாகும்.

'தாழ்ந்த துறையிடத்து நீர்புகுவதுபோலத் தாவிச் செல்லும் குதிரைகள்' எனக் குதிரைகளின் விரைவுடைமையைக் குறித்தது காண்க.

***அகநானூற்றின் நித்திலக் கோவையும்***
***புலியூர்க் கேசிகன் உரையும் முற்றுப் பெற்றன.***



**பிற்சேர்க்கை - 1.**

# பாடினோர் வரலாறு

(நகவளைவுக்கு உட்பட்ட எண்கள்
இந்நூற் செய்யுட்களின் எண்கள் ஆகும்)

## அஞ்சியத்தை மகள் நாகையார் (356)

தகடூர்க்கு உரிய மழவர் கோமானாகத் திகழ்ந்தவனும், மாவீரனும், வள்ளலும், ஔவையாரின் அன்புக்குரிய நட்பினனாகத் திகழ்ந்தவனுமான அதியமான் நெடுமான் அஞ்சியின் அத்தை மகளாகத் திகழ்ந்தவர் இந்த அம்மையார். தமிழன்பு மிகுந்து தமிழ்ச்சான்றோரைப் பேணிப் புரந்துவந்த அதியர் குடும்பத்திற் பிறந்த இந்த அம்மை, தமிழ்ப்புலமை உடையவராகவும் விளங்கினார். இந்நூலினுட் பயின்றுவரும் பாடலின் கண்ணும், அஞ்சியின் புகழுடைமையை இவர் போற்றிப் பாடியுள்ளதனை அறிந்து இன்புறுக. 'குடி நன்கு டையன், கூடுநர்ப் பிரியலன், கெடுநா மொழியலன், அன்பினன்' என்று இவர் உரைக்கின்ற காதலனின் சிறப்புக்கள், ஒவ்வொரு கன்னியும் அடைய விரும்புகின்ற லட்சியக் காதலனை நன்கு உருவகிப்பதனைக் காணலாம்.

## அதியன் விண்ணத்தனார் (301)

விண்ணத்தனார் என்னும் இயற்பெயருடைய இவர், அதியர் குடியினரைச் சார்ந்தவராக, நற்றமிழ்ப் புலமை உடையவராக வாழ்ந்தவர் எனலாம். இந்நூலின்கண் வரும் செய்யுள், இவருடைய புலமைத் திறத்தையும், மக்களின் வாழ்வியலை ஊடாடிக் கண்டு நயம்பட உரைக்கும் சிறப்பையும் காட்டுவ தாகும். தலைவனாற் கைவிடப்பெற்று வாடியிருக்கும் தலைவியின் பொலிவிழந்த நிலைக்கு, முதல்நாள் கூத்து நிகழ்ந்து ஆரவாரத்துடன் பொலிவுற்று விளங்கிய மன்றம், பிற்றை நாளில் பொலிவிழந்து தோன்றும் நிலைக்கு ஒப்பிட்டுக் கூறும் நயத்தினை அறிந்து இன்புறுக.

## அம்மூவனார் (370, 390)

'அம்மூ' என்னும் பெயரமைதியினால் , இவரைச் சேரநாட்டைச் சார்ந்தவராகக் கருதுபவர் பலர். சேரமான், பாண்டியன், மலையமான் முதலியோரால் ஆதரிக்கப்பெற்று,. அவர்தம் தொண்டி, மாந்தை, கொற்கை, கோவலூர் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடியவர் இவர். சங்கத்தொகை

நூற்களுள் அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகிய வற்றுள்ளும் இவர் செய்யுட்கள் காணப்பெறும். பெரும்பாலும் நெய்தல் திணைச் செய்யுட்களைப் பாடியவர் இவர். ஐங்குறு நூற்றின் நெய்தலைக் குறிக்கும் (102-200) நூறு செய்யுட்களையும் செய்தவர் இவரே. இந்நூலின் 370 ஆவது செய்யுளில், தோழி தலைவியை நோக்கி, 'நல்லில் நோயொடு வைகுதியாயின் நுந்தை அருங்கடிப் படுவலும் என்றி; மற்று, நீ செல்லல் என்றலும் ஆற்றாய்; செலினே, வாழலென் என்றி' எனக்கூறுவது, காதலுடைய கன்னியரின் இக்கட்டான மனநிலையை நன்றாக விளக்கிக் காட்டுவதாகும். இங்ஙனமே, இவரது 390ஆவது பாடலும் சிறப்பான நயத்துடன் விளங்குவதனைக் காணலாம். உப்பு விற்கும் இளங்கன்னி யிடத்துத் தலைவன் மெய்வாழ உப்பின் விலையாதோ? இளங்கன்னியிடத்துத் தலைவன் 'மெய்வாழ் உப்பின் விலை எனக் கேட்பதும், அவள் முதலிற் சினந்து, 'யாரீரோ எம் விலங்கியீ இரெனா?' வினவினும், அடுத்து, 'மூரல் முறுவலளாகப் பெயர்ந்ததும், ஒரு நல்ல சுவையமைந்த காதற் காட்சியாகும்.'

## ஆவூர் மூலங்கிழார் (341)

வேளாண் மரபினராகவும், மூல ஓரையிலே பிறந்தவராகவும், 'கிழார்' என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்றவராகவும் திகழ்ந்த தமிழ்ச் சான்றோர் இவராவர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கீரஞ்சாத்தன், மல்லிகிழான் காரியாதி, சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் ஆகியோரைப் பாடியுள்ளமையினால், இவரை அவர்களது காலத்தவர் எனலாம். இவர் பாடல்களாகச் சங்கத்தொகை நூற்களுள் பத்தொன்பது செய்யுட்களைக் காணலாம். அகநானூறு 156ஆவது செய்யுளில், மருதநில மகளிர் நீர்த்துறைக்கண் தெய்வத்திற்குப் பலியிட்டு வழிபடும் வழக்கத் தினை இவர் குறிப்பிடுகின்றனர். 'கோங்கும் கொய்குழை யுற்றன; குயிலும் விளிக்கும்; இது மாணலம் நுகரும் துணை உடையோர்க்கு யாணர் மன்; எமக்கோ உய்தகை இன்றால்' என, வேனிற் காலத்துப் புலந்துகூறும் தலைவியை இச்செய்யுளுள் காட்டுகின்றார் இவர்.

## இடைக்காடனார் (304, 374)

'இடைக் காடு' என்னும் ஊரினராதலின் 'இடைக் காடனார்' எனப்பெற்றனர். குமரிமாவட்டத்தும், தஞ்சை மாவட்டத்தும் 'இடைக்காடு' என்ற பெயருடைய ஊர்கள் உள்ளன. இவற்றுள் ஒன்றினைச் சார்ந்தவர் இவர் ஆவர்.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியவராதலால் அக்காலத்தை ஒட்டி வாழ்ந்தவர் ஆகலாம். இப்பாடல்கள் இரண்டும் முல்லைத்திணையைச் சார்ந்தவை. பாசறை முற்றிய தலைமகன் தன் நெஞ்சிற்கும், பாகற்கும் சொல்லியதாக அமைந்தவை. 374ஆவது செய்யுளுள், கார்காலத்து வருகையினை இவர் கூறியுள்ள நயம் அறிந்து இன்புறற்பாலது ஆகும். காயாஞ் செம்மலிடையே தம்பலப் பூச்சிகள் ஓடுவது, 'மணிமிடை பவளம் போலத் தோன்றும்' என்ற வருணனை, இவ்விரு (304, 370) செய்யுட்களிலும் இவராற் கூறப்பெற்றிருத்தலையும் நாம் காணலாம்.

## இடையன் சேந்தங் கொற்றனார் (375)

இடையன் செங்கொற்றனார் எனவும் இவர் பெயர் வழங்கும். இடையர் மரபினர் என்பதனைப் பெயரமைதி உணர்த்தும். 'கொற்றனார்' என்ற சொல், இவர் பேராண்மை மிக்கவர் என்பதனை உணர்த்துவதாம். இவர் செய்யுளுள் சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி என்பவன் செம்புறழ் புரிசைப் பாழியை அழித்து, வம்ப வடுகர் பைந்தலை சவட்டி வென்ற செய்தி கூறப்பெறுவதனைக் காணலாம். இதனால், இவரையும் அந்தப் போரில் சோழனுக்கு உறுதுணையாக விளங்கிய சிறப்பினர் எனக் கருதலாம். இந்தச் செய்யுள் ஒன்றுமட்டுமே இவராற் செய்யப் பெற்றதாகச் சங்கத்தொகை நூற்களுள் காணக் கிடைப்பதாகும். ஆறலைக்கும் கள்வருடைய இயல்பினை, 'அம்புதொடை அமைதிகாண்பார், வம்பலர் கலனியர் ஆயினும் கொன்று புள்ளூட்டும் கல்லா இளைஞர்' என உரைக்கும் திறத்தினை இவர் செய்யுளுட் காணலாம்.

## இம்மென் கீரனார் (393)

'கீரனார்' என்ற சொல் இவரைக் கீரர் குலத்தவர் எனக் காட்டும். மற்றும் இவருடைய இயற்பெயர் யாதும் அறிதற்கு இயலவில்லை. சங்கறுக்கும் தொழிலோராக விளங்கி வந்தவர் இக்குலத்தினர். இச்செய்யுள் ஒன்றே இவர் பெயராற் காணப்பெறுவது. இதன்கண், 'நும்மோன் செய்த கொடுமைக்கு இம்மென்று அலமரல் மழைக்கண் தெண்பனிமல்க' என்று தலைவி கூற்றாக இவர் கூறுவது கொண்டு இவரை 'இம்மென் கீரனார் என்று குறித்தனர் போலும். தலைமகள், தலைமகனின் வரையினின்றும் போந்த ஆற்றொடு புலந்து, 'நின்னொடு புலத்தல் அஞ்சி, அவர் மலைப் பன்மலர் போர்த்து, நாணுமிக ஒடுங்கி மறைந்தனை! எந்தை பல்பூங்கானத்து அல்கி இன்றிமண் சேர்ந்தனை செலினே, சிதைகுவது உண்டோ?' எனக் கூறுவதாக அமைந்த நயத்தினைக் கற்று மகிழ்க.'

## (மதுரை) ஈழத்துப் பூதன்தேவனார் (307)

ஈழநாட்டைச் சார்ந்தவராக மதுரைக்கண் வந்திருந்து சங்கத்தமிழ்ச் சான்றோருள் ஒருவராகிச் சிறந்த புலமையாள ராகத் திகழ்ந்தவர் இவர். 'பூதன் தேவனார்' என்றலால் இவர் 'தெய்வப்பெயர் பெற்றவர் எனக் கருதுவர் இவராற் பாடப் பெற்றவன் பசும்பூண் பாண்டியன் ஆவான். இவர் செய்யுட் களாக, அகத்துள்ளும் குறுந்தொகையுள்ளும் மும்மூன்றும், நற்றிணையுள் ஒன்றும் காணப்படும். சிலர் இவரைப் பௌத்த சமயத்தினர் எனவும் கருதுவர். 'கடவுள் போகிய கருந்தாள் கந்தத்து' என இவர் குறிக்கும் செய்தி, அந்நாளிற் கந்தத்துக் கடவுளை மேற்கொண்டு மக்கள் போற்றிவந்த தன்மையினை நமக்கு உணர்த்தும். மணிமேகலையுள் கூறப்பெறும், 'கந்திற் பாவை' செய்தியினையும் இதனோடு ஒப்பிட்டுக் கண்டால், இந்தக் கந்திற் கடவுளைப் போற்றும் மரபின் பழைமை உறுதிப்படுவதாகும்.

## உலோச்சனார் (330, 400)

இவருடைய பெயரமைதி இவரை நெய்தற் பகுதியைச் சார்ந்தவர் எனவும், பரதவர் குலத்துப் பைந்தமிழ்ச் சான்றோர் எனவும், காட்டும் அதற்கேற்ப இவருடைய செய்யுட்கள் நெய்தல் திணையினைச் சார்ந்தவையாகப் பெரும்பாலும் விளங்கு தலையும் நாம் காணலாம். பொறையாற்றுப் பெரியன் என்பானும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் இவராற் பாடப் பெற்றோர் ஆவர். சங்கத்தொகை நூற்களுள் இவர் பாடியவையாக 35 செய்யுட்கள் காணப்பெறும், தேரின் செலவினைக் கடலிற் சென்று படிப்படியே கண்ணுக்கு மறையும் படகினைப்போல' என்றதும், 'தலைவனோடு தன் நெஞ்சம் தூது சென்றதாக' உரைக்கும் தலைவியின் தன்மையும், 'அலர் உரைத்துப் பழித்த ஊர், தலைவன் வரைந்து வரக் கண்டு புதிய களிப்புடன் திகழ, அது கண்டு நகைகொள்ளும்' கன்னியரின் தன்மையும், பிறவும், இச்செய்யுட்களுள் சுவையுற விளங்கக் காணலாம்.

## உறையூர் முதுகூத்தனார் (329)

உறையூர் முதுகூற்றனார் எனவும் இவர் பெயர் வழங்கும்; முதுகொற்றனார் எனவும் காணப்பெறும். சங்கத் தொகை நூற்களுள் இவர் செய்தவாக விளங்குபவை எட்டுச் செய்யுட்கள் ஆகும். சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியின் தந்தையாகிய வீரை வேண்மான் வெளியன் தித்தனை, நற்றிணை ஐம்பத்தெட்டாவது செய்யுளுட் பாடியிருத்தலால் அவன் காலத்தவர் எனலாம். உறையூர்ப் பங்குனி முயக்கத் திருநாட் சிறப்பினை இவர் செய்யுளுள், நன்கு விளங்கியிருப்பக்

காணலாம். இச்செய்யுளுள், 'புலிக்குட்டியானது, நீருண்ணலை விரும்பித் துதிக்கையை நீரிலே இட்ட களிற்று யானையின் கையினைக் கடித்து முழக்கமிடும் வறுஞ்சுனை' எனக்கூறும் சிறப்பினைக் காணலாம். காட்டகத்துக் குடியிருப்புக்கள், 'குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர்' என்ற இவர் சொற்களாற் புலனாதலைக் காண்க.

## ஊட்டியார் (388)

இவர் பாடியவை இச்செய்யுளும் அகநானூற்றுக் களிற்றியானை நிரையின் 68ஆவது செய்யுளும் ஆகும். 'ஊட்டியன்ன ஒண்தளிரச் செயலை என அதனிடத்தும், 'ஊட்டியன்ன ஊன்புரள் அம்பொடு' என இந்நூலின் 388 ஆவது செய்யுளிடத்தும் வருவனகொண்டு, இவரை ஊட்டியார் என்றனர் ஆகலாம். 'இரவுக்குறியிடம் நோக்கிச் செல்லும் தலைமகள், அன்னை உறங்கியதனை அறிய முயலும் தன்மையை விளக்குவது களிற்றியானை நிரைச் செய்யுள் (68). இச் செய்யுளுள், அன்னை வெறியாடலுக்கு ஏற்பாடு செய்தலைக் குறித்து, வேலன் 'எம்மிறை வணங்கலின் இந்நோய் வந்தன்று தணிமருந்து அறிவல் என்னுமாயின், நும்மிறை... ஊட்டியன்ன ஊன்புரள் அம்பொடு காட்டுமான் அடிவழி ஒற்றி வேட்டம் செல்லுமோ என வினவின் எவனோ?' எனத் தலைமகள் கேட்பதாக வருவது மிக்க நயம் உடையதாகும்.

## எயினந்தை மகனார் இளங்கீரனார் (361, 371, 395, 399)

வேட்டுவக் குடியினரான இவர், 'எயினந்தையார் என்னும் தமிழ்ச் சான்றோரின் மகனாராவார். 'எயினந்தை' என்ற சொல் இவரை வேட்டுவ மரபினராகக் காட்டுவது போன்று. 'கீரனார்' என்ற சொல், நக்கீரனார்போல இவரும் சங்கறுக்கும் குலத்தினர் எனக் காட்டுவது ஆகும். இவர் பாடியவையாகச் சங்கத்தொகை நூற்களுள் பதினாறு செய்யுட்களைக் காணலாம். 'உதியன், பாறையன் ஆகிய சேரர்கள் இவராற் பாடப்பெற்ற சிறப்பின ராவர். தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண், மாயிதழ்க் குவளை மலர் பிணைத்தன்ன, திருமுகத் நலமரும் பெருமதர் மழைக்கண்', 'வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும் கவவுப் புலந் துறையும் கழிபெருங் காமத்து இன்புறு நுகர்ச்சியில் சிறந்த தொன்றில்லென' தண்கயம் பயந்தவண்காற் குவளைமாரி மாமலர்; பெயற்கேற்றன்ன, நீரொடு நிறைந்த பேரமர் மழைக் கண்; 'அழன் மேய்ந்து உண்ட நிழல்மாய் இயவு'; 'பருகுவன்ன காதல் உள்ளமொடு திருகுபு முயங்கல்' என விளைப்பவாம். இயற்கை எழிலை நுண்மையாகக் கண்டு உவமித்துக் கூறும் ஆற்றலாற் சிறந்தவர் இவரென்பதையும் இவை காட்டுவனவாம்.

## ஒக்கூர் மாசாத்தியார் (324, 384)

ஒக்கூர், பாண்டி நாட்டுத் திருக்கோட்டியூருக்கு அருகாமையில் இன்றும் விளங்கும் ஊராதலைக் காணலாம். இதன் கண் பிறந்து தமிழ்ப் புலமையாளராகத் திகழ்ந்த பெண்பாலர் இவர் ஆவார். இவ்வூரினரான மற்றொருவர், ஒக்கூர் மாசாத்தனார் ஆவர். அவர் பெயரை இவர் பெயருடன் ஒப்பிட்டுக் கருதுமிடத்து இவருவரும் உடன் பிறந்தவராதலும் புத்த நெறியினராதலும் புலப்படக் காணலாம். இந்நூலுள் விளங்கும் செய்யுட்கள் இரண்டும் முல்லைத் திணையைச் சார்ந்தவை. 'தளிரியற் கிள்ளை இனிதின் எடுத்த வளராப் பிள்ளைத் தூவியன்ன, வார் பெயல் வளர்த்த பைம்பயிர்; நேமிதண்ணில மருங்கிற் போழ்ந்த வழியுள், நிரைசெல் பாம்பின் விரைவு நீர் முடுக' என வரும் சிறந்த உவமைகளும், தலைவன் பாகனைப் பாராட்டும் பாங்கும், இவற்றுள் சுவையுறக் கூறப்பெற்றிருத்தலைக் காணலாம். 384 ஆவது பாடலைக் குடவாயிற் கீரத்தனார் பாடியதாகவும் கூறுவர். அவரைப் பற்றிய குறிப்பினைப் பிறிதோரிடத்துக் காண்க.

## ஓரம்போகியார் (316)

ஐங்குறு நூற்றின் மருதத்தைப்பற்றிய நூறு செய்யுட்களைச் செய்தவர் இவர். பிற சங்கத் தொகை நூற்களுள் இவர் பாடியவாகக் காணப்படுவன எட்டுச் செய்யுட்கள் ஆகும். ஆதன் அவினி, இருப்பையூர் விராஅன், பாண்டியன் சோழன், மத்தி முதலானோரைப் பாடியவர். இந்நூலில் வரும் செய்யுளும் மருதத்திணைச் செய்யுளே யாகும். இச்செய்யுளுள், தலைமகன் பரத்தைமை கண்டு ஊடியிருக்கும் தலைவிக்கு, அவனுக்கு இசைய வேண்டிய கடமையை நயமாகத் தோழி எடுத்துக் கூறுவதனைக் காணலாம். தலைவனோடு நெடுக ஊடினவர், 'செய்யோள் நீங்கச் சில்பதங்கொழித்துத், தாமட்டுண்டு தமியராகித், தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப, வைகுநர் ஆவர்' எனக்கூறும் துயர நிலையினை அறிதல் வேண்டும்.

## ஔவையார் (303)

பாணர் மரபினரான இவர், அதியமான் நெடுமான் அஞ்சிக்கு நெருங்கிய அன்புடைய தமிழ்ச் சான்றோராகத் திகழ்ந்தவர். அஞ்சாமையும் அறிவுத்திறனும் கொண்ட தமிழ்ச் செவ்வியராகி, அந்நாளிற் புலவரும் புரவலரும் போற்றிப் பாராட்டப் புகழுடன் விளங்கியவர். நாஞ்சில் வள்ளுவன், தொண்டைமான், சேரமான் மாரி வெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகிய பலரையும்

பாடியவர். இவரும், ஆத்திச்சூடி முதலியன பாடியவரும், கம்பர் காலத்தவரும் வேறு வேறாவார்கள். இச்செய்யுளுள், பாரியின் பறம்பு முற்றுகையின்போது, கபிலர் குருவிகளைப் பயன்படுத்திக் கதிர் கொணரச்செய்து பசிபோக்கிய செய்தியினைக் குறிப்பிட்டுள்ளனர். 'புலங்கந்தாக இரவலர் செலினே வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும் உரைசால் வண்புகழ்ப் பாரி' எனப், பாரியும் இதன்கண் போற்றப் பெற்றுள்ளனன்.

## கபிலர் (318, 332, 382)

வேள் பாரியின் கெழுமிய நட்பினராகவும், 'பொய்யா நாவிற் கபிலன்', 'அந்தணாளன் கபிலன்' எனவெல்லாம் ஆன்றோர் போற்றும் உயர்ந்தோராகவும் விளங்கிய அந்தணாளர் இவராவர். பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்தைப் பாடிச் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பெரும் பரிசில் பெற்றவர் இவர். சங்கத்தொகை நூற்களுள் 235 பாடல்களைப் பாடியவராக, அதிகமான செய்யுட்கள் செய்த சான்றோராகத் திகழ்பவர் இவரே. பத்துப்பாட்டின் குறிஞ்சிப் பாட்டும், கலித்தொகையின் குறிஞ்சிக் கலியும், ஐங்குறு நூற்றின் குறிஞ்சி பற்றிய நூறும் இவரியற்றியவை. இவர் வேறு; தொல் கபிலர் என்பார் வேறு. பாரியின் இறப்பிற்குப் பின்னர், பாரிமகளிர்க்கு உறுதுணையாகிக் காத்து வந்து, பின் அவர்களைத் தக்கவர்பால் ஒப்பித்துவிட்டு, வடக்கிலிருந்து உயிர் துறந்த சான்றாளரும் இக்கபிலர் ஆவர். இந்நூலுள் வந்துள்ள செய்யுட்களுள், காதலனின் இரவு வருகையைத் தடைசெய்ய நினைப்பவள், 'காட்டினைக் கடந்து நீ நின்னூர் சென்று சேர்ந்தபின், நாய்பயிர் குறிநிலைகொண்டு ஊதல் வேண்டுமாற் சிறிதே' என வேண்டுவதும் (318),

'அமிழ்தத் தன்ன கமழ்தார் மார்பின் வண்டிடைப் படாஅ முயக்கமும், தண்டாக் காதலும் தலைநாள் போன்மே' எனத் தலைவி, தோழியிடத்துத் தானுற்ற இன்பத்தைச் சிறப்பித்துக் கூறுதலும் (332).

'பிறருறு விழுமம் பிறரும் நோப, தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்' என நுவலும் சான்றோரின் இயல்பும், (382) பிறவும், மிக்க நயம் உடையவனவாகும்.

## கயமனார் (321, 383, 397)

இவர் பாடியவாகச் சங்கத்தொகை நூற்களுள் காணப் பெறுவன 23 செய்யுட்கள் ஆகும். குறுந்தொகையின் ஒன்பதாவது செய்யுளுள், 'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல் இனமீன் இருங்கழி ஓதம் மல்கு தொறும், கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்' என்றுரைத்த நயம்பற்றி, இவரைக் கயமனார் என்றனர் ஆன்றோர். அன்னி என்பவன் குறுக்கைப்

பறந்தலையில் வெற்றிகொண்டு திதியனின் காவன் மரமான புன்னையை வெட்டிய செய்தியை இவர் (அகம் 145) கூறுவதனால், அவர்கள் காலத்தவர் எனலாம். அம்மன் கோயிற் பூசாரியாக முதுகுயவர்கள் விளங்கினர் என்ற செய்தி இவரது நற்றிணைச் செய்யுளாற் (293) புலனாகும். மகட்போக்கிய தாயும் செவிலியும் புலம்புதலாக வரும் இந்நூற் செய்யுட்கள் தாய்மையின் பெரும்பிணிப்பினைக் காட்டுவனவாகும்.

## கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார் (309)

கொங்கு நாட்டுக் கருவூரைச் சார்ந்த புலவர்களுள் இவரும் ஒருவர். கதப்பிள்ளைச் சாத்தனார் எனவும் வழங்கப் பெறுவர். பெயரினாலே, இவரோர் புத்த சமயத்தவராக இருக்கலாம் என்பர். இவர், பிட்டங் கொற்றன் என்பான் ஒருவனையும், வானவனாகிய சேரனையும் பாடியவர். பிட்டங் கொற்றனைப் பாடியோர் உறையூர் மருத்துவன் தாமோதரனார், வடமவண்ணக்கன் தாமோதரனார், காவிரிப் பூம்பட்டினத்துக் காரிகண்ணனார் ஆகியோரும். ஆகவே, இவரும் அப்புலவர்கள் காலத்தவர் ஆகலாம். இச்செய்யுளுள், 'கூத்தர்கள் பெரும் படைக் குதிரை நற்போர் வானவனின் திருந்துகழற் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு' என, அவனுடைய வள்ளன்மையைக் குறித்துள்ளனர். 'வேப்பமரத்திலே சார்ந்திருக்கும் தெய்வமும், அதற்கு மறவர் ஆப்பலி இட்டு வழிபடும் செய்தியும்' இதனிடத்து இவராற் சொல்லப்பட்டுள்ளன.

## கல்லாடனார் (333)

'கல்லாடம்' என்னும் பாண்டிநாட்டு ஊரினர் இவர் என்பர். தொல்காப்பிய உரை ஆசிரியர்களுள் இவரும் ஒருவர் என்பர். சங்கத்தொகை நூற்களுள் இவர் பாடியவாகப் பதினான்கு பாடல்களைக் காணலாம். அம்பர்கிழான் அருவந்தை, முள்ளூர் மன்னன் காரி, ஓரி, அஃதை, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் புல்லி, களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் ஆகியோர் இவராற் பாடப் பெற்றோராவர். 'கல்லாடம்' இயற்றிய கல்லாடர் வேறு; இவர் வேறு. பதினோராம் திருமுறைப் பாடல்களைப் பாடியவர் இவ்விருவரினும் வேறானவர் ஆவர்.

## காவட்டனார் (378)

இவர் பாடியவாகக் காணப்பெறுவன சங்கநூற்களுள் இரண்டு செய்யுட்கள் ஆகும். இவராற் பாடற்பெற்றோன் அந்துவன் கீரன் என்போன்ஆவன். 'காவட்டு' என்பது தோளின் இருபுறத்தும் சம எடையிற் சுமை தூங்க, இரண்டையும் இடையிலே மூங்கிற்கோலால் இணைத்துத் தாங்கிச் செல்லும்

நிலையாகும். அங்ஙனம் இருபாலும் சமனுற்ற நிலையிலே அறநெறி பேணியமைபற்றி இப்பெயர் பெற்றார் போலும். இந்நூற் செய்யுளுள் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி, அவன் மலைச்சிகரங் கண்டு ஆற்றியிருத்தலான செய்தி கூறப்படுகின்றது.

## காவன் முல்லைப் பூதனார் (391)

பூதனார் என்னும் இயற்பெயரினையுடைய இவர் காவன் முல்லைத் துறைபற்றிய செய்யுட்களை இயற்றுவதில் சிறப்புடையவராகத் திகழ்ந்தமை பற்றி இப்பெயர் பெற்றனர் எனலாம். சங்கத்தொகை நூற்களுள் இவர் பாடியவாக வருவன எட்டுச் செய்யுட்கள் ஆம். பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்வதாக அமைந்த இந்நூற் செய்யுளில், 'யானைதன் வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை குன்றுபுகு பாம்பிற் றோன்றும்' என அழகாகக் கூறியுள்ளனர். 'காவன் முல்லை என்றதால், முல்லை நிலத்துக் காவல் பூண்டிருந்த ஒருவர்' என்ற நினைவும் எழலாம்.

## குடவாயிற் கீரத்தனார் (315, 345, 366, 385)

தஞ்சை மாவட்டத்துக் கொரடாச்சேரிக்கு வடதிசையில் ஏழாவது கல்லிலே 'கொடவாசல்' என்ற பெயருடன் இந்நாளில் ஓர் ஊர் வழங்குகின்றது. இவ்வூரில் தோன்றிய புலவர் இவராவர். கழுமலப் பெரும்போரும்; சோழர் குடந்தைக் கண்ணே வைத்த பெருநிதியினைப் பற்றிய செய்தியும்; பெரும்பூட் சென்னி, பொறையன், நன்னன், எவ்வி, அத்தி, பழையன், புன்றுறை, வழுதி, கணையன், கட்டி ஆகியோர் பற்றிய செய்திகளும்; மற்றும் பலவும் இவராற் கூறப்பெற்றுள்ளன. 'பெரும் பெயர் வழுதி கூடல் அன்ன தன் அருங்கடிவியனகர்' (315), 'இளமழை தவழும் ஏழிற்குன்றம்' (345) 'கள்ளர் களமர்..... கழனி உழவரோடு மாறெதிர்ந்து மயங்கி இருஞ்சேற் றள்ளல் எறிசெரு' (366), 'கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர் காவிரிப் படப்பை உறந்தையன்ன பொன்னுடை நெடுநகர்' என்றெல்லாம் சுவைபடக் கூறுவனவற்றை இந்நூலிற் காணலாம். மகட்போக்கிய செவிலித் தாய் சொல்லியது என்ற வகையிலே அமைந்த இவரது 385 ஆவது செய்யுள் மிகவும் உள்ளத்தை உருக்குவதாக அமைந்துள்ளது. 'பொன்னுடை நெடுநகர்ப் புரையோர் அயர, நன்மாண் விழவில் தகரம் மண்ணி ஆம்பல புணர்ப்பச் செல்லாள்.. தானமர் துணைவன் ஊக்க ஊங்கி, உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்ச் சிறுவன்கண்ணி சிலம்புகழீஇ, அறியாத் தேயத்தள் ஆகுதல் கொடிதே' என்று வருந்தும்போது (385), அவளுடன் சேர்ந்து நாமும் வருந்தத் தோன்றுகிறது.

## சேந்தங் கண்ணனார் (350)

*இவர் இயற்பெயர் கண்ணனார் எனவும், சேந்தன் என்பவரின் மகனார் இவரெனவும் கருதலாம். 'கண்ணன்' என்ற பெயருடையார் சங்ககாலத்துப் பலராவர். அவர்களுள் வேற்றுமை காட்டச் சேந்தன் என்ற அடைமொழியுடன் வழங்கினர் போலும்! இவர் பாடிய செய்யுட்களாகச் சங்க நூற்களுள் இரண்டு காணப்பெறும். இந்நூற் செய்யுளுள், கொற்கைத் துறையிலே முத்தெடுக்கும் செய்தியைக் குறித்து, 'இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி, வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர், ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக் கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்' என்று சொல்வது, மிகவும் நயம் உடையதாகும்.*

## தங்கால் முடக்கொற்றனார் (355)

*பாண்டி நாட்டுத் திருத்தங்கால் என்னும் ஊரினராகப், பெரும் புலமைச் செறிவுடையாராக விளங்கியவர் இவர். தங்கால் முடக்கோவனார் எனவும், முடக் கொல்லனார் எனவும் இவர் பெயர் வழங்கும். இவர் பாடியவையாகச் சங்க நூற்களுள் ஆறு செய்யுட்கள் காணப்பெறும். பருத்திப் பெண்டின் செய்தியைச் சுவைபடக் கூறியதும், காந்தளின் நறுமலரில் ஆடுந் தும்பியானது கையாடும் வட்டில் போலத் தோன்றும் என்பதும் இவரால் நயமுடன் சொல்லப் பெற்றன. இச்செய்யுளுள், வேனிலின் வருகையை நயமுடன் கூறியிருக்கின்றனர். 'யாமே எமியம் ஆக, நீயே பொன்நயந்து அருளிலையாகி இன்னை யாகுதல் ஒத்தன்றால் எனப் புலந்தனம் வருகம்' எனத் தலைவி கூறுவதன்கண். அவளுடைய பிரிவு ஆற்றாமையின் மிகுதியினை நாம் நன்கு காணலாம்.*

## தாயங் கண்ணனார் (319, 357)

*சோணாட்டு எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் எனவும் இவர் வழங்கப்பெறுவர். எருக்காட்டூர், தஞ்சை மாவட்டத்து நன்னிலப் பகுதியில் உள்ளதாகும். தமிழர் யவனர் வணிகத் தொடர்பையும், மற்றும் பல வரலாற்றுச் செய்திகளையும் இவர் செய்யுட்களுள் நாம் காணலாம். 'கொய்குழைத் தளிரேர் அன்ன தாங்கரும் மதுகையள்; மெல்லியள்; இளையள்; நனிபேர் அன்பினள்; செல்வேம் என்னும் நும்மெதர் ஒழிவேம் என்னும் ஒண்மையோ இவளே'எனத் தலைவியின் நிலையையும் (319), 'உம்பற் பெருங்காடு இறந்தனராயினும் யாழ! நின் திருந்திழைப் பணைத்தோள் வருந்த நீடி உள்ளாது அமைதலோ இலரே' எனத் தோழி தேற்றுவதும் (357) இந்நூற் செய்யுட்களுள் நயமுற இவராற் சொல்லப்பட்டுள்ளன.*

## நக்கீரனார் (310, 340, 346, 369, 389)

நக்கீரனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார், மதுரை நக்கீரனார் என்றெல்லாம் இவர் பெயர் காணப்பெறும். திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்னும் இரு முழு நூற்களையும், சங்கத் தொகை நூற்களுள் மேலும் 35 செய்யுட்களையும் பாடியவர் இவர். இறையனார் களவியலுக்குத் திட்பநுட்பஞ் செறிந்த உரையினை ஆக்கி, அதனை அரங்கேற்றிய சிறப்பினை உடையவரும் இவர் ஆவர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கரிகாற்சோழன், இருங்கோ வேண்மான் ஆகிய பலர் இவராற் பாடப்பெற்றவர் ஆவர். இவர் வேறு; நக்கீர தேவ நாயனார் என்ற பெயருடன் பதினோராம் திருமுறைக்கண் வரும் நூற்களைப் பாடியோர் வேறு.'செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன் பல்பூங் கானற் பவத்திரி, 'வடவர் தந்த வான் சேழ்வட்டம் குடபுல உறுப்பிற் கூட்டுபு நிகழ்த்திய வண்டிமிர் நறுஞ்சாந்து' *(340);* 'மாடமலி மறுகின் கூடல் ஆங்கண், வெள்ளத்தானையொடு வேறுபுலத் திறுத்த கிள்ளிவளவன் நல்லமர் சாஅய்க், கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி ஏதின் மன்னர் ஊர்கொளக் கோதை மார்பன் உவகையிற் பெரிதே' *(346),* 'கடலந்தானைக் கைவண் சோழர் உறந்தையன்ன நிதியுடை நன்னகர்' *(369);* பல்பூஞ் சேக்கையிற் பகலும் துஞ்சார் மனைவயின் இருப்பவர். வானவரம்பன் நன்னாட்டு உம்பர்... மலையிறந்தோரே *(389)* என்பன போன்ற பல சிறந்த செய்திகளையும் கருத்துக்களையும் இந்நூலில் வரும் இவர் செய்யுட்களுள் கண்டு இன்புறலாம்.

## நரைமுடி நெட்டையார் (339)

நிறைமுடி நெட்டையார் எனவும் இவர் பெயர் வழங்கும். இவர் பாடியதாகக் காணப்பெறும் சங்கச் செய்யுள் இஃது ஒன்றேயாகும். உருவால் நெடியரராயும், இளமையிலேயே நரைமுடி பெற்றவராயும் இருந்த காரணம் பற்றி இங்ஙனம் குறித்தனர் போலும். இந்தச் செய்யுள் காதற் செவ்வியினை மிகவும் சிறப்புற விளங்குவதாகும். 'யாக்கைக்கு உயிர் இயைந்தன்ன நட்பின், அவ்வுயிர் வாழ்தல் அன்ன காதல்; சாதல் அன்ன பிரிவு' என்ற சொற்களை எண்ணியெண்ணி இன்புறலாம். மற்றும் 'ஆண்மைவாங்கக் காமந்தட்பக், கவைபடுநெஞ்சம் கட்கண் அசைய இருதலைக் கொள்ளி யிடைநின்று வருந்தி, ஒருதலைப் படாஅ உறவி போன்றனம்' என்னும் தலைவனின் உள்ளமும் மறவாது நினைத்தற்கு உரியதாகும்.

## நன்பலூர்ச் சிறுமேதாவியார் (394)

நன்பலூர் என்னும் ஊரினராகச் சிறு வயதிலேயே அறிவுத் திட்பத்துடன் விளங்கி, அதனால் இப்பெயர் பெற்றவர்

இவராவர். 'கணி மேதாவியார்' என்றாற்போல வரும் பெயர் வழக்குக்கள் இதனை உணர்த்துவனவாம். இச்செய்யுளின் கண், 'ஈயல் பெய்து அட்ட இன்புளி வெஞ்சோறு' ஆக்குவதனை இவர் முறையாகக் கூறியுள்ளனர். காடுறை இடையன் யாடு தலைப்பெயர்க்கும் மடிவிடு வீளைவெருவிக் குறுமுயல் மன்ற இரும்புதல் ஒலிக்கும்' என்ற செய்தியின் அமைதி, இவரையும் முல்லைநிலத்தவர் எனக் கருதுமாறு நம்மைத் தூண்டுகின்றது.

## பரணர் (322, 326, 356, 367, 372, 386, 396)

இவர், பாணர் மரபினராகக் கபிலரோடு சேர்த்துக் கபில பரணர் எனப் பாராட்டும் புகழுடையவராகத் திகழ்ந்த சான்றோர் ஆவர். கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி, சேரமான் கடலோட்டிய வெல்கெழு குட்டுவன், குடக்கோ நெடுஞ் சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி ஆகியோரும் மற்றும் பலரும் இவராற் பாடப்பெற்ற சிறப்பினராவர். பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தினைப் பாடிச் சேரமான் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனிடம் உம்பற் காட்டு வாரியையும், அவன் மகன் குட்டுவன் சேரனையும் பரிசிலாகப் பெற்றவர் இவராவர். இந்நூற் பாக்களுள், திதியன் (322), போஓர் கிழவோன் பழையன் (326), வல்லம் கிழவோன் (356), அதியமான் அஞ்சி (372), அத்தியைக் காவிரி கொண்டது (376). குட்டுவனின் மாந்தைச் சிறப்பு (376). பாணனும் ஆரியப் பொருநனும் ஆற்றிய மற்போரிடைக் கணையன் நாணியது (386). ஆஅய் எயினன் மிஞிலியொடு தாக்கித் தன்னுயிர் கொடுத்தது (396) எனப் பல்வேறு வரலாற்றுக் குறிப்புகளைக் காணலாம். செங்குட்டுவனின் வடபுலப் போரெழுச்சியை உரைப்பார் போன்று, 'ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத் தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் வஞ்சி என இவர் கூறுவது, சிலப்பதிகாரச் செய்தியை அரண்செய்து சான்று பகர்வதைக் காணலாம்.

## புறநாட்டுப் பெருங் கொற்றனார் (323)

இவரைப் புறநாட்டுப் பெருங்கொற்றனார் எனவும் வழங்குவர். பெருங்கொற்றனார் என்பாருள் இவரைத் தனித்துக் குறிக்க இப்பெயரடை தந்தனர் போலும். பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி காலங்காட்டி வற்புறுத்தும் முறையிலே அமைந்த இச்செய்யுள் சுவையுடையதாகும். 'கற்பு மேம்படுவி' எனத் தலைவி குறிக்கப்படுவது மிக்க நயமுடன் அமைந்துள்ளதனைக் காண்க.

## பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் (373)

இச் செய்யுளும் குறுந்தொகையின் 156ஆவது செய்யுளும் பாடியவர் இவர். கண்ணனார் இயற்பெயராகலாம். நெடுங் கண்ணனார் என இவரது உயர்வு போற்றப் பெற்றிருக்கலாம். 'ஏனாதி' படைத்துறைப் பொறுப்புக்களுள் ஒன்று. இதனாற் பாண்டியர் படையணிகளில் ஏனாதியாராகத் திகழ்ந்த நெடுங் கண்ணனார் இவரெனக் கொள்க. 'அண்ணல் யானை அடுபோர் வேந்தர் ஒருங்ககப்படுத்த' முரவுவாய் ஞாயில் ஓரெயில் மன்னன் போலத் துயில் துறந்தனள் கொல்? என்னும் இவர் சொற்கள், இவருடைய படைத்தொழில் அநுபவத்தி னின்றும் எழுந்தன வாகலாம். 'தாழ்கை பூட்டிய தனிநிலை இருக்கை எனத், தலைவன் இருந்த நிலையினைக் கூறும் நுட்பமும் அறிந்து போற்றத்தக்கதாகும்.

## பாலைபாடிய பெருங்கடுங்கோ (313, 337, 379)

பாலைத்திணைச் செய்யுட்கள் இயற்றுவதில் வல்லமை உடையவராய இவர், சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதனின் மகனாகப் பிறந்து, தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையாகத் திகழ்ந்தவர் என்பர். பாலைக்கலியும் மற்றும் 23 செய்யுட்களும் இவராற் செய்யப்பெற்றவை. பேய் மகள் இளவெயினியார் பாடல் (புறம் 11) இவரை அரசரெனவும், இரவலரைப் புரக்கும் வள்ளலெனவும் உரைக்கும். பொருளின் தன்மையினைக் 'கிழவர் இன்னோர் என்னாது பழவினை மருங்கிற் பெயர்பு பெயர்பு உறையும்' எனவும், ஆள்பவரின் முறைகேட்டால் நாடு சீர்கெடும் என்பதனை, 'ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடு' எனவும் பாடிய சான்றாளர் இவர் ஆவர். 'அரவு நுங்கு மதியின் நுதவொளி கரப்ப', நிதயஞ் சொரிந்த நீவிபோலப் பாம்பூன் தேம்பும் வறங்கூர் கடம், 'ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல், (313) 'தூதொய் பார்ப்பான் மடிவெள்ளோலை' (337) 'மரிதியஞ் செல்வம் பொதுமையின்றி நனவின் இயன்றதாயினும், கங்குற் கனவின் அற்றது அதன் கழிவே' (379) என இந்நூற் செய்யுட்களுள்ளும் இவர் நயம்பட உரைப்பவற்றை அறிந்து இன்புறுக.

## பாவைக் கொட்டிலார் (336)

இவர் பாடியது இச்செய்யுள் ஒன்றேயாகும். கொட்டில் என்பது ஒருவகைக் குடிலாகும். மாட்டுக்கொட்டில் என இன்றும் வழங்குதலை நினைக்க கொட்டிற்கண் வாழ்வாராகப் பாவை செய்து சிறுமியர்க்குஅளித்து வந்தவராக இவர் விளங்கினார் போலும். அன்றிப் பாவை வழிபாடு மேற்கொண் டிருந்தவரும் ஆகலாம். 'மாரியம்பின் மழைத்தோற் சோழர் வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை ஆரியர் படையின் உடைக

வென் வளையே' என்பதிலிருந்து, ஆரியரைச் சோழர் வெற்றி கொண்ட போர்ச் செய்தியினை நாம் இவர் செய்யுளால் அறிகின்றோம்

## பிசிராந்தையார் (308)

பாண்டி நாட்டவரான இவர், நட்புக்கு இலக்கணமாகத் திகழ்ந்த சான்றாளரும், புலமையாளருமாக விளங்கியவர் ஆவர். கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்தபோது உளத்தாற் கலந்த நட்புடைய இருவரும் சென்று வடக்கிருந்து உயிர் துறந்தவர். அறிவுடை நம்பிக்கு இவர் சொல்லிய அறமும் (புறம். 184), நரையிலவாதற்கு இவர் கூறும் காரணமும் (புறம். 191), மிகவும் நுட்பம் வாய்ந்தவையாகும். 'வருவன என்ற கோனது பெருமையும், அது பழுதின்றி வந்தவன் அறிவும், வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்தன்றே' என்று இவருடைய அறிவுத் திறத்தைப் பாராட்டுவர் பொத்தியார் (புறம் 271). இச்செய்யுளின் கண், 'மலையருகிலஞ்சுடு மட்கலத்தைச் சுட்டுச்செய்யும் தொழில் நன்கு நிலவியதனை நாம் அறியலாம்.

## பொருந்தில் இளங்கீரனார் (351)

சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பாடியவர் இவராவர். அகநானூற்று 19ஆவது செய்யுளும் புறநானூற்று 53ஆவது செய்யுளும் இவர் பாடிய பிற செய்யுட்கள் ஆம். இவருடைய அடக்கம் மிகவும் பெரிது. அதனைப் 'பொறைய விரும்பின் அகலும், தொகுப்பின் எஞ்சும் மம்மர் நெஞ்சத்து எம்மனோர்க்கு ஒருதலை கைமுற்றல நின் புகழே; என்றும் ஒளியோர் பிறந்தவிம் மலர்தலை யுலகத்து வாழேம் என்றலும் அரிதே' என்ற இவர் சொற்களாற் காணலாம். 'செய்குறியாழி வைகல்தோறு எண்ணி, எழுது சுவர் நனைத்த அழுதுவார் மழைக்கண்' எனத் தலைவியின் பிரிவுத்துயரை இவர் இச் செய்யுளுட் காட்டுவது மிகவும் நயம் உடையதாகும்.

## மதுரை, அளக்கர்ஞாழார் மகனார் அம்மள்ளனார் (315, 345, 353)

மதுரைக்கண் இருந்தவர் இவர், அளக்கர்ஞாழார் என்பவரின் மகனார். புறநானூற்று 388 ஆவது செய்யுளிற் சிறுகுடி கிழான் பண்ணனைப் பாடியுள்ளனர். இச்செய்யுட்கள் மூன்றனுள் இரண்டு முல்லைத்திணைச் செய்யுட்கள். 353 ஆவது செய்யுள் பாலைத்திணை பற்றியது. "நாளும் கனவுக் கழிந்தனையவாகி, நனவின் நாளது செலவும், மூப்பினது வரவும், அரிதுபெறு சிறப்பின் காமத்து இயற்கையும், இந்நிலை அறியாய் ஆயினும்... சுரனிறந்து உள்ளுவை அல்லையோ?" எனத் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைக்கும் உடனுறை வாழ்வின் செப்பம் சிந்தித்து இன்புறற்பாலதாகும்.

## மதுரை, அறுவை வாணிகன் இளவேட்டனார் (302)

*மதுரைக்கண் அறுவைவாணிகராக விளங்கியவர் இவர். சங்கநூற்களுள் இவருடையவாகப் பன்னிரு செய்யுட்களைக் காணலாம். இவர் பாடல்களுள் பல அரிய செய்திகளையும் காணலாம். இச்செய்யுளுள், 'சிலம்பிற் போகிய செம்முக வாழை, அலங்கல் அந்தோடு அசைவளியுறு தொறும், பள்ளி யானைப் பரூஉப்புறம் தைவரும் நல்வரைநாடன்' என, இயற்கையின் நலத்தை இனிதாக எடுத்தியம்பும் திறனைக் கண்டு போற்றுக.*

## மதுரை, இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் (348)

*சேந்தன் என்பவரின் மகனாராகக் கூத்தன் என்னும் இயற்பெயர் உடையவராக இவரைக் கருதலாம். அன்றிச் சேந்தன் என்னும் இயற்பெயர் உடையவராகக் கூத்து அறிந்தவராக, அதன்கண் ஒரு பகுதிக்கு ஆசிரியத்தொழில் பூண்டவராகவும், கருதப்படுவர். இவராற் பாடப்பெற்றவை சங்க நூற்களுள் மூன்று செய்யுட்கள் ஆகும்.'கொடிச்சி பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக் குரலும் கொள்ளாது, நிலையினும் பெயராது படாஅப் பைங்கண் பாடுபெற்று, ஒய்யென, மறம்புகல் மழகளிறு உறங்கும்' என இவர், குறிஞ்சிப் பண்ணின் இனிமையைக் குறிப்பர். (102 அகம்). இச்செய்யுளில் (348) குறமகளிர் உண்பதற்கான கள்ளினைத் தயாரிப்பது பற்றி விளக்கி உரைத்துள்ளனர் இவர். கள்ளுண்டு காவல் மறந்த நிலையினையும் காட்டிள்ளனர்.*

## மதுரை இளங்கௌசிகனார் (381)

*மதுரையைச் சார்ந்தவரான இவர், பெயரமைதியினால் பார்ப்பனராகக் கொள்ளப்படுபவர் மதுரை இளங்கண்ணிக் கௌசிகனாரினும் வேறுபடுத்திக் காணற்கு இவரை இளங்கௌசிகனார் என்றவர் போலும்! 'எருவைச் சேவலின் ஈண்டுகிளைத் தொழுதி, பச்சூன் கொள்ளை சாற்றிப் பறை நிவந்து, செக்கர் வானின் விசும்பணி கொள்ளும்' எனவும், வானவன் உடற்றிய ஒன்னாத் தெவ்வர் மன்னெயில்போலப் பெரும்பாழ் கொண்டமேனியள் எனவும், 'நிரையிதழ்க்குவளை எதிர்மலர் இணைப்போதென்ன அரிமத மழைக்கண்' எனவும், நயமுற இவர் உரைக்கும் திறத்தினை இச்செய்யுளிற் காணலாம்.*

## மதுரைக் கண்ணத்தனார் (360)

*மதுரைப் புலவர்களுள் இவரும் ஒருவர் ஆவ்ர். கண்ணத்தனார் என்னும் பெயருடையவராகலாம். அந்திவானச் சிறப்பினை, "வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து உருவுடன் இயைந்த தோற்றம்போல" என மிகவும் செறிவுடன்*

கூறியுள்ளனர். இப்பாடலன்றி நற்றிணை 351அவது செய்யுளும் இவர் பெயரான் வழங்குவதாம்.

### மதுரைக் கணக்காயனார் (338, 342)

மதுரையில் கணக்காயனாராகத் திகழ்ந்த சான்றோர் இவராவர். இவருடைய மகனாரே புலவர் தலைவராகத் திகழ்ந்த நக்கீரனார். இவர் பாடியவாகக் காணப்பெறுபவை சங்கநூற்களுள் ஐந்து செய்யுட்கள் ஆகும். 'ஒன்னார் தேயம் பாழ்பட நூறும், துன்னரும் துப்பின் வென்வேற் பொறையன், அகலிருங் கானத்துக் கொல்லி', 'பலர்புகழ் திருவிற் பசும்பூண் பாண்டியன் அணங்குடை உயர்நிலைப் பொருப்பு', 'தொகுபோர்ச் சோழன் பொருண்மலி பாக்கம்' என மூவேந்தரையும் இவர் சிறப்பிப்பர் (338) 'தெனாஅது வெல்போர்க் கௌரியர் நன்னாடு' (342) எனவும், 'முத்துப்படு பரப்பிற் கொற்கை' (நற் 23) எனவும் பாடுவர். இதனால், இவருடைய தமிழ்ச் செறிவோடு கெழுமியிருந்த நாட்டுப்பற்றும் நன்கு புலனாகும்.

### மதுரைக் கூத்தனார் (334)

மதுரைக்கண், கூத்தியற்றும் கலைஞராக விளங்கிவந்த புலவர் இவர். மழைபெய்தலைக் குறிக்கும் இவர், 'வணங்கிறை மகளிர் அயர்ந்தனர் ஆடும் கழங்கு உறழ் ஆலியொடு கதழுறை சிதறி' என்பார் (334) இது இவரது கூத்தராய தன்மைக்குச் சான்று பகர்வதும் ஆகும்.

### மதுரைக் கூலவாணிகள் சீத்தலைச் சாத்தனார் (306, 320)

சிலப்பதிகாரக் கதையினை இளங்கோவிற்கு உரைத்தவ ராகவும், மணிமேகலைக் காப்பியத்தைச் செய்தவராகவும் கருதப்படுவர் இவர். 'சீத்தலை' என்னும் சேரநாட்டு ஊரினர் என்று கொள்வர். எனினும் 'மதுரை' என்று சொன்னமையால், சீத்தலை அங்ஙனமாகாது எனவும் உரைப்பர். இவர் இயற்றியவாகக் காணப்பெறுவன பத்துச் செய்யுட்கள் ஆகும். 'சேர்ப்ப! எந்தோழி மலரேர் உண்கண் எவ்வம்' 'அலர்வாய் நீங்க அருளாய் பொய்ப்பினும்-வந்து நீ தோள் புதிது உண்ட ஞான்றைச் சூழும் பொய்யோ?' என உரைக்கும் தோழி கூற்று, அந்நாளிற் சூழ்பொய்த்தலை வெறுக்கும் தன்மை நிலவியதைக் காட்டுவதாகும்.

### மதுரைத் தந்தங் கண்ணனார் (335)

இவர் செய்தது இச்செய்யுள் ஒன்றேயாகும். இதன்கண் கமுகின் பசுங்காய் ஈனுதலைக் குறித்து நயமுடன் உரைத்தவராக,

'அப்பசுங்காய் நீரினும் இனியவாகிக் கூரெயிற்று அமிழ்தம் ஊறுஞ் செவ்வாய் ஒண்தொடிக் குறுமகள்' எனக் காதலியின் வாயூறலைக் குறிக்கும் சிறப்பினைக் காணலாம். மதுரைப் புலவரும், கண்ணனாரும் ஆகிய இவரைப் பிற கண்ணனார் களினின்றும் வேறுபடுத்திக் குறிப்பிடுவதனைக் கருதி, மதுரைத் தத்தங் கண்ணானார் என்றனர் போலும்.

## மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார் (354)

இவரும் மதுரைப் புலவர்கள் பலருள் ஒருவரேயாவர். ஆரியக்கூத்து தமிழ்க்கூத்து என வழங்கிய கூத்துவகைகளுள், இவர் தமிழ்க் கூத்தின்கண் சிறந்தவராக விளங்கியவர். சங்கத் தொகை நூற்களுள் இவர் பாடல்களாக நான்கு செய்யுட்கள் காணப்பெறும். இந்நூற் செய்யுளுள், வினை முற்றிய தலை மகனுக்கு உழையராவார், 'வெற்றி வீரனாகத் திரும்பும் இவனை எதிர்ந்த பின்னர், இவன் காதலியின் திருமுகத்தைக் கைப்பற்றியிருக்கும் பசப்பு எங்குச் சென்று வாழுமோ?' என வருந்துவதாகக் காதலன் வரவாற் காதலியின் பசலை நோய் அகலும் என்பதனைக் கூறியுள்ளனர் இவர்.

## மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார் (328)

இவரை ஈழன் தேவனார் எனவும் வழங்குவர். மதுரைக்கண் பண்டவாணிகராக இருந்து, அதே சமயம் புலமைச் செல்வ ராகவும் விளங்கியவர் இவர். அகநானூறுக் களிற்றியானை நிரையின் 58ஆவது செய்யுளுள், 'உன்னைத் தழுவுவதினும், உன்னை நினைத்திருக்கும் அதுவே இனிது' எனக் காதலி கூறுவதாக வருவது மிக்க இனிமையுடையதாகும். தலைவன் பிரிவதனை முன்பே அறிந்ததால், 'தழுவுந்தொறும் தழுவுந் தொறும் உயங்க முகந்துகொண்டு அடக்குவம்' எனத் தலைவி வருந்துவதாக இச்செய்யுளுள் வருவதும் நயமுடன் அமைந் திருத்தலை அறிந்து இன்புறுக.

## மதுரைப் பொன்செய் கொல்லன் வெண்ணாகனார் (363)

மதுரை நகரத்தின்கண் பொற்கொல்லராகப் பணியாற்றிய புலவர் இவராவர். பிரிந்திருக்கும் தலைவி, மாலையின் வரவினாலே கழிபடர் காமத்தளாகி வாடிய நிலையினைப் 'பொழுதுகழி மலரிற் புனையிழை சாஅய், அணையணைந்து இனைய ஆகுதல் என நயமுடன் கூறுபவர் இவர். நெல்லிக் காய்கள் காற்றால் உதிர்க்கப்பெற்று வீழ்ந்து கிடப்பதனைப் பொலஞ்செய் காசிற் பொற்பத் தாஅம், எனவும் உரைப்பர்.. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் எனவும் இவர் பெயர் வழங்கும். நற்றிணை 285 ஆவது செய்யுளும் இவர் செய்ததே யாகும்.

## மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் (364)

*மதுரை மருதங்கிழார் என்பாரின் மகனார் இவர். மற்றும் சொகுத்தனார் என்பாரும், இளம்போத்தன் என்பாரும் மதுரை மருதங்கிழார் மகனார் எனக் கூறப்பெறுபவராவர். அதனால், இவர்கள் மூவரையும் உடன் பிறந்தாராகக் கொள்ளல் பொருந்தும். இவர் பாடியன இச்செய்யுளும், அகநானூற்று 247ஆவது செய்யுளும், நற்றிணை 383ஆவது செய்யுளும் ஆகும். இச் செய்யுளுள், மழைக் காலத்துத் தேரை ஒலிப்பதனை, 'ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க' எனவும், மாலையின் வரவினால் வருந்திய தலைவி, 'கொலை குறித்தன்ன மாலை துனைதரு போழ்தின் நீந்தலோ அரிதே' எனக் கூறுவதாகவும் இவர் நயமாக உரைத்துள்ளனர்.*

## மதுரை மருதன் இளநாகனார் (312, 343, 358, 365, 368, 380, 387)

*இவர் மருதம் பாடுவதில் வல்லவராக விளங்கியவர். நாகனார் என்னும் பெயரினர். மருதக்கலியினைப் பாடியவர் இவரே என்பர். அஃதன்றியும் சங்கத்தொகை நூற்களுள் 37 செய்யுட்கள் இவர் பாடியவாக விளங்கும். இறையனார் களவியலுக்கு உரை செய்தாருள் இவரும் ஒருவர். பிட்டன், கழுவுள், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், கூடாகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதி ஆகியோரைப் பாடியவர். இல்லத் தலைவியரின் சிறப்பினை, கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின் நன்னராட்டி எனப் போற்றிக் கூறியவர் இவர். இந்நூற் செய்யுட்களுள், 'ஒன்னார் ஓடுபுறங் கண்ட தாடோய் தடக்கை வெல்போர் வழுதி' எனப் பாண்டியனின் சிறப்பினையும் (312), 'நடுகற் கண்ணி வாடிய மண்ணா மருங்குல் கூருளி குயின்ற கோடுமாய் எழுத்து' என நடுகற்களில் பற்றிய உளியால் செதுக்கப்பெற்ற வீரர்களின் பீடும்பெயரும் பற்றிய செய்தியையும் (343), 'கொங்கர் மணியரை யாத்து மறுகின் ஆடும்' உள்ளிவிழாப் பற்றிய செய்தியையும் (368), பல்லிச்சொல் தீய பலனுடையதாயின் வழிச்செல்பவர் மேற்செல்லாது திரும்புவர் என்ற செய்தியையும் (387) நாம் காணலாம்.*

## மருங்கூர்ப்பாகைச் சாத்தன் பூதனார் (327)

*இவர் பாடியவாகக் கிடைத்துள்ளது இச்செய்யுள் ஒன்றேயாகும். 'மருங்கூர்ப் பாகை' என்பதும், மருங்கூர்ப் பட்டினம் என்பதும் ஒன்றாகக் கருதுபவரும் உளர். எனின், அவ்வூரினைச் சார்ந்தவர் இவர் என்க. இந்த மருங்கூர்ப்பட்டினம்*

தழும்பனுக்கு உரிய ஊணூருக்கு அப்பாலுள்ளதெனவும், சிறந்த செல்வங்கள் நிலைபெற்ற பெருமை கொண்ட வளநகர் எனவும், பெரிய உப்பங் கழிகளாகிய தோட்டக்கால்களை உடைய தெனவும் நக்கீரனார் உரைப்பர் (அகம். 277). இச்செய்யுளுள் ஆறலைப்பாரின் கொடுந் தன்மையினைச், 'சென்றோர் செல்புறத் திரங்கார், கொன்றோர் கோல் சுழிபு இரங்கும்' எனக் குறிப்பர் இவர்.

## மாமூலனார் (311, 325, 331, 347, 349, 393)

அந்தணர் மரபினர் எனவும், முக்காலமும் உணருகின்ற யோகசித்தி பெற்றவர் எனவும் இவரைக் கூறுவர். இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன், பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் ஆகியோர் காலத்தவர். திருமந்திரம் பாடியவர் இவரின் வேறானவர் அவர். இவர் பாடல்களுள் சிறந்த செய்திகள் பலவற்றை நாம் காணலாம். அகத்துள் 27-ம் குறுந்தொகையுள் ஒன்றும், நற்றிணையுள் 2-ம் இவர் பாடியவை. புல்லி, அள்ளன் அதியன், பாணன், திதியன், சேரலாதன், நன்னன், வானவரம்பன் ஆகிய பலரையும் பற்றிய குறிப்புக்களை இந்நூலின்கண்வரும் இவர் செய்யுட்களுள் நாம் கண்டு இன்புறலாம்.

## மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார் (377)

மாறோக்கத்தின்கண் காமக் கணியராக இருந்தவர் இவர். இவர் செய்ததாக விளங்குவது இச்செய்யுள் ஒன்றேயாகும். இச்செய்யுளுள், 'நரை மூதாளர் ஊர் மன்றிலே கவறாடிப் பொழுது போக்கும்' செய்தியினையும் ஆறலை கள்வர் எறும்பளையின்கண் அவை தொகுத்து வைத்த புல்லரிசி யினையும் கவரும் இயல்பினர் என்பதனையும் கூறியுள்ளனர். இவ்வூரினரான மற்றொரு புலவர் மாறோக்கத்து நப்பசலையார் என்னும் அம்மையாராவார். அவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனையும், மலையமான் திருமுடிக் காரியையும் பாடியவர்.

## மோசிகீரனார் (392)

'மோசி' என்னும் அடைமொழியுடன் வழங்கும் புலவர்களுட் சிறப்பானவர் இவர். நன்னன், ஆய், சேரமான் தகடூர் எறிந்த கணைக்கால் இரும்பொறை, கொண் கானங்கிழான் ஆகியோரைப் பாடியவர், முரசு கட்டிலில் அறியாது ஏறிய இவர் துயில் எழுந்துணையும், கவரிகொண்டு வீசினன் சேரமான் என்பதனைப் புறநானூற்று 50ஆவது செய்யுளுட் காணலாம். 'நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே, மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்' என்ற செய்யுளைச் செய்த சான்றோர் (புறம் 186) இவரே. இச்செய்யுளுள், 'தோற்றம்

பிழையாத் தொல்புகழ் பெற்ற நன்னன்' என்று நன்னனின் சிறப்பினை இவர் குறித்துள்ளனர்.

## வடம வண்ணக்கண் பேரி சாத்தனார் (306)

'வண்ணக்கண்' என்னும் அரசகருமம் பூண்டிருந்தவர் இவர். பேரிசாத்தன் என்னும் பெயரினர். தேர்வண்மலையன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் ஆகியோரைப் பாடியவர் இவர். 'ஆலமர் கடவுள் அன்ன நின் செல்வம்' (புறம் 198) என இவர் குறிப்பதனால், அந்நாளில் சிவபிரான் ஆலமர் கடவுளாக அறம் உரைத்த புராண வழக்கு நிலவியதனை நாம் அறியலாம். 'பருகுவன்ன காதலொடு திருகி, மெய்புகுவன்ன கைகவர் முயக்கத்து ஓருயிர் மாக்கள்' (அகம் 305) எனக் காதல் வாழ்வினரை இவர் அருமையுறக் குறிப்பர்.

## வடமோதங் கிழார் (317)

வேளாண் மரபினரான இவர், இச்செய்யுளையும், புறநானூற்று 260ஆவது கையறுநிலைச் செய்யுளையும் செய்தவர் அவர். 'குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்' என்று இவர் கூறுவது அந்நாளில் பெண்கள் நகத்திற்குச் சிவப்புச்சாயம் தீட்டி வந்த வழக்கத்தினைக் காட்டும். மேலும் ' பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி நுண்கோல் அறை குறைந்து உதிர்வனபோல, அரவ வண்டினம் ஊதுதொறும் குரவத்து ஓங்குசினை நறுவீ கோங்கலர் உறைப்ப' என நயமுடன் உவமித்துக் காமர் வேனிலை உரைப்பவரும் இவர்.

## வெள்ளி வீதியார் (362)

இவர், கணவர் பிரிந்து சென்றவனராக, அதனாற் பெரிதும் வருத்தமுற்றுத் துயருற்றவர் என்று ஔவையாராற் கூறப் பெற்றவர். நிலவு எழுந்ததனை, 'இடைமுலைச் சுணங்கணி முற்றத்து ஆரம் போலவும், சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிர்ப்பின் இலங்கு வெள்ளருவி போலவும் நிலங்கொண்டன வால் திங்களங் கதிரே' என இனிதாகக் கூறியவர் (அகம் 362) இவர். 'உடைமதில் ஓரரண்போல அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே! (அகம். 45)' என்ற ஏக்கம், இவருடைய சொந்த ஏக்கத்து எதிரொலியே எனவும் கருதுவர். 'நாட்டின் நாட்டின், ஊரின், ஊரின், குடிமுறை குடிமுறை தேரின் கெடுநரும் உளரோ?' என்றாற் போல உள்ளம் பிணிக்கும் பல பகுதிகளை இவரது செய்யுட்களுள் காணலாம்.



பிற்சேர்க்கை - 2

# பாடப்பட்டோர் வரலாறு

## அஞ்சி (அதியமான்) (352, 372)

சேலமாவட்டத்துத் தர்மபுரியாக இந்நாளிலே விளங்கும் பண்டைத் தகடூரின்கண் வீற்றிருந்து, மழவர்கோமானாகவும், வள்ளலாகவும், ஔவைக்கு அரிய நண்பனாகவும், பேராண்மையும் தமிழறிவும், சான்றாண்மையும் மிக்கோ னாகவும் விளங்கிய குதிரைமலைத் தலைவன் இவன். சேரமன்னர்களால் முடிவில் தகடூர்ப் பெரும்போரிலே அழிவு எய்தியவன். ஔவையார், பரணர், பெருஞ்சித்திரனார் ஆகியோர் இவனைப் பாடியவர்கள். இவன் மகன் பொகுட்டு எழினி என்பவன். இவன் அத்தை மகள் நாகையார் பெரும் புலமைச் செறிவுடன் திகழ்ந்தவர். இந்நூலின் 352ஆவது செய்யுள் இவனைப்பாடும் பாணர்கள் நாளும் புதுவது புதுவதாக நல்லிசையோடு இவனைப் போற்றிய செய்தியைக் குறிக்கின்றது. 372ஆவது செய்யுள் இவனுடைய வீரர்கள் பகைவரது ஆநிரைகளைக் கவருகின்ற போரிலே எழுப்பும் உடுக்கை யொலினைக் குறிப்பிடுகின்றது.

## அதியன் (325)

'அதியன்' எனக் குறிப்பிடப் பெறுபவர், அதிகமான் நெடுமான் அஞ்சியும், வெளியன் வேண்மான் ஆஅய் எயினனும் இவனும் ஆவர். இவன், அள்ளன் என்னும் படைத் தலைவனுக்கு நாட்டினை நல்கியதாக மேற்குறித்த செய்யுள்களால் அறிகின்றோம்.

## அள்ளன் (325)

ஒரு படைத்தலைவன், அதியனுக்குப் படைத்துணை உதவியவன். அவனால் நாட்டினைக் கொள்ளப் பணிக்கப் பெற்று, நாடுபெற்று வாழ்ந்தவன்.

## ஆஅய் எயினன் (301)

வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பான் இவன். இச்செய்யுளில், பாழியிடத்தே நன்னனுக்கு 'அஞ்சேல்' என்று தான் கொடுத்த உறுதி மொழியைப் பேணுவானாக, இவன் மிஞிலியோடு போரிட்டு மாய்ந்த சிறப்பினைப் பரணரே உரைக்கின்றனர். வெளியத்து வேளிர்கள் சேரருக்குப் பெண் கொடுக்கும் சிறந்த தகுதி பெற்றவராக விளங்கிய குடியினர்.

இவனுடைய அருளுள்ளமும் சொல்லைப் பேணும் உறுதியும் மிக்க சிறப்பினவாகும்.

## ஆட்டன் அத்தி (376, 396)

இவன் ஆதி மந்தியாரின் கணவன். ஆடல் வல்லவனாக 'ஆட்டன்' என்ற சிறப்புப் பெயருடன் விளங்கியவன்; சேர நாட்டைச் சார்ந்தவன். காவிரிப் புதுப்புனல் விழாவிலே பலரோடும் நீராடிய காலத்துக் காவிரியாற் கொள்ளப்பட்டான் எனவும், ஆதிமந்தியார் புலம்பியவராக இவனைத் தேடிக் காவிரிக் கரையோடு சென்றனர் எனவும், முடிவில் மருதி யென்னும் கடல் தெய்வம் இவனை அவளுக்குக் காட்டித் தந்தது எனவும் உரைப்பர். இந்நூலில், இவனைக் காவிரி கொண்டு சென்றபோது, கரிகால் வளவனும், தன் கலிகொள் சுற்றத்துடன் கண்டிருந்ததாகவும், இது நிகழ்ந்தது கழாஅர் முன்றுறைக்கண் எனவும், 376ஆவது செய்யுள் உரைக்கின்றது. 396 ஆவது செய்யுளும், 'கருந்திறல் அத்தி ஆடணி நசைஇ நெடுநீர்க் காவிரி கொண்டொளித்த' செய்தியைத் தெரிவிக்கின்றது.

## ஆதி மந்தி (376, 396)

இவர் ஆட்டனத்தியைக் காதலித்து மணந்தவர். சோணாட்டவரான இவரைக் கரிகாலனின் மகளாகக் கருதுவாரும் உளர். (சிலம்பு). இவர், தம் காதலனைக் காவிரி கொண்டு செல்லவும், அதற்காற்றாது புலம்பிய புலப்பம் மிகுதியானதாகும். வெள்ளி வீதியார் என்பவர், 'ஆதிமந்தி போலப் பேதுற்று அலந்தனென் வருந்தவன் கொல்லோ?' என உரைப்பதனால், அதனை நாம் அறியலாம்.

## ஆரியர் (336, 386, 396, 398)

வடபுலத்தவரான ஆரியர் படையணிகள் வல்லத்துப் புறங்காட்டிலே சோழராற் சிதறுண்டு அழிந்த செய்தியும் (336), ஆரியப் பொருநன் பாணனொடு மற்போரிட்டு அழிந்த செய்தியும் (386), வஞ்சிவேந்தன் ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத் தொன்றுமுதிர் வடவரையின் கண் வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பிணித்த செய்தியும் (396), ஆரியரின் இமயத்து அழகும், (398), வடபுலத்து இருந்துவந்த சந்தனக்கல்லினைப் பற்றிய குறிப்பும் காணப்பெறும்.

## இளம்பெருஞ் சென்னி (375)

இவனைப்பற்றிய குறிப்புக் காணப்பெறும் செய்யுள் இஃது ஒன்றேயாகும். இதன்கண், இவன், பாழிக் கோட்டையை வெற்றி கொண்டதும், அதற்கும் வடபாற் சென்று வடுகரை அழித்ததுமாகிய செயல்கள் குறிக்கப்பெற்றுள்ளன. 'குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்' என, இவன் செய்த செயலுக்

குரிய காரணத்தையும் இச்செய்யுளாசிரியர் காட்டுவது மிகவும் நயம் உடையதாகும்.

## எவ்வி (366)

சோணாட்டுத் திருவீழிமிழலையும் திருநீடூரும் உள்ள டக்கிய பகுதியின் தலைவன் இவன். குடவாயிற்கீரத்தனார், வெள்ளெருக்கிலையார் ஆகியோரால் போற்றப்பெற்றவன். அன்னி யென்பவன் அழுந்தூர்த் திதியனுடன் போரிடத் துணிந்தபோது, அதனைத் தடுக்க முயன்று, அவனுக்கு நன்மொழி கூறியவன். அரிமணவாயில் உறத்தூர் ஆகிய ஊர்த் தலைவர்களை அழித்தவன். தலையாலங்கானப் பெரும்போரில் பாண்டியை எதிர்த்து அழிந்தவர்களுள் இவனும் ஒருவன் ஆவான். இவனூர் வளமுடையது எனவும், யாழிசைக்குப் பேர்போனது எனவும் உரைப்பர். இச்செய்யுள், இவனூர்க்கண் நுளையரும் களமரும் கைபிணித்துச் செய்த பூசலையும், அதனைத் தடுத்து நிறுத்திய நரைமூதாளரின் தன்மையினையும் உரைக்கின்றது.

## கணையன் (386)

சேரர் படைத்தலைவருள் ஒருவனாகக் கழுமலப் போருள் வீழ்ந்துபட்டவன் இவன். இச்செய்யுள் பாணன் மல்லடு மார்பின் வலியுற வருந்தி, எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன் நிறைத்திரண் முழவுத்தோள் கையகத் தொழிந்த திறன்வேறு கிடக்கையினை நோக்கிய இவன், நாணமுற்று நின்ற செய்தியைப் பரணர் வாய்மொழியாகக் கூறுகின்றது.

## கடல்கெழு செல்வி (370)

கடற்கரைத் தெய்வமாகக் குறிக்கப்பெறும் தெய்வம் இவள். இவளைப் போற்றி வழிபடுவது நெய்தல் நிலத்தார் இயல்பு. இச்செய்யுள் கானற்கண் தனித்து நிற்கும் தலைவியை, 'கடல்கெழு செல்வி கரைநின்றாங்கு' என உரைக்கிறது.

## கரிகால் வளவன் (376)

சோழன் கரிகாற் பெருவளத்தான் என்ற சிறப்புடன் திகழ்ந்தவன் இவன். பொருநராற்றுப் படைக்கும் பட்டினப் பாலைக்கும் பாட்டுடைத் தலைவன். சேரமான் பெருஞ் சேரலாதனைக் களத்தில் வென்றவன். கருங்குழலாதனார் வெண்ணிக் குயத்தியார், கடியலூர் உருத்திரங் கண்ணனார் ஆகியோராற் பாடப்பெற்றவன். 'செல்குடி நிறுத்த பெரும் பெயர்க் கரிகால்' எனவும், 'வெண்ணிவாயில் என்னுமிடத்தே பதினொரு வேளிரோடு இருபெரு வேந்தரையும் வென்றவன் இவன்' எனவும் உரைப்பர். இவன் வரலாறு சிறப்பு வாய்ந்தது; மிகவும் விரிவானது.

## கழுவுள் (365)

இவன் ஒரு குறுநிலத் தலைவன். காமூர் இவனுக்கு உரியதாகும். இவனூரைப் பதினான்கு வேளிரும் முற்றி அழித்த செய்தியை அகநானூற்று 135-ஆவது செய்யுளிற் பரணர் குறிக்கின்றனர். இவனைத் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அடக்கினான் எனப் பதிற்றுப்பத்தும் உரைக்கும். இச் செய்யுளுள், இவனுடைய பெரியதான வள்ளன்மை யினையும், இவனுடைய காமூரிடத்தே பூதந்தந்த பொரியரை வேங்கை இவனுடைய காவன்மரமாகத் திகழ்ந்த சிறப்பையும் மதுரை மருதனிளநாகனார் கூறுகின்றனர்.

## கானர் செல்வி (345)

இவள் காடுகிழாள் எனப் போற்றப்பெறும் கொற்றவை ஆவாள். இவளைப் பற்றிக் கூறுகின்ற இந்தச் செய்யுள், இவள் 'வெண்மையான கால்களையும் பல படைகளையும், உடைய குதிரையினைத் தொல்லிசை நுணங்கு நுண்பனுவற் புலவன் ஒருவனுக்கு அளித்த' செய்தியைக் கூறுகின்றது. உரைப்பவர் குடவாயிற் கீரத்தனார் என்னும் புலவர் ஆவார்.

## கிள்ளி வளவன் (346)

இவனை, ஐயூர் முடவனாரும் நக்கீரனாரும் பாடினர். அதனுள் நக்கீரரின் செய்யுள் இது. சோழர்களுள் கிள்ளிப் பெயருடையோருள் இவனும் ஒருவனாக, இப்புலவர் பெருமக்களின் காலத்தவனாக இருத்தல்கூடும். சோழன் குராப் பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் ஆகிய இருவருள் பின்னையோன் இவனாகலாம் எனவும் கருதுவர். இவனைச் சோழர் படைத் தலைவருள் ஒருவராகவும் கூறுவர். இவன், கூடலையாண்ட பழையன் மாறனை வென்று, அவனுடைய குதிரைகளையும் யானைகளையும் கைக்கொண்டதனையும், அதனை அறிந்து அப்பழையன் மாறனிடத்து முன்னர்த் தோல்வியுற்று, அதனாற் கொதித்திருந்த கோதை மார்பன் உவப்படைந்ததாகவும் இச்செய்யுளிற் கூறப்பெற்றுள்ளமை காண்க.

## குட்டுவன் (376)

சேரநாட்டின் குட்டநாட்டிற்குத் தலைமை உடையவர்கள் குட்டுவர்கள் எனப்பெற்றனர். இந்தச் செய்யுளுள் குட்டுவர்க்கு உரித்தான மாந்தை நகரின் வளத்தினைப் பரணர் உரைக்கின்றனர். பரணரே செங்குட்டுவனைப் பாடியவரும். ஆகவே, இச்செய்தியும் அவனையே குறித்ததாகலாம்.

## கொங்கர் (368)

சேரர் குடும்பத்தாருள் ஒருவர் கொங்குக் கருவூரின்கண் இருந்து இந்நாட்டைப் பலகாலம் ஆட்சி செய்தனர். இச்செய்யுளுள் மதுரை மருதன் இளநாகனார், 'இவர்கள்

அரையிலே மணிகோத்தாராகத் தெருவின்கண் ஆடிக் கொண்டாடுகின்ற உள்ளி விழவினைப்பற்றிக் குறிப்பிடு கின்றனர். அந்த விழவின் ஆரவாரம் பெரிதாயிருக்கும். அது, 'உள்ளிவிழவின் அன்ன அலராகின்றது' என்பதனால் விளங்கும்.

## கோதை மார்பன் (346)

சேரமான் கோக்கோதை மார்பன் தொண்டிக்குத் தலைவனாக விளங்கிப் பொய்கையாராற் பாடிப் போற்றப் பெற்றவன். இச்செய்யுளுள் குறிக்கப்பெறுபவன் சேரர் தளபதிகளுள் ஒருவனாக இருந்தவன். முதலில் பழையன் மாறன் என்னும் பாண்டியர் தளபதிக்குத் தோற்று ஓடியவன். பின்னர் அந்தப் பழையன் மாறனின் வீழ்ச்சியைக் கேட்டபோது இவன் உவப்படைந்த செய்தி இச்செய்யுளுட் கூறப்பெற்றிருக்கிறது.

## செழியன் (335)

இவன் பாண்டியருள் ஒருவன். இவன், வெற்றிபொருந்திய முரசினையும், விரிந்த மலர்த்தாரினையும் உடையவன். இவனுடைய மாடமூதூரான மதுரையின் மதிற்புறத்தினைத் தழுவி வளர்ந்த கமுகினை அழகாக இச்செய்யுளுட் குறிப்பிடுவர். இதன் ஆசிரியரான ததையங் கண்ணனார்.

## சேரலாதன் (347)

கடலிடையே பகைத்து வந்தாரை அழித்து, அவருடைய கடம்பினை வெட்டி, நன்னகர் மாந்தை முற்றத்தே அப்பகைவர் திறமையாகக் கொணர்ந்து நிதிபலவும் குவித்துப் போற்றப் பெருமையுடன் வாழ்ந்தவன் இவன். இச்செய்யுளுள், இவன் கடற்கண் பகைவரை வென்று, அவர்களின் காவல் மரத்தை அறுத்து இயற்றிய வெற்றிமுரசத்தின் ஒலி முழக்கத்தை மாமூலனார் குறிப்பிடுகின்றனர்.

## சோழர் (326, 336, 338, 356, 369, 375, 385)

சோழர்கள் எனப் பொதுவாகக் குறித்துச் சொல்லப்பட்ட செய்யுட்கள் இவை. போஓர் கிழவன் இவர்களின் தளபதியருள் ஒருவன் (326) என்பதும், வல்லத்துப் புறங்காட்டிற் சோழர் ஆரியரை வென்றமையும் (336), சோழரது பொருண்மலி பாக்கமும் (338), வல்லங் கிழவோன் இவர் மருகன் என்பதும் (356), கடலந்தானைக் கைவண் சோழரது உறந்தையின் கெடலரும் சிறப்பும் (369), சோழர் பெருமகனான இளம்பெருஞ் சென்னியின் பாழிகொண்ட செய்தியும் (375), கைவல்யானைக் கடுந்தேர்ச் சோழரின் பொன்னுடை நெடுநகரான உறந்தையின் எழிலும் (385) இச்செய்யுட்களுள் கூறப்பெற்றிருப்பக் காணலாம்.

### சோழர் மருகன் (356)

வல்லம் கிழவோனாக விளங்கியவன் இவன் ஆவான். இவனை, 'நற்றேர்க் கடும்பகட் டியானைச் சோழர் மருகன் நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்' என்பர் பரணர்.

### சோழர் மறவன் பழையன் (326)

இவன், சோழர்களின் படைத்தலைவருள் ஒருவனாகத் திகழ்ந்தவன்; போஓர் என்னும் ஊரின் தலைவன் ஆவான். 'போஓர்' காவிரிக் கரைக்கண் இருந்தது. இவன் பகைவர் மேல் எறியும் வேலானது குறிபிழையாது சென்று அவரைக் கொல்லும் என்ற சிறப்பினை இச்செய்யுளுள் பரணர் குறிப்பிடுகின்றனர். நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை ஆகிய சேரர் தளபதிகளைக் களத்திற்கொன்று, முடிவில் களத்திலே வீழ்ந்துபட்ட வீரமறவன் இவன் என்று சான்றோர் போற்றுவார்கள்.

### திதியன் (331)

இவன் திதியர்களுள் ஒருவன். மாமூலனாராற் பாடப் பெற்றவனாதலின் இமயவரம்பனின் காலத்தவனாகலாம். இவன் வேளிரோடு போரிடுதற் பொருட்டாகத் தன் வாளினை உருவிய செய்தி இச்செய்யுளுட் கூறப்பட்டுள்ளது.

### திதியன் (பொதியிற் செல்வன்) (322)

திதியர்களுள் பொதியில்மலைப் பகுதித் தலைவனாக விளங்கிய வேளிர் பெருமகன் இவன் என்பர். இச்செய்யுள் இத்திதியனது பேராண்மையினையும், இவனுக்கு உரித்தான பொதியிலின் வனப்பையும் கூறுகின்றது.

### திரையன் (340)

இவன் பவத்திரி என்னும் ஊருக்குத் தலைவனாகப் புகழுடன் விளங்கியவன் ஆவான். இவனை இச்செய்யுளுள் குறிப்பவர் நக்கீரனார் ஆவர். இவனைப்பற்றிக் குறிப்பிடும் மற்றொருவர் காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் ஆவார். இவனுடைய பெயரமைதி இவன் கடற்கரைப் பகுதி நாட்டின் தலைவனாக இருந்தவன் எனக் காட்டும் எனினும் அகம் 85ஆவது செய்யுள், இவனை, 'வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை' என்பதனால், இவன் அப் பகுதிக்கண் இருந்தவனாகலாம்.

### தென்னவன் (342)

தென்னவன் என்பது பாண்டியரின் பெயர்களுள் ஒன்று. இச்செய்யுளுள், 'பல் செருக் கடந்த செல்லறழ் தடக்கை, கெடாஅ நல்லிசைத் தென்னவன்' என்று குறிப்பிடுகின்றார்.. மதுரைக் கணக்காயனார். இவராற் போற்றப் பெற்றவன்

பசும்பூண் பாண்டியன் ஆதலின், இச்செய்யுளுட் குறிக்கப் பெறும் தென்னவனும் அவனே யாகலாம்.

## நன்னன் (349, 356, 372, 396)

நன்னன் என்ற பெயருடையார் மூவராவர். அவர்கள் கடம்பின் பெருவாயில் நன்னன், பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்து வேளான நன்னன், சேரரின் படைத் தளபதிகளுள் ஒருவனான நன்னன் ஆகியோர். இவர்களுள், ஏழிற் குன்றத்துக்கு உரியவனும் (349), பிரம்பு மலைக்கு உரியவனும் (356), குறிக்கப் பெற்றனர். மோசி கீரனார், இவன் இழந்த தன் தொல்புகழை நிலை நிறுத்தியனைக் குறிப்பிடு கின்றார். (372). பரணர் ஆஅய் எயினன் இவனுக்காக மிஞிலியோடு பாழிப் பறந்தலைப் போரிலே உயிர்துறந்த செய்தியைக் குறிப்பிடுகின்றார் (396)

## பசும்பூண் பாண்டியன் (338)

இப்பெயருடையன் ஒருவனைப் பரணர் (அகம் 162), மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் (அகம் 231) நக்கீரர் (253) ஆகியோர் கூறுகின்றனர். நக்கீரனார் இவன் கொங்கரை வெருட்டிய தனையும், அவர் நாடு பலவற்றையும் பாண்டியப் பேரரசுடன் இணைத் தனையும் குறிப்பிடுவர் (அகம் 253). இச் செய்யுளுள், கணக்காயனார், இவனை, "அறம் கடைப்பிடித்த செங்கோ லுடன், அமர் மறஞ்சாய்த்து எழுந்த வலனுயர் திணிதோள் பலர் புகழ் திருவிற் பசும்பூண் பாண்டியன்" என்கின்றனர்.

## பசும்பூண் பொறையன் (303)

இச்செய்யுளுள் பசும்பூண் பொறையன் என ஔவையா ராலும், 338-வது செய்யுளுள் வென்வேற் பொறையன், எனக் கணக்காயனாராலும் குறிக்கப்பெற்றவன் இவன். இவன் சேரர் குலத்து இரும்பொறை மரபினன் ஆதல் கொல்லி இவனுக்கு உரியதென இருவரும் கூறலாற் பொருந்தும்.

## பழையன் மாறன் (345)

மோகூர்க்கண் இருந்த குறுநிலத் தலைவன் இவன். மோகூர்ப் பழையன் எனவும் குறிக்கப் பெற்றவன். வடுகர் துணையோடு வந்த கோசர்களை வென்று சிறந்தவன். இச் செய்யுளுள் கூடற் பறந்தலைப் பெரும் போரிலே இவனைக் கிள்ளிவளவன் அழித்ததும், அதற்குக் கோதை மார்பன் என்பான் மகிழ்ந்ததும் ஆகிய செய்தி குறிக்கப்பெற்றுள்ளது.

## பாணன் (325, 386)

இவன் கட்டியோடும் கூடி, உறந்தைத் தித்தன் வெளியனோடு மற்போர்க்குச் சென்று, அங்கே அவனுடைய

நாளவையின் கிணையொலி கேட்டு அஞ்சி ஓடிப்போனவன். 'வடாஅது நல்வேற் பாணன் நன்னாடு' என்று மாமூலனார் குறிப்பதனால் (325), இவன் தமிழகத்துக்கு வடதிசைப் பகுதிக்கண் இருந்த பாணர் மரபினன் எனக் கருதலாம். இவனோடு ஆரியப் பொருநன் மற்போரிட்டுத் தோற்றழிந்த தனையும், அது கண்டு கணையன் என்பான் நாணி நின்றதனையும் பரணர் (386) குறிக்கின்றனர்.

## பாரி (303)

பறம்பிற் கோமானாக விளங்கிப் பாவலர் போற்றக் கொடை சிறந்து வாழ்ந்தவன் இவன். கபிலரின் நண்பன். மூவேந்தரால் முறையின்றி முற்றுகையிடப் பெற்று வீழ்ந்தவன். அவர்களின் முற்றுகைக் காலத்திலே, குருவியினம் கதிர்கொண்டு வந்து ஊட்டிய செய்தியினைக் கூறுகின்றனர் ஔவையார், 'புலங்கந்தாக இரவலர் செலினே, வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும் உரைசால் வண்புகழ்ப் பாரி' என்று, பாரியின் புகழை ஔவையார் உளங்கலந்து இச்செய்யுளுட் கூறுகின்றனர்.

## புல்லி (311, 359, 393)

கள்வர் கோமான் எனவும், வேங்கடத்துக்கு உரியவன் எனவும் கூறப்பெறும் மாவீரன் இவன். 'வருவழி வம்பலர்ப் பேணிக், கோவலர் மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி, செவியடைதீரத் தேக்கிலைப் பகுக்கும் நன்னாடு' இவனுடையது (311). 'பொய்யா நல்லிசை மாவண் புல்லி' (359) எனவும், 'குடவர் புழுக்கிய பொங்கவிழ்ப் புன்கம், மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும், நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி எனவும், மாமூலனார் இவனை இச்செய்யுட்களுள் (359, 393) போற்றுவர்.

## பொறையன் (வென்வேற்) (338)

'பசும்பூண் பொறையன்' என்ற பகுதியிற் கூறப்பெற்றன காண்க. 'ஒன்னார் தேயம் பாழ்பட நூறும் துன்னருந் துப்பின் வென்வேற் பொறையன்' எனப்போற்றி, 'அகலிருங்' கானத்துக் கொல்லி 'இவனுக்கு உரியது' எனவும் மதுரைக் கணக்காயனார் இச்செய்யுளுட் கூறுவர்.

## மழவர் (309, 337)

மழவர்கள் சேலமாவட்டத்தின் தகடூர்ப் பகுதிகளை யொட்டி வாழ்ந்த மறவர் இனத்தவர் ஆவர். இவர்களுடைய கோமானாக அதியமான் அஞ்சி குறிக்கப் பெறுவான். இவர்கள் தெய்வஞ் சேர்ந்த பராஅறை வேம்பிற் கொழுப்பா எறிந்து குருதி தூஉய்ப் புலவுப் புழுக்கு உண்ட செய்தியும் (309), 'தூதொய் பார்ப்பானின் மடியிடத்து வெள்ளோலையைப் பொன்னெனப் பிழைபடக் கருதி அவனை அம்பேவிக் கொன்று, அவனுடைய

உண்மை நிலையை அறிந்ததும் செங்கோல் அம்பினராகக் கைநொடித்துப் பெயரும் கடுங்கண்மை உடையவர் இவர்' என்ற செய்தியும் (337) இச்செய்யுட்களால் அறியப் பெறுகின்றோம்.

## மிஞிலி (396)

இவன், பாழியிடத்தே ஆய் எயினனை வெற்றிகொண்ட சிறப்பினன். நன்னனுக்கு நண்பன் எனச் சிலரும், பகைவன் எனச் சிலரும் கருதுவர். கோசர் குலத்தவன் எனவும் உரைப்பர். இச்செய்யுள் இவனுடைய இந்தப் பாழிப் பறந்தலைப் போரையே குறிக்கின்றது.

## வடுகர் (375)

தமிழகத்துக்கு வடபகுதியில் வடுகு பேசுவோராக வாழ்ந்தவர் இவராவர். மோரியர்க்கும் ஆரியர்க்கும் துணையாகத் தமிழரை அழிக்கக் கருதிப் பன்முறை வந்தவர்கள். இச்செய்யுள் இளம் பெருஞ்சென்னி வடுகரை அழித்து வெற்றி கொண்டதனைக் குறிப்பிடுகின்றது.

## வானவரம்பன் (309, 359, 389)

இவன் சேரமன்னன் ஆவான். இவனுக்குரியது வெளியம் என்கிறது 359 ஆவது செய்யுள். வெளியன் வேண்மான் ஆய் எயினனாதல் பிற செய்யுட்களாற் புலனாகும். இதனால், வெளியம் சேரரது மேலாட்சிக்கு உட்பட்டது என்று கருதலாம். 'வானவரம்பனின் நல்ல நாட்டிற்கு அப்பாலுள்ள காடு' என நக்கீரனார் 389 ஆவது செய்யுளில் குறிப்பிடுகின்றனர். 309 ஆவது செய்யுள் இவனை வானவன் எனக் குறிப்பிடும்.

## வேளிர் (331)

வேளிர்கள் தமிழகத்துப் புகழ்மிகு குடியினருள் ஒருவர். பதினெண்குடி வேளிர்களும் அகத்தியனாருடன் தென்னாட்டிற்குத் துவாரகையினின்று வந்தனரென ஒரு செய்தி கூறப் பெறும். இச்செய்யுளுள் வேளிர் குலத்தவரோடு திதியன் போருக்கு எழுந்த செய்தியை மாமூலனார் குறிப்பிடுகின்றனர். அந்நாளைய தமிழகத்தின்கண் மூவேந்தர்களுக்குப் பெண் கொடுக்கும் சிறப்புடன் திகழ்ந்த தொல்குடியினர் இவர்கள் ஆவர்..



# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

(எண் - செய்யுள் எண்)

சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

3

# அகநானூறு

நித்திலக் கோவை

மூலமும் உரையும்

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



GO 921




நூல் கிடைக்குமிடம் :



நூலங்காடி...
www.thebookstore.in
e-mail : gowra_09@yahoo.in

கௌரா ஏஜென்ஸீஸ்
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.

ரூ. 80